# புத்தரின்
# வைர சூத்திரம்

**ஓஷோ**

*தமிழில்*
ர. விவேகானந்த்

கண்ணதாசன் பதிப்பகம்
23, கண்ணதாசன் சாலை,
தியாகராய நகர்
சென்னை-600 017.
தொலைபேசி: 2433 2682.



# ஓஷோ

பகவான் ரஜ்னீஷ், தற்போது
'ஓஷோ' என்ற பெயரால் மட்டுமே
குறிப்பிடப்படுகிறார்.

வில்லியம் ஜேம்ஸ் குறிப்பிட்ட
'ஓஷியானிக்' என்ற சொல்லிலிருந்து
தம்முடைய பெயர் உருவானதாக
ஓஷோ குறிப்பிட்டுள்ளார்.

'ஓஷியானிக்' என்றால்
கடலில் கரைந்து போவது
என்று பொருள்.
'ஓஷியானிக்' என்ற சொல்
அனுபவத்தை மட்டுமே குறிக்கின்றது.
ஆனால், அனுபவிப்பவரைக்
குறிப்பிடவில்லை. அதனால்,
'ஓஷோ' என்ற சொல்லை
உருவாக்கினேன் என்கிறார், ஓஷோ.

ஆனால், இந்தச் சொல்
கீழை நாடுகளில், நீண்ட காலமாக,
வேறு ஒரு பொருளிலும்
பயன்படுத்தப்பட்டு வருவதை
ஓஷோ பின்னால் கண்டு கொண்டார்.

இதன் பொருள்:
'வானம் பூச்சொரிந்து
ஆசிர்வதிக்கப்பட்ட மனிதன்."



# பொருளடக்கம்


| | |
|---|---|
| 1. நிர்வாண ராஜ்ஜியம் | 9 |
| 2. விடுவிக்கப்பட்ட அன்பு | 51 |
| 3. தர்ம சக்கரம் | 87 |
| 4. அப்பாலிலிருந்து | 123 |
| 5. ஞானத்தின் சுவை | 155 |
| 6. போதிசத்துவப் பிராயம் | 199 |
| 7. சாந்தி நிலையில் தஞ்சம் புகுந்தவர் | 243 |
| 8. வீடு திரும்பியாயிற்று | 285 |
| 9. தூய்மையான சொர்க்கபுரி | 331 |
| 10. முற்றிலும் வெறுமையானது | 367 |
| 11. முழுமையான ஞானம் அடைந்தவர் | 411 |

# புத்தரின் வைர சூத்திரம்



பூனாவில் உள்ள கௌதம புத்தர் அரங்கத்தில்,
ஓஷோ தம் சீடர்கள் மற்றும் நண்பர்களிடையே
ஆற்றிய சொற்பொழிவுகள்

நான் கேள்விப்பட்ட சம்பவம் இது: புத்தபெருமான் அப்போது சிராவஸ்தி நகரில் வாழ்ந்து வந்தார்... ஒருநாள், காலை வேளையில், அவர், தமது துறவாடை அணிந்து, கையில் பிச்சைப் பாத்திரம் ஏந்தி, அந்த மாநகருக்குள் பிச்சை எடுக்கப் புறப்பட்டார்.

அவர் தமது வழக்கமான சுற்றை முடித்து வந்து, உணவு உண்டார்; அங்கியையும், பிச்சைப் பாத்திரத்தையும் அப்பால் வைத்துவிட்டு, தமது கால்களைக் கழுவிய பின், தமக்காக ஏற்பாடு செய்யப்பட்டிருந்த இருக்கையில் அமர்ந்தார். சம்மணமிட்டபடி, முதுகை நிமிர்த்தி அமர்ந்து, தமது கவனத்தை எதிரில் பதித்தார்.

அதன் பிறகு, பல பிக்குகள் அவர் இருக்குமிடம் வந்து, அவரது திருவடிகளில் தமது சிரம் பதித்து வணங்கி, எழுந்து, அவரை மும்முறை வலம் வந்து, அவர் எதிரில் ஒதுங்கி அமர்ந்தார்கள்.



அப்போது மரியாதைக்குரிய சுபூதி அங்கே வந்து, கூடியுள்ள சங்கத்தினிடையில் அமர்ந்தார். பிறகு அவர் மேலே எழுந்து, தமது மேலாடையை எடுத்துத் தோளின் மேல் போட்டுக் கொண்டார்; தமது முழங்காலைத் தரையில் பதித்து மண்டியிட்டார்; தமது இரு கரங்களையும் குவித்து, புத்தரை நோக்கி நீட்டியபடி பேச ஆரம்பித்தார்:

"பிரபுவே, இது அற்புதம்! மகா அற்புதம்! எல்லாம் கடந்தவரே, எத்தனை மகான்கள், எத்தனை போதி சத்துவர்கள், ததாகதரால் மாபெரும் உதவி பெற்றிருக்கிறார்கள்!" என்றார்.

அவர் மேலும்... "பிரபுவே, போதிசத்துவ- வாகனத்தில் ஏறிச் செல்பவர்கள், எங்கே நிற்பார்கள்? எவ்வாறு முன்னேறுவார்கள்? எவ்வாறு தம் எண்ணங்களைக் கட்டுப்படுத்துவார்கள்?" என்று கேட்டார்.

இவற்றைக் கேட்ட புத்த பெருமான், சுபூதியிடம், "...ஆகவே, சுபூதி, நான் சொல்வதை நல்ல கவனத்தோடு கேள்!" என்றார்.

போதிசத்துவ வாகனத்தில் பயணம் செய்யக்கூடிய ஒருவரின் சிந்தனை இப்படிப்பட்டதாக இருக்கும்: பிரபஞ்சத்தில் வாழ்கின்றவரில், 'இருப்பவர்கள்' என்று குறிப்பிடப்படுகிறவர்கள் அனைவரையும் நான் நிர்வாண நிலைக்கு அழைத்துச் செல்வேன்; மிச்சம் மீதியாக எதையுமே பின்னால் விட்டுச் செல்லாத நிர்வாண நிலைக்கு அவர்களை இட்டுச் செல்வேன். அப்படி கணக்கிலடங்காத உயிர்களை 'நிர்வாணா'விற்கு இட்டுச் சென்றஆலும், அது எந்த உயிரையும் 'நிர்வாணா'விற்கு இட்டுச் சென்றதாகாது.

ஏன் அப்படி? ஒரு போதிசத்துவருக்கு 'உயிர்' என்ற எண்ணம் இருக்குமானால், அவரை, 'போதியில்-இருப்பவர்' என்று அழைக்க முடியாது.

ஏன் அப்படி? ஏனென்றால், ஒரு போதிசத்துவருக்கு ஒரு சுயம், அல்லது உயிர் என்ற எண்ணம் ஏற்பட்டு விடுகிறது. அதாவது, உயிர் வாழ்வதாக, ஒரு நபராக ஒரு எண்ணம் ஏற்பட்டு விடுகிறது.

நான் கௌதம புத்தரை நேசிக்கிறேன். ஏனெனில் அவர் மதத்தின் சாரத்தை பிரதிபலிக்கிறார். அவர் புத்தமதத்தை நிறுவியவர் அல்ல- புத்த மதம் என்பது இன்னொன்றி லிருந்து உருவானது -அவர் உலகின் முற்றிலும் புதியதான மதம் ஒன்றைத் துவக்கி வைத்தவர். மதமே அல்லாத மதத்தை நிறுவியவர். அவர் நிறுவியது மதமல்ல, மதத் தன்மை! இவை மனித குல வரலாற்றில் உணர்வுபூர்வமான அடிப்படை மாற்றங்களாகும்.

புத்தருக்கு முன்பும்கூட மதங்கள் இருந்தன. ஆனால் தூய்மையான மதத்தன்மை இருந்ததில்லை. மனிதன் பூரணத்துவம் பெற்றவனாக இல்லை. புத்தரின் தோற்றத்துக்குப் பின் மனித குலம் ஒரு பூரணத்துவமான கட்டத்துக்குள் நுழைய ஆரம்பித்தது. எலலா மனிதப் பிறவிகளும் அந்த நிலையை இன்னும் அடைந்துவிட வில்லை என்பது உண்மை! ஆனால், புத்தர்தான் அதற்கான வழியை அறிவித்தார். கதவுகளில்லாத கதவைத் திறந்து வைத்தவர் அவர்தான். அவருடைய ஆழமான கருத்துகளை மனிதன் புரிந்துகொள்ள நீண்ட காலம் ஆகும். அவருடைய கருத்துகள் மிக ஆழமான பொருள் பொதிந்தவை. யாருமே புத்தரின் அளவுக்கு, புத்தருக்கு இணையாக வழி வகுக்கவில்லை. யாருமே அவரளவுக்குத் தூய்மையான பிரதிநிதியாக இருந்ததில்லை.

மற்ற மதங்களை நிறுவியவர்கள் அனைவருமே, மற்ற ஞானம் பெற்றவர்கள் அனைவருமே தம்மைப் பின்பற்றியவர்களிடம் விட்டுக்கொடுத்துப் போனார்கள். ஆனால், புத்தர் அப்படி விட்டுக் கொடுக்கவில்லை. அதனால்தான் அவர் அவ்வளவு தூய்மையானவராக இருந்தார். உங்களால் எவ்வளவு தூரம் புரிந்துகொள்ள முடியும் என்று அவர் கவலைப்பட்டதில்லை. உண்மை என்ன என்பதைப் பற்றித்தான் அவர் சிரத்தை எடுத்துக் கொண்டார். அந்த உண்மையை உங்களால் புரிந்து கொள்ள முடியுமா என்பதைப் பற்றிக் கவலைப்படாமல் அப்படியே உரைத்தார். ஒரு வழியில் பார்த்தால் இது மிகவும் கடினமாகத் தோன்றலாம். இன்னொரு வகையில் நோக்கினால் அவரது கருணையை இது பிரதிபலிப்பதாக வும் இருக்கிறது.

உண்மை என்பது அப்படியே சொல்லப்படல் வேண்டும். அதனை விட்டுக்கொடுத்துச் சொல்லும் போதோ அல்லது பாமர மக்களின் புலனறிவுக்கு எட்டும் வகையில் புரியவைக்கும் கணத்திலோ அது தனது ஆன்மாவை இழந்துவிடுகிறது. மிகவும் மேலோட்டமான தாகிவிடுகிறது. மனிதர்கள் புரிந்துகொள்ளும் அளவுக்கு உண்மையைக் கொண்டு வர முடியாது. மனிதர்களைத் தான் உண்மையைப் புரிந்துகொள்ளும் நிலைக்கு வழிகாட்டி நடத்திச் செல்ல வேண்டும். அதுதான் புத்தரின் மகத்தான பணி!

இரண்டாயிரத்து ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன்பு ஏதோ ஒரு நாள் அதிகாலை நேரம்- இன்று போலவே ஒரு நாள்- இந்த சூத்திரம் பிறந்தது. அப்போது ஆயிரத்து இருநூற்று ஐம்பது புத்தத் துறவிகள் உடனிருந்தனர். 'சிராவஸ்தி' என்ற நகரத்தில் அது நிகழ்ந்தது. அது அப்போது மிகவும் பெருமை வாய்ந்த நகரமாக விளங்கியது. சிராவஸ்தி

என்றால் 'மகத்துவம் வாய்ந்த' என்பது பொருள். அது பழங்காலத்தில் இந்தியாவின் மகத்துவம் வாய்ந்த நகரங்களுள் ஒன்றாகத் திகழ்ந்தது. தொள்ளாயிரம் குடும்பங்களைத் தன்னகத்தே கொண்டிருந்தது. அந்த நகரம் இப்போது முற்றிலும் மறைந்துவிட்டது. தற்போது ஒரு சிறிய கிராமம் மட்டுமே எஞ்சியுள்ளது. அதனுடைய பெயரைக்கூட வரைபடத்தில் காண முடியாது. அதன் பெயரும்கூட மறைந்துவிட்டது. அதன் தற்போதைய பெயர் சாஹேத்-மாஹேத். இங்குத் தான் அந்தப் பெருமை வாய்ந்த நகரம் இருந்தது என்பதைக்கூட இப்போது நம்ப முடியாது. இதுதான் வாழ்க்கை என்பது! மாற்றங்கள் நிகழ்ந்து கொண்டே இருப்பது. நகரங்கள் கல்லறைகளாக மாறுவதும்; கல்லறைகள் நகரங்களாக மாறுவதும்! வாழ்க்கை என்பதே தொடர் ஓட்டம்தான்!

புத்தர் சிராவஸ்தி நகரத்தை மிகவும் நேசித்திருக்க வேண்டும். ஏனெனில் அவரது நாற்பத்தைந்து வருட துறவு வாழ்க்கையில் இருபத்தைந்து வருடங்கள் சிராவஸ்தி நகரத்தில்தான் வாழ்ந்திருக்கிறார். அந்த மக்களை அவர் நேசித்திருக்க வேண்டும். அந்த மக்கள் மிக உயர்ந்த பிரக்ஞை உணர்வைக் கொண்டவர்களாக இருந்திருக்க வேண்டும். புத்தரின் சூத்திரங்கள் எல்லாமே பெரும்பாலும் சிராவஸ்தி நகரில் தோன்றியவைதான்.

இந்தச் சூத்திரம்- இந்த வைர சூத்திரம், சிராவஸ்தி நகரில் தோன்றியதுதான். இதற்கு சம்ஸ்கிருதத்தில் 'வஜ்ரச்சேதிக ப்ரச்ன பரமித சூத்ரா' என்பது பெயர். இதற்கு, 'ஞான முழுமை, பேரிடியைப் போன்றது' என்று பெயர். நீ அனுமதிப்பாயேயானால் புத்தர் பேரிடியைப் போன்று உன்னில் இறங்குவார். உனது தலையைச் சேதம் செய்வார். உன்னைக் கொன்று பின் உனது மறுபிறவிக்கும் வழிவகுப்பார்.

புத்தர் என்பவர் இரண்டு நிலைகளிலும் இருப்பார். ஒரு வகையில் கொலைகாரராக; மற்றொரு வகையில் தாயாக. ஒரு வகையில் அவர் உன்னைக் கொல்ல வேண்டும்; மற்றொரு வகையில் உனக்குப் புதுப் பிறவி அளிக்க வேண்டும். பழையதை முற்றிலுமாக அழித்தால் தான் புதியது என்பது சாத்தியமாகும். பழமை சாம்பலாகப் போன பின்புதான் அதிலிருந்து புதியது தோன்ற வேண்டும். மனிதன் என்பவன் பீனிக்ஸ் பறவையைப் போன்றவன். புராண காலத்தில் இருந்து பீனிக்ஸ் என்பது வெறும் கட்டுக்கதை மட்டுமல்ல, அது உருவகம்! அது மனிதனுக் காகவே உருவாக்கப்பட்டது. மனிதனைத் தவிர பீனிக்ஸ் என்பது எங்கும் கிடையாது. மனிதன் ஒருவன்தான் இறந்து மறுபடி மீண்டும் உயிர்த்தெழ வேண்டும்.

அதைத்தான் இயேசு கிறிஸ்து நிகோடமஸ்ஸிடம் சொன்னார். நிகோடமஸ் ஒரு கல்விமான். ஒரு பேராசிரியர். மத நூல்களைப் போதிப்பவர். ஜெருசலத்தில் உள்ள பெரிய மடாலயத்தை நிர்வகிக்கும் குழுவில் ஓர் உறுப்பினர். ஓர் அடர்ந்த இரவில் இயேசு கிறிஸ்துவைச் சந்திக்க வந்தார். அவருக்குப் பகல் வேளையில் வரக்கூடிய அளவுக்குத் துணிவு வரவில்லை. மக்கள் என்ன சொல்வார்களோ என்ற பயம் அவருக்கு. அவர் மிகவும் மதிக்கப்பட்ட, மரியாதைக்குரியவராகத் திகழ்ந்தார். நாடோடியாகத் திரியும் ஒரு போதகரைப் பார்க்கப் போக முடியுமா? கல்விமான்களும் மத போதகர்களும் வெறுக்கும் ஒருவரிடம் போக முடியுமா? திருடர்களையும், குடிகாரர் களையும், விலைமாதுகளையும் மாற்ற முயலும் ஒருவரிடம் போக முடியுமா? அவருள் இருந்த எதுவோ ஒன்றுதான் அவரை இப்படித் தூண்டியது. ஒருவேளை அவர், இயேசு கோயிலுக்கு நடந்து வரும்போது பார்த்திருக்கலாம். அவர் தமது ஆழ்ந்த உள்ளுணர்வில் இப்படிச் சந்தித்தேயாக வேண்டும் என்று உணர்ந்திருக்கலாம். தம்மைக்

கட்டுப்படுத்திக்கொள்ள முடியாமல் அவர் தவித்திருக்கக் கூடும்.

இரவில் எல்லோரும் .சென்ற பின்பு, அவருடைய சீடர்களும்கூடத் தூங்குவதற்குச் சென்ற பின்பு, அவர் இயேசுவை அடைந்து கேட்கலானார்: “இறைவனின் ராஜாங்கத்திற்குள் நுழைவதற்கு நான் என்ன செய்ய வேண்டும்?”

இயேசு உபதேசிக்கலானார்: “நீ மரிப்பதைத் தவிர வேறெதுவும் வழியில்லை. நீ மரித்தால்தான் பின்பு இறைவனின் ராஜாங்கத்தை அடைய முடியும். நீ இப்போது எப்படியிருக்கிறாயோ அப்படியே மரிக்க வேண்டும். அதன் பின்புதான் நீ உனது உள்ளுணர்வில் எப்படியிருக்கிறாயோ அதே போலப் பிறக்க முடியும்.”

அகங்காரம் என்பது அழியும்போதுதான் உண்மை யான உயிர்ப்பு மேல்நிலைக்கு வரும். ‘ப்ரச்ன பரமித வஜ்ரச்சேத்திகா’ என்பதற்கு அதுதான் பொருள். அது இடியைப் போல் இறங்கும். ஒரேயடியாக அது உங்களை அழித்துவிடும். புத்தரின் பேருபதேசங்களில் அது ஒன்றாகும். அதனை உணரும் வகையில் உங்களைத் தயார்ப்படுத்திக் கொள்ளுங்கள்.

இந்தச் சூத்திரத்தினுள் நுழைவதற்கு முன்பாகச் சில விஷயங்களைப் புரிந்துகொள்ள வேண்டும்... அது உங் களுக்கு இந்த சூத்திரங்களைப் புரிந்துகொள்ள உதவியாக இருக்கும். அடக்குமுறையல்லாத உருவகக் கொள்கைகளற்ற ஓர் ஆன்மிக நம்பிக்கையைப் புத்தர் துவக்கி வைத்தார். இது கிடைத்தற்கரிய அபூர்வமான ஒன்றாகும். சாதாரண மான ஆன்மிக நம்பிக்கைகள் எல்லாமே அடக்குமுறை யைக் கையாள்வதாகத்தான் இருக்கிறது. அவை அடக்கு முறையைச் சார்ந்திருக்கின்றன. அவை மனிதனை மாற்றக் கூடியவை அல்ல. மனிதனை முடக்கிவிடக் கூடியவை.

அது மனிதனுக்கு விடுதலை அளிக்கக்கூடியதாக இல்லை. மனிதனை அடிமைப்படுத்தக்கூடியது. அடக்குமுறையைக் கொண்டதாக இருக்கிறது. விகாரமாக இருக்கிறது.

கிறிஸ்துவைப் பிரதியெடுத்தல் (Imitation of Christ) என்ற நூலின் ஆசிரியரான தாமஸ் ஏ. கெம்பி என்பவர் கூறுவதைக் கேளுங்கள்: "உன்னை எவ்வளவுக்கெவ்வளவு பலாத்காரத்துக்கு உட்படுத்திக் கொள்கிறாயோ அவ்வளவுக்கவ்வளவு கருணை மிகுந்தவனாகிறாய். தினமும் உன்னை இகழ்ந்து கொள்வதைத் தவிர வேறு வழியில்லை. உன்னை மேம்படுத்திக் கொள்வதற்கு ஒரே சிறந்த வழி உன்னை வெறுத்துக் கொள்வதுதான்.'' ஆயிரக்கணக்கான துறவிகள் தாமஸ் ஏ. கெம்பியுடன் நிச்சயம் ஒத்துப் போவார்கள். ஏனெனில் தாமஸ் ஏ. கெம்பி காரண காரியங்களை ஆராய்பவர்.

"இந்தப் பூமி பழிக்கப்படட்டும், பூமி பழிக்கப்படட்டும். ஆயிரம் முறை இந்தப் பூமி பழிக்கப்படட்டும்" என்று பிரெஞ்சு மத குருவான போசட் கூறுகிறார். ஏன்? ஏன் இந்தப் பூமி பழிக்கப்பட வேண்டும்? வாழ்க்கைதான் பழிக்கப்படல் வேண்டும். கடவுள் வாழ்க்கைக்கு எதிரானவர் என்று இந்த மக்கள் நினைக்கிறார்கள். வாழ்க்கை கடவுளுக்கு எதிரானது என்று நினைக்கிறார்கள். உண்மையில் வாழ்க்கை என்பதே கடவுள்தான். எதிரானது என்று எதுவுமே இல்லை. உண்மையில் பிரிவு என்பதே இல்லை. அவை இரண்டு வெவ்வேறு விஷயங்களே அல்ல. உண்மையின் இரண்டு பெயர்களே அவை.

இதை நினைவில் கொள்ளுங்கள்: புத்தர் அடக்கு முறையைக் கையாள்பவரே அல்ல. புத்தக் குருமார்கள் எவராவது அடக்குமுறையைக் கையாள்பவராக இருப்பின் அவர்கள் புத்தரைப் புரிந்து கொள்ளவே இல்லை என்பதுதான் பொருள். அவர்கள் தமது சொந்தக் காரண

காரியங்களைப் புத்தரது போதனைகளில் கொண்டு வந்து விட்டார்கள் என்று கொள்ளலாம். அவர் தமது கருத்துகளைத் திணிப்பவரே அல்ல. அவர் எந்த ஒரு கருத்தையுமே சொல்வதில்லை. ஏனெனில், எல்லாக் கருத்துகளுமே புத்தியின் வெளிப்பாடுகள்தாம். அவை புத்தியின் வெளிப்பாடுகளாக இருப்பதனால் புத்தியைக் கடந்து போவதற்கு வழியில்லாமல் போகிறது. எந்த ஒரு கருத்தாலும் புத்தியைக் கடந்து இருப்பவற்றுக்குப் பாலம் அமைக்க முடியாது. எல்லாக் கருத்துகளையுமே களைந்துவிட வேண்டும். அப்போதுதான் புத்தியையும் விட்டுவிட முடியும்.

புத்தர் எந்த ஓர் உருவகக் கொள்கையின் (ideals) மீதுமே பற்று வைத்ததில்லை. ஏனெனில் எல்லாக் கொள்கைகளுமே மனிதனுக்குள் பதற்றத்தையும், முரண்பாட்டையும் உருவாக்குவதற்காகவே இருக்கின்றன. அவை கோபத்தை ஏற்படுத்துகின்றன. அவை பிரிவினையை ஏற்படுத்துகின்றன. நீங்கள் ஒரு வகையாக இருக்கும்போது அவை உங்களை வேறு வகையாக மாற்ற முற்படுகின்றன. இவை இரண்டிற்கும் இடையே இழுக்கப்பட்டு முடிவில் கிழிந்து போய்விடுகிறீர்கள். உருவகக் கொள்கைகள் உங்களைத் துன்பத்தில் ஆழ்த்தி விடுகின்றன. உங்களைப் பைத்தியம் பிடிக்கவைத்து விடு கின்றன. உருவகக் கொள்கைகள் நிறைய இருக்கும்போது இன்னும் நிறைய மக்களுக்குப் பைத்தியம் பிடிக்கிறது. நிறையப் பிரிவினைகள் ஏற்படுகின்றன.

உருவக கொள்கைகள் அற்ற பிரக்ஞை- உணர்வுதான் பிரிவினை அற்று இருக்க முடியும். நீங்கள் பிரிவினையுடன் இருப்பீர்களேயானால் எப்படி மகிழ்ச்சி யுடன் இருக்க முடியும்? எப்படி அமைதியாக இருக்க முடியும்? உங்களுக்குச் சமாதானத்தைப் பற்றி, அசைவற்றிருப்பதைப் (Stillness) பற்றி ஏதாவது தெரியுமா?

இவ்வகைக் கொள்கைகளை வைத்துக்கொண்டிருக்கும் மனிதன் தனக்குள்ளேயே சதா போர் புரிந்து கொண்டிருக்கிறான். ஒவ்வொரு கணமும் குழப்பம்தான். குழப்பத்திலேயே வாழ்கிறான். ஏனெனில், அவன் ‘தான் யார்’ என்றே தீர்மானிக்க முடியாத நிலையில் இருக்கிறான். அதாவது தான் இயல்பாயிருப்பவனா அல்லது தான் கற்பனைப்படுத்தியுள்ளபடி இருக்கும் பிம்பமா என்று அவனுக்குத் தன்னைத் தானே நம்ப முடியாமல் போகிறது. அவனுக்குத் தன்னைக் கண்டே பயம் ஏற்பட்டு விடுகிறது. நம்பிக்கையை இழந்துவிடுகிறான். நம்பிக்கை இழந்த ஒரு மனிதன் தன் கம்பீரத்தை இழந்து விடுகிறான். அதற்குப்பின் யாருக்கு வேண்டுமானாலும் அடிமையாவதற்குத் தயாராகிறான். எந்தக் குருமார்களிடம் வேண்டுமானாலும், எந்த அரசியல்வாதியிடம் வேண்டு மானாலும், அதன்பின் ஏதாவது ஒரு வலையில் விழுவ தற்குத் தயாராகிவிடுகிறான்.

மக்கள் ஏன் தொண்டர்களாகிறார்கள்? மக்கள் ஏன் வலையில் சிக்குகிறார்கள்? ஒரு ஜோசப் ஸ்டாலினுக்கோ, அடால்ஃப் ஹிட்லருக்கோ, மா சே துங்குக்கோ ஏன் அவர்கள் அடிமையாகிப் போகிறார்கள்? அவர்கள் ஆட்டம் கண்டுவிடுகிறார்கள். கொள்கைகளுக்கிடையே யான முரண்பாடுகள் அவர்களது வேர்களையே ஆட்டம் காண வைத்துவிடுகிறது. அவர்களால் தங்கள் சொந்தக் கால்களினால் நிற்க முடிவதில்லை. சாய்ந்துகொள்ள இன்னொருவர் தேவைப்படுகிறார். சொந்தமாக நகரக்கூட முடிவதில்லை. அவர்களுக்குத் தான் யார் என்பதே புரியாமல் போய்விடுகிறது. தாங்கள் யார் என்று சொல்லிப் புரிய வைப்பதற்குக்கூட இன்னொருவர் தேவைப்படுகிறார். அவர்களைப் புரிய வைப்பதற்கு ஓர் அடையாளம் தேவைப்படுகிறது. தம்மை, தமது இயல்பையே மறந்து போகிறார்கள்.

மனிதன் எல்லா உருவகக் கொள்கைகளையும் விட்டு விடும்வரை அடால்ஃப் ஹிட்லரும், ஜோசப் ஸ்டாலினும், மாசேதுங்கும் திரும்பத் திரும்ப வந்து கொண்டேதான் இருப்பார்கள். கொள்கைகள் என்று நான் சொல்லும் போது எல்லாக் கொள்கைகளையும் என்றுதான் பொருள் கொள்ள வேண்டும். நல்ல கொள்கைகள், அவ்வளவாக நல்லவை அல்லாதவை என்றெல்லாம் பிரிக்க வேண்டாம். இவையெல்லாமே அபாயகரமானவைதாம். உண்மையில் நல்ல கொள்கைகள் என்று கூறப்படுபவை மிகவும் அபாயகரமானவை. ஏனெனில் அவை அதிக தூண்டுதல் குணமுடையவை. தவறான வழியில் இட்டுச் செல்லக் கூடியவை. அவை ஒரு வியாதியைப் போன்றவை. சங்கடத்துக்குள்ளாக்குபவை. உங்களால் உருவகப்படுத்தப் பட்ட 'நீங்கள்', இரண்டாவதாக உண்மையான 'நீங்கள்' என்று இரண்டுபட்டுப் போகிறீர்கள். நிஜமான 'நீங்கள்', நிராகரிக்கப்படுகிறீர்கள். எதுவாக ஆக முடியவில்லையோ அந்த உங்களது உருவகம் பாராட்டப்படுகிறது. இப்போது துன்பத்தில் சிக்கிக் கொள்கிறீர்கள். கூடிய விரைவிலேயே பைத்தியம் பிடித்தவர் போல் ஆகிவிடுகிறீர்கள்.

புத்தர் நமக்கு ஓர் அடக்குமுறையற்ற வாழ்க்கையையும், உருவகக் கொள்கைகளற்ற வாழ்க்கையையும் அளித்திருக் கிறார். அதனால்தான் அவர் கடவுளைப் பற்றிப் பேசுவதில்லை. சொர்க்கத்தைப் பற்றிப் பேசுவதில்லை. எதிர்காலத்தைப் பற்றிப் பேசுவதில்லை. கையில் பற்றிக் கொள்வதற்கு எதையுமே அவர் தருவதில்லை. எல்லா வற்றையும் உங்களிடமிருந்து எடுத்துக் கொள்கிறார். அவர் உங்களையேகூட எடுத்துக் கொள்கிறார். ஒவ்வொன்றாக எடுத்துக் கொண்டேபோய், முடிவில் 'தான்' என்ற எண்ணத்தையும்கூட எடுத்துக்கொண்டு விடுகிறார். தூய்மையான வெற்றிடத்தை மட்டுமே விட்டு வைக்கிறார். இது மிகவும் கடினமான ஒன்று.

ஏனெனில், எப்படிக் கொடுப்பது என்பதையே முற்றிலுமாக மறந்துவிட்டோம். நமக்கு எப்படி எடுத்துக் கொள்வது என்றுதான் தெரியும். ஒவ்வொன்றாக எடுத்துக்கொண்டே போகிறோம். தேர்வுகளை எடுத்துக்கொள்கிறோம். மனைவியை எடுத்துக் கொள்கிறோம். மதியத் தூக்கத்தைக் கூட எடுத்துக்கொள்கிறோம். எதனை எடுத்துக்கொள்ள முடியவில்லையோ அதனிடம் நீ சரணாகதி அடைந்துவிட வேண்டும். நீ சரணாகதி அடைந்த பின்னர்தான் உறக்கம் வருகிறது. ஒரு மனைவியை, ஒரு கணவனை நீங்கள் எடுத்துக் கொண்டே போகிறீர்கள். அதனால் நீங்கள் கௌரவம் மிக்கவராக இருப்பதில்லை. மனைவி என்பவள் ஒரு சொத்து அல்ல. ஒரு வீட்டை வாங்கலாம். ஒரு மனைவியை, ஒரு கணவனை எப்படி வாங்க முடியும்? ஆனால், நமது மொழி நமது மனத்தைக் காட்டுகிறது. நமக்கு எப்படித் தருவது என்றே தெரிவதில்லை- எப்படித் தருவது? எப்படித் தன்னிச்சையாக விடுவது? எப்படி அதன் போக்கில் நடக்கும்படி விடுவது?

புத்தர் எல்லா உருவகங்களையும் விலக்கி விடுகிறார். எதிர்காலத்தையே முழுமையாக விட்டு விடுகிறார், கடைசியாக நாம் எதனைக் கொடுப்பதற்கு மிகவும் சிரமப்படுவோமோ அதனையும்கூட- தான் என்பதை. முடிவில் தூய்மையான, சூதுவாதில்லாத, கன்னித் தன்மையுடன் கூடிய வெற்றிடத்தை மட்டுமே விட்டு வைக்கிறார். அந்தக் கன்னிமைத் தன்மையுடன் கூடிய வெற்றிடத்தைத்தான் நிர்வாணம் என்று அவர் சொல்கிறார். நிர்வாணம் என்பது ஓர் இலக்கு அல்ல. அது வெறும் வெற்றிடம் மட்டுமே. நீங்கள் சேர்த்து வைத்திருப்பதையெல்லாம் விட்டு விடும்போது, எதையும் மறைத்து வைக்காதபோது, கொஞ்சமும் கருமியாக இல்லாதபோது, எதையும் பற்றிக்கொள்ளாத போது, தன்

னிச்சையாகத் திடீரென்று அந்த வெற்றிடம் மேலோங்கி வருகிறது. அது எப்போதும் அங்கேதான் இருக்கிறது.

ஹாகின் சரியாகத்தான் சொன்னார்: "துவக்கத்தி லிருந்தே எல்லோரும் புத்தர்களாகத்தான் இருந்திருக்கிறார் கள்." அந்த வெற்றிடம் அங்கேயேதான் இருந்திருக்கிறது. நீங்கள் சேகரித்து வைத்த குப்பைகளின் காரணமாக அது வெளிப்படையாகத் தெரியாமல் மறைந்துவிட்டது. உங்கள் வீட்டில் பொருள்களைச் சேகரித்துக் கொண்டே போய் முடிவில் வெற்றிடமே இல்லாதது போலத் தோற்றம் அளிக்குமே, அது போல. ஒருநாள் நாம் நகர்வது (நடப்பது) கூடக் கடினமாகப் போய்விடும். வாழ்வதற்கு நமக்கு இடமே இல்லாது போய்விடும். ஆனால், இடம் எங்கும் போய்விடவில்லை.

அதைப் பற்றி யோசியுங்கள். அதைப் பற்றித் தியானம் செய்யுங்கள். இடம் எங்கும் போய்விடவில்லை. நீங்கள் மேசை, நாற்காலி, டி.வி., ரேடியோ, ரேடியோகிராம், பியானோ என்று எல்லாவற்றையும் சேர்த்து வைத்துக் கொண்டீர்கள். ஆனால் இடம் எங்கும் போகவில்லை. மேசை நாற்காலியை அப்புறப்படுத்துங்கள். இடம் அங்கேயேதான் உள்ளது. மரச்சாமான்கள் இடத்தை மறைத்துக்கொண்டிருந்தனவே தவிர, வெற்றிடம் அழிக்கப் பட்டுவிடவில்லை. அது அந்த அறையை விட்டு அகன்று விடவில்லை. ஒரு கணம்கூட அகன்றுவிடவில்லை. அதே போலத்தான் உங்களது உள்மன வெற்றிடமும், உங்களது நிர்வாணமும், உங்களது ஒன்றுமில்லாத (nothingness) தன்மையும்.

புத்தர் நிர்வாணத்தை இலக்குக்கான உருவகமாக வைத்துக்கொள்ளச் சொல்லவில்லை. உங்களைப் பலவந்தமாகக் கீழ்ப்படியச் செய்வதற்குப் பதிலாக உங்களை விடுதலை அடையச் செய்கிறார். புத்தர்

உங்களுக்கு வாழக் கற்றுக் கொடுக்கிறார். எந்த இலக்கையும் அடைவதற்காக அல்ல. எதையும் கைப்பற்றுவதற்காக அல்ல. இப்போதே, இங்கேயே ஆனந்தமயமான வாழ்க்கை வாழ்வதற்காக. பிரக்ஞையோடு வாழ்வது எப்படி. அந்தப் பிரக்ஞை உங்களுக்கு எதுவும் தராது. பிரக்ஞை என்பதுகூட வேறெதையும் அடைவதற்காக அல்ல. அதுவேதான் முடிவானது. அதுவேதான் வழியும் முடிவும். அதனுடைய மதிப்புத் துல்லியமானது.

புத்தர் வேறு உலகத்தைப் பற்றி உங்களுக்குப் போதிப்பதே கிடையாது. இதை நீங்கள் புரிந்துகொள்ள வேண்டும். மக்கள் லோகாயதமானவர்கள். மத குருமார்கள் வேற்றுலகத்தைப் பற்றியே போதித்துக் கொண்டிருக்கிறார் கள். அந்த வேற்றுலகம் என்பதுகூட முற்றிலுமாக வேற்றுலகம் கிடையாது. அப்படி இருக்க முடியாது. ஏனெனில், அதுவும்கூட இந்த உலகத்தின் செம்மையாக்கப் பட்ட பிரதிதான். எதிலிருந்து வேறு உலகத்தைச் சிருஷ்டி செய்ய முடியும்? உங்களுக்கு இந்த உலகம் மட்டும்தான் தெரியும். அதனைச் செம்மையாக்க இயலும். உங்களால் இதை மேலும் அழகுபடுத்த முடியும். இதிலிருக்கும் சில அழகற்ற பொருள்களை அகற்றிவிட்டு நீங்கள் அழகானது என்று கருதும் பொருள்களை அந்த இடங்களில் வைக்க முடியும். அப்போதும்கூட அது இந்த உலகத்தில் நீங்கள் அடைந்த அனுபவங்கள் காரணமாக சிருஷ்டி செய்யப் பட்டதாகத்தான் இருக்க முடியும். அதனால் உங்களது வேறு உலகம் என்பது முற்றிலுமாக வேறாக இருக்க முடியாது. இருக்க வாய்ப்பே இல்லை. அது வெறும் தொடர்ச்சிதான். அது உங்களது மனத்தினின்றும் வெளிப் பட்டதுதான். உங்களது கற்பனையின் விளையாட்டுத்தான்.

உங்களுக்காக அங்கே அழகிய பெண்கள் இருக்கலாம்– அதாவது இங்கிருக்கும் பெண்களைவிட அழகான பெண்கள். இங்கிருக்கும் அதே கேளிக்கைகள் அங்கும்

இருக்கலாம், ஒருவேளை நிரந்தரமாகக்கூட. ஆனாலும் அவை அதே வகையான கேளிக்கைகள்தாமே. அங்கு இன்னும் நல்ல வகையான உணவுகள் கிடைக்கலாம். இன்னும் சுவையான உணவுகள்... ஆனாலும் அவை உணவுகள்தாம். உங்களுக்கு வீடுகள், தங்கத்திலான வீடுகள் கிடைக்கலாம். ஆனாலும் அவை வீடுகளே. நீங்கள் எல்லாவற்றையும் திரும்பத்தான் செய்யப் போகிறீர்கள்.

நீங்கள் உங்களது புனிதப் புத்தகங்களுக்குள் சென்று பாருங்கள். அவற்றில் இங்கிருக்கும் இதே உலகம்தான் சற்றே அழகாக்கப்பட்டுச் சொர்க்கமாகச் சித்திரிக்கப் பட்டிருக்கும். இங்குக் கொஞ்சமும் அங்குக் கொஞ்சமு மாகச் செம்மைப்படுத்தப்பட்டிருக்கும். ஆனாலும் அவை எந்த வகையிலும் வேறு உலகமல்ல. அதனால்தான் நான் சொல்கிறேன், மதங்களில் விவரிக்கப்பட்டிருக்கும் மறு உலகம் என்பது முற்றிலுமாக வேறு உலகமல்ல. அது இந்த உலகத்தை விரிவாக்கி, எதிர்காலத்துக்கு விரிவாக்கப்பட்ட தான ஒன்றாக இருக்கும். அது இந்த உலகத்தில் பெற்ற அனுபவத்திலிருந்து பிறந்ததாகத்தான் இருக்கும். வறுமை, துன்பம், வியாதி, முடக்குவாதம், குருட்டுத்தன்மை, காது கேளாமை எதுவும் இருக்காது. இங்கு எவற்றையெல்லாம் நீ விரும்பவில்லையோ அவையெல்லாம் அங்கு இருக்காது. இங்கு எவையெல்லாம் விருப்பமாக இருக்கின்றனவோ அவையெல்லாம் அங்கு ஏராளமாக இருக்கும். ஆனால், எதுவுமே புதிதாக இருக்கப் போவதில்லை.

மனம் (mind) எதையும் புதிதாய் உள்வாங்கிக் கொள்ள முடியாது. புதிதான எதையும் உள்வாங்கக் கூடிய திறமை மனதிற்கு இல்லை. மனம் பழமையில்தான் வாழ்ந்து கொண்டிருக்கிறது. மனமே பழமையானது. புதியதாக எதுவும் மனத்தின் மூலம் நடைபெற முடியாது. மனம் எப்போது இயங்காமல் இருக்கிறதோ அப்போதுதான் புதியது நிகழ்கிறது; மனம் உங்களை வசப்படுத்தாமல்

இருக்கும்போது, மனத்தைத் தூக்கித் தூர வைக்கும்போது. அப்போதுதான், மனம் குறுக்கிடாமல் இருக்கும்போது தான் புதியது நிகழ்கிறது.

ஆனால், உங்கள் புனிதப் புத்தகங்கள் சொர்க்கத்தைப் பற்றிப் பேசுகின்றன. சொர்க்கம், தேவலோகம், பிர்தௌஸ் எல்லாமே அதே கதைகளே தவிர, வேறொன்றும் அல்ல. அவை வழவழப்பான காகிதத்தில், நல்ல மையினால், அழகாக முன்னேற்றமடைந்த அச்சுக்கூடத்தில், வண்ணப் படங்களுடன் அச்சிடப்பட்டிருக்கலாம். ஆனால் அதே கதைகள்தான். அவை வேறாக இருக்க முடியாது.

புத்தர் வேறு உலகத்தைப் பற்றியோ அல்லது வேற்றுலக தன்மைகளைப் பற்றியோ பேசுவதே கிடையாது. அவர் பேசுவதெல்லாம் மிக எளிமையானவை. எப்படி இந்த உலகத்தில் வாழ்வது என்பதைப் பற்றித்தான். எப்படி ஜாக்கிரதையாக, பிரக்ஞையோடு, புத்தியோடு இருப்பது என்பதைப் பற்றித்தான். இதன் காரணமாக எதனாலும் உங்களது வெற்றிடத்தை ஆக்கிரமிக்க இயலாமல் போகிறது. அதனால் உங்களது உள்மன வெற்றிடம் கலப்படமில்லாது, விஷம் கலக்காமல் இருக்க முடிகிறது. அதனால் நீங்கள் இங்கேயே கலப்படமில்லாமல், மாசுபடாமல் வாழ முடிகிறது. அதனால் நீங்கள் இந்த உலகத்தில் இருக்க முடிகிறது. இந்த உலகம் உங்களிடத்தில் இருப்பதில்லை.

வேற்றுலக (Other worldly) ஆன்மிகம் அழுத்தமுடையதாக, அழிக்கும் தன்மையதாக, பிறரைத் துன்புறுத்தி அதனால் இன்பம் அடையும் தன்மையுடையதாக- சுருக்கமாகச் சொன்னால் நோய் போன்று இருக்கிறது. புத்தரின் ஆன்மிகம் வேறு விதமான சுவையுடையதாக இருக்கிறது. உருவகக் கொள்கையற்ற, எதிர்காலச் சுவையற்ற, வேற்றுலகத்தைப் பற்றிச் சிந்தனையற்றதாக இருக்கிறது. அது இங்கேயே, இப்போதே இருக்கும் மலர். அது எதையும்

கேட்பதில்லை. எல்லாமே தயாராகக் கொடுக்கப் பட்டுள்ளது. அது உங்களை மேலும் பிரக்ஞையோடு, இன்னும் ஜாக்கிரதை உணர்வோடு இருக்க வைப்பதனால் நிறையப் பார்க்க முடிகிறது; நிறையக் கேட்க முடிகிறது. நீங்கள் அதிக உணர்வோடு இருக்கிறீர்கள்.

நினைவில் வைத்துக் கொள்ளுங்கள்: நீங்கள் எந்த அளவில் பிரக்ஞையோடு இருக்கிறீர்களோ அந்த அளவுக்குப் பிரசன்னமாகியிருக்கிறீர்கள் என்று பொருள். நீங்கள் அதிக அளவில் பிரசன்னமாக இருக்க வேண்டு மெனில் அதிகப் பிரக்ஞையோடு இருக்க வேண்டும். பிரக்ஞை என்பதன் மூலம் உங்களை இருத்திக் கொள்ள முடிகிறது. பிரக்ஞையற்றிருத்தல் என்பது உங்களை அந்த இடத்திலிருந்து அகற்றி விடுகிறது. நீங்கள் குடிபோதையில் இருப்பின் நீங்கள் உங்களுக்கே இயலாது போகிறீர்கள். ஆழ்ந்த தூக்கத்திலிருக்கும் போதும் இதே நிலைதான். நீங்கள் கவனித்துப் பார்த்ததில்லையா? நீங்கள் ஜாக்கிரதை உணர்வோடிருக்கும்போது வேறு தன்மையோடிருக் கிறீர்கள். நீங்கள் மையப்படுத்தப்பட்டிருப்பீர்கள். வேரூன்றி இருப்பீர்கள். நீங்கள் ஜாக்கிரதை உணர்வோடு இருக்கும் போது ஒருமித்த நிலையில், மொத்தமாக வெளிப்படும் நிலையில் இருப்பீர்கள். பிரக்ஞையற்றிருக்கும்போது உறக்கம் வருகிறாற்போல, இழுவையாக, உணர்வுகள் மிகவும் மந்தமாக இருப்பீர்கள். உங்களது பிரக்ஞை எவ்வளவோ, அவ்வளவே உங்களது இருத்தலின் அளவும்.

புத்தரின் எல்லாச் செய்திகளுமே சுயஉணர்வுடன் இருங்கள் என்பது பற்றித்தான். வேறு காரணங்களுக்காக அல்லாமல், சுய உணர்வோடு இருப்பதற்காகவே சுய உணர்வில் இருங்கள். ஏனெனில் சுயஉணர்வுடன் இருக்கும்போது நீங்கள் முழுமையாக இருக்கிறீர்கள். அது உங்களை உருவாக்குகிறது. நீங்கள் கற்பனைப் படுத்தியே பார்க்க முடியாத அளவுக்கு உங்களை வித்தியாசமான

மனிதனாக்குகிறது. 'தான்' என்பது மறைந்துபோன ஓர் 'உங்களை,' தான் என்ற ஒரு எண்ணமே இல்லாமற்போன ஒரு நிலையை, அப்போது உங்களை எதுவுமே விவரிக்க முடியாது. தூய்மையான, எல்லையற்ற, தளைகளற்ற வெறுமை நிலை.

இந்த நிலையைப் புத்தர் தியான நிலை என்கிறார்– **சம்மசமாதி** என்பது சரியான தியான நிலை, நீங்கள் தனியாக இருக்கும் போதுதான். ஆனால் நினைவுகொள் ளுங்கள்; ஒருமை (aloneness) என்பது தனிமை (Loneliness) என்று பொருளாகாது. நீங்கள் எப்போதாவது இந்த அழகான வார்த்தையைக் கேட்டிருக்கிறீர்களா, ஒருமை? எல்லாம் ஒன்றாக இருத்தல் என்பதாகும். இது இரண்டு பதங்களால் ஆனது. 'எல்லாம்', 'ஒன்று' என இரண்டு பதங்கள். ஒருமையில் இருக்கும்போது நீங்கள் எல்லோருட னும் ஒன்றி விடுகிறீர்கள்.

ஒருமை என்பதில் தனிமை என்பதில்லை. நீங்கள் ஒருமையில் இருக்கும்போது தனிமையில் இருப்பதில்லை. நீங்கள் ஒருமையில் இருக்கிறீர்கள். ஆனால், தனி ஆளாக இருப்பதில்லை. ஏனெனில், நீங்கள் எல்லோருடனும் ஒன்றாகத்தான் இருக்கிறீர்கள். நீங்கள் எப்படித் தனியாக விடப்பட முடியும்? நீங்கள் யாரையும் இழக்கவில்லை. நீங்கள் யாரையும் மறந்துவிடவில்லை. உங்களுக்கு யாரும் தேவை இல்லாமல் போய்விடவில்லை. நீங்கள் யார் பேரிலும் சிரத்தை எடுத்துக் கொள்ளாமலுமில்லை. நீங்கள் யாரையும் நினைவில் வைத்துக்கொள்ளவில்லை. ஏனெனில் நீங்கள் அவர்களிடம் ஒன்றிவிட்டீர்கள். ஒரு வருக்கும் எல்லோருக்கும் இடையே உள்ள வேறுபாடுகள் இல்லாமல் போய்விடுகிறது. ஒருவர் எல்லோருமாகவும், எல்லோரும் ஒருவராகவும் ஆகிவிடுகிறீர்கள். இந்தத் 'ஒருமை' என்ற ஆங்கில வார்த்தை அளவற்ற அழகுடையது.

புத்தர் சம்மசமாதி என்பது ‘ஒருமை’ என்று குறிப்பிடு கிறார். சரியான தியானம் என்பது முற்றிலும் ஒருமையில் இருத்தல், அதனால் நீங்கள் எல்லோருடனும் ஒன்றி விடுகிறீர்கள். இதை உங்களுக்கு விளக்குகிறேன். நீங்கள் வெறுமையாக (emptiness) இருக்கும்போது எல்லைகள் காணாமற் போய்விடுகின்றன. ஏனெனில் வெறுமை என்பதற்கு எல்லைகளே கிடையா. வெறுமை என்பதே எல்லைகளற்ற நிலை. வெறுமை நிலைக்கு எடை கிடையாது. நிறம் கிடையாது. அதற்கு உருவமே கிடையாது. நீங்கள் வெறுமையுடனிருக்கும்போது உங்களை எப்படி மற்றவர் களிடமிருந்து பிரித்துப் பார்க்க முடியும்? ஏனெனில், உங் களுக்கு நிறம் கிடையாது. உங்களுக்குப் பெயர் கிடையாது. உங்களுக்கு வடிவம் கிடையாது. உங்களுக்கு எல்லைகள் கிடையாது. எப்படிப் பிரித்துப் பார்க்க முடியும்? வெறுமை யாக இருக்கும்போது நீங்கள் எல்லோருடனும் ஒன்றாகி விடுகிறீர்கள். வாழ்வில் ஒன்றி விடுகிறீர்கள். வாழ்க்கை உங்களுடன் சங்கமமாகிவிடுகிறது. நீங்கள் இனிமேலும் ஒரு தீவு அல்ல. நீங்கள் ஒரு பெரிய கண்டமாகி விடுகிறீர்கள்.

புத்தரின் எல்லாச் செய்திகளையும் ஒரே வார்த்தையில் சொல்லலாம். சம்மசமாதி. சரியான தியானம். எது சரியான தியானம்? எது தவறான தியானம்? தியானம் செய்பவர் உணர்ந்தால் அது தவறான தியானம். தியானம் செய்பவர் தம்மை இழந்துவிடுவாரேயானால் அது சரியான தியானம். சரியான தியானம் என்பது வெறுமையை, ஒருமையை அளிக்கும்.

இந்தச் சூத்திரம்... இந்த முழுமையான சூத்திரம் எப்படி முழுமையாக வெறுமையாகி விடுவது என்பதைப் பற்றித்தான். இதுவே உலகத்துக்கு அவரது அடிப்படையான பரிசாகும்.

நான் ஒரு முறை இதைப்போலக் கேட்டேன்.

இந்தச் சூத்திரங்கள் புத்தரின் முக்கிய சீடரான ஆனந்தரால் நினைவுகூரப்பட்டது.

ஒன்றை நினைவுகூர வேண்டும். எல்லாச் சூத்திரங் களுமே 'நான் இது போன்று கேட்டேன்' என்றுதான் துவங்குகின்றன.

புத்தர் இறந்தபோது எல்லாச் சீடர்களும் அவர் நாற்பத் தைந்து ஆண்டுகளாக உபதேசித்ததைச் சேகரிக்க வேண்டிக் குழுமியிருந்தனர். ஆனந்தர் ஒருவர் மட்டுமே புத்தருடன் அந்த நாற்பத்தைந்து ஆண்டுகளும் தொடர்ச்சியாக வாழ்ந்தவர். அவர் கூறுவதை மிகவும் நம்பகத்தன்மையோடு சார்ந்திருக்கலாம். மற்றவர்களும் செவியுற்றவர்கள்தாம். ஆனால் மற்றவர்களிடம் கேட்டவர்கள். சில காலம் அவர்கள் புத்தருடன் இருந்தவர்கள். சில நேரங்களில் அவர்கள் புத்தருடன் இல்லாதவர்கள். ஆனந்தர் ஒருவர் மட்டுமே புத்தரின் நிழல் போன்று அவருடனேயே இருந்தவர்.

அதனால் ஆனந்தர் தொடர்புபடுத்துகிறார். இதில் அழகான ஒரு விஷயம் என்னவென்றால், அவர் எப்போ துமே, "புத்தர் இதைச் சொன்னார்" என்று சொன்னதே கிடையாது. ''நான் இது போன்று செவியுற்றேன்'' என்றுதான் கூறுவார். இதில் உள்ள வித்தியாசம் மகத்தானது. அவர், "புத்தர் இதைச் சொன்னார்" என்று சொல்வதில்லை. காரணம், அவர் சொல்கிறார், "நான் எப்படிப் புத்தர் இதைச் சொன்னார் என்று சொல்ல முடியும்? நான் சொல்ல விரும்புவதெல்லாம் இது ஒன்றுதான். நான் இவற்றையெல்லாம் கேட்டேன் என்பதுதான். புத்தர் என்ன சொன்னார்? அவர் அறிந்ததைச் சொன்னார். அவர் உணர்ந்ததை, அவருக்குத் தெரிந்ததைச் சொன்னார். எனக்கு நினைவிருப்பதெல்லாம் நான் கேட்டவைதான். என்னுடைய திறமையெல்லாம்

எல்லைக்குட்பட்டவை. அவர் வேறு எதை எதையோ குறிப்பிட்டிருக்கலாம். நான் சில வார்த்தைகளை மறந்து விட்டிருக்கலாம். நான் என்னுடைய சொந்த வார்த்தைகள் சிலவற்றைப் பயன்படுத்தியிருக்கலாம்."

அவரது நேர்மை மகத்தானது. 'புத்தர் இதைத்தான் சொன்னார். நான் அவருடன் இருந்தேன். நான் கண் கண்ட சாட்சி' என்று வாதாடி இருக்கலாம். அவர் கண்கண்ட சாட்சிதான். யாரும் இதனை மறுக்க முடியாது. ஆனால், அவரது பணிவைப் பாருங்கள். அவர் சொல்கிறார், "நான் இப்படிக் கேள்வியுற்றேன். புத்தர் சொல்லிக்கொண்டிருந்தார். நான் கேட்டுக் கொண்டிருந் தேன். நான் எவற்றைக் கேள்வியுற்றேனோ அவற்றைத்தான் தொடர்புபடுத்திப் பார்க்க முடியும். அவை சரியாகவும் இருக்கலாம்; சரியில்லாமலும் இருக்கலாம். நான் இடை யில் ஏதாவது சொல்லியிருக்கலாம். நான் குறுக்கிட்டிருக் கலாம். நான் சில விஷயங்களை மறந்துவிட்டிருக்கலாம். எனது மனம் விரும்பிய சில கருத்துகள் அவற்றில் கலந்து விட்டிருக்கலாம். எவையெல்லாம் சாத்தியமோ அவை யெல்லாம் சாத்தியமே. நான் ஒரு ஞானி அல்ல." ஆனந்தர் ஒரு ஞானியல்ல. அதனால், "இவற்றைத்தான் நான் சொல்ல முடியும். இவற்றிற்கு நான் உத்தரவாதம் அளிக்க முடியும்" என்றார்.

நான் ஒருமுறை இதைச் செவியுற்றேன்.

*புத்த பெருமான் அப்போது சிராவஸ்தி நகரில் வாழ்ந்து வந்தார்... ஒரு நாள், காலை வேளையில், அவர், தமது துறவாடை அணிந்து, கையில் பிச்சைப் பாத்திரம் ஏந்தி, அந்த மாநகருக்குள் பிச்சை எடுக்கப் புறப்பட்டார்.*

*அவர் தமது வழக்கமான சுற்றை முடித்து வந்து, உணவுண்டார்; அங்கியையும், பிச்சைப் பாத்திரத்தையும்*

*அப்பால் வைத்துவிட்டு, தமது கால்களைக் கழுவிய பின், தமக்காக ஏற்பாடு செய்யப்பட்டிருந்த இருக்கையில் அமர்ந்தார். சம்மணமிட்டபடி, முதுகை நிமிர்த்தி அமர்ந்து, தமது கவனத்தை எதிரில் பதித்தார்.*

இதற்கு நீங்கள் ஆச்சரியப்படுவீர்கள். ஆனந்தர் பேசும் போது மிக நுண்ணிய விவரங்களைக்கூட விவரிக்கிறார். இது ஒருவருக்கும் தெரியாது- புத்தரைப் பற்றிப் பேசும் போது நீங்கள் இந்தக் கவனத்துடன் இருக்கவேண்டும். ம்ம்? அவர் இவ்வளவே திரும்பத் திரும்பக் குறிப்பிடுகிறார். மிக நுணுக்கமான தகவல்கள்.

*ஒரு நாள், காலை வேளையில், அவர், தமது துறவாடை அணிந்து, கையில் பிச்சைப் பாத்திரம் ஏந்தி, அந்த மாநகருக்குள் பிச்சை எடுக்கப் புறப்பட்டார்.*

ஆனந்தர் புத்தரை நிழல் போலப் பின் தொடர்கிறார். அமைதியான நிழல் அவரைக் கவனிக்கிறது. அவரைக் கவனிப்பது என்பதே ஒரு பிரார்த்தனையாகும். அவர் எல்லாவற்றையும் கவனிக்கிறார்.

*அவர் தமது வழக்கமான சுற்றை முடித்து வந்து, உணவுண்டார்; அங்கியையும், பிச்சைப் பாத்திரத்தையும் அப்பால் வைத்துவிட்டு, தமது கால்களைக் கழுவிய பின், தமக்காக ஏற்பாடு செய்யப்பட்டிருந்த இருக்கையில் அமர்ந்தார். சம்மணமிட்டபடி, முதுகை நிமிர்த்தி அமர்ந்து, தமது கவனத்தை எதிரில் பதித்தார்.*

*அதன் பிறகு, பல பிக்குகள் அவர் இருக்குமிடம் வந்து, அவரது திருவடிகளில் தமது சிரம் பதித்து வணங்கி, எழுந்து, அவரை மும்முறை வலம் வந்து, அவர் எதிரில் ஒதுங்கி அமர்ந்தார்கள்.*

முதன் முறையாகப் புத்த சூத்திரங்களை மேற்கத்திய மொழிகளில் மாற்றம் செய்தபோது, மொழி மாற்றம்

செய்தவர்கள் சிறிது திகைத்துப் போனார்கள்– ஏன் இது போன்ற 'கூறியது கூறல்' (repetition) என்று. இது இப்படியே திரும்பத் திரும்பப் போய்க்கொண்டிருக்கிறது. மறுபடியும், மறுபடியும் கூறியது கூறல். இந்தச் சிறிய தகவல்கள் எப்படி ஒன்றுக்கொன்று தொடர்பாகும்? அவர்களால் புரிந்து கொள்ள இயலவில்லை. அவர்கள் இவற்றைத் திரும்பத் திரும்பக் கூறப்பட்ட விஷயங்கள் என நினைத்தார்கள். இது தேவையற்ற ஒன்றாகும் என்று நினைத்தார்கள். இவை எதற்காக? ஆனால், அவர்கள் ஒன்றை நினைக்கத் தவறிவிட்டார்கள். ஆனந்தர் என்ன சொன்னார் எனில், புத்தர் பெரிய விஷயங்களுக்குத் தரும் அளவுக்கே சிறிய விஷயங்களுக்கும் முக்கியம் தருகிறார் என்பதுதான். புத்தருக்குச் சிறிய விஷயங்கள், பெரிய விஷயங்கள் என்பதே கிடையாது.

அவர் தமது பிச்சைப் பாத்திரத்தைக் கையில் எடுத்துக் கொண்டாரென்றால் அவர் கடவுளுக்கு அளிக்கும் மரியாதைக்குச் சமமாக அந்தப் பாத்திரத்துக்கும் மரியாதை அளிப்பார். அவர் தமது மேலங்கியையோ அல்லது உடைகளையோ அணியும்போது முழு மனத்தோடு, பிரக்ஞையோடு இருப்பார். இயந்திரத்தனமாக இருக்க மாட்டார். நீங்கள் உங்களது ஆடைகளை அணியும்போது இயந்திரத்தனமாக இருப்பீர்கள். உங்களுக்கு அதை இயந்திரத்தனமாக அணிவது எப்படி என்று தெரியும். அதனால் அதற்குச் சிரத்தை செலுத்தி என்ன பயன்? உங்கள் மனம் ஆயிரம் ஆயிரம் விஷயங்களில் நகர்ந்து கொண்டிருக்கிறது. நீங்கள் குளிக்கிறீர்கள். அந்தக் குளியலுக்குத் தகுந்த மரியாதையினைத் தருவதில்லை. நீங்கள் அங்கிருப்பதில்லை. வேறு எங்கோ இருக்கிறீர்கள். நீங்கள் உணவு உண்ணுகிறீர்கள். ஆனால் அதை அவமதிக்கிறீர்கள். நீங்கள், அங்கிருப்பதில்லை. நீங்கள் வெறுமனே உணவை மென்று உள்ளே அனுப்புகிறீர்கள்.

நீங்கள் உங்களது வேலைகளை வழக்கமாக, இயந்திரத் தனமாகச் செய்கிறீர்கள். ஆனால், புத்தர் செய்யும்போது அவர் அங்கேயே இருக்கிறார். வேறெங்கும் இருப்பதில்லை.

*அவர் தமது வழக்கமான சுற்றை முடித்து வந்து, உணவுண்டார்; அங்கியையும், பிச்சைப் பாத்திரத்தையும் அப்பால் வைத்துவிட்டு, தமது கால்களைக் கழுவிய பின், தமக்காக ஏற்பாடு செய்யப்பட்டிருந்த இருக்கையில் அமர்ந்தார். சம்மணமிட்டபடி, முதுகை நிமிர்த்தி அமர்ந்து, தமது கவனத்தை எதிரில் பதித்தார்.*

துல்லியமான விவரங்கள்கூட முக்கியமானவை. காரணம், அவை எல்லாம்கூடப் புத்தரின் இயல்பைக் காட்டுகின்றன. ஒவ்வொரு கணமும் அவர் பிரக்ஞை யோடு வாழ்கிறார். அவர் செய்வது தொடர்பில்லாமல் இருக்கலாம். ஒவ்வொரு கணமும் அவர் எதனைச் செய்கிறாரோ அதில் தமது கவனத்தைச் செலுத்துகிறார். ஒரு சைகை செய்யும்போது அவர் அந்தச் சைகையாகவே ஆகிவிடுகிறார். அவர் புன்னகைக்கும்போது புன்னகை யாகவே மாறிவிடுகிறார். அவர் உரையாடும்போது வார்த்தைகளாகவே மாறிவிடுகிறார். அவர் அமைதி காக்கும்போது அமைதிமயமாகிவிடுகிறார்.

புத்தரை நோக்குவது என்பதே ஆசி பெறுவதாகும். அவர் எப்படி நடக்கிறார்? எப்படி அமர்கிறார்? அவர் எப்படிச் சைகைகளைக் காண்பிக்கிறார்? அவர் உங்களை எப்படிப் பார்க்கிறார்? ஒவ்வொரு கணமும் பிரகாசமானதாக, பிரக்ஞையுள்ளதாக இருக்கும். அதைத்தான் ஆனந்தர் சொல்கிறார். புத்தர் வரும்போது மகத்தான ஓர் அமைதி நிலவியிருக்க வேண்டும். அவர் தம்முடைய உடைகளை ஒழுங்குபடுத்தி வைத்துவிட்டு, கால்களைச் சுத்தி செய்து கொண்டு தமக்கென்று அமைக்கப்பட்டிருந்த ஆசனத்தில் நேராக நிமிர்ந்து அமர்ந்தார். பின் தமது முழுக் கவனத்தை

யும் தமது முன்னால் பதித்தார்." "கவனத்தை முன் பதித்தல் என்றால் என்ன?" இது புத்தர்களின் ஒரு சிறப்பான முறை. இந்தப் புத்த முறைக்கு அனபன்சதி யோகா- முழு மனத்தோடு மூச்சை விட்டு மூச்சை இழுத்தல்- என்று பெயர். கவனத்தை முன்னால் பதித்தல் என்பதற்கு இதுதான் பொருள்.

புத்தர் ஏதாவது செய்தாரானால், உதாரணத்துக்கு அவர் உடை அணிகிறார் என்றால், அவர் அதிலேயே கவனமாக இருப்பார். அவர் நடந்தால் அதிலேயே கவனமாக இருப்பார். அவர் எதுவும் செய்யவில்லை என்றால் மூச்சில் கவனமாக இருப்பார். எப்போதும் அவர் கவனமாக இருப்பார். அவர் தூங்கும்போதும்கூட கவனமாக இருப்பார்.

ஆனந்தர், புத்தருடன் பத்து வருடங்கள் ஒன்றாக வாழ்ந்துள்ளார். ஓர் இரவு முழுவதும் ஒரே மாதிரி நிலையில் புத்தர் இருப்பது அவருக்கு ஆச்சரியத்தை அளித்தது. அவர் கையை எப்படி வைத்துக்கொண்டாரோ அதே நிலையிலேயே முழு இரவும் இருப்பார். இதனை இரவு வேளைகளில் பார்த்திருக்கக் கூடும். இரவு முழுவதும் எப்படி ஒரே நிலையில் இருப்பது? புத்தர் எப்படி அப்படி இருக்கிறார்? ஆனந்தா குழப்பமும் ஆச்சரியமும் அடைந்தார். அவர் தம்முடைய ஆவலை அடக்க முடியவில்லை. ஒரு நாள் அவர் கேட்டார்: "இரவு வேளைகளில் நான் எழுந்து உங்களைக் கவனிக்கிறேன். நான் அப்படிச் செய்யக் கூடாது. ஆனாலும் எனது ஆவலை அடக்க முடியவில்லை. எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது. நீங்கள் அதே கோணத்திலேயே இருக்கிறீர்கள். நீங்கள் உறங்குகிறீர்களா அல்லது விழிப்புடன் இருக்கிறீர்களா?"

புத்தர் சொன்னார்: "உறக்கம் உடலுக்குத்தானே ஏற்படுகிறது? நான் விழிப்புடன் இருக்கிறேன்."

"இப்போது உறக்கம் வருகிறது. இப்போது வந்துவிட்டது. இப்போது அது அடங்கிவிட்டது. இப்போது உடல் ஓய்வு பெற்றுவிட்டது. இப்போது அடங்கிவிட்டது. எனது உறுப்புகள் ஓய்வு பெற்றுவிட்டன. ஆனால், எனது பிரக்ஞையை ஒளி விட்டுச் சுடர்போலப் பிரகாசிக்க வைக்கிறேன்."

தியானம் என்பது இருபத்து நான்கு மணி நேர விஷயம். அது ஒரு நாளைக்கு ஒரு முறை செய்துவிட்டு அத்துடன் முடித்து விடும் விஷயம் அல்ல. அது உங்களின் வாசமாக வேண்டும். அது உங்களின் சூழ்நிலை ஆக வேண்டும். அது உங்களைச் சுற்றிப் படர்ந்து எங்குச் சென்றாலும், எதைச் செய்தாலும் உங்களுடனேயே வர வேண்டும்.

*தமது கவனத்தை எதிரில் பதித்தார்.*

*அதன் பிறகு, பல பிக்குகள் அவர் இருக்குமிடம் வந்து, அவரது திருவடிகளில் தமது சிரம் பதித்து வணங்கி, எழுந்து, அவரை மும்முறை வலம் வந்து, அவர் எதிரில் ஒதுங்கி அமர்ந்தார்கள்.*

புத்தரிடம் ஒரு கேள்வியைக் கேட்பதற்கு ஒரு வித மனோநிலை இருக்க வேண்டும். அப்போதுதான் விடை கிடைக்கும். புத்தர் விடையளிக்கமாட்டார் என்பதல்ல. நீங்கள் அவரிடம் மரியாதையில்லாமல்கூடக் கேள்வி கேட்கலாம். புத்தரும் விடை அளிப்பார். ஆனால், அதை நீங்கள் பெற்றுக் கொள்ள இயலாது. அதனால், நீங்கள் கேள்வியை மரியாதை இல்லாமல் கேட்டாலும்கூட அவர் பதிலளிப்பார். எப்படி நீங்கள் கேள்வி கேட்டாலும், பணி வில்லாமல் கேட்டாலும், கேட்டுக்கொள்ளும் சுபாவம் இல்லாமல் கேட்டாலும், பெண்மைத்தனமாக இல்லாது கேட்டாலும் சரி! புத்தர் பதிலளிப்பார். நீங்கள் அதனைப் பெற்றுக்கொள்ள முடியாமல் போய்விடும். நீங்கள் கேள்

வியை எப்படிக் கேட்கிறீர்கள் என்பதைப் பொருத்துத்தான் நீங்கள் அந்தப் பதிலைப் பெற்றுக்கொள்ள முடியுமா, இல்லையா என்று சொல்ல முடியும்.

நீங்கள் எப்படிக் கேட்கிறீர்கள்...? எந்த மனோநிலையில்...? கேட்டுக் கொள்ளும் பாவத்திலா? நீங்கள் ஆர்வத்துடன் இருக்கிறீர்களா? நீங்கள் உங்களது அறிவைச் சேகரித்துக் கொள்ளும் பாவத்தில் கேட்கிறீர்களா அல்லது மனத்தில் களங்கமில்லாமல் கேட்கிறீர்களா? இந்த மனிதருக்குத் தெரியுமா, தெரியாதா என்று பரிசோதிக்க கேள்வி கேட்கிறீர்களா? நீங்கள் பணிவுடன் சரணாகதி அடையும் பாவத்தில் இருக்கிறீர்களா? நீங்கள் உங்களுக்குப் பரிசு அளிக்கப்படும்போது வாங்கிக் கொள்வீர்களா? நீங்கள் வெளிப்படையாக, வரவேற்பவராக மனத்தில் வாங்கிக் கொள்பவராக உள்ளீர்களா? இந்த பதில் ஒரு விதையாக உங்கள் இதயத்தில் பதிய அனுமதிப்பீர்களா? புத்தரிடம் கேள்விகள் கேட்பது என்பது ஒரு பேராசிரியரிடம் கேள்வி கேட்பது போல அல்ல. அதற்கு உங்களிடம் சில தகுதிகள் வேண்டும். அப்போதுதான் நீங்கள் அந்தப் பதிலினால் பயனடைவீர்கள்.

*அதன் பிறகு, பல பிக்குகள் அவர் இருக்குமிடம் வந்து, அவரது திருவடிகளில் தமது சிரம் பதித்து வணங்கி, எழுந்து, அவரை மும்முறை வலம் வந்து, அவர் எதிரில் ஒதுங்கி அமர்ந்தார்கள்.*

மூன்று முறை வலம் வருவது என்பது மூன்று தேசங்களின் அடையாளம் கருதியே. முதல் வலம் என்பது வெளிப்படையாகத் தெரியும் இந்தத் தேகத்துக்கு, நமது புலன்களுக்குத் தெரியும் இந்தத் தேகத்துக்கு. புத்தர்களின் இந்தத் தேகமும் மிக அழகானதே! இந்தத் தேகத்தில்தான் புனிதம் உறைகின்றது. ஆகவே முதல் வலம் இந்தத்

தேகத்துக்கு. இரண்டாவது வலம், சூட்சும தேகத்துக்கு. மூன்றாவது, புத்தரின் உண்மையான தேகத்துக்கு.

இந்த மூன்று வலம் வருதலுக்கு இன்னோர் அடையாளம் உண்டு. புத்த மதத்தில் மூன்று அடைக்கலங்கள் உண்டு. அவர்கள் தீட்சை பெறும்போது, "நான் புத்தரிடம் அடைக்கலம் பெறுகிறேன். நான் சங்கத்திடம் அடைக்கலம் பெறுகிறேன். நான் தர்மத்திடம் அடைக்கலம் பெறுகிறேன்" என்று மொழிய வேண்டும். இதற்காகவும்கூட மூன்று வலங்கள்.

ஒருவர் புத்தரிடம் வந்து ஏதாவது கேட்க வேண்டுமெனில், அவர் அடைக்கலம் புக வேண்டும். அவர் தமது மனோபாவத்தில், "நான் புத்தருடன் ஒன்றிப் போக வந்துள்ளேன். நான் புத்தரின் அருகே மனோ அலைகளைப் பரவ விடுவேன். நான் புத்தரிடம் தஞ்சம் புக வந்துள்ளேன். நீங்களே எனக்கு அடைக்கலம். நான் உங்களிடம் சீடராக வந்துள்ளேன். எனக்கு ஒன்றுமே தெரியாது என்பதைத் தெரிந்தே வந்துள்ளேன். களங்கமில்லாமல் வந்துள்ளேன். உங்களிடம் தலைகுனிந்து பணிகின்றேன். உங்களுக்குத் தெரியும், எனக்குத் தெரியாது என்பதை நான் ஒப்புக் கொள்கிறேன். அதனால் நீங்கள் எனக்கு என்ன பெறுவதற்கு தகுதி இருக்கிறதாக நினைக்கிறீர்களோ அதனைத் தருகையில் நான் பெற்றுக் கொள்கிறேன்."

"நான் சங்கத்திடம் தஞ்சம் புகுகிறேன். எனது எண்ணங்களைப் பரிமாறிக்கொள்ள விழைகிறேன்." ஏனெனில், புத்தர் என்பவர் இதற்கு முன்னர் வாழ்ந்த புத்தர்களுக்கும், எதிர்காலப் புத்தர்களுக்கும் பிரதிநிதியாகத் தான் திகழ்கிறார். ஒரு புத்தர் என்பவர் மற்ற புத்தர்களுக்கெல்லாம் கதவு! புத்தரைக் கிருஷ்ணர் என்றும் கிறிஸ்து என்றும் அழைக்கலாம். இதில் ஒன்றும் பெரிய வித்தியாசம்

இல்லை. அவை எல்லாம் வெவ்வேறு மரபுகளில் வழங்கப் பட்ட வெவ்வேறு பெயர்களே.

உங்கள் முன் இருக்கும் புத்தர் என்பவர்தாம் உங்களது அடைக்கலம். இரண்டாவது அடைக்கலம் மற்ற புத்தர்களிடம், சங்கத்திடம், மற்ற எல்லாப் புத்தர்களும் சேர்ந்த ஓர் அமைப்புடன்– சென்ற காலம், நிகழ்காலம், எதிர்காலம். மூன்றாவது அடைக்கலம் தர்மத்திடம். மனிதனைப் புத்தனாக மாற்றும் ஒரு சக்தியிடம். தட்டி எழுப்பும் இந்தக் கலையான தர்மம், அதுவே மதமெனப் படுவது.

*அப்போது, மரியாதைக்குரிய சுபூதி அங்கே வந்து, கூடியுள்ள சங்கத்தினிடையில் அமர்ந்தார்.*

புத்தரின் மிகப் பெரிய சீடர்களுள் ஒருவர் சுபூதி. அதன் பின்னர் அவர் தமது இருக்கையில் இருந்து எழுந்தார். மறுபடியும் அனைத்தையும் திரும்ப உரைத்தார். ஏனெனில் சுபூதி சாதாரண மனிதர் அல்லர். அவர் பெரும்பாலும் புத்தரைப் போலவேதான். அதே போல ஆகும் தருவாயில் தான் இருந்தார். அவர் எந்தக் கணத்தில் வேண்டுமானா லும் புத்தர் ஆகிவிடுவார். அதனால் ஆனந்தர் திரும்பச் சொல்கிறார்.

*பிறகு அவர் மேலே எழுந்து, தமது மேலாடையை எடுத்துத் தோளின் மேல் போட்டுக் கொண்டார்; தமது வலது முழங்காலைத் தரையில் பதித்து மண்டியிட்டார்; தமது இரு கரங்களையும் குவித்துப் புத்தரை நோக்கி நீட்டியபடி பேச ஆரம்பித்தார்:*

*"பிரபுவே, அது அற்புதம்! மகா அற்புதம்! எல்லாம் கடந்தவரே, எத்தனை மகான்கள், எத்தனை போதி சத்துவர்கள், ததாகதரால் மாபெரும் உதவி பெற்றிருக்கிறார்கள்!" என்றார்.*

*அவர் மேலும்... "பிரபுவே, போதிசத்துவ- வாகனத்தில் ஏறிச் செல்பவர்கள், எங்கே நிற்பார்கள்? எவ்வாறு முன்னேறுவார்கள்? எவ்வாறு தம் எண்ணங்களைக் கட்டுப்படுத்துவார்கள்?" என்று கேட்டார்.*

சுபூதி புத்த பிராயத்துக்கு மிக அருகில் இருந்தார். அவர் ஒரு போதிசத்துவர். போதிசத்துவர் என்றால் புத்தராக ஆவதற்குத் தயாராக உள்ளவர் என்று பொருள். மிக அருகில் இருப்பவர். ஓர் அடி மேலே வைத்தால் அவர் புத்தர் ஆகிவிடுவார். போதிசத்துவர் என்றால் போதியின் சாறு! தொண்ணூற்று ஒன்பது உஷ்ண நிலையில் தயாராக இருப்பவர். நூறாவது கோணத்தில் அவர் ஆவியாகி விடுவார். ஆனால் போதிசத்துவர் என்பவர் தொண்ணூற்று ஒன்பது உஷ்ண நிலையிலேயே தொடர்ந்து இருக்க முயற்சி செய்பவர். ஏனெனில் அப்போதுதான் மக்களுக்கு அவர் கருணையினால் உதவி புரிய முடியும். காரணம், நூறாவது உஷ்ண நிலைக்குச் சென்றுவிட்டால் போதிசத்துவர் புத்தர் ஆகிவிடுகிறார். அவர் அப்பால், வெகுதூரம், அதற்கும் அப்பால் சென்றுவிட்டார். அதன் பின்னர் அவரைத் தொடர்பு கொள்ளுவது, அந்த நிலைக்குச் சென்றுவிட்ட வரைத் தொடர்புகொள்வது மிகவும் சிரமமாகி விடும்.

தொண்ணூற்று ஒன்பது உஷ்ண நிலையில் இருப்பவர் கள்தாம் உதவி புரிய முடியும். ஏன்? காரணம், அவர்கள் இன்னும் ஞானம் பெறவில்லை. ஆகவே, அவர்களுக்கு ஞானம் பெறாதவர்களது உலக வழக்கங்கள் நன்றாகத் தெரியும். அதனால் அவர்களால்தாம் உதவி புரிய முடியும். ஞானம் பெறாதவர்களது மொழி நன்றாகத் தெரியும். அவர்கள் இன்னும் இவர்களுடனேயே இருக்கிறார்கள். மற்றொரு வகையில் பார்த்தால், தொண்ணூற்று ஒன்பது மடங்கு அவர்கள் கடந்து சென்றுவிட்டார்கள். ஆனாலும் அந்த ஒரு சதவீதத்தில் அவர்களைத் தொடர்புகொள்ள வைக்கிறது. பாலம் அமைக்கிறது.

ஆகவே, போதிசத்துவர் என்பவர் புத்தபிராயத்துக்கு மிகவும் அருகில் இருப்பவர். அதே சமயம் அதன் கரையிலேயே சற்று நேரம் அதிகமாக இருந்து மக்களுக்கு உதவி புரியக் கூடியவர். அவர் வந்து சேர்ந்துவிட்டார். அவர் தமது வருகையைப் பகிர்ந்துகொள்ள விரும்புகிறார். அவருக்குத் தெரியும். அவர் தமக்குத் தெரிந்தவற்றைப் பகிர்ந்துகொள்ள விரும்புகிறார். மற்றவர்களெல்லாம் இருளில் திகைத்துக் கொண்டிருக்கின்றனர். அவர் தமது ஒளியினைப் பகிர்ந்துகொள்ள விரும்புகிறார். தமது அன்பைப் பகிர்ந்துகொள்ள விரும்புகிறார்.

சுபூதி ஒரு போதிசத்துவர். ஆனந்தர் அவரைப் பற்றிக் குறிப்பிடும்போது புத்தரைக் குறிப்பிடுவது போலவேதான் குறிப்பிடுகிறார்: 'அவர் தமது ஆசனத்திலிருந்து எழுந்திருந்தார்.' –நீங்கள் கற்பனை செய்யுங்கள். மனத்தில் உருவகப்படுத்துங்கள். போதிசத்துவர் எழுந்திருக்கிறார். அவர் முழுப் பிரக்ஞையுடன் எழுந்திருக்கிறார். அவர் ஓர் இயந்திர மனிதனைப் போல எழுந்திருக்கவில்லை. அவரது ஒவ்வொரு மூச்சுக் காற்றும் தெரிந்தே, முழுதும் தெரிந்தே விடுகிறார். எதுவும் அறியாமல் போவதில்லை. அவர் மிகவும் கவனத்துடன் இருக்கிறார். கத்தோலிக்கப் பழக்க முறைகளில் திரும்பக் கொணர்தல் என்பதுதான் புத்தர்களது **சம்மசதி**– முழு மனத்தோடிருத்தல் முழு மனத்தோடு திரும்பக் கொணர்தல், திரும்பக் கொணர்ந்து வாழ்தல்; **சம்மசதி**– இதற்கு 'ஒரு காரியத்தைக்கூடப் பிரக்ஞை இல்லாமல் செய்யாமல் இருத்தல்' என்று பொருள்.

*பிறகு அவர் மேலே எழுந்து, தமது மேலாடையை எடுத்துத் தோளின் மேல் போட்டுக் கொண்டார்; தமது வலது முழங்காலைத் தரையில் பதித்து மண்டியிட்டார்; தமது இரு கரங்களையும் குவித்துப் புத்தரை நோக்கி நீட்டியபடி பேச ஆரம்பித்தார்:*

நினைவில் வைத்துக்கொள்ளுங்கள். போதிசத்துவரும் கூட, புத்தருக்கு வெகு அருகில் வந்துவிட்ட அவரும்கூட, புத்தரிடம் பணிந்து தமது நன்றியை வெளிக்காட்டுகிறார்.

*"பிரபுவே, இது அற்புதம்! மகா அற்புதம்! எல்லாம் கடந்தவரே!"*

'எல்லாம் கடந்தவரே' என்பதன் பொருள் அந்தக் கரைக்குப் போய்ச் சேர்ந்தாகிவிட்டது. சுபூதி இந்தக் கரையில் இருக்கிறார். புத்தர் அந்தக் கரையில் இருக்கிறார். சுபூதி புரிந்துகொள்ளும் நிலைக்கு வந்துவிட்டார். அவரால் அந்தக் கரையை, புத்தரைக் காண முடியும். இதையே, 'எல்லாம் கடந்தவரே' என்று சொல்கிறார்.

இந்த எல்லாம் கடந்தவர் என்ற வார்த்தைக்கு நிறையப் பொருள்கள் உள்ளன. ஒன்று: ஒருவன் அந்தக் கரைக்குப் போய்ச் சேர்ந்துவிட்டான். மற்றொன்று: ஒருவர் தியானத்தின் எல்லைக்கே சென்றுவிட்டார். புத்தர் தியானத்தின் எல்லைக்கு மொத்தம் எட்டுப் படிகள் இருக்கின்றன என்று சொல்கிறார். அந்த எட்டாவது படியினை அடைவதுதான் எல்லாம் கடந்தது என்பதன் பொருள். ஆனால் எல்லாம் ஒன்றுதான். ஒருவர் சமாதி நிலையினை அடையும்போது அந்தக் கரையினை அடைந்துவிட்டார். அவர் இனிமேல் இல்லவே இல்லை. அதனைத்தான் எல்லாம் கடந்தவர் என்று சொல்கிறார்கள். போய்விட்டது. இனிமேல் இல்லை. அவன் ஒன்றுமில்லாமல் போய்விட்டான். அவனது 'தான்' என்ற சுபாவம் மறைந்துவிட்டது.

*எல்லாம் கடந்தவரே, எத்தனை மகான்கள், எத்தனை போதிசத்துவர்கள், ததாகதரால் மாபெரும் உதவி பெற்றிருக்கிறார்கள்!*

ததாகதா என்பது ஒரு புத்த வார்த்தை. இதற்கு எல்லாம் கடந்தது என்று பொருள். சுபூதி சொல்கிறார்: “எவ்வளவு உதவிகள் செய்தாயிற்று. எவ்வளவு ஆச்சரியகரமானது. இது மிகவும் ஆச்சரியகரமானது. நீங்கள் இவ்வளவு அளித்தீர் களா என்று ஆச்சரியமாக இருக்கிறது. நீங்கள் இவ்வளவு தருவதற்கு நாங்கள் தகுதியுடையவர்களே அல்ல.”

*“பிரபுவே, இது அற்புதம்! மகா அற்புதம்! எல்லாம் கடந்தவரே, எத்தனை மகான்கள், எத்தனை போதி சத்துவர்கள், ததாகதரால் மாபெரும் உதவி பெற்றிருக்கிறார்கள்!” என்றார்.*

*அவர் மேலும்... “பிரபுவே, போதிசத்துவ- வாகனத்தில் ஏறிச் செல்பவர்கள், எங்கே நிற்பார்கள்? எவ்வாறு முன்னேறு வார்கள்? எவ்வாறு தம் எண்ணங்களைக் கட்டுப்படுத்து வார்கள்?” என்று கேட்டார்.*

ஒருவர் இந்தக் கரையிலேயே சிறிது நேரம் அதிகமாக இருந்து மக்களுக்கு உதவி புரிய வேண்டும் என்று நினைத்தால், அவர் எப்படி அதனைச் செய்வது?

அவர் என்ன கேட்கிறார்? அவர் கேட்கும் கேள்வி உங்களில் பெரும்பாலானோருக்குத் தொடர்புடையதாக இருக்காது. ஏனெனில், அவை நீங்கள் போதிசத்துவராக மாறும்போதுதான் தொடர்புடையதாகத் தெரியும். ஆனால் ஒருநாள், என்றாவது ஒருநாள், நீங்களும் போதி சத்துவர்களாக வருவீர்கள். என்றாவது ஒருநாள், இந்தக் கேள்வி தொடர்புடையதாக ஆகிவிடும். இதைப் பற்றி நீங்கள் ஆலோசிப்பது நல்லது. இதைப் பற்றித் தியானம் செய்வது நல்லது.

அவர் சொல்கிறார்: “போதிசத்துவர்களாகத் தீர்மானித் தவர்கள் எந்த நிலையில் நிற்பது?” அவர் மேலும் சொல் கிறார்: “அந்தக் கரை கவர்ந்து இழுக்கிறது. அந்தக் கரையின் ஈர்ப்புச் சக்தி அதிகமாக இருக்கிறது. இந்த நிலையில் இந்தக்

கரையில் எப்படி நிற்பது? நாங்கள் மக்களுக்கு உதவி புரிய வேண்டும். ஆனால் எப்படி? அந்தக் கரை இழுக்கிறதே. காந்த சக்தி இழுக்கிறதே. அந்தக் கரை எங்களை அழைக்கிறது. ஆகவே, எங்களுக்கு இங்கே நிற்பதற்குக் கற்றுக்கொடுங்கள். நாங்கள் இங்கே மறுபடியும் வேரூன்றி நிற்க விரும்புகிறோம். வேரற்று விட்டோம். இந்த உலகத்தில் எங்களுக்கு வேரே இல்லை. தொண்ணூற்று ஒன்பது விழுக்காடு வேர் போய்விட்டது."

ஒரு மரத்தை – தொண்ணூற்று ஒன்பது விழுக்காடு வேர் அற்றுவிட்ட மரத்தை எண்ணிப்பாருங்கள். ஒரே ஒரு சதவீதம்தான் வேர் ஒட்டிக்கொண்டுள்ளது. அந்த மரம் கேட்கிறது: "நான் இப்போது எப்படி நிற்பது? நான் இப்போது விழுந்துவிடப் போகிறேன். நான் இன்னும் சிறிது நேரம் நிற்பேனேயானால் இந்த மக்களுக்கு அனைத்திற்கும் உதவியாக இருப்பேன். அவர்களுக்கு நான் வேண்டும். எனக்குத் தேவையாக இருந்தபோது நீங்கள் உதவி புரிந்தீர்கள். இப்போது மற்றவர்களுக்கு நான் தேவையாக இருக்கிறேன். நான் உதவி புரியவேண்டும்." இந்த ஒரு வழியில்தான் ஒரு சீடன் தனது குருவிற்குத் தனது காணிக்கையைச் செலுத்த முடியும். வேறு வழியே இல்லை. குரு உனக்கு உதவி புரிந்தார். குருவிற்கு உதவி தேவையில்லை. எப்படிக் கடனைத் திருப்பித் தருவது? என்ன செய்வது? ஒரே வழி, நடுங்கிக் கொண்டிருக்கும் யாருக்காவது, இருளில் தவித்துக்கொண்டிருக்கும் யாருக்காவது ஏதாவது உதவி செய்யுங்கள். உங்கள் கடனைத் திரும்பித் தந்ததாகி விடும்.

அவர் கேட்டார்: "எவ்விதம் நிற்பது?" இது மிகவும் கடினமானது. அது பெரும்பாலும் கடினமானது. "எப்படி முன்னேறுவது? எப்படி மக்களுக்கு உதவி செய்வது?" "ஏனெனில் அதுவும் மிகவும் கடினமானது. இப்போது தான் புரிகிறது, அவர்களுடைய துன்பம் எல்லாமே

பொய்யானவை. இப்போது புரிகிறது, அவர்களுடைய வலிகள் எல்லாமே கனவில் வரும் பயங்களைப் போல என்று. அவர்களுடைய வலிகள் உண்மையானவை அல்ல. இப்போது தெரிகிறது, அவர்கள் வெறும் கயிற்றைப் பார்த்துப் பாம்பு என்று பயந்தார்கள். இப்போது அவர்களுக்கு உதவி புரிவது மிகக் கடினமான ஒன்று. மிகவும் அபத்தமானது. அவர்களுக்கு உதவி தேவை என்று நமக்குத் தெரிகிறது. ஏனெனில், நமக்கு நம்முடைய இறந்தகாலம் தெரியும். நாம் கதறினோம், நடுங்கினோம், கத்தினோம். நமக்கு நாம் எவ்வளவு துயரப்பட்டோம் என்று தெரியும். இப்போது தெரிகிறது, நமது எல்லாத் துயரங்களும் கனவைப் போல என்று. அவை எல்லாமே பொய்த்தோற்றம், மாயை என்று."

எந்தவித காயமும் இல்லாத ஒரு மனிதன் தனக்கு வலிக்கிறது என்று சொல்லிக் கொண்டிருப்பது எவ்வளவு அபத்தமானது என்று சற்றே நினைத்துப் பாருங்கள்.

ஒரு முறை ஒரு மனிதரை என்னிடம் கொணர்ந்தார்கள். இரண்டு ஈக்கள் அவரது வயிற்றுக்குள் புகுந்து விட்டதாக அவருக்கு எண்ணம் ஏற்பட்டுவிட்டது. ஏனெனில், அவர் வாயைத் திறந்துகொண்டு தூங்கும் வழக்கம் உள்ளவர். அவரது வயிற்றுக்குள் அந்த ஈக்கள் சுற்ற ஆரம்பித்துவிட்டன. அவை வயிற்றுக்குள் புகுந்திருந்தால் நிச்சயம் சுற்றத்தான் செய்யும். அவர் தொடர்ச்சியாகக் கவலைப்பட ஆரம்பித்தார். அவரால் ஓர் இடத்தில் தொடர்ந்து உட்காரக்கூட முடியவில்லை. அவர் அடிக்கடி "இந்தப் பக்கம் போய்விட்டது. இப்போது அந்தப் பக்கம் போய்விட்டது" என்று சொல்லிக்கொண்டே இருந்தார். அவர் பைத்தியமாகவே ஆகிவிட்டார்.

இப்போது அவர் நிறைய மருத்துவர்களிடம் சென்று பார்த்துவிட்டார். யாருமே அவருக்கு உதவி செய்ய

இயலவில்லை. எல்லோருமே சிரித்துவிட்டு, “நீ கற்பனை செய்து கொண்டிருக்கிறாய்” என்று சொல்லிவிட்டனர். ஆனால், ஒரு மனிதனைப் பார்த்து நீ கற்பனை செய்து கொண்டிருக்கிறாய் என்று சொல்வது எந்த விதத்திலும் உதவி செய்வதாகாது. காரணம், அவர் வேதனைப்பட்டுக் கொண்டிருக்கிறார். அது ஒருவேளை உங்களுக்குக் கற்பனையாக இருக்கலாம். ஆனால் அவருக்கு? அவருடைய வேதனை என்பது கற்பனையானால் என்ன, உண்மையானால் என்ன? அவருடைய வேதனை ஒன்று தான். நீங்கள் அதனை எப்படி அழைக்கிறீர்கள் என்பதைப் பற்றி எந்த வித்தியாசமுமில்லை.

நான் அவருடைய வயிற்றைத் தொட்டு, “ஆமாம் அவை இங்கே இருக்கின்றன” என்று சொன்னேன். அவர் மிகவும் மகிழ்ச்சியாகிவிட்டார். அவர் என்னுடைய காலைத் தொட்டுக் கும்பிட்டார். “நீங்கள் ஒரே ஒரு மனிதர்தான் சரியாகச் சொன்னீர்கள்... நான் எல்லா மருத்துவர்களிட மும் சென்றுவிட்டேன். ஆயுர்வேத, ஆங்கில ஹோமி யோபதி- எல்லோரும் முட்டாள்கள்! எல்லோரும் ஒன்றைத்தான் விடாப்பிடியாகச் சொல்லிக்கொண்டிருந் தார்கள். நான் அவர்களிடம் சொன்னேன்: ‘உங்களிடம் மருந்து இல்லையென்றால் மருந்து இல்லை என்று சொல்லிவிட்டுச் செல்லுங்கள். அதை விட்டு நான் கற்பனையாகச் சொல்கிறேன் என்று ஏன் சொல்கிறீர்கள்?’ இப்போதுதான் நீங்கள் கிடைத்தீர்கள்.”

நான் சொன்னேன்: “என்னால் நன்றாகப் பார்க்க முடிகிறது. அவை அங்கேயேதான் இருக்கின்றன. நான் இது போன்ற பிரச்சினைகளைக் கவனிக்கிறவன்தான். நீங்கள் சரியான ஆளிடம்தான் வந்திருக்கிறீர்கள். இதுதான் என்னுடைய முழுநேர வேலை. நான் இது போன்று உண்மையாக இல்லாத பிரச்சினைகளைக் கவனிக்கிறவன் தான். இது போன்று இல்லாத பிரச்சினைகளை அணுகுவ

தில் நான் நிபுணன். நீங்கள் சற்றே படுத்துக்கொண்டு கண்களை மூடிக்கொள்ளுங்கள். நான் உங்கள் கண்களைக் கட்டிவிட்டு அவற்றை வெளியே எடுத்து விடுகிறேன். நீங்கள் வாயைத் திறந்துகொள்ளுங்கள். நான் அவற்றை வெளியே கூப்பிடுகிறேன். அதற்கு ஒரு மகத்தான மந்திரம் உண்டு."

அவர் மிகவும் மகிழ்ச்சியாகிவிட்டார். பின்பு சொன்னார்; "இதனை இப்படித்தான் செய்ய வேண்டும்" நான் அவரைக் கண்களைக் கட்டிக்கொண்டு வாயை மூடிக்கொண்டு படுக்கவைத்தேன். சந்தோஷமாக ஈக்கள் வெளியே வருவதற்காகக் காத்திருந்தார். நான் அவசரமாக வீட்டினுள்ளே இரண்டு ஈக்களைப் பிடிக்கச் சென்றேன்.

அது எனக்கு மிகவும் சிரமமான ஒன்றாகத்தான் இருந்தது. காரணம், அதற்கு முன் எப்போதும் நான் ஈக்களைப் பிடித்ததில்லை. ஆனால், ஒருவாறாகச் சமாளித்தேன். அவர் கண்களை விழித்து அந்தக் கண்ணாடி பாட்டில்களில் இருந்த ஈக்களைப் பார்த்துவிட்டுச் சொன்னார்: "இப்போது அந்தப் பாட்டில்களை என்னிடம் கொடுங்கள். அந்த முட்டாள்களிடம் கொண்டு போய்க் காட்டுகிறேன்" என்று. அவர் அதன்பின் முற்றிலுமாகக் குணமாகிவிட்டார். ஆனால், இது போன்ற மக்களுக்கு உதவி செய்வது மிகக் கடினமான ஒன்றாகும். மிகக் கடினம். ஏனெனில், அவர்களின் துன்பமே பொய்யானது தான்.

சுபூதி கேட்கிறார்: "பகவானே, எவ்விதம் இங்கு நிற்பது என்று முதலில் சொல்லுங்கள். ஏனெனில், எங்கள் வேர்கள் அற்றுப்போய் விட்டன. நாங்கள் இனிமேல் இந்த உலகத்தைச் சேர்ந்தவர்கள் அல்ல. எங்களின் பற்றுப் போய்விட்டது. வேர்கள் போய்விட்டன. எப்படி முன்னேறுவது? எப்படி வேலை செய்வது? ஏனெனில்

இப்போது எங்களுக்கு இவை யாவுமே அபத்தம் என்று புரிகிறது. மக்கள் எல்லாவற்றையும் கற்பனை செய்து கொள்ளுகிறார்கள். எப்படி எண்ணங்களை அடக்குவது?"

அவர் சொல்வதன் பொருள் என்ன? –காரணம், போதிசத்துவரிடம் உங்களிடமெல்லாம் இருப்பதைப் போல, சாதாரணமான எண்ணங்களே கிடையாது. இப்போது இருப்பதெல்லாம் ஒரே எண்ணம்தான். அந்தக் கரை! அந்தக் கரை தொடர்ச்சியாக மனத்தை இழுக்கிறது. கதவு திறந்து இருக்கின்றது. பரவச நிலையை நீங்கள் அடையலாம். நீங்கள் உங்களைக் கதவருகேதான் நிறுத்தி வைத்திருக்கிறீர்கள் – கதவு திறந்துதானிருக்கிறது.

முதலில் நீங்கள் கதவு எங்கே இருக்கிறதென்று தேடினீர்கள். உயிர்களைக் காப்பாற்ற, அதன் பின் திரும்பத் திரும்பக் கதவைத் தட்டினீர்கள்– இப்போது கதவு திறந்திருக்கிறது. "நீங்கள் காத்திருங்கள். வெளியே காத்திருங் கள். ஏராளமானோருக்கு உதவி புரிய வேண்டியிருக்கிறது." இயற்கையாகவே இந்தக் கதவு வழியே நுழைய வேண்டும் என்று தோன்றும். அப்படி ஆசைப்படுவதும் இயல்புதான். இதைத்தான் அவர் கேட்கிறார்.

*இவற்றைக் கேட்ட புத்தப் பெருமான், சுபூதியிடம், "...ஆகவே சுபூதி, நான் சொல்வதை நல்ல கவனத்தோடு கேள்!" என்றார்.*

*போதிசத்துவ வாகனத்தில் பயணம் செய்யக்கூடிய ஒருவரின் சிந்தனை இப்படிப்பட்டதாக இருக்கும்.*

இது மொழிமாற்றம் செய்யும்போது அவ்வளவு நன்றாகத் தெரியவில்லை. சம்ஸ்கிருத வார்த்தையில் 'சித்தோபத்' என்று சொல்வார்கள். ஒருவர் இது போன்ற மனத்தை உருவாக்கிக்கொள்ள வேண்டும். இது போன்ற

தீர்மானத்தை, ஒரு மகத்தான தீர்மானத்தை, உறுதியை -சித்தோபத் -இது போன்று கொள்ள வேண்டும்.

*பிரபஞ்சத்தில் வாழ்கின்றவரில், 'இருப்பவர்கள்' என்று குறிப்பிடப்படுகிறவர்கள் அனைவரையும் நான் நிர்வாண நிலைக்கு அழைத்துச் செல்வேன்; மிச்சம் மீதியாக எதையுமே பின்னால் விட்டுச் செல்லாத நிர்வாண நிலைக்கு அவர்களை இட்டுச் செல்வேன்.*

"ஒன்றோ இரண்டோ இல்லை சுபூதி, ஒன்றோ, இரண்டோ இல்லை. எல்லா உயிர்களையும், ஆண்கள், பெண்கள், மிருகங்கள், பறவைகள், மரங்கள், இந்த உலகில் இருக்கும் எல்லா உயிர்களையுமே!" ஒருவர் இதுபோன்ற உறுதியை 'நான் எல்லோரையும் நிர்வாண நிலைக்கு இட்டுச் செல்வேன்' என்ற உறுதியை உருவாக்கிக்கொள்ள வேண்டும்.

*மிச்சம் மீதியாக எதையுமே பின்னால் விட்டுச் செல்லாத நிர்வாண நிலைக்கு அவர்களை இட்டுச் செல்வேன்.*

இன்னொன்றும் நீங்கள் நினைவில் இருத்திக் கொள்ள வேண்டும். நீங்கள் மறக்கக் கூடாது. அப்படியில்லை என்றால், நீங்கள் மற்றவர்களை இட்டுச் செல்கையில் நீங்களேகூட அறியாமைக்குள் விழுந்துவிட நேரலாம். எல்லா உயிர்களையும் அந்தக் கரைக்கு அழைத்துச் செல்ல வேண்டும். அதே சமயம் நீங்கள் அவர்களுடைய துன்பங்கள் எல்லாம் கற்பனையே என்பதை மனத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். அதனால், உங்களுடைய பிணி தீர்க்கும் முறைகளும் பொய்யானதே. அவர்களுக்குச் சுயம் என்பதே இல்லை என்பதை நீங்கள் நினைவில் கொள்ள வேண்டும். உங்களுக்கும்கூடச் சுயம் என்பதே இல்லை. அதனால் மறந்துவிட வேண்டாம். நீங்கள் மற்றவர்களுக்கு உதவி செய்வதாக எண்ண வேண்டாம். நீங்கள் பெரிய உதவி செய்பவர், அது இது என்றெல்லாம்

நினைத்துக்கொள்ள வேண்டாம். அப்படி இல்லை யென்றால் மறுபடியும் நீங்கள் விழவேண்டியதுதான். மறுபடியும் உங்கள் வேர்கள் இங்கேயே வளர வேண்டியதுதான்.

அதனால் இரண்டு விஷயங்களை நீங்கள் நினைவில் கொள்ள வேண்டும். நீங்கள் இந்தக் கரையிலேயே மிகவும் உறுதியோடு காத்திருக்க வேண்டும். அப்படியில்லை யெனில் நீங்கள் இன்னொன்றால் இழுத்துச் செல்லப் படுவீர்கள். நீங்கள் இன்னும் வேர்விட ஆரம்பிக்கவில்லை. இல்லையெனில் நீங்கள் எதற்கும் பயனற்றுப் போவீர்கள். உங்களை நீங்களே அழித்துக் கொள்வீர்கள். மறுபடியும் கனவில் வீழ்ந்துவிடுவீர்கள்.

ஏன் அப்படி? ஏனென்றால், ஒரு போதிசத்துவருக்கும் ஒரு சுயம் அல்லது உயிர் என்ற எண்ணம் ஏற்பட்டு விடுகிறது. அதாவது, உயிர் வாழ்வதாக, ஒரு நபராக ஒரு எண்ணம் ஏற்பட்டுவிடுகிறது.

"எனவே, சுபூதி! நீங்கள் இரண்டு விஷயத்தை நினை வில் கொள்ள வேண்டும். ஒன்று, எல்லா உயிர்களையும் அந்தக் கரைக்கு அழைத்துச் செல்ல வேண்டும். இருப்பினும்கூட யாருமே அற்பமானவர் அல்ல என்பதை நினைவில் கொள்ள வேண்டும். நீங்களோ, அவர்களோ யாருமே அல்ல. தான் என்ற அகம்பாவம் எல்லாமே பொய்யானது. இதை நினைவில் கொண்டு மன உறுதியுடன் முன்னேறுங்கள். மக்களை அந்தக் கரைக்கு இட்டுச் செல்ல உதவி செய்யுங்கள். அவர்கள் ஏற்கெனவே அங்கிருக்கிறார்கள். நீங்கள் அவர்களை ஜாக்கிரதையாக, பிரக்ஞையோடு இருக்கச் செய்ய வேண்டும். ஆனால் உங்களை நீங்களே இழந்துவிடாதீர்கள். நீங்கள் அனைவரை யும் காப்பாற்ற வந்தவரைப் போல் நினைத்துக் கொள்ளா

தீர்கள். அந்த இரண்டு விஷயங்களை நினைவில் கொள் ளுங்கள்.

மறுபடியும் மறுபடியும் புத்தர் இந்தப் போதிசத்துவர் களின் பயணத்தைப் பற்றிச் சொல்லுகிறார். நீங்கள் எல்லோரும் போதிசத்துவர்களாக ஆக வேண்டும் என்பதே எனது விருப்பம்.

இன்றைக்கு இது போதும்.

என் அன்பான ஓஷோ,
மனமற்ற நிலை (No Mind) என்ற ஒரு நிலையை மனத்தினின்றும் போராட்டங்களும், வேதனையும் இல்லாமல், பொய்யாக இல்லாமல், வலுக்கட்டாயமாக யோசிக்காமல், இது போன்ற பலாத்கார பிரயோகங்கள் இல்லாமல், இயற்கையாக எழுப்ப முடியாதா? மனமற்ற நிலை என்ற ஒரு கருத்து மனத்தளவிலிருந்து கொண்டே மனத்தையே தோற்கடிக்கிறது என்றும், இந்த நிலைக்கான விதையே மனத்திலிருந்துதான் எழும்புகிறது என்றும் சொல்லலாமா? மனம் கடந்த நிலைகள் என்று சொல்லப்படுகின்ற மரணம், நிர்வாணா, அழிவற்றது இவற்றின் மீது தியானம் செய்வது உதவுமா? இதனைச் செய்யும்போது எனது மனம் மிகவும் பொய்யான ஒன்றாகத் தோற்றமளிக்கிறது. எனது எல்லைக்கப்பால் என்னை நானே உந்தித் தள்ளிக் கொள்ளும் உணர்வு ஏற்படுகிறது. நான் எங்கே பைத்தியமாகி விடுவேனோ என்று பயமாக இருக்கிறது.

எண்ணங்களற்ற நிலை என்பது மனத்தினின்றும் உருவாகாது. அது மனத்தின் வளர்ச்சி அல்ல. மனத்தின்

தொடர்ச்சியும் அல்ல. அது தொடர்பற்றது. ஆரோக்கியம் வியாதியிலிருந்து எப்படித் தொடர்பற்றதோ அவ்விதம் அது தொடர்பற்றது. ஆரோக்கியம் என்பது வியாதியி லிருந்து உருவாவதில்லை. அது பிணியை அகற்றுவதன் மூலமே கிடைக்கிறது. பிணி உடம்பை ஆக்கிரமித்துக் கொண்டு ஆரோக்கியத்தை மலரச் செய்யவிடாமல் தடுக்கிறது. பிணியை அகற்ற வேண்டும். சிறிய நீரூற்றைத் தடுத்துக் கொண்டிருக்கும் ஒரு பாறையைப் போன்றது அது. அந்தப் பாறையை அகற்றிவிட்டால் நீர் பெருக் கெடுத்து ஓட ஆரம்பிக்கும். நீர் பாறையிலிருந்து வெளிவர வில்லை. பாறை அதனைத் தடுத்துக் கொண்டிருக்கிறது. பாறைதான் அதற்குத் தடைக்கல். இதே போலத்தான் மனமும். மனம் என்பதுதான் எண்ணங்களற்ற நிலை என்பதற்குத் தடைக்கல்.

எண்ணங்களற்ற நிலை என்பதே மனமே இல்லாத நிலை. பின் அது மனத்திலிருந்து எப்படி உருவாகும்? மனத் திலிருந்து உருவாகுமேயானால் அதற்குப் பெயர் மேம்பட்ட மனம் (Super-mind) என்பதாகும். அது மனமற்ற நிலை என்பதாகாது. ஸ்ரீ அரவிந்தரிடமிருந்து நான் மாறுபடுவதும் இங்குத்தான். அவர் மேம்பட்ட மனம் என்பதைப் பற்றித்தான் பேசுகிறார். மேம்பட்ட மனம் என்பது அதே மனத்தை அலங்காரப்படுத்துவதாகும்; இன்னும் செம்மைப்படுத்துவது, மேலும் நாகரிகப் படுத்துவது, மேலும் செயற்கைப்படுத்துவது, மேலும் உறுதியாக்குவது, இன்னும் ஒருங்கிணைப்பதாகும். எப்படியிருப்பினும் அது பழைய மனம்தானே!

புத்தர் குறிப்பிடுவது மேன்மையாக்கப்பட்ட மனம் அல்ல. மனமற்ற நிலை. உயர்ந்த ஆத்மா அல்ல; ஆத்மாவே அற்ற நிலை. உயர்ந்த தனித்தன்மை அன்று; தனித் தன்மையே இல்லாத நிலை. உயரிய 'தான்' என்பதல்ல. தான் என்பதே அற்றுப் போன நிலை. 'அனத்தா.' அதனால்

தான் புத்தர் ஒப்பற்ற மனிதராக, அவரது கருத்துகள் ஆழ்ந்தவையாக விளங்குகின்றன. மேம்பட்ட மனம் என்பது வளர்ச்சி; ஆனால், மனமற்ற நிலை என்பது ஒரு பெரிய தாவல், ஒரு பாய்ச்சலாகும். மனமற்ற நிலை என்பது மனத்துடன் செய்வதற்கு ஒன்றுமில்லை. அவை இரண்டும் சந்திக்கவே வாய்ப்பில்லை. அவை ஒன்றுக்கொன்று தொடர்பாகவே இருப்பதில்லை. மனம் என்பது எங்கு இருக்கிறதோ அங்கு மனமற்ற நிலை இல்லாது போகும். மனமற்ற நிலை எங்கிருக்கிறதோ அங்கு மனம் இல்லாது போகும். அவை ஒன்றுக்கொன்று 'ஹலோ' கூடச் சொல்லிக் கொள்வதில்லை. அது முடியாது. ஒன்றின் பிரசன்னம் மற்றது இல்லை என்பதற்கு அறிகுறி. இதை நினைவில் கொள்ளுங்கள்.

அதனால்தான் ஸ்ரீ அரவிந்தர் ஞானம் பெற்றவராக முடியவில்லை. அவர் தமது மனத்தை மெருகு போடுவதிலேயே இருந்துவிட்டார். அவர் மேம்பட்ட மனம்தான். ஆனால், மேம்பட்ட மனம் என்பது ஞானம் பெற்ற நிலை என்று சொல்ல முடியாது. இதே போலப் பெட்ராண்டு ரஸ்ஸலும் மேம்பட்ட மனம்தான். ஆனாலும் மேம்பட்ட மனமாயிருப்பது மனமற்ற நிலை என்பதாக ஒத்துக்கொள்ள முடியாது. இதே போன்று நீட்ஷேவும் மேம்பட்ட மனம்தான். அரவிந்தருக்கும் நீட்ஷேவுக்கும் நிறைய ஒற்றுமைகள் இருக்கின்றன. நீட்ஷே மேம்பட்ட மனிதனைப் பற்றிப் பேசுகிறார். அரவிந்தரும் மேம்பட்ட மனத்தைப் பற்றிப் பேசுகிறார். மேம்பட்ட மனிதன் என்பதே மனிதனின் விரிவாக்கப்பட்ட ஒன்றுதான். மேம்பட்ட மனிதன் ஒருவேளை இப்படி இருக்கலாம்: 'அவனுடைய பலவீனங்கள் அழிக்கப்பட்டிருக்கும். அவனுடைய பலம் இன்னும் உறுதியாக்கப்பட்டிருக்கும். இருப்பினும் இந்த மனிதன், பெரியவனான இந்த மனிதன், உறுதியான இந்த மனிதன், உயர்ந்தவனான இந்த மனிதன்,

ஆனாலும் இன்னமும் கூட அதே அலைவரிசையில், அதே ஏணியில் இருப்பவன்தான். அடிப்படையில் மாற்றம் ஏதுமில்லை. தொடர்பற்றுப் போகும் நிலை (discontinuity) இல்லை.'

மனமற்ற நிலை என்பது நீங்கள் இப்போது இருப்பதிலிருந்து முற்றிலுமாகத் தொடர்பற்றுப் போதல். மனமற்ற நிலை வருவதற்கு நீங்கள் இறக்க வேண்டும்.

அதனால் முதல் விஷயம்: நீங்கள் கேட்டது, "மனத்தினின்றுதான் மனமற்ற நிலை என்பது உருவாகிறதா?" இல்லை. அது வளர்ச்சி இல்லை. அது புரட்சி. மனம் என்பதை விட்டுவிடும்போது மனமற்ற நிலை என்பது அங்கே இருக்கும், அது எப்போதும் அங்கே இருக்கிறது. மனம் என்பது மேகங்களால் திடீரென்று மூடப்பட்டிருக்கும். உங்களைக் குழப்பத்தில் ஆழ்த்திக்கொண்டிருக்கும். அது உங்களை ஏற்கெனவே இருப்பதைப் பார்க்கவிடாமல் தடுக்கும். அதனால் அது வளர்ச்சி அல்ல.

நீங்கள் அடுத்துக் கேட்டது, "போராட்டமும், துன்பமும் இல்லாமல் இது சாத்தியமா" என்பது. போராட்டத்திற்கும், துன்பத்திற்கும், இதற்கும் தொடர்பேயில்லை. போராட்டமும், துன்பமும் மனமற்ற நிலையுடன் ஒன்றுமே செய்ய முடியாது. போராட்டத்திலிருந்தும், துன்பத்திலிருந்தும் அது வருவதே இல்லை. போராட்டத்திலிருந்து, துன்பத்திலிருந்து ஏதாவது வருமேயானால் அது காயங்களுடன்தான் இருக்கும். காயங்களை ஆற்றிவிட்டாலும்கூட வடுக்கள் இருக்கும். அது மீண்டும் ஒரு தொடர்ச்சியாகிவிடும்.

போராட்டமும், வேதனையும் மனமற்ற நிலைக்குக் கிடையவே கிடையாது. போராட்டமும், வேதனையும் உருவாவதற்குக் காரணமே, மனம் அதிகாரத்தைத் தன்னகத்தே வைத்துக்கொள்ள முயலுவதால்தான். சண்டை என்பதே மனத்தினால்தான். மனம் என்பது

செல்வதற்கு மறுக்கிறது. அது இங்கேயே தங்கிவிட முயலுகிறது. அது உங்களை வசப்படுத்தும்போது அது மிகவும் அதிகாரம் மிகுந்ததாகிவிடுகிறது. அது, 'நான் இங்கிருந்து போகப்போவதில்லை. இங்கேயேதான் இருப்பேன்' என்று சொல்கிறது. மொத்தப் போராட்டமும், வேதனைகளும் மனத்தினால்தான். மனமற்ற நிலை என்பது மனத்துடன் செய்ய வேண்டியதற்கு ஒன்றுமில்லை. நீங்கள் இந்தப் போராட்டத்துடனும், வேதனையுடனும் கூடவே போக வேண்டும். இல்லையேல் மனம் உங்களை விடப்போவதில்லை.

நான் மறுபடியும் உங்களுக்கு விளக்குகிறேன். மனமற்ற நிலை என்பது உங்களின் போராட்டத்திலிருந்து விளைந்த தில்லை. போராட்டத்திலிருந்து மனம்தான் வருகிறது. மனமற்ற நிலை என்பது எந்தவிதப் போராட்டமும் இல்லாது வருவதாகும். கற்பாறைதான் உங்களுக்குப் போராட்டத்தைக் கொடுக்கும். அது நகருவதற்கு மறுக்கிறது. அது அந்த இடத்தில் நூற்றுக்கணக்கான, ஆயிரக்கணக் கான ஆண்டுகளாக அங்கேயே இருக்கின்றது. அதை நகர்த்துவதற்கு நீங்கள் யார்? "நீங்கள் எந்த ஊற்றைப் பற்றிப் பேசுகிறீர்கள்? அப்படி எதுவும் இல்லை. நான் இங்கேயே நூற்றாண்டுகளாக இருக்கிறேன். இங்கு ஒன்றுமில்லை என்று எனக்குத் தெரியும். நீங்கள் அதனை மறந்துவிட் டீர்கள்." ஆனாலும் நீங்கள் பாறையை நகர்த்த முயற்சி செய்கிறீர்கள். பாறை மிகக் கடினமாக, மண்ணில் உறுதியாக ஊன்றிக் கொண்டிருக்கிறது. அது அங்கேயே நீண்ட காலமாக இருக்கிறது. அதற்கு இணைப்புகள் உண்டு. அது இங்கிருந்து போக மறுக்கிறது. அதற்கு நீரூற்றைப் பற்றி ஒன்றும் தெரியாது. ஆனால், அந்தப் பாறையை நகர்த்தித்தான் ஆக வேண்டும். ஏனெனில், அந்தப் பாறையை நகர்த்தவில்லையென்றால் நீரூற்று வெளியே வராது.

நீங்கள் "...அடிமேல் அடிக்காமல், சுத்தியால் அடிக்காமல், வெட்டாமல், இது போன்ற வலுக்கட்டாயமான செயல்களில்லாமல்" என்று கேட்கிறீர்கள். மனமற்ற நிலை என்பதற்கு உங்களது இந்தச் செயல்களுக்கெல்லாம் அவசியமே இல்லாமல் இருக்கிறது. ஆனாலும் மனம் என்பது போகாது. நீங்கள் சுத்தியலால் அடிக்கலாம். வெட்டலாம். இது போன்று ஆயிரத்தொரு செயல்களில் ஈடுபடலாம்.

"மனமற்ற நிலை என்ற எண்ணமே மனத்தினின்றும் உருவாகி மனத்தையே மாற்றுகிறது, ஒரு விதையைப் போல."

இல்லை. மனத்தில் மனமற்ற நிலை என்பதற்கான வித்து இல்லவே இல்லை. மனத்தில் மனமற்ற நிலை என்பதற்கான விதைகூட இருக்கவே முடியாது. மனத்தில் இதற்கு இடமே இல்லை. மனமற்ற-நிலை என்பது விசாலமான வானத்தைப் போன்றது. அது எப்படியொரு மனம் என்ற சிறிய இடங்களில் அடங்கியிருக்க முடியும்? மனம் ஏற்கெனவே முழுமையாக ஆக்கிரமிக்கப்பட்டிருக்கிறது -எண்ணங்களால், ஆசைகளால், வினோதமான கற்பனைகளால், நினைவுகளால், ஆக்கிரமிக்கப்பட்டிருக்கிறது. ஆகவே அதில் இடமில்லை.

முதலில் அது மிகச் சிறியதாக இருக்கிறது. அது மனமற்ற நிலையைத் தன்னகத்தே கொண்டிருக்க முடியாது. இரண்டாவதாக அது முழுமையாக ஆக்கிரமிக்கப் பட்டிருக்கிறது. அதில் நிறைய திணிக்கப்பட்டிருக்கிறது. நிறையச் சத்தமாக இருக்கிறது. ஆனால், மனமற்ற நிலை என்பது அமைதியானது. மனம் கூச்சலாக இருக்கிறது. மனம் அதனை வைத்துக்கொண்டிருக்க முடியாது. மனம் வெளியேற வேண்டும். அது வெளியேறும் போது புதிய வாழ்க்கை, புதிய உயிர், ஒரு புதிய உலகம் துவங்கும்.

"அழிவற்ற நிலை, நிர்வாணா நிலை, இறப்புப் போன்றவைகளினூடேயே தியானம் செய்வது பயனளிக்குமா?" என்று கேட்டனர்கள்.

இதுபோன்று மனத்தினை மேம்படுத்துகின்ற வார்த்தைகளெல்லாம் மனம் தொடர்பான வெறும் வார்த்தைகள் தாம். நீங்கள் அழிவற்ற நிலை என்று நினைக்கும்போது என்ன செய்வீர்கள்? நீங்கள் யோசிப்பீர்கள். நீங்கள் நிர்வாணத்தைப் பற்றி யோசிக்கும்போது என்ன நடக்கப் போகிறது? உங்கள் மனம் நூற்கவும், நெய்யவும் ஆரம்பிக்கும். உங்கள் மனம் நிர்வாணத்தைப் பற்றி அழகான எண்ணங்களைத் தர ஆரம்பிக்கும். ஆனாலும், அவை எல்லாமே மனத்தின் வேலைகள்தாமே.

நீங்கள் இறப்பைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்? நீங்கள் இறப்பைப் பற்றி நினைக்கும்போது என்ன நினைக்கிறீர்கள்? உங்களுக்குத் தெரியவில்லை. உங்களுக்குத் தெரியாத ஒன்றைப் பற்றி எப்படி நினைக்க முடியும்?

மனம் என்பதே தனக்குத் தெரிந்த ஒன்றை, அழகாகத் திரும்பத் திரும்ப நினைக்கக் கூடிய ஒன்றுதான். தனக்குத் தெரியாதது என்றால் அது மலட்டுத்தனம் கொண்டதாகி விடுகிறது. உங்களுக்கு முடிவற்ற நிலை (eternity) என்பது பற்றித் தெரியுமா? உங்களுக்குத் தெரிந்ததெல்லாம் காலத்தைப் பற்றித்தான். நீங்கள் அழிவற்ற நிலை என்பதைப் பற்றி நினைக்கும்போது காலத்தை இழுத்து, அல்லது காலத்தின் விரிவாக்கப்பட்ட நிலையைத்தான் எண்ணுகிறீர்கள். ஆனாலும் அது காலம்தானே. உங்களுக்கு நிர்வாணத்தைப் பற்றி என்ன தெரியும்? 'நிர்வாணம்' என்ற வார்த்தை நிர்வாணமாகிவிடாது. நிர்வாணம் என்ற கொள்கையும்கூட நிர்வாணமாகி விடாது. 'கடவுள்' என்ற வார்த்தை கடவுளாகிவிடாது.

படங்கள், சிலைகள் முதலியன கடவுளரின் வடிவங்களாகச் செய்திருக்கிறார்களே, அவை யாவும் கடவுளர்களாகிவிடா. ஏனெனில் கடவுளுக்குப் பெயரோ, வடிவமோ கிடையாது.

நீங்கள் இறப்பைப் பற்றி என்ன நினைக்கப் போகிறீர்கள்? எப்படி இறப்பைப் பற்றி நினைக்கப் போகிறீர்கள்? நீங்கள் சில விஷயங்களை, சில பேர்கள் இறப்பதைப் பார்த்திருக்கிறீர்கள். ஆனால், இறப்பை எப்போதும் பார்த்ததேயில்லை. நீங்கள் ஒரு மனிதன் இறப்பதைப் பார்க்கும்போது என்ன பார்க்கிறீர்கள்? அவன் அதற்கு மேல் மூச்சு விடுவதேயில்லை. அவ்வளவு தான் நீங்கள் பார்த்தது. அதற்கு மேல் என்ன? அவனுடைய உடல் குளிர்ந்துவிடுகிறது. அவ்வளவுதான் நீங்கள் பார்த்தது. அதற்கு மேல் என்ன? இதுதான் இறப்பு என்பதா? உடல் குளிர்ச்சியாவதும், மூச்சு நின்று போவதும் அனைத்தும் இவ்வளவுதானா? அவனது மையப் பகுதியில் என்ன நிகழ்கிறது? நீங்கள் இறந்து பார்க்காமல் உங்களுக்குத் தெரியாது. அனுபவிக்காமல் தெரியாது. அறியாததை அறிந்து கொள்வதற்கு ஒரே வழி அனுபவித்துப் பார்ப்பதுதான்.

இந்த எண்ணங்களெல்லாம் எதற்கும் உதவாது. அவை, ஒருவேளை மனத்தை வேண்டுமானால் உறுதிப் படுத்தலாம். ஏனெனில் மனம், "பார், உனது மனத்தை மாற்றக்கூடிய கொள்கைகளை நான் உனக்கு விநியோகம் செய்கிறேன். நான் உனக்கு என்னென்ன செய்கிறேன் என்று பார். என்னை உன்னுடனேயே வைத்துக்கொள். நான் உன்னை ஞானியாக்குவதற்கு உதவி புரிவேன். நான் இல்லாமல் நீ இல்லவே இல்லை. நான் இல்லாமல் நீ நிர்வாணத்தைப் பற்றியும், இறப்பைப் பற்றியும், அழிவற்ற நிலையைப் பற்றியும் எப்படி யோசிக்க முடியும்? நான்

உனக்கு அத்தியாவசியமானவன். நான் இல்லாமல் நீ ஒன்றுமே இல்லை" என்கிறது.

இல்லை, இந்தத் தியானம் நிற்காது. நீங்கள் இதைப் பார்க்க வேண்டும். மனம் என்பது உங்களுக்கு உதவவே போவதில்லை. மனம் உங்களுக்கு உதவப் போவதில்லை என்று அறிந்த மாத்திரத்திலேயே, அந்த உதவியற்ற நிலையிலேயே, அந்தக் கணத்திலேயே, ஓர் அமைதி! எல்லாம் நின்று போய்விடுகிறது. மனம் எதுவும் செய்யத் திராணியற்றது என்று ஆனவுடனேயே எதுவும் மீதம் இருப்பதில்லை. எல்லா எண்ணங்களுமே முடங்கிப் போய்விடுகின்றன. அது இலக்கற்றுப் போய்விடுகிறது. அது ஸ்தம்பித்துப் போதலில், மனமற்றுப் போதலில் முதல் கீற்றுத் தென்படுகிறது. ஒரு சிறிய சாளரம் திறக்கப் படுகின்றது. மனம் நின்று போதலில், மனமற்றுப் போதலில் முதற்சுவை உணரப்படுகிறது. அதன்பின் விஷயங்கள் மாறத் தொடங்குகின்றன. அதன்பின் எல்லைகளற்ற நிலைக்குள் உங்களை இழந்து போவதென்பது சுலபமாகிவிடுகிறது.

நீங்கள் தியானம் செய்ய முடியாது. அதனுள்ளேயே போய்விட வேண்டும். அதனைத் தியானம் செய்வது என்பது போலித்தனமான செய்கையாகும். இது தவிர்ப்ப தற்கான செய்கையாகிவிடும். தப்பித்தல். நீங்கள் இறப்பு என்பதைக் கண்டு அஞ்சுகிறீர்கள். நீங்கள் நிர்வாணத்தைப் பார்த்துப் பயப்படுகிறீர்கள். நீங்கள் நிர்வாணத்தைப் பற்றி எண்ணுகிறீர்கள். நினைக்கும் சக்தி இருப்பதன் காரணமாக உங்களால் இறப்பைப் பற்றி, நிர்வாணத்தைப் பற்றி நினைக்க முடியும் என்று நம்புகிறீர்கள்.

"எனது மனம் இதனைச் செய்யும்போது வெடிப்பது போலாகிறது."

மனம் என்பது தந்திரமானது. அது உங்களை ஏமாற்றியிருக்கும். ஏனெனில், மனம் நீங்கள் ஒன்றை

நினைத்துக் கொண்டிருக்கையில் வெடிக்க முடியாது. நீங்கள் எதைப் பற்றி யோசிக்கிறீர்கள் என்பதைப் பற்றி அதற்கு ஒரு பொருட்டல்ல. நீங்கள் ஒன்றை நினைக்கும் போது மனம் வெடிக்க முடியாது. அது அந்தச் சுகத்தை அனுபவித்துக்கொண்டிருக்கும். அது அப்படி அனுபவித்துக் கொண்டிருப்பதை நீங்கள் வெடிப்பது போல நினைத்துக் கொள்கிறீர்கள்.

"நான் எனது எல்லைகளை மீறி என்னைத் தள்ளிக் கொள்கிறேனோ என்றும், நான் ஒரு பைத்தியமாகி விடுவேனோ என்றும் பயமாயிருக்கிறது."

நீங்கள் பைத்தியமாகிவிடுவீர்களோ என்று அச்சம் தேவையில்லை. ஏனெனில் நீங்கள், நீங்கள் மட்டுமல்ல, எல்லோருமே பைத்தியங்கள்தாம். மனம் என்பதே பைத்தியக்காரத்தனமானதுதான். மனத்திற்கு ஒருமுகப் படுத்துவது என்பதே தெரியாது. அது எப்போதும் பிளவு பட்டே இருக்கும். மனம் எப்போதும் ஒன்றை மற்றதாக வைத்திருக்கும். இருப்பதா, இல்லாமல் போவதா? இதைச் செய்வதா, அதைச் செய்வதா? மனம் எப்போதுமே ஒரு முடிவுக்கு வர இயலாதது. நீங்கள் ஏதேனும் ஒரு முடிவை எடுத்தீர்கள் என்றாலும்கூட அது மனம் எடுத்த ஒரு முடிவாகவும், அதே சமயம் மனத்தின் மற்றொரு பகுதி அதை எதிர்ப்பதாகவும் அமையும்.

மனம் என்பதே முழுமையானதில்லை. அதனால்தான் மனம் பைத்தியக்காரத்தனமானது. நீங்கள் அதற்காக அஞ்சத் தேவையில்லை. மனத்தினுள் இருப்பது என்பது பைத்தியக்காரத்தனமானதே.

புத்தர்கள் மட்டுமே இதற்கெல்லாம் அப்பாற்பட்ட வர்கள். மனித சமுதாயமே பெரும்பாலும் மனநலமற்றது தான். எல்லைக்கப்பால் நீங்கள் சென்றுவிடும்போது ஒரு மனநல மருத்துவரைத் தேடும் நிலைமை ஏற்பட்டுவிடுகிறது.

ஆனாலும் வித்தியாசம் மிகக் குறைவானதே. அளவில்தான் வித்தியாசமே தவிர, தன்மையில் அல்ல. உங்களுக்கும் உங்களது மனநல மருத்துவருக்கும் உள்ள வித்தியாசமும் கூட மிகக் குறைவானதே.

நினைவில் கொள்ளுங்கள். மனம் எந்த விதத்திலும் உதவி செய்யாது. மனத்தினால் உதவி செய்ய இயலாது. மனத்தினால் தடை போடத்தான் முடியும். இதைப் பார்த்து உணர்ந்து கொண்டாலே மனமற்ற நிலை வந்துவிடும். அதனைக் கொண்டு வரவேண்டும் என்பதில்லை. அது தானே வந்து சேரும்.

> எனது அன்பான ஓஷோ,
>
> நேற்றைய சூத்திரத்தில், புத்தர் சொல்கிறார்: போதிசத்துவர் என்னும் வாகனத்தில் யாராவது செல்லத் தயாரானால் அவர்கள், 'நான் எல்லா உயிர்களையும் நிர்வாணம் என்னும் நிலைக்கு இட்டுச் செல்ல வேண்டும். நிர்வாணம் என்னும் எதையுமே விட்டுச் செல்லாத ராஜ்யத்துக்கு அழைத்துச் செல்ல வேண்டும்' என்பதைத் தீர்மானம் செய்து கொள்ள வேண்டும் என்று சொன்னீர்கள். எதையும் விட்டுச் செல்லாத இந்த நிர்வாணம் என்பது என்ன?

புத்தர் இரண்டு நிர்வாண நிலைகளைப் பற்றிப் பேசுகிறார். ஒன்று: அவர் கூறுவது உட்பிரிவுகளைக் கொண்ட நிர்வாணம். மரம் மறைந்துவிட்டது. ஆசைகளால் ஆக்கப்பட்ட மரம், தழைகள், இலைகள், பழங்கள் -எல்லாமே மறைந்துவிட்டன. ஆனால், வேர் மட்டும் கறுத்த மண்ணுக்குள் புதைந்து கிடக்கின்றது. வெளிப்புறத்திலிருந்து பார்க்கும்போது மரம் அகற்றப்பட்டுவிட்டதாகத் தோற்றமளிக்கிறது. ஆனால், மரம் தன்னைத் தானே புதுப்பித்துக் கொள்ளும் அளவுக்குச் சக்தி உடையதாக

இருக்கிறது. அதன் உள் அடுக்குகள் இன்னும் இருக்கின்றன. அதன் விதைகள் இன்னும் எரிந்து போகவில்லை. இதைத்தான் நிர்வாணத்தின் உட்பிரிவுகளாகக் குறிப்பிடுகிறார்.

இதைத்தான் பதஞ்சலி சபீஜ் சமாதி- விதைகளுள்ள சமாதி என்கிறார். இது வெளிப்புறத்திலிருந்து கடினமாகத் தெரியும். மரம் முற்றிலுமாக அகற்றப்பட்டுவிட்டதாகத் தெரியும். ஆனால், மரத்தின் அடியில் கறுத்த மண்ணின் ஆழத்தில் வேர் உயிரோடுதானிருக்கிறது. அது முளை விடுவதற்கான சரியான தருணத்தை எதிர்பார்த்துக் காத்திருக்கிறது. மழை வந்தவுடன் அது முளைவிடும். அது தனது பருவகாலத்துக்காகக் காத்திருக்கிறது. அந்தக் கணத்தில் மீண்டும் துளிர்விடும்.

இந்த நிலையைத்தான் நீங்கள் அனேக முறை, மனம் மறைந்து போய் மனமற்றுப் போன நிலையாவதாகவும், மறுபடியும் மனம் திரும்ப வருவதாகவும், மீண்டும் துளிர்ப்பதாகவும் சொல்கிறீர்கள். நீங்கள் ஒரு சிகரத்தை அடைகிறீர்கள். அந்தச் சிகரத்தை அடைந்த கணத்தில் எல்லாமே முடிந்துவிட்டதாக எண்ணுகிறீர்கள். இப்போது பழைய இருண்ட பள்ளத்தாக்கை நினைத்துப் பார்க்கக் கூட விரும்புவது கிடையாது. நீங்கள் பழையபடி அந்த விகாரமான, துயரமான அந்த நாள்களுக்குப் போகப் போவதே இல்லை என்று நினைக்கிறீர்கள். ஆன்மாவின் இருண்ட இரவுகள் முடிந்துவிட்டன. காலை வந்துவிட்டது. சூரியன் உதித்துவிட்டான்.

ஆனால் மறுபடியும் ஒருநாள், திடீரென்று அந்த இருளிலேயே விழுகிறீர்கள். மறுபடியும் பள்ளத்தாக்கு, மறுபடியும் ஒளியற்றுப் போகிறது. மறுபடியும் அந்தச் சிகரத்தில் இருந்த அனுபவம் கனவாகிப் போகிறது. ஒருவர் மறுபடியும் அது நிகழ்ந்ததா, இல்லையா என்று

சந்தேகத்துடன் பார்க்கிறார். 'நான் ஒருவேளை கற்பனை செய்து கொண்டேனா? அல்லது ஒருவேளை நான் கனவு கண்டிருப்பேன்.' ...ஏனெனில் அது நடந்திருந்தால், அது இப்போது எங்கே போய்விட்டது? சூரியன் பளிச்சிடும் அந்தச் சிகரம் எங்கே? அந்தப் பரவசமான கணங்கள் எங்கே? பழையபடி துன்பமும், துயரமும், மன உளைச்சலும் மீண்டும் வந்துவிட்டதே. நீங்கள் மறுபடியும் நரகத்தில் வீழ்ந்துவிட்டீர்கள். இவ்வாறு நிறைய முறை நடந்துவிட்டன.

புத்தர் இதனை விதைகளடங்கிய நிர்வாணம் என்றும், பதஞ்சலி சபீஜ் சமாதி என்றும் குறிப்பிடுகின்றனர். உலகத்தை மேம்படுத்துதல் என்பது போய்விட்டது. ஆனால், மேம்படுத்தப்படாது இருக்கும் வித்து இங்கேயே தான் இருக்கின்றது.

புத்தர் குறிப்பிடும் இரண்டாவது நிர்வாணம் உட்பிரிவுகள் அற்ற நிர்வாணம். பதஞ்சலி இதனை விதைகளற்ற சமாதி அல்லது நிர்பீஜ் சமாதி என்கிறார். அந்த மரம் மட்டும் அழிக்கப்படவில்லை. அதன் வித்தும் கூட எரிக்கப்பட்டது. எரிக்கப்பட்ட வித்து முளைவிடாது. அதன் பின்னர் நீங்கள் அந்தச் சிகரத்திலேயே நிரந்தரமாக இருப்பீர்கள். அதன்பின் கீழே விழுதல் என்பது கிடையாது.

அதைத்தான் புத்தர் நேற்றைய சூத்திரத்தில் சொன்னார். போதிசத்துவர் என்ற வாகனத்தில் இருப்பவர், "நான் அனைத்து உயிர்களையும் நிர்வாண நிலைக்கு இட்டுச் செல்ல வேண்டும்... எதையும் விட்டுச் செல்லாத நிர்வாண ராஜ்ஜியத்துக்கு அழைத்துச் செல்ல வேண்டும்." எந்த வித உட்பிரிவுகளையும், எவ்வித வேர்களையும், எந்த ஒரு விதையையும் விட்டுச் செல்லாத நிர்வாண நிலை.

**எனது அன்பான ஓஷோ,**
**பாலுணர்வைப் (Sex) பொருத்தவரை ஜென்னின் அணுகுமுறை என்ன? ஜென்னில் மக்கள் ஆண், பெண் என்று பிரிக்க முடியாத பாலின் வகையைச் சார்ந்தவராகவோ அல்லது பாலுணர்வற்ற வாசனை உடையவர்கள் என்றும் சொல்லப்படுகிறதே.**

ஜென்களுக்குப் பாலுணர்வைப் பற்றி எந்தவித அபிப்ராயமும் இல்லை. அதுதான் ஜென்னிடம் அழகான ஒரு விஷயமே. அபிப்ராயம் கொள்வது என்றால் இன்னும் இந்தப் பக்கமோ அல்லது அந்தப் பக்கமோ கவரப்பட்டு விட்டதாகப் பொருள். யாராவது பாலுணர்வுக்கு எதிராக இருந்தால் அவர்களுக்கு அபிப்ராயம் இருப்பதாகப் பொருள். யாராவது பாலுணர்வை ஆதரித்தால் அவருக்கும் அதைப் பற்றிய ஓர் அபிப்ராயம் இருப்பதாகப் பொருள். ஆதரித்தும், எதிர்த்தும் இரண்டு அபிப்ராயங்கள்– ஒரு மாட்டுவண்டியின் இரு சக்கரங்கள் போன்றவை. அவை எதிரிகள் அல்ல. அவை நண்பர்கள். ஒரு வியாபாரத்தின் பங்குதாரர்கள்.

ஜென்னுக்குப் பாலுணர்வைப் பற்றி அபிப்ராயமே இல்லை. ஏன் ஒருவருக்கு செக்சைப் பற்றி அபிப்ராயம் இருக்கவேண்டும்? அதுதான் இந்த விஷயத்தின் சிறப்பே. ஜென்கள் நடுநிலை வகிப்பவர்கள். நீங்கள் தண்ணீர் குடிப்பதைப் பற்றி ஏதாவது அபிப்ராயம் வைத்திருக் கிறீர்களா? நீங்கள் உணவு உண்பதைப் பற்றி ஏதேனும் அபிப்ராயம் வைத்திருக்கிறீர்களா? நீங்கள் இரவு வேளைகளில் படுக்கப் போவதைப் பற்றி ஏதேனும் அபிப்ராயம் வைத்திருக்கிறீர்களா? எதுவுமே இல்லை.

சில பைத்தியக்காரத்தனமான மனிதர்கள் இதைப் பற்றி யெல்லாம்கூட அபிப்ராயம் வைத்திருப்பது பற்றி எனக்குத்

தெரியும். ஒருவர் ஐந்து மணி நேரத்திற்கு மேல் தூங்கக் கூடாது. தூங்குவது என்பது பாவமான ஒன்று. இது தவிர்க்க முடியாத தீமை. எனவே ஐந்து மணிகளுக்கு மேல் தூங்கக் கூடாது. இந்தியாவில் மூன்று மணிகளுக்கு மேல் தூங்கக்கூடாது என்பவர்களும் இருக்கிறார்கள். நான் ஒரு முறை பத்து வருடங்களுக்கும் மேலாக உறங்காமல் இருக்கும் மனிதனைக்கூடப் பார்த்திருக்கிறேன். அவரை இதற்காகவே எல்லோரும் வழிபடுகிறார்கள். அவரிடம் வேறு ஒன்றுமே இல்லை. அவரிடம் வேறு எந்த வித சிருஷ்டிக்கும் திறமையும் இல்லை. இது ஒன்றுதான் அவரது திறமை. ஒருவேளை அவர் தூக்கம் வராத வியாதிக்காரராகக்கூட இருக்கலாம். ஒருவேளை இதுவே அவரது திறமையாக இல்லாமல் போனாலும்கூட, அவரால் தூங்கவே முடியாமலிருக்கலாம். அவர் நரம்புக் கோளாறான ஆளாக மாறி அவரால் ஓய்வெடுக்க முடியாமல் போய்ப் பைத்தியக்காரனைப் போல் காட்சியளிக்கலாம். ஒருவர் பத்து வருடங்களாகத் தூங்கவில்லையெனில் பைத்தியம்தான் பிடிக்கும். ஆனால் மக்கள் கூட்டம் கூட்டமாக வந்து அவரை வழிபடுகிறார்கள். "அவர் ஏதோ மகத்தான சக்தியை அடைந்துவிட்டார்" என்பதாக நினைக்கிறார்கள். அவர் எதை அடைந்தார்? அவர் அடைந்ததுதான் என்ன? அவர் அசாதாரணமான மனிதர். உடல்நிலை சரியில்லாதவராக இருக்கிறார். உறங்குவது என்பது இயற்கையான ஒன்று. அவர் நிச்சயமாகப் பதற்றமாக இருக்க வேண்டும். அவர் அதேபோலப் பதற்றமாகத்தான் இருக்கிறார். உள்ளுக்குள் கொதித்துக்கொண்டிருக்க வேண்டும். நீங்கள் நினைத்துப் பாருங்கள். பத்து வருடங்களாகத் தூங்காமல் இருப்பது! ஆனால் இப்போது அதுவே அவருக்கு நல்ல மூலதனமாகி விட்டது. அது இப்போது திரும்பக் கொடுக்கிறது. அவருடைய பைத்தியக்காரத்தனம் ஒரு மூலதனமாகி

விட்டது. இப்போது ஆயிரக்கணக்கில் மக்கள் வந்து அவரைக் கும்பிட்டுவிட்டுச் செல்கிறார்கள் –இதற்காக மட்டும்!

இத்தனை வருடக் காலங்களாக இது ஒரு பேரழிவாகவே நடந்துகொண்டிருக்கிறது. மக்கள் சிருஷ்டிக்கத் திராணி யற்றவர்களையெல்லாம் வழிபட்டுக் கொண்டிருக்கின்ற னர், சில சமயம் பித்துப் பிடித்தவர்களையும்கூட! உறக்கத்தைப் பற்றிய அபிப்ராயம் உங்களுக்கு இருக்கிறது. உணவைப் பற்றிய அபிப்ராயம் உள்ள மக்களும் இருக்கிறார்கள். இதைச் சாப்பிட வேண்டும்; அதைச் சாப்பிட வேண்டும் என்பதைப் போல. இவ்வளவுதான் சாப்பிட வேண்டும்; இதற்குமேல் சாப்பிடக் கூடாது என்றெல்லாம். அவர்கள் உடம்பு சொல்வதைக் கேட்பதே கிடையாது. வயிறு பசிக்கிறதோ இல்லையோ? அவர்களுக் கென்று ஒரு எண்ணத்தை ஏற்படுத்திக் கொண்டு அதனை இயற்கையின் மேல் திணிப்பது.

ஜென்னுக்குப் பாலுணர்வைப் பற்றி எந்தக் கருத்தும் கிடையாது. ஜென் மிக எளிமையானது. ஜென், மனத்தில் களங்கமில்லாதது. ஜென் குழந்தையைப் போன்றது. எந்த ஓர் அபிப்ராயமும் தேவையற்றது என்பதே ஜென்னின் கொள்கை. ஏன்? தும்மலைப் பற்றி ஏதாவது அபிப்ராயம் வைத்துக்கொள்ள வேண்டுமா என்ன? தும்முவதா? வேண்டாமா? அது ஒரு பாவமா? பாவமில்லையா? இதைப் பற்றி ஓர் அபிப்ராயமும் வைத்துக் கொள்வதில்லை அல்லவா? ஆனால், ஒரு மனிதன் தும்முவதைப் பற்றி அபிப்ராயம் வைத்துக் கொண்டிருப்பதை நான் பார்த்திருக்கிறேன். அவர் தும்மும் போதெல்லாம் ஒரு மந்திரத்தைத் தம்மைக் காப்பாற்றிக் கொள்வதற்காக உச்சரித்துக்கொண்டிருப்பார். அவர் ஒரு சிறிய முட்டாள் கும்பலைச் சேர்ந்தவர். அந்தக் கும்பல் நீங்கள் தும்மும் போதெல்லாம் உங்களுடைய ஆத்மா உங்களை விட்டுச்

செல்வதாக நினைத்துக்கொண்டிருக்கிறது; அப்போது நீங்கள் கடவுளை நினைக்கவில்லையென்றால் அது உங்களிடம் திரும்பி வராது என்று. அதனால் நீங்கள் நினைத்துக்கொள்ள வேண்டும். உடனே உங்களது ஆத்மா உங்களுக்கே திரும்ப அளிக்கப்பட்டு விடும். நீங்கள் தும்மும்போது இறக்க நேரிட்டால் நரகத்துக்குத்தான் போவீர்கள்.

நீங்கள் எதைப் பற்றி வேண்டுமானாலும் அபிப்ராயம் வைத்துக் கொள்ளலாம். நீங்கள் அபிப்ராயம் வைத்துக் கொண்டீர்கள் எனில் உடனே உங்களது களங்கமற்ற தன்மை போய்விடுகிறது. அந்த அபிப்ராயங்கள் உங்களை ஆதிக்கம் செலுத்தத் தொடங்குகின்றன. ஜென் எதற்கும் எதிரானதும் அல்ல; எதற்கும் ஆதரவானதும் அல்ல. எவையெல்லாம் சாதாரணமாக இருக்கிறதோ, அவை யெல்லாம் நல்லவையே என்றுதான் ஜென் சொல்கிறது. சாதாரணமாக இருப்பது, யாராகவும் இல்லாமல் இருப்பது, ஒன்றுமில்லாமல் இருப்பது, எந்தக் கொள்கையு மில்லாமல் இருப்பது, தன்மையற்றிருப்பது...

நீங்கள் ஏதோ ஒரு தன்மையுடன் இருக்கும்போது நீங்கள் ஒரு வகை நரம்பு மண்டல நோயால் பீடிக்கப் படுகிறீர்கள். குணத்துடன் இருக்கும்போது ஏதோ ஒன்று உங்களிடம் குடிகொண்டு விடுகிறது. குணம் என்பது உங்களது இறந்தகாலம். குணம் என்பது உங்களை வழிக்குக் கொண்டு வருதல். பண்படுத்துதல். நீங்கள் ஒரு தன்மையுடன் இருக்கும்போது நீங்கள் சிறைப்படுத்தப் படுகிறீர்கள். அதற்கு மேல் நீங்கள் விடுதலையாக இருப்பதில்லை. நீங்கள் ஒரு குணத்தோடு இருக்கும்போது ஒரு கவசம் அணிந்து கொண்டு விடுகிறீர்கள். இனிமேல் நீங்கள் ஒரு விடுதலையுள்ளவர் அல்ல. நீங்கள் உங்களது சிறையை உங்களைச் சுற்றி எடுத்துக் கொண்டே செல்

கிறீர்கள். அது ஓர் நுண்ணிய சிறை. ஒரு உண்மையான மனிதன் என்பவன் தன்மைகளற்று இருப்பான்.

தன்மைகளற்று இருக்க வேண்டும் என்று நான் சொல்லும்போது என்ன சொல்கிறேன் என்று தெரிகிறதா? அவர் அந்தக் கணத்தில் அந்தக் கணத்துக்கேற்றவாறு நடந்துகொள்வார். நொடியில் முடிவெடுக்கக் கூடியவ ராகத் திகழ்வார். அவர் தமது கடந்த காலத்தைப் பின் நோக்கிப் பார்த்து முடிவெடுக்கமாட்டார். முடிவெடுக்கக் கூடிய சூழ்நிலை ஒன்று ஏற்பட்டு உங்களது கடந்த காலத்தைத் திரும்பிப் பார்க்கிறீர்கள் என்றால், உங்களுக்கு ஒரு தன்மை இருக்கிறது என்று பொருள். உங்களது கடந்த காலத்தைக் கேட்கிறீர்கள்: "என்ன செய்வது?" என்று. உங்களுக்குத் தன்மை எதுவும் இல்லை எனில் நீங்கள் அந்தச் சூழ்நிலைக்கேற்றபடி முடிவெடுப்பீர்கள். அது உடன் முடிவெடுக்கும் திறனாக இருக்கிறது. அதற்குப் பலனோ, பிரதிபலனோ இல்லை.

ஜென்னுக்கு எந்தவித நம்பிக்கை முறைகளும் கிடையாது. அதே போலத்தான் பாலுணர்வைப் பற்றியும் கூட. ஜென் அதைப் பற்றி எதுவும் சொல்வதே கிடையாது. அதுதான் முடிவான ஒன்றாகும். தந்த்ராவுக்குப் பாலுணர்வைப் பற்றிய சில அபிப்ராயங்கள் உண்டு. காரணம்? அது சமுதாயம் என்ன நினைக்கிறதோ, என்ன நிகழ்த்தியிருக்கிறதோ அதனை மறுபடியும் உடையணிந்து பார்க்கிறது. தந்த்ரா மருத்துவ சம்பந்தமானது. சமுதாயம் பாலுணர்வை அழுத்தியே வைத்திருக்கிறது. தந்த்ரா உங்களுக்கு உதவி புரிவதற்கு, சமப்படுத்துவதற்காக வருகிறது. நீங்கள் இடப்பக்கமாக அதிகமே சாய்ந்துவிட்டீர் கள். தந்த்ரா வந்து உங்களுக்கு வலப்பக்கம் சாய்வதற்காக உதவி செய்கிறது. சில சமயங்களில் அதிகப்படியாகவே வலப்பக்கம் சாய்ந்தால்தான் தராசைச் சமப்படுத்த

முடிகிறது. கயிற்றைக் கட்டிவிட்டு அதில் நடப்பவனைப் பார்த்திருக்கிறீர்களா? நீண்ட கழியைக் கையில் வைத்துக் கொண்டு கயிற்றின் மேல் தன்னைச் சமனப்படுத்திக் கொண்டு நடப்பான். அவன் இடப்பக்கம் அதிகம் சாய்வது போல இருந்தால் உடனே வலப்பக்கம் சாய்வான். வலப்பக்கம் அதிகமாகச் சாய்ந்துவிட்டதாக உணர்ந்தால் உடனே இடப்பக்கம் சாய்வான். இப்படித்தான் தன்னை நடுவிலேயே வைத்துக் கொள்கிறான். தந்த்ரா என்பது குணமாக்கும் மருந்து போன்றது.

சமுதாயம் அழுத்தும் மனோபாவத்தை வைத்திருக்கிறது. வாழ்க்கையை மறுதலிக்கும் மனப்பான்மை. சந்தோஷத்தை மறுக்கும் குணம். சமுதாயம் என்பதே பாலுணர்வுக்கு எதிரானதுதான். ஏன் சமுதாயம் பாலுணர்வுக்கு இவ்வளவு எதிரானதாக உள்ளது? ஏனெனில், மக்களுக்குப் பாலுணர்வை அனுமதித்தால் அவர்களை அடிமைகளாக்க முடியாது. அது முற்றிலும் முடியாத ஒன்று- ஒரு சந்தோஷ மான மனிதனை நிச்சயம் அடிமையாக்க முடியாது. அது ஓர் ஏமாற்றும் தந்திரம். துன்பத்தில் இருக்கும் மக்களை மட்டுமே அடிமைகளாக்க முடியும். சந்தோஷமாக இருக்கும் மனிதன் சுதந்திரமான மனிதன். அவன் ஒரு விதமான சுதந்திரத்தை அனுபவித்துக் கொண்டிருக்கிறான்.

நீங்கள் மகிழ்ச்சியான மனிதர்களைப் போருக்குச் சேர்த்துக்கொள்ள முடியாது. முடியவே முடியாது. அவர்கள் ஏன் போருக்குப் போக வேண்டும்? ஆனால், ஒரு மனிதனைப் பாலுணர்வு இன்றி அழுத்தினீர்களே யானால், அவன் போருக்குப் போகத் தயாராகிவிடுவான். ஏனெனில், அவன் இங்கு வாழ்க்கையை அனுபவிக்கவே யில்லை. அவன் வாழ்க்கையை அனுபவிக்க இயலாதவன். இதனால் அவன் சிருஷ்டிக்கக்கூடிய சக்தியை இழந்து விடுகிறான். இனிமேல் அவன் ஒன்றுதான் செய்ய முடியும்.

அவன் அழிக்கும் வேலையில்தான் ஈடுபடலாம். அவனுடைய சக்தி முழுமையும் இப்போது விஷமாகி விட்டது. அழிக்கும் சக்தி மிகுந்ததாகிவிட்டது. அவன் இப்போது போருக்குப் போகலாம். அவன் தயாராக மட்டும் இல்லை. அவன் அதற்கு ஆசைப்படுகிறான். அவன் கொல்வதற்கு, அழிப்பதற்கு விரும்புகிறான். இப்படி மனிதர்களைக் கொல்லும்போது அதன் பொருட்டு ஊடுருவிச் செல்கிற இன்பத்தை அனுபவிக்கிறான். அதுவே காதலாக, அன்பாக இருக்குமேயானால் அது அழகாக அமைந்திருக்கும். நீங்கள் ஒரு பெண்ணின் உடலைக் காதலுடன் ஊடுருவும்போது அது ஆன்மிகமாக, புனிதமாக மாறிவிடுகிறது. சில தவறுகள் ஏற்பட்டு ஒரு மனிதனின் உடலைக் கத்தியால் ஊடுருவும்போது, ஈட்டியால் ஊடுருவும்போது அது கொடூரமாகப் போய்விடுகிறது. அது பலாத்காரம். அது அழிவுத்தன்மை. ஆனால், உங்கள் ஊடுருவலுக்கு மாற்று ஒன்றைத் தேடுகிறீர்கள்.

சமுதாயம் முற்றிலுமாக மகிழ்ச்சியாக இருப்பதற்கு அனுமதிக்கப்படுமேயானால் யாருமே அழிக்கும் மனோபாவம் மிகுந்தவர்களாக இருக்கமாட்டார்கள். அழகாக அன்பு செலுத்தக்கூடிய மக்கள் யாருமே அழிக்கும் மனோபாவம் மிகுந்தவர்களாக இருக்கமாட்டார் கள். அழகாக அன்பு செலுத்தி வாழ்க்கையை மகிழ்ச்சியாக அனுபவிக்கத் தெரிந்தவர்கள் யாருமே போட்டி மனப் பான்மையோடு இருக்கமாட்டார்கள். அங்குத் தான் பிரச்னையே.

இதனால்தான் ஆதிகாலத்து மக்கள் போட்டி மிகுந்தவர் களாக இல்லை. அவர்கள் வாழ்க்கையை மகிழ்ச்சியாக அனுபவித்துக்கொண்டிருந்தார்கள். பெரிய வீடு வேண்டுமென்று யாருக்குக் கவலை? வங்கிக் கணக்கில் நிறைய இருப்பு இருக்க வேண்டுமென்று யார் கவலைப்

பட்டார்கள்? எதற்காக? நீங்கள் உங்களது பெண்களு டனோ அல்லது ஆண்களுடனோ சந்தோஷமாக வாழ்க்கை நடனம் ஆடிக்கொண்டு மகிழ்ச்சியாக இருப்பீர் கள். சந்தையில் அமர்ந்துகொண்டு மணிக்கணக்காக, நாள் முழுவதும், வருடக்கணக்கில் அமர்ந்துகொண்டு. முடிவாக உங்களது வங்கிக் கணக்கில் இருப்பு அதிகமாகப் போகிறது. நிம்மதியாக ஓய்வெடுத்துக் கொண்டு, சந்தோஷமாக வாழலாம் என்று கணக்கிட்டுக் கொண்டு இருப்பீர்களா? அந்த நாள் நிச்சயம் வராது. அது வரவே முடியாது. ஏனெ னில், மொத்த வாழ்க்கையுமே நீங்கள் உலக இன்பத்தைத் துறந்தவர்களாக இருப்பீர்கள்.

நினைவில் வைத்துக்கொள்ளுங்கள். வியாபாரிகள் அனைவருமே துறந்தவர்கள்தாம். அவர்கள் எல்லாவற்றை யுமே பணத்திற்காகத் துறந்தவர்கள். ஒரு மனிதன் அன்பைப் பற்றி, காதலிக்கும்போது ஏற்படும் சாகசத்தைப் பற்றி, அந்தப் பரவச நிலையைப் பற்றி அறிந்தவனாக இருக்கும்போது, அவன் போட்டி மனப்பான்மையோடு இருப்பதில்லை. அவனுக்கு அன்றாட உணவு கிடைத்து விட்டாலே அவன் மகிழ்ச்சியாகிவிடுகிறான். இதைத்தான் இயேசு கிறிஸ்துவும் சொல்கிறார், "எங்களுக்கு அன்றாட உணவைத் தாருங்கள்'' என்று. அது தேவைக்கு மேலாகும். இப்போது அவர் முட்டாளைப் போலக் காட்சி அளிக்கிறார். அவர், "எனக்கு வங்கிக் கணக்கில் நிறைய இருப்பைத் தாருங்கள்" என்றுதானே கேட்டிருக்க வேண் டும்? அவர் தினசரி உணவைத்தான் கேட்டிருக்கிறார். ஒரு சந்தோஷமான மனிதன் இதற்கு மேல் கேட்பதே யில்லை. மகிழ்ச்சி என்பதே பூர்த்தியானதாக இருக்கிறது.

பூர்த்தியாகாத மனிதர்கள்தாம் போட்டியிடும் மனோ பாவம் கொண்டவர்களாக இருக்கிறார்கள். ஏனெனில், அவர்கள் வாழ்க்கை இங்கே இருப்பதாக நினைப்பதில்லை.

அங்கே இருப்பதாக நினைக்கிறார்கள். "நான் டெல்லியை அடைந்து குடியரசுத் தலைவராகிவிடுவேன்" அல்லது "வெள்ளை மாளிகைக்குச் செல்வேன். இப்படியாவேன். அப்படியாவேன்" என்பார்கள். "நான் அங்கே செல்ல வேண்டும். ஏனெனில் மகிழ்ச்சி அங்கேதான் இருக்கிறது." -காரணம், அவர்கள் இங்கே மகிழ்ச்சி இல்லையென்று நினைக்கிறார்கள். அவர்கள் போய்க்கொண்டே, எந்நேரமும் போய்க்கொண்டே இருக்கிறார்கள். அவர்கள் எப்போதுமே போய்க்கொண்டிருக்கிறார்களே தவிர, எங்கும் போய்ச் சேருவதே இல்லை. மகிழ்ச்சியைப் பற்றி அறிந்தவன் இங்கேயே இருக்கிறான். எதற்காக டெல்லிக்குச் செல்ல வேண்டும்? அவன் இங்கேயே மிகவும் மகிழ்ச்சி யாகத்தானே இருக்கிறான்? அவனுடைய தேவைகள் மிகக் குறைவானவை. அவனுக்கு ஆசைகளே கிடையா. அவனுக்குத் தேவைகள் உண்டு. ஆனால் ஆசைகள் கிடையாது. தேவைகளை நிச்சயம் பூர்த்தி செய்துவிடலாம். ஆனால், ஆசைகளைப் பூர்த்தி செய்யவே முடியாது. தேவைகள் என்பவை இயற்கையானவை. ஆனால், ஆசைகள் வக்கிரமானவை.

தற்போது இந்தச் சமூகமே ஒரே விஷயத்தை, பாலுணர்வை அழுத்தி வைப்பதைத்தான், சார்ந்திருக் கின்றது. அப்படியில்லை எனில் பொருளாதாரமே வீழ்ந்து விடும். நாசமாகி விடும். போர் என்பதே மறந்து போய், போருக்காக உண்டாக்கப்பட்ட தளவாடங்கள் எல்லாமே வேலையற்றுப் போய், அரசியல் என்பதே அர்த்தமற்றதாகி, அரசியல்வாதிகள் முக்கியத்துவத்தை இழந்துபோய் விடுவார்கள். மக்களைக் காதலிக்க அனுமதித்தால் பணம் கூட மதிப்பற்றதாகிவிடும். மக்களைக் காதலிக்க அனுமதிக்காததனால்தான் பணம் என்பது மாற்றாகப் பயன்படுகிறது. பணத்தைக் காதலிக்கத் துவங்குகிறார்கள். இதற்கு ஓர் உபாயம் இருக்கிறது. 'பாலுணர்வை அடக்க

வேண்டும். இல்லையெனில் சமுதாயத்தின் மொத்த அமைப்பே உடனடியாக வீழ்ச்சியடைந்து விடும்' என்று நினைக்கிறார்கள்.

இந்த உலகத்தில் விடுவிக்கப்பட்ட அன்பு ஒன்றுதான் புரட்சியை ஏற்படுத்தும். கம்யூனிசம் தோல்வியடைந்து விட்டது. ஃபாஸிசம் தோல்வியடைந்துவிட்டது. கேபிடலிசம் தோல்வியடைந்துவிட்டது. எல்லா இசங்களுமே தோல்வியடைந்துவிட்டன. காரணம், அவை எல்லாவற்றிலுமே ஆழ்ந்து நோக்கினால் காதல் என்பதை அடக்கி வைப்பதாகத்தான் இருக்கின்றன. இந்த விஷயத்தில் வித்தியாசமே இல்லை– மாஸ்கோவுக்கும், வாஷிங்டனுக்கும், பீஜிங்குக்கும், டெல்லிக்கும் கொஞ்சங்கூட வித்தியாசமில்லை. அவர்கள் எல்லோருமே ஒரு விஷயத்தில் ஒற்றுமையாக ஒரு கருத்தை ஒத்துக்கொள்கிறார்கள். அதுதான் பாலுணர்வைக் கட்டுப்பாட்டுக்குள் வைத்திருக்க வேண்டும் என்பது. மக்களைக் களங்கமற்ற பாலுணர்வை அனுபவிக்க விடக்கூடாது என்பதில்தான் அவர்கள் ஒருமித்த கருத்தோடு இருக்கிறார்கள்.

இந்த நிலைமையைச் சமப்படுத்துவதற்குத்தான் தந்த்ரா வருகிறது. தந்த்ரா என்பது ஒரு சிகிச்சை. எனவே, அது பாலுணர்வுக்கு அதிக முக்கியம் அளிக்கிறது. இதுவரை இருந்து வரும் மதங்களெல்லாம் பாலுணர்வை ஒரு பாவமாக நினைக்க, தந்த்ரா மட்டும் பாலுணர்வுதான் புனிதமானது என்று சொல்கிறது. தந்த்ரா என்பது ஒரு தீர்வு. ஆனால் ஜென் என்பது பரிகாரம் அல்ல. உடல்நிலை சரியான பின்பு ஜென் அவசியமாகிறது. உடல்நிலை சரியில்லாதபோது சிகிச்சைதானே வேண்டும்? உங்களது உடல்நிலை சரியான பின்பும் மருந்துச் சீட்டையும், பாட்டிலையும், மருந்தையும் எடுத்துக்கொண்டே போவதில்லையே. நீங்கள் அதை வீசி எறிந்துவிடுவீர்கள். அது குப்பைக் கூடைக்குள்தான் போகும்.

சாதாரண சமுதாயம் பாலுணர்வுக்கு எதிராகத்தான் செயல்படும். தந்த்ரா மனித சமுதாயத்துக்கு உதவி புரிய வருகிறது. மனித சமுதாயத்திற்கு பாலுணர்வை திரும்ப அளிக்க வருகிறது. பாலுணர்வு திரும்ப அளிக்கப்பட்ட பிறகு ஜென் வருகிறது. ஜென்னுக்கு அபிப்ராயமே கிடையாது. ஜென் என்பது ஆரோக்ய வாழ்க்கை.

> எனது அன்பான ஓஷோ,
> இந்த உலகம் சரியாக இருக்கிறதா? அதற்கும் காதல் என்பதற்கும் என்ன தொடர்பு? இந்த உலகம் சரியாக இருக்கிறது என்று நீங்கள் சொல்லும்போது அது சரியாகத்தான் எனக்குப் படுகிறது. ஆனால் அதையே வேறு யாராவது சொல்லும்போதோ, அல்லது நான் சொன்னாலோ, அது தவறானதாகப் படுகிறதே?

அது யார் சொல்கிறார்கள் என்பதைப் பொருத்தது. நான் இந்த உலகம் சரியாக இருக்கிறது என்று சொல்லும்போது நான் எந்தவிதக் கொள்கையையும் பரப்ப முயற்சி செய்வதில்லை. எனது பார்வையைப் பகிர்ந்து கொள்கிறேன். உண்மையில் இந்த Theory என்பதே Theoria என்ற கிரேக்க மொழி வார்த்தையிலிருந்து வந்ததுதான். Theory என்றால் பார்வை என்று பொருள். நான் ஏதாவது உங்களிடம் சொன்னால் அது என் மூளையிலிருந்து, மனத்திலிருந்து வருவது அல்ல. எனது அனுபவங்களை நான் பகிர்ந்துகொள்கிறேன். அந்தக் கணத்தில் நீங்கள் எனக்குக் கிடைத்தால், நீங்கள் திறந்த மனத்தோடிருந்தால் உங்களுக்கும் அந்தப் பார்வை கிடைக்கும். என்னுடைய பார்வையின் ஒரு துளி உங்களின் மேலும் சிந்தும். ஒரு கணத்தில் கதவுகள் திறந்து நீங்களும், “ஆமாம், இது இப்படித்தான்” என்று சொல்வீர்கள்.

வேறு யாராவது இதைச் சொன்னால், அது அவரது பார்வை இல்லை எனில்... ஏன், நீங்கள் யாரிடமாவது சொன்னாலும்கூட அது உங்களுடைய பார்வை இல்லையெனில், வேறு யாரிடமிருந்தாவது பெற்றதாக இருந்தால்– அது சரியாகப்படாது. புத்தரைப் போல ஒரு மனிதர் பொய் சொன்னாலும்கூட அது உண்மையைப் போலத் தோற்றம் அளிக்கும். நீங்கள் உண்மையே சொன்னாலும் கூட அது பொய்யாகத்தான் படும்.

அது எங்கிருந்து வருகிறது என்பதைப் பொருத்தது– ஆதாரம்! என்ன சொல்கிறீர்கள் என்பதைவிட, யார் சொல்கிறார்கள் என்பதே முக்கியம். நீங்கள் கிறிஸ்துவின் வார்த்தைகளைத் திரும்பத் திரும்பச் சொல்லிக்கொண்டே இருக்கிறீர்கள். ஆனாலும் உங்களை யாரும் சிலுவையில் அறையவில்லை. ஏன்? ஏன் அவர்கள் உங்களைச் சிலுவையில் அறைவதில்லை? மலைப் பிரசங்கத்தை மறுபடியும் மலை மேல் நின்றுகொண்டே சொல்லிக்கொண்டே இருக்கலாம். அதைத்தான் உலகெங்கும் மக்கள் செய்து கொண்டிருக்கிறார்கள். கிறிஸ்துவப் பாதிரிமார்களும், கிறிஸ்துவ அமைப்புகளும், ஜெஹோவாவின் சாட்சிகளும், எல்லா வகையான மக்களும் அதைத்தான் செய்து கொண்டிருக்கிறார்கள்– கைகளில் புதிய ஏற்பாட்டை வைத்துக்கொண்டு, புதிய ஏற்பாட்டில் இருப்பதை மேற்கோளாகக் காட்டிக் கொண்டு, அதே வார்த்தைகளைத் திரும்பத் திரும்பச் சொல்லிக்கொண்டு. யாருமே அவர்களைச் சிலுவையில் அறையவில்லையே, ஏன்? இதே வார்த்தைகளை இயேசு சொன்னபோது எப்படி இருந்தது? அந்த வார்த்தைகளில் நெருப்பு இருந்தது. அவர் தம்முடைய பார்வையை, திருஷ்டியைப் பகிர்ந்து கொண்டார். ஆனால், நீங்கள் சொல்லும்போது அதில் திருஷ்டி இல்லை. வெற்று வார்த்தைகள். அவற்றில் கருணை இல்லை.

ஆழம் இல்லை. உண்மை இல்லை. உண்மை அனுபவத்தி லிருந்துதான் பிறக்கிறது.

நீங்கள் கேட்கிறீர்கள்: "எல்லாமே, இந்த உலகம் எல்லாமே சரியானதா?" நான் இந்த உலகம் சரியானது தான் என்று சொல்லும்போது உண்மையில் நான் என்ன பொருளில் சொல்கிறேன்? இது ஒரே ஓர் உலகம்தான். வேறு உலகமே இல்லை என்ற பொருளில் சொல்கிறேன். உங்களுக்கு ஒப்பீடு செய்வதற்கு வேறு வழியே இல்லை. சரி அல்லது சரியில்லை என்பது தொடர்பற்றது. உள்ளது இந்த உலகம் ஒன்றுதான், வேறு இல்லை. ஒப்பீடு செய்வது என்பதே முடியாத காரியம். ஒப்பீடு என்பது இரண்டு உலகங்கள் என்பதாக இருக்கும்போதுதான் இயலும்... ஆனால் அதுதான் இல்லையே.

அதனால் நான் எல்லாம் சரியாக இருக்கிறது என்று சொல்லும்போது ஒப்பீடு செய்வது என்பது தேவையில்லை என்று பொருள். ஆனால், மக்கள் ஏன் இது சரியான உலகமில்லை என்று சொல்கிறார்கள்? அவர்கள் கற்பனையாக மனத்தில் ஓர் உலகத்தை சிருஷ்டி செய்து கொண்டிருக்கிறார்கள். அந்தக் கற்பனையை உலகத்துடன் ஒப்பிட்டுப் பார்க்கிறார்கள். எல்லாம் எப்படி இருக்க வேண்டும் என்று ஒரு கருத்து இருக்கவே, அவர்களுக்கு இங்கிருப்பதெல்லாம் சரியாக இல்லாதது போலத் தோன்று கிறது. ஏனெனில், அவர்களது கற்பனை உலகத்தின்படி எதுவும் இருப்பதில்லை. நீங்கள் ஒரு மனிதனுக்கு நான்கு கண்கள் இருக்க வேண்டும் என்று நினைத்தால், அது மிகவும் நியாயமாகவும் இருக்கிறது; பின் பக்கத்தில் இரண்டு. இரண்டு கண்கள் சரியாக இல்லை- பின் புறத்துக்கு என்ன செய்வது? யாராவது பின்புறத்திலிருந்து வந்து தாக் கினால் என்ன செய்வது? கடவுள் அதை மறந்துவிட்டார்... இரண்டு கண்கள் பின்புறத்தில் இருக்க வேண்டும்.

இப்போது சரியாக இருப்பதாகத் தெரியவில்லை. மனிதனுக்கு இரண்டு கண்கள்தான் இருக்கின்றன. அவனுக்கு நான்கு கண்கள் இருக்க வேண்டும். உடனே திடீரென்று மனிதன் சரியாக இல்லாதது போலத் தோற்றமளிக்கிறான். மனிதன் அதே மனிதன்தான். நீங்கள் ஓர் எண்ணத்தை உருவாக்கிக் கொள்ளவே, அந்த எண்ணம்தான் மனிதனை உபயோகமற்றதாக்கிவிடுகிறது.

மனிதன் எழுபது வயதுக்கு மேல் உயிர் வாழ வேண்டும். ஏன்? எழுநூறு வருடங்களுக்கு மேல் உயிர் வாழ வேண்டும் என்று சொல்வோமேயானால், எழுபது வயது என்பது மிகக் குறைவாகத் தோன்றுகிறது. ஆனால் இது ஏன்? நீங்கள் எழுநூறு வருடங்களுக்கு இங்கு என்ன செய்துகொண்டிருக்கப் போகிறீர்கள்? எழுபது வருடங்களே கெடுதல் செய்வதற்குப் போதுமானதாக இருக்கும் என்று நினைக்கவில்லையா? அழிப்பதற்கு உங்களுக்கு எழுநூறு வருடங்கள் தேவையா? அடால்ஃப் ஹிட்லர் எழுநூறு ஆண்டுகள் உயிர் வாழ்வதை நினைத்துப் பாருங்கள்...

–ஒரு முறை உங்களுக்குள் ஒரு கருத்து ஏற்படுமே யானால், ஓர் இலக்கு ஏற்படுமேயானால், எல்லாமே வித்தியாசமாகத் தெரியும். எனக்குக் கருத்துகளே இல்லை. நான் ஒட்டுமொத்தமாகக் கற்பனை உலகை சிருஷ்டித் துக் கொள்ளாதவன். நான் முற்றிலுமாக யதார்த்தவாதி. கொள்கைகளை மனத்தில் வைத்துக்கொண்டு அலைவது கிடையாது. அதன்பின் இது ஒன்றுதான் உலகம். ரோஜாக்கள் சிவப்பு நிறமாகவும், மரங்கள் பச்சை நிறமாக வும், மனிதர்கள் எப்படி இருக்க வேண்டுமோ அப்படியும் இருக்கிறார்கள். இவை மிக அழகாக இருக்கின்றன.

“எல்லாம், இந்த உலகமே சரியாக இருக்கின்றதா? இவற்றை அன்பின் வழி என்ன செய்ய முடியும்?”

அன்பின் வழி நிறையவே செய்ய முடியும். இந்த உலகம் சரியாக இருந்தால்தான் நீங்கள் அன்பு செலுத்த முடியும். இந்த உலகம் நன்றாக இல்லையென்றால் நீங்கள் அரசியல்வாதியாக முடியும். நீங்கள் அரசியல் செய்ய முடியும். அரசியல்வாதி என்பவன் இந்த உலகம் நன்றாக இல்லை என்ற கருத்தைத்தான் சார்ந்திருக்கிறான். அவன் ஒரு புரட்சியைக் கொண்டு வர வேண்டும். அவன் எல்லாவற்றிலும் மாற்றம் கொண்டு வர வேண்டும். அவன் எல்லாவற்றையும் அதனதன் இடத்தில் வைக்க வேண்டும். அவன் கடவுளை இன்னும் சீர்திருத்த வேண்டும். அதுதான் அரசியல்வாதியின் மனம். அரசியல்வாதிகளுக்கு அன்பு என்பதே கிடையாது. அவனுக்கு நிந்தனை செய்யத்தான் தெரியும். ஏனெனில், அவன் அப்படித் முடிவு செய்து விட்டான்.

மத உணர்வுடைய மனம் எதையும் தீர்மானம் செய்வது கிடையாது. இயேசு சொல்கிறார்: "நீங்கள் தீர்மானம் செய்யவேண்டாம்.'' மத உணர்வுள்ள மனத்திற்குத் தீர்மானம் என்பது கிடையாது; நிந்தனையும் கிடையாது. அதனால் அவரால் அன்பு செலுத்த முடியும். நினைவில் கொள்ளுங்கள். வாழ்க்கையிலும்கூட நீங்கள் ஆராயாமல் இருந்தால்தான் அன்பு செலுத்த முடியும். உங்களுக்கு நிறையக் கருத்துகள் தீர்மானம் செய்ய வேண்டியிருந்தால் உங்களால் அன்பு செலுத்த முடியாது. உங்களது கருத்துகளை நீங்கள் விரும்புகிறவர்கள் யாராக இருந்தாலும் அவர்களின் மீது ஏற்றிக்கொண்டே போவீர்கள். உங்களது கருத்துக்களை அவர்களின் மீது திணித்துக் கொண்டே போவீர்கள். உங்களுக்கு ஒரு குழந்தை பிறந்தால் அதனிடம் உடனே தாவ ஆரம்பிப்பீர்கள். அதனைச் சாதுர்யமாகக் கையாளத் தொடங்குவீர்கள். அதனை ஆளுமை செய்ய, முன்னேற்றத் தொடங்குவீர்கள். அதனுடைய தன்மையை

அழித்துவிடுவீர்கள். இந்த விதத்தில்தான் எல்லோருமே பெற்றோர்களால், சமூகத்தால் அழிக்கப்பட்டிருக்கிறோம்.

நீங்கள் ஒரு பெண்ணைக் காதலித்தால் உடனே அவளை முன்னேற்ற ஆரம்பிக்கிறீர்கள். ஒருவேளை அந்தப் பெண் ஒரு பெரிய முன்னேற்றவாதி என்றால், நீங்கள் அந்தப் பெண்ணின் அன்புக்கு ஆளாகிப் போனால், அதன்பின் அவ்வளவுதான், நீங்கள் இல்லவே இல்லாமல் போய்விடுவீர்கள். அதன்பின் அந்தப் பெண் உங்களை முன்னேற்ற ஆரம்பித்து முடிவில் உங்களிலிருந்து வேறொன்றைக் கொண்டு வந்து விடுவாள். சில வருடங்களுக்குப் பிறகு நீங்கள் யார் என்று உங்களுக்கே தெரியாமல் போய்விடும். உங்களைச் செதுக்கி, மெருகேற்றி, வர்ணம் பூசி, "இதுபோல் நடந்துகொள்ளுங்கள், இதுபோல் பேசுங்கள், இதை இப்படி எடுத்துக்கொள்ளுங்கள்" என்று ஆரம்பிக்கிறாள்.

ஓர் இளம்பெண் ஓர் ஆணிடம் காதல் கொள்கிறாள். அந்தப் பெண் கத்தோலிக்க மதமாகவும் அந்த ஆண்மகன் யூதனாகவும் இருக்கும்போது, அந்தப் பெண்ணின் குடும்பத்தினர் கவலைப்பட்டு, "நாங்கள் இந்தத் திருமணத்தை அனுமதிக்க முடியாது" என்கின்றனர். அந்தக் குடும்பத்தினர் மிகுந்த பணக்காரர்கள். அதனால், "நீ அந்த ஆடவனைத் திருமணம் செய்துகொண்டால் இந்தக் குடும்பத்தின் சொத்து உனக்கு வந்து சேராது" என்கின்றனர். அவள் அந்தக் குடும்பத்திற்கு ஒரே மகள். அதனால் அந்தச் சொத்து முழுவதும் அவளுடையதுதான்.

இது, மிகவும் அநியாயமானது. எனவே அவள், "நான் என்ன செய்வது?" என்று கேட்கிறாள்.

உடனே அவர்கள், "அவனைக் கத்தோலிக்க மதத்துக்கு மாற்று" என்கின்றனர்.

உடனே முயற்சி செய்கிறாள். அவள் மகிழ்ச்சியடை கிறாள். ஏனெனில், யூதனுக்கு அந்தப் பெண்ணின் மேல் இருப்பதைவிட அதிக ஆசை பணத்தின் மேல் வருகிறது. ஒரு யூதன் என்பவன் யூதன்தான். அவன் ஆசைப்படு கிறான். அவன் உடனே பைபிளைப் படிக்கத் துவங்கு கிறான். மாதா கோயிலுக்குச் செல்லத் துவங்குகிறான். அவன் அதிகப்படியான ஆர்வத்தைக் காட்டுகிறான். அந்தப் பெண்ணும் மகிழ்ச்சியடைகிறாள். எல்லாம் நல்லபடியாகப் போய்க்கொண்டிருக்கின்றன. சில மாதங்களுக்குப் பிறகு அந்தப் பெண்ணும் அவள் பெற்றோரிடம் எல்லாம் நல்லபடியாகப் போவதாகச் சொல்லுகிறாள்.

ஒருநாள் அவள் தனது வீட்டுக்குத் திரும்பி வருகிறாள். அழுதுகொண்டே வந்த அவளிடம் அவள் தந்தை, "என்ன விஷயம்? என்ன ஆயிற்று?" என்று கேட்கிறார்.

அவள் அந்த ஆடவனிடம் சென்று தன்னைத் திருமணம் செய்து கொள்ளும்படி கேட்டபோது, அவன் தயாராக இருப்பான் என்ற எண்ணத்துடன் இப்படிக் கேட்டதைத் தெரிவிக்கிறாள். அவள் தனது தந்தையிடம் "ஆமாம், அவர் தயாராகத்தான் இருக்கிறார். ஆனால் அவரை நான் அதிகப்படியாக மாற்றிவிட்டேன் என்று கருதுகிறேன்."

தந்தை மிகவும் குழப்பமடைந்தவராகக் கேட்டார்: "எனக்குப் புரிந்துகொள்ள முடியவில்லை. நீ என்ன சொல்கிறாய்? அதிகப்படியாக என்றால்...?"

"ஆமாம், இப்போது அவர் கத்தோலிக்கப் பாதிரியாராக விரும்புகிறார். நான் அதிகப்படியாக அவரை மாற்றி விட்டேன்?" என்கிறாள்.

நீங்கள் காதல் என்று சொல்வது இன்னொருவரை ஏறக்குறைய அடிப்படையிலேயே மாற்றுவதாகத்தான் இருக்கிறது. நீங்கள் அவர்களிடம் அன்பு செலுத்துவதால் அவர்களை மாற்ற விரும்புவதாகச் சொல்கிறீர்கள். இது முழுக்க முழுக்க பொய்யானது. நீங்கள் காதலித்தால் அவர்களை மாற்ற விரும்பவேமாட்டீர்கள். அன்பு என்பது அப்படியே ஏற்றுக்கொள்ளும். அன்பு இருப்பவற்றை அப்படியே ஏற்றுக்கொள்ளும்.

இந்த உலகம் சரியானதென்று நீங்கள் கருதினால் அப்போதுதான் அப்படியே ஏற்றுக்கொள்வீர்கள். புரட்சிவாதி, அரசியல்வாதி ஆகியோரால் அன்பு செலுத்தவே முடியாது. ஒரு மத உள்ளுணர்வு கொண்டவரால்தான் அன்பு செலுத்த முடியும். நீங்கள் அன்பு செலுத்த ஆரம்பிக்கும்போது முன்னர் நீங்கள் நினைத்ததற்கும் மேல் அவை சரியாக இருப்பதாக உணருவீர்கள். அதன்பின் அதிகமாக அன்பு செலுத்துவீர் கள். அதன்பின் சாதாரணமாக அல்ல, அது இன்னும் ஆழமாக இருப்பதாக உணரத் துவங்குவீர்கள். அன்பு செலுத்தச் செலுத்த இந்த உலகமே மறைந்து போய்... அதுதான் கடவுள் என்பது.

> எனது அன்பான ஓஷோ,
> நான் முதன் முதலாக மரணத்தைப் பார்த்தது எனது பாட்டி மரணமடைந்த போதுதான். அவள் உடல் அங்கு வைக்கப்பட்டிருந்த போது மிகவும் வெண்மையாக, அமைதியாக இருந்தாள். மிகவும் மகிழ்ச்சியாக, மௌனமாக, திறந்தபடியும், அதே சமயம் மூடியபடியும் இருந்தாள். எனக்கு அவளைப் பார்த்துப் பொறாமையாகவும், அதே சமயம் பயமாகவும் இருந்தது. அவள் தனிமையில் விடப்பட்டதாக, என்னால் அவளை இனிமேல் அடையவே முடியாது எனவும் இருந்தது. நான்

**உங்களைப் பார்க்கும் போதும்... ஓஷோ, அன்பான ஓஷோ, உங்களின் பிறந்த தினத்தின்போது அதே உணர்வு ஏற்பட்டது. உங்களுக்கு, தனிமையில் விடப்பட்டது போன்ற உணர்ச்சி, இவ்வளவு சப்தங்களுக்கு இடையில், பேச்சுக்களுக்கிடையில் ஏற்படவில்லையா? நீங்கள் வெகு தூரத்தில் முன்பு எப்போதும் இல்லாதது போன்று ஒரு புனிதமான அமைதியுடன் இருப்பதாகத் தோன்றுகிறது. நீங்கள் இறந்தும், அதே சமயம் உயிர் வாழ்ந்துகொண்டும் இருக்கிறீர்களா?**

மரணம் என்பது அழகானது. அது வாழ்க்கையைப் போன்றே அழகானது. உங்களுக்கு மரணத்துடன் தொடர்புகொள்ள முடிந்தால், அது மிக அழகானது. ஏனெனில், அது ஓய்வெடுப்பது ஆகும். அது ஏன் அழகானதென்றால், ஒருவன் வாழ்வின் இருத்தலின் மூலத்துக்கே செல்கிறான். -தன்னை ஆசுவாசப்படுத்திக் கொள்ள, ஓய்வெடுக்க, அது மறுபடி திரும்பி வருவதற் காகத் அவனைத் தயார் செய்துகொள்ள உதவுகிறது.

ஓர் அலை, கடலில் எழும்புகிறது. மறுபடி கடலிலேயே அடங்கி விடுகிறது. மறுபடி எழும்புகிறது. அதற்கு இன்னொரு நாள் உண்டு. அது இன்னொரு வடிவத்தில் மறுபடியும் பிறக்கும். மறுபடியும் அது வீழ்ந்துபோய் மறைந்து போகும்.

மரணம் என்பதே மூலத்தில் மறைந்துபோய் விடுவது தான். மரணம் என்பதே வெளித் தெரியாத இடத்துக்குச் செல்வது என்பதுதான். பரிசுத்தமான இடத்தில் உறங்குவது என்பதற்குப் பெயர்தான் மரணம். நீங்கள் மறுபடியும் மலருவீர்கள். நீங்கள் மறுபடியும் சூரியனையும், சந்திரனையும் காண்பீர்கள். நீங்கள் புத்தராகும் வரை இது

மறுபடி, மறுபடி தொடரும். நீங்கள் பிரக்ஞையுடன் இறப்பைச் சந்திக்கும்வரை. பிரக்ஞையுடன் ஓய்வெடுக்கும் வரை, அறிந்தே பரிசுத்தமான இடத்துக்குப் போகிறோம் என்பது தெரிந்தே இறக்கும் வரை இது தொடரும். அதன் பிறகு திரும்பி வருதல் என்பதே இல்லை. அதுதான் முடிவான மரணம். அதுவே கடைசியான மரணம். சாதாரணமான மரணம் என்பது தற்காலிகமான மரணம். நீங்கள் மறுபடி திரும்பி வருவீர்கள். புத்தர் இறக்கும்போது அவர் நிரந்தரமாக இறக்கிறார். அவருடைய மரணம் அழிவற்ற, எல்லையற்ற தன்மையுடையது. ஆனால் தற்காலிக மரணமும் அழகானதுதான்.

நீங்கள் சரியாகச் சொன்னீர்கள். நான் இறந்தும் அதே சமயம் உயிர் வாழ்ந்துகொண்டும் இருக்கிறேன். நான் ஒரு மனிதனாக இறந்தவன். யாரோ ஒருவராக இறந்து விட்டவன். யாருமற்றவனாக் உயிர் வாழ்ந்து கொண்டிருக் கிறேன்.

நீங்கள் சொன்னீர்கள்: "நான் முதன்முதலாக மரணத்தைப் பார்த்தது எனது பாட்டி மரணமடைந்த போதுதான். அவள் அங்கு வைக்கப்பட்டிருந்தபோது மிகவும் வெண்மையாக, அமைதியாக இருந்தாள். மிகவும் மகிழ்ச்சியாக, மௌனமாக, திறந்தபடியும், அதே சமயம் மூடியபடியும், இருந்தாள். எனக்கு அவளைப் பார்த்துப் பொறாமையாகவும் அதே சமயம் பயமாகவும் இருந்தது."

நினைவில் கொள்ளுங்கள். என்னுடனான உங்களுடைய உறவு முறையும் அத்தகையதே. பொறாமையும், அதே சமயத்தில் அச்சமும். நீங்கள் உங்களுடைய அச்சத்தைத் தள்ளி வைக்க வேண்டும். ஏனெனில், உங்களுடைய அச்சம் உங்களின் இந்தச் சந்தர்ப்பத்தை அனுபவிக்கும் மகிழ்ச்சியைத் தடுக்கக்கூடும். யாருமற்றவனாக ஒருவரைக் காணுவது மிகக் கடினமானது. நீங்கள் கண்டிருக்கிறீர்கள்.

நீங்களே யாருமற்றவராக மாறும்வரை, இந்த வாய்ப்பை தவறவிடாது இருக்க தொடர்ந்து முயலுங்கள். நான் இறந்தது போலவே நீங்களும் இறந்து போய்விடுங்கள். அப்போதுதான் நான் உயிர் வாழ்வதைப் போலவே உயிர் வாழ முடியும்.

எந்த மனிதனும் எதுவும் செய்ய முடியாத வாழ்க்கை ஒன்று இருக்கிறது. 'தான்' என்பதாலும் எதுவும் செய்ய முடியாத வாழ்க்கை என்ற ஒன்று இருக்கிறது. ஏதுமற்ற தன்மையுடன் கூடிய (Emptiness), களங்கமற்ற, கன்னித் தன்மையுடன் கூடிய வாழ்க்கை ஒன்று இருக்கிறது. அதை நான் உங்களுக்குக் கிடைக்கும்படி செய்கிறேன். உங்களது அச்சத்தைத் தள்ளி வையுங்கள். எனது அருகில் வாருங்கள். நானே உங்களது இறப்பாகவும், உயிர்த்தெழுதலாகவும் இருப்பேன்.

ஒரு ஜென் மாஸ்டர், பர்னான் சொன்னது இது: "நீங்கள் வாழும்போது, இறந்தவர்களைப் போல இருங்கள். முழுமையாக இறந்தது போல, நீங்கள் விரும்புவது போல நன்றாக நடந்துகொள்ளுங்கள்."

எனது அன்பான ஓஷோ,
அறிவு என்பது எப்போதும் அபாயகரமானதா?

எப்போதும் அல்ல. அறிவு என்பது எப்போதும் அபாயகரமானது அல்ல. அறிவு பெற்றுவிட்டோம் என்ற நினைப்பு அபாயகரமானது. உண்மைகளைத் தெரிந்து கொள்ளுவது என்பது நல்லது. ஆனால், வாழ்க்கையின் மர்மங்களை மறத்தல் என்பது அபாயகரமானது. ஆகவே அறிவு என்பது எப்போதும் அபாயகரமானது அல்ல. சில சமயங்களில் அது உங்களுக்கு உதவியாக இருக்கும்.

ஒரு சிறிய கதை: பாடி என்ற ஐரிஷ்காரருடைய மனைவி. அன்று காலை மருத்துவமனைக்கு அவசரமாக

எடுத்துச் செல்லப்பட்டாள். ஒன்பது மாதக் கர்ப்பிணியான அவள் இப்போது பிரசவ வேதனையில் இருந்தாள். அழகான இரட்டைக் குழந்தைகளை அவள் பெற்றெடுத்தாள். கட்டடம் கட்டும் வேலையில் கற்குவியல்களிடையே நாள் முழுவதும் வேலை செய்துவிட்டுத் திரும்பிய அவன், இளவேனிற்கால மாலையில் மருத்துவமனை வெராண்டாவில் நடந்து சென்று பிரசவ வார்டில் தனது மனைவியைக் காணச் சென்றான்.

“ஹலோ, எனது அன்பு மனைவியே'' என்றபடி படுக்கையில் படுத்திருந்த மனைவியிடம் தனது வலக் கண்ணில் ஆர்வம் மின்னச் சென்றவன், ஒரு நர்ஸ் தனது இரு கைகளிலும் இரண்டு குட்டிக் குழந்தைகளை எடுத்துக் கொண்டு வந்து படுக்கையில் விடுவதைக் கண்டான்.

“எனக்கு இரட்டைக் குழந்தைகள், எனது அன்பே” என்றாள் அவனது மனைவி.

பத்து நீண்ட நிமிடங்கள் மௌனமாக ஏது செய்வதென்று அறியாதவனாக உட்கார்ந்திருந்தான் பாடி.

வார்டு மணி அடித்துவிட்டது. பாடி தனது மனைவியை முத்தமிட்டு நகர்ந்தான். “இயேசுவே, அந்த இன்னொரு ஆளைக் கண்டுபிடித்துவிட்டால் நான் அவனைக் கொன்றுவிடுவேன்” என்றபடி நீண்ட வெராண்டாவில் நடந்து போனான்.

இன்றைக்கு இது போதும்.

ஏனென்றால், ஒரு போதிசத்துவரால் வழங்கப்படும் ஒரு பரிசு, எதன் ஆதரவும் இல்லாமல், எவ்விடத்தின் ஆதாரமும் இல்லாமல்தான் வரும்... அப்படிப்பட்ட மகான்கள், பரிசு வழங்கும்போது, எதன் ஆதரவும் இல்லாமல், எந்த நோக்கமும் இல்லாமல்தான் வழங்குவர்.

ஏன் அப்படி? 'போதி-இருப்பில்' இருப்பவர், எவ்வித ஆதரவும் இன்றி வழங்கும் பரிசுத்திரள், அளவிட முடியாததாகும்.



புத்தர் தொடர்ந்தார்: "ததாகதர், தம்முடைய உடைமைகளால் அடையாளம் காணப்படக் கூடுமா என்பது பற்றி நீ என்ன நினைக்கிறாய், சுபூதி?"

சுபூதி இவ்வாறு மறுமொழி கூறினார்: "பிரபுவே, அது முடியாத காரியம். ஏன் அப்படி? ததாகதரால், எவை உடைமைகள் என்று கூறப்பட்டனவோ, அவை அவரின் உடைமை அடையாளங்கள் அல்ல."

புத்தர் மீண்டும் கூறினார்: "எங்கே உடைமையின் அடையாளங்கள் இருக்கின்றனவோ, அது பித்தலாட்டமாகும். உடைமையின் அடையாளங்கள் இல்லையென்றால், பித்தலாட்டம் இல்லை. அதனால், ததாகதர் அடையாளம் இல்லாமை கொண்டே அடையாளம் காணப்படுகிறார். அடையாளம் இன்மையே அவரது அடையாளம்."

சுபூதி இவ்வாறு கேட்டார்: "இனி வரப்போகும் ஐந்நூறு ஆண்டுக் காலத்திற்குப் பிறகு, நல்ல கோட்பாடுகள் எல்லாம் நாசமடையும் காலகட்டத்தில், இந்தச் சூத்திரத்தின் உண்மையான சொற்பொருள்களை எல்லாம் புரிந்து கொள்கிறவர்கள் இருப்பார்களா?"

அதற்குப் புத்தர் சொன்னார்: "இப்படியெல்லாம் பேசாதே சுபூதி. ஆம். இப்போது கற்றுக் கொடுக்கப்படும் இந்தச் சூத்திரங்களின் உண்மைப் பொருள்களையெல்லாம் அப்போது புரிந்து கொள்ளவே செய்வார்கள். அந்தக் காலகட்டத்திலும்கூட, போதிசத்துவர்கள் இருக்கவே செய்வார்கள், சுபூதி... அந்தப் போதிசத்துவர்கள் 'ஒரு' புத்தரால் மட்டும் மரியாதை செய்யப்பட்டவர்களாக இருக்க மாட்டார்கள். அவர்களுடைய மதிப்பிற்குரிய வேர்கள், ஒற்றைப் புத்தருக்கடியில் மட்டும் ஊன்றி நிற்பனவாக இருக்காது.

'சுபூதி, அதற்கு மாறாக, இந்தச் சூத்திரங்களின் மெய்மையைக் கற்றுக் கொண்ட அந்தப் போதிசத்துவர்கள், ஒரே ஒரு புனித எண்ணத்தாலே நம்பிக்கை பெற்று விடுவார்கள். இலட்சக்கணக்கான புத்தர்களால் அவர்கள் ஆசீர்வதிக்கப்பட்டவர்களாக இருப்பார்கள். அவர்களுடைய ஆதார வேர்கள் இலட்சக்கணக்கான புத்தர்களின் கீழே நிலை கொண்டிருக்கும்.

'அவர்கள், ததாகதரின் புத்த தரிசனத்தால் அறியப்படுவார்கள், சுபூதி. அவர்கள், ததாகதரின் புத்த விழியால் காணப்படுவார்கள், சுபூதி. அவர்கள், ததாகதரால் முழுமையாக அறியப்படுவார்கள், சுபூதி. அவர்கள் கணக்கிட முடியாத, அளவிட முடியாத மரியாதை பெறுவார்கள், சுபூதி."

கௌதம புத்தர் சொன்னார்: **"அதனால் சுபூதி, மிகுந்த கவனத்துடன் நன்றாகக் கேள்."** இவை அற்புதமான வார்த்தைகள்– 'அற்புதமான'– ஏனெனில், புத்தர் போதிசத்துவரிடம் பேசுகிறார். அவை சாதாரண மனிதர்களிடம் சொல்லப்பட்டிருந்தால் அவை அற்புதமான வார்த்தைகள் என்பதாக இருக்க முடியாது. சாதாரண மனிதன் மிகுந்த கவனமாகக் கவனிக்க வேண்டும் என்பதை ஒருவர் புரிந்துகொள்ள முடியும். கவனிப்பது என்பது மிகவும் கடினமான ஒன்று. கவனிப்பது என்றால் இப்போது கேட்பது என்பதாகப் பொருள். கவனிப்பது என்றால் வேறு எந்தச் சிந்தனையும் இல்லாமல் இருப்பது என்று பொருள். கவனிப்பது என்றால் விழிப்புடன் இருப்பது; உணர்வுடன் இருப்பது; இந்த நிபந்தனைகள் எல்லாம் சரியாக இருக்குமேயானால் அப்போதுதான் நீங்கள் கவனிக்கிறீர்கள் என்று பொருள்.

மனம் என்பது உள்ளுக்குள் ஒரு பித்துப் பிடித்தவனைப் போல் பிதற்றிக்கொண்டிருக்கிறது. மனதோர் ஆயிரம் எண்ணங்களை நெய்துகொண்டே இருக்கிறது. மனம் உலகம் முழுவதையும் சுற்றியபடி இருக்கிறது– கடந்த காலத்தில், எதிர்காலத்தில். நீங்கள் எப்படிக் கவனிக்க முடியும்? எவ்வளவுதான் கவனித்தாலும் அது சரியான

கவனித்தல் என்பதாகாது. நீங்கள் இங்குச் சொல்லாத ஒன்றினைக் கவனித்துக் கொண்டிருப்பீர்கள். இங்குச் சொல்வதை எல்லாம் இழந்துகொண்டேயிருப்பீர்கள். ஏனெனில், உங்களது அலைவரிசை இங்கில்லை. நீங்கள் வார்த்தைகளை நிச்சயம் கவனிப்பீர்கள். ஏனெனில் நீங்கள் காது கேளாதவர்கள் அல்ல. ஆனால், அதுவே கவனித்தல் என்பதாகாது.

அதனால்தான் இயேசு தம் சீடர்களிடம் சொன்னார்: "உங்களுக்குக் காதுகள் இருந்தால் கவனியுங்கள். உங்களுக்குக் கண்கள் இருந்தால் பாருங்கள்." அந்தச் சீடர்கள் பார்வையற்றவர்களும் இல்லை, காதுகேளாதவர்களும் இல்லை. அவர்களுக்குக் காதுகள் உங்களுக்கு இருப்பது போலவே ஆரோக்கியமாக இருந்தன. கண்களும் உங்களைப் போலவே நன்றாக இருந்தன. ஆனால், இயேசுவின் வார்த்தைகள் விநோதமானவை அல்ல. அவை மிகவும் தொடர்புடையவை. அவர் சாதாரண மக்களிடம் பேசுகிறார். அவர்களின் கவனத்தைப் பெற வேண்டும். அவர் உரத்துக் குரலெழுப்ப வேண்டும். ஆனால் புத்தரின் வார்த்தைகள் அற்புதமானவை. அவர் போதி சத்துவரிடம் பேசுகிறார். அவர் ஒரு மகா மனிதர். ஒரு போதி மனிதர். புத்தராவதற்குச் சற்றே அருகில் இருப்பவர்.

"அதனால் சுபூதி, நன்றாக, கூர்ந்து கவனி" -இப்படி அவர் கூறுவதன் சரியான பொருள் என்ன?

சாதாரணமாக, நன்றாகக் கவனித்தல் என்பதற்குப் பெற்றுக்கொள்கிற மனோநிலையில் கவனித்தல் என்று பொருள். நீங்கள் கவனிக்கும்போது, வாதம் புரிகிறீர்களென்றால், நீங்கள் தீர்மானிக்கிறீர்களென்றால், நீங்கள், 'இதுதான் சரி, ஏனெனில் இது எனது கொள்கையுடன் ஒத்துப்போகிறது. இது வேறு. ஏனெனில், இது எனக்கு நியாயமாகப்படவில்லை. இது சரி. இது சரியல்ல. இதை

நான் நம்ப முடியும். இதை என்னால் நம்ப முடியவில்லை...' என்றெல்லாம் உங்களுக்குள் சொல்லிக்கொண்டே இருப்பீர்களேயானால் நீங்கள் கவனிக்கிறீர்கள். ஆனால் சரியாகக் கவனிக்கவில்லை.

நீங்கள் உங்களது கடந்த காலத்து மனதின் இடையூறோடு கவனிக்கிறீர்கள். யார் இந்த விஷயத்தைத் தீர்மானிப்பது? நீங்களில்லை; உங்களது கடந்த காலம். நீங்கள் சில விஷயங்களைப் படித்திருக்கிறீர்கள். சில விஷயங்களைக் கேட்டிருக்கிறீர்கள். சில விஷயங்களில் கட்டுப்படுத்தப் பட்டிருக்கிறீர்கள். கடந்த காலம் தொடர்ச்சியாகக் குறுக்கிடுகிறது. கடந்த காலம் தன்னை மறுபடியும் நினைவுபடுத்திக்கொள்கிறது. அது தனக்கு இடையூறு செய்யும் எதையும் அனுமதிப்பதில்லை. அது புதியதாக எதையும் அனுமதிப்பதில்லை. அது பழையவற்றை மட்டுமே, தனக்கு உகந்தவற்றை மட்டுமே ஒத்துக்கொள்கிறது. அதைத்தான் நீங்களும் தீர்மானம் செய்யும்போதும், ஏளனம் செய்யும்போதும், உங்களுக்குள் கலந்தாலோசிக்கும் போதும், சர்ச்சை கொள்ளும்போதும் செய்து கொண்டிருக்கிறீர்கள்.

சரியாகக் கவனித்தல் என்பதற்குப் பொருள்: கீழ்ப்படிந்து கேட்டல், கீழ்ப்படிந்து (Obediently) கவனித்தல். இந்த வார்த்தை- 'Obedient'- அழகானது. நீங்கள் இந்த 'Obedient' என்ற வார்த்தையின் மூலம், 'Obedire' என்ற கிரேக்க வார்த்தையிலிருந்து வந்தது என்று தெரிந்தால் ஆச்சரியப் படுவீர்கள். 'Obedire' என்ற வார்த்தைக்கு முற்றிலுமாகக் (through) கவனித்தல் என்று பொருள். Obedience என்ற வார்த்தைக்கு ஏன் கவனித்தல் என்று பொருளாகிறது? அவையிரண்டும் ஒன்றுதானா? ஆமாம். நீங்கள் மொத்தமாகக் கவனித்தால், முற்றிலுமாகக் கவனித்தால், நீங்கள் கீழ்ப்படிவீர்கள். அங்கு உண்மையிருந்தால் நீங்கள்

கீழ்ப்படிவீர்கள். உங்களது பக்கத்திலிருந்து எந்தவிதத் தீர்மானமும் தேவையில்லை. உண்மை என்பது தனக்கே சாட்சியாகத் திகழ்கிறது. ஒரு முறை கேட்டால் தன்னிச்சையாக அதனைப் பின்பற்றுவீர்கள். ஒரு முறை கேட்டால், நீங்கள் கீழ்ப்படிவீர்கள். ஆகவே இந்த Obedience என்ற வார்த்தை- Obedire- முற்றிலுமாகக் கவனித்தல் என்ற வார்த்தையிலிருந்து வந்தது அல்ல. அல்லது யூத வழக்கத்தில் சொல்லுவது போல உனது காதைத் திறந்து வை. உனது காதை உண்மையிலேயே திறந்து வைத்தால் அதன்பின் குறுக்கீடு இல்லை எனில், உள்ளுக்குள் தொந்தரவு இல்லை எனில், எந்த இடத்திலிருந்தும் கவனச் சிதறல்கள் இல்லையெனில், நீங்கள் காதுகளை மட்டும் திறக்கவில்லை; உங்களது மனத்தையும் திறந்திருக்கிறீர்கள். விதை உங்களது மனத்தில் விழுந்தது என்றால் சீக்கிரமோ, அல்லது தாமதமாகவோ அது மலரப் போகிறது. அது சிறிது காலம் எடுத்துக் கொள்ளலாம். ஆனாலும் நிச்சயம் ஒரு மரமாக வளரும். அது சரியான பருவத்துக்காகக் காத்திருக்க வேண்டும். இளவேனிற்காலம் வரும் வரை. ஆனால் அது ஒரு மரமாக வளரும். நீங்கள் உண்மையைக் கேட்டிருந்தால் கீழ்ப்படிவீர்கள்.

அதனால்தான் மனம் உங்களைக் கேட்க விடுவதில்லை. ஏனெனில், ஒரு முறை உண்மையைக் கேட்டுவிட்டால் அதிலிருந்து தப்பிக்க வழியே இல்லை என்று மனத்திற்குத் தெரியும். அதனால் உங்களுக்குத் தப்பிக்க வேண்டுமென்று தோன்றினால் நீங்கள் இவற்றைக் கேட்காமலிருப்பதும் நல்லது. ஒரு முறை கேட்டுவிட்டால், நீங்கள் அகப்பட்டுக் கொண்டீர்கள் என்று பொருள். அதன்பின் தப்பித்தல் என்பதே இல்லை. உண்மை என்ன என்று தெரிந்த பின்னர் எப்படித் தப்பிப்பீர்கள்? நீங்கள் உண்மையை அறிந்தவர் என்ற ஓர் அம்சமே உங்களுக்குள் கட்டுப்பாட்டை

உருவாக்குகிறது. நீங்கள் அதனைப் பின்பற்றத் துவங்கு கிறீர்கள். நீங்கள் உங்களைக் கட்டுக்குள் வைத்திருக்க வேண்டும் என்பதே இல்லை. அதுவே வந்துவிடுகிறது.

காதுகளுக்குப் போட்டிருக்கும் பூட்டுகளை அகற்றி விடுங்கள். காதுகளுக்குப் போட்டிருக்கும் பூட்டு எது? உண்மையைக் கண்டு பயப்படுவதே முதல் பூட்டு. நீங்கள் உண்மையைப் பார்த்துப் பயப்படுகிறீர்கள். நீங்கள் என்ன சொல்கிறீர்களென்றில்லாமல், நீங்கள் திரும்பத் திரும்ப 'நான் உண்மையை அறிந்துகொள்ள வேண்டும்' என்று சொல்கிறீர்கள். நீங்கள் உண்மையைக் கண்டு பயப்படு கிறீர்கள். ஏனெனில், நீங்கள் பொய்யிலேயே வாழ்ந்து விட்டீர்கள். அந்தப் பொய்கள் பயப்படுகின்றன; நடுங்குகின்றன. ஏனெனில், உண்மைகள் வந்துவிட்டால் அவைகள் உங்களை விட்டு அகன்றுவிட வேண்டும். அவை உங்களுக்கு எஜமானர்கள் ஆகிவிட்டன. இருள் எப்படி ஒளியைப் பார்த்துப் பயப்படுகின்றதோ, அதேபோல் உண்மையைப் பார்த்துப் பொய்கள் அச்சப்படுகின்றன. உண்மைக்கு அருகில் வரும்போதே உங்கள் மனம் மிகவும் சஞ்சலப்படுகின்றது. அது மிகுந்த குழப்பத்தை விளைவிக் கின்றது. அது மிகுந்த தூசியைக் கிளப்பிவிடுகின்றது. அது உங்களைச் சுற்றி மேகத்தை உருவாக்கிவிடும். அதன் காரணமாக உங்களால் உண்மை என்ன என்பதைக் கேட்க முடியாமல் போய் விடுகிறது.

காதுக்குப் போடப்பட்டிருக்கும் பூட்டுகள் அகற்றப்பட வேண்டும். அடிப்படையான தடை பயம்தான். நீங்கள் பயத்தினால் தடை செய்யப்பட்டுள்ளீர்கள். நீங்கள் அச்சமற்றிருந்தால் அன்றி உண்மையை அடைய முடியாது என்று புத்தர் கூறுகிறார். உங்களுடைய மதங்களைப் பாருங்கள். உங்களுடைய மதங்கள் என்று சொல்லப் படுபவை எல்லாம் பயத்தை அடிப்படையாகக் கொண்டு

தான் வளர்ந்திருக்கின்றன. உண்மைக்கான வழி பயமல்ல. பயமின்மைக்குத்தான் உண்மை என்னவென்று தெரியும்

நீங்கள் ஒரு மாதா கோயிலிலோ, ஒரு மசூதியிலோ, ஓர் ஆலயத்திலோ, ஒரு வேதபுத்தகத்தின் முன்போ, ஒரு பரம்பரை வழக்கத்தினாலோ வணங்குகிறீர்கள் என்றால், எங்கிருந்து வணங்குதல் வருகிறது? உள்ளுக்குள் கவனித்துப் பாருங்கள். அங்கு உங்களுக்குத் தெரிவது பயம், பயம், பயம். பயத்தின் மூலம் நம்பிக்கை உணர்வு வளராது. ஆனால் இப்போது இருக்கும் நம்பிக்கை எல்லாம் பயத்தின் காரணமாக விளைவதுதான். அதனால்தான் இந்த உலகத்தில் நம்பிக்கையுடன் இருக்கும் மனிதனைக் காண்பது மிகவும் அரிதாக இருக்கிறது. ஏனெனில், பயம் அகன்ற பின்னரே நம்பிக்கை உணர்வு தோன்றுகிறது. பயத்தின் மரணத்தில்தான் நம்பிக்கை உணர்வு பிறக்கிறது.

நம்பிக்கை உணர்வு என்பது உண்மையாக இருப்பது என்று பொருள். பயப்படும் மனிதன் எப்படி உண்மையாக இருக்க முடியும்? அவன் எப்போதும் தந்திரமாகவே இருப்பான். அவன் எப்போதுமே தன்னைப் பாதுகாத்துக் கொள்வதிலேயே இருப்பான். அவன் எப்படி உண்மையோடு இருப்பான்? நம்பிக்கையோடு இருப்பதற்கு, உண்மையோடு இருப்பதற்கு, ஒருவனுக்குத் தைரியம் வேண்டும். உண்மையாக இருப்பதற்குத் துணிவு வேண்டும். உண்மையாக இருப்பதற்கு அபாயத்தைத் தாமே போய் ஏற்றுக் கொள்ளும் துணிவு வேண்டும். உண்மையாக இருப்பதற்கு அபாயத்திற்குள் செல்ல வேண்டும்.

ஒரு நாள் நான், சீனாவின் கவலைக்கிடமான நேரங்களில் பார்த்துக் கொள்ளப்படும் எழுத்துடன் கூடிய வரைபடம் ஒன்றினைக் காண நேர்ந்தது. அதைப் பார்த்தவுடன் நான் ஆச்சரியப்பட்டேன். காரணம் அந்தச் சீன வரைபடத்தில் இரண்டு இலச்சினைகள் வரையப்

பட்டிருந்தன. ஒன்று அபாயம், மற்றொன்று வாய்ப்பு. ஆமாம், நீங்கள் அபாயத்தைச் சந்திக்கும்போது கூடவே வாய்ப்பும் சேர்ந்தே வருகிறது. நீங்கள் அபாயத்தைச் சந்திக்கப் பயந்தால் வாய்ப்பைத் தவற விடுகிறீர்கள். உங்களுக்கு வாய்ப்புத் தேவையாயிருந்தால் அபாயத்தினுள் நுழைந்துதான் ஆக வேண்டும். அபாயத்தினுள்ளேயே எப்படி வாழ்வது என்பது சில பேருக்குத் தெரியும். அவர்களே ஆன்மிகவாதிகள். பயம் என்பதே காதுகளின் பூட்டு. தவிர மற்றும் சில இருக்கின்றன. அவையும் பயத்திலிருந்துதான் ஆரம்பிக்கின்றன -தீர்மானித்தல், சர்ச்சை செய்தல், கடந்த காலத்துடன் பின்னியிருத்தல், புதியன எவற்றையும் உங்களினுள்ளே நுழையவிட மறுத்தல்.

வெவ்வேறு வடிவங்களில் வெவ்வேறு மொழிகளில் Obedience என்ற வார்த்தைக்குக் கவனத்தோடு செயல்படுதல் என்பதாகத்தான் பொருள் இருக்கிறது. Horchen, Gehorchen, Obeir, Obedire, இன்னும் சில. இந்த எல்லா வார்த்தைகளுக்குமே தயையோடு, தீவிரமாக, முழுமையாகக் கவனித்தல் என்பதுதான் பொருள். மற்றொன்று, Absurd என்ற வார்த்தைக்குப் பொருளைக் கேட்டால் நீங்கள் ஆச்சரியப் படுவீர்கள். இதற்கான பொருள் நேர் எதிர்ப்பதமாக உள்ளது. Absurdus என்றால் முழுச் செவிடு என்று பொருள். ஆகவே, நீங்கள் சிலவற்றை absurd என்று சொன்னால் நீங்கள், "இப்போது சொல்லப் போவதையெல்லாம் நான் கேட்கப் போவதில்லை" என்று பொருள். உங்களுடைய Absurd மனோபாவத்திற்குப் பதிலாக Obedient மனோ பாவத்தை கைக்கொண்டால் உங்களால் கவனிக்க முடியும். அதன் பின்னர்தான் உங்களுடைய காதுகளைத் திறந்து வைத்து, நீங்களும் உங்களைத் திறந்து வைத்துக்கொள்வீர்கள்.

ஒரு சாதாரணமான மனிதரிடம் 'கவனமாக கேள்' என்று சொல்வது நல்லது. ஆனால் புத்தர் சுபூதியிடம் ஏன் இப்படிச் சொன்னார்? புரிந்துகொள்ள வேண்டிய மிக முக்கியமானது ஏதோ அங்குள்ளது. வார்த்தைகளுக்கு எந்தவித அர்த்தமும் இல்லை. அந்த வார்த்தைகளை யார் சொல்கிறார்கள் என்பதில்தான் அர்த்தம் உருவாகிறது. யார் அதைச் சொல்கிறார்கள் என்பதை பொறுத்தே அர்த்தம் பெறுகிறது. அதனால் நீ இந்த அர்த்தத்தை எந்த அகராதியிலிருந்தும் பெற முடியாது. ஏனெனில் அகராதிகள் போதிசத்துவர்களுக்கு எழுதப்பட்டது அல்ல. அவை சாதாரண மனிதர்களுக்காக எழுதப்பட்டவை.

அதனால் 'கவனத்துடன், நன்றாகக் கேள்' என்று சொன்னதன் பொருள் என்ன? சில விஷயங்களை புரிந்து கொள்ள வேண்டும் என்பதே பொருள். ஒன்று: சுபூதியைப் போன்ற ஒருவர் என்றால் அங்கு காது பூட்டு என்பதைப் பற்றிய கேள்வியே இல்லை, கிடையவே கிடையாது. புத்தரிடம் வெளிப்படையாக இருக்கிறாரா என்று அவரது திறந்த மனதைப் பற்றிய கேள்வியும் இல்லை: அதைப் பற்றிய சந்தேகமே இல்லை. அவர் வெளிப்படையாக திறந்துள்ளவராக இருக்கிறார். அவர் புத்தருடன் தகராறு செய்பவரும் இல்லை, அவர் முழுமையாக புத்தருடன் இருக்கிறார், அவருடனே செல்கிறார். ஆனால் ஒருவர் போதிசத்துவத்தை அடையும்போது, ஒருவர் புத்த தன்மைக்கு மிக அருகில் வரும்போது, ஒரு சில புதிய பிரக்ஞைகள் உருவாகின்றன.

பிரக்ஞையின் ஒவ்வொரு புதிய நிலைகளும் அதற்கே உரிய பிரச்சனைகளுடன் உள்ளன. போதிசத்துவத்துடன் ஒரு பிரச்சனை உண்டு. அவர் திறந்துள்ளார். அவர் பெற்றுக்கொள்பவராக இருக்கிறார். அவர் தயாராக இருக்கிறார். ஆனால், அவர் தனது உடலோடு தொடர்பற்றுப் போய்விடுகிறார். அவரது இதயம்

திறந்திருக்கிறது. அவரது உயிர் திறந்துள்ளது. ஆனால் அவர் உடம்பினுள் வேர் கொண்டு இல்லை. அவர் உடலை விட்டுப் போய் விடுகிறார். உடல் வெறுமனே சுற்றிக் கொண்டு இருக்கிறது. அவர் தனது உடலினுள் வசிக்கவில்லை. உடலுடன் தனது அடையாளத் தன்மையை இழந்துவிட்டார்– அதுதான் பிரச்னை.

யாராவது உங்களிடம், "நன்றாகக் கவனி" என்று சொன்னால், அவர் உங்கள் உடம்பு கவனிக்கிறது, ஆனால் நீங்கள் கவனிக்கவில்லை என்று சொல்கிறார்.

ஆனால், புத்தர் சுபூதியிடம் சொல்லும் போது "நீ கவனிக்கிறாய். ஆனால் உனது உடம்பு கவனிக்கவில்லை" என்பதாகப் பொருள். அவற்றை நேர் எதிர்மறையாகப் பொருள் கொள்ள வேண்டும். நீங்கள் கவனிக்கும்போது உங்களது உடம்பு இங்கே இருக்கிறது. ஆனால், நீங்கள் இங்கே இல்லை. வார்த்தைகள் உங்களது காதுகளை அடைகின்றன. அவை சப்தங்களாகவும், ஒலிகளாகவும்தான் விழுகின்றன. அவை அடுத்த காது வழியே வெளியே சென்றுவிடுகின்றன. அவை உங்களை அடைவதில்லை. நீங்கள் அவற்றைத் தொடுவதில்லை. சுபூதியைப் போன்ற மனிதர்களுக்கு எதிர்மறையாக நடக்கிறது. அவர் இங்கிருக்கிறார். ஆனால் அவரது உடம்பு இங்கிருக்கவில்லை. அவர் தம்முடைய உடம்பைப் பற்றிய தொடர்பை இழந்துவிட்டார். அவர் மறந்துவிடுகிறார். அவர் உடலை மறக்கும் நிலைக்குப் போய்விடுகிறார். அவர் தனது உடலைப் பற்றிச் சிந்தித்துக்கூடப் பார்க்காத நேரங்கள் உண்டு. அவர் அங்கிருப்பார், ஆனால் உடல் அங்கிருக்காது. அதாவது உடலைப் பற்றிய உணர்வே அவருக்கு இருக்காது. அவர் உடம்பற்ற நிலைக்கு வந்துவிடுவார்.

இப்போது, கவனித்தல் என்பது உடம்பும், ஆன்மாவும் ஒன்றாக இருக்கும்போதுதான் சாத்தியம். உங்களின்

உடம்பு இங்கிருக்கிறது. ஆனால் ஆன்மா இங்கில்லை. சுபூதியிடம் ஆன்மா பிரசன்னமாயிருக்கிறது. ஆனால் உடம்புதான் இங்கில்லை. புத்தர், "சுபூதி நன்றாகக் கவனி!" என்று சொல்கையில் அதுதான் பொருள். உனது உடம்பு இயங்க ஆரம்பிக்கட்டும். உனது உடம்புக்குள் வந்து சேர். உனது உடம்புக்குள் வேர் விடு. ஏனெனில் உடம்புதான் வாகனம். உடம்புதான் கருவி. உடம்புதான் சாதனம்.

புத்தர் சொல்கிறார்: "...ஒருமுகமாக..." சுபூதி ஒருமுகப் படுத்துவதில் இயலாதவரா? அப்படி இருக்க வாய்ப் பில்லை. அப்படியானால் அவர் போதி மனிதராக இருக்க வாய்ப்பில்லை. போதி மனிதர் என்பவரே ஒருமுகமாகக் கவனித்தலை அடைந்தவர் என்றுதான் பொருள். அவர் பிரக்ஞையோடு இருப்பவர். ஜாக்கிரதை உணர்வோடு இருப்பவர். அவர் ஓர் இயந்திர மனிதர் அல்ல. அதன்பின் புத்தர் ஏன் "ஒருமுகமாகக் கவனி" என்கிறார்? மறுபடி யும் வேறு அர்த்தம் கொள்ள வேண்டும்.

சுபூதியைப் போன்ற மனிதருக்கு, தமக்குள் போவது தான் எப்போதும் நடக்கும். அவர் எதுவும் முயற்சி செய்ய வில்லையென்றால் அவர் தனது இருப்பினுள் ஆழ்ந்து போய் விடுவார், அவரே இல்லாமல் போய்விடுவார். அவர் முயற்சி எடுத்தால்தான் அவரால் வெளியே இருக்க முடியும். உங்களுக்கு நடப்பதற்கு நேர்மாறனது இது. மிகப் பிரயாசைப்பட்டு வெகு சில நேரங்களில் மட்டுமே உங்களால் உள்ளே போக முடியும். ஒரு கணத்தில் உங்களது எண்ணங்கள் மறந்து போகும்போது உங்களது உள்சுளியில் உறைந்து போவீர்கள். அது வெகு சில தருணங்களில் மட்டுமே நிகழ்கிறது. நீண்ட கடினப் பயிற்சியாக யோகா, தியானம், இது, அது என்று செய்த பின்பு சில கணங் களுக்கு இந்த அழகு, பிரார்த்தனை உங்களிடம் தங்குகிறது.

வானம் திறந்து, மேகங்கள் மறைந்து போகும்போது வெளிச்சம் வருகிறது. வாழ்க்கையும், சந்தோஷமும் கூடவே வருகிறது. ஆனால், இவை வெகு சில கணங்களுக்கே... மறுபடியும் மறுபடியும் இது மறைந்து போகிறது. நீங்கள் கடினமாகக் கவனிப்பதற்கு முயற்சி எடுத்துக்கொண்டால் அப்போது உங்களது உள் மன அனுபவத்தை அடைகிறீர்கள்.

ஆனால், சுபூதியைப் பொருத்தவரையில் இதற்கு நேர் எதிர். அவர் தமக்குள் கரைந்துவிடுவார். அவர் தம்முள் மகிழ்ச்சியுடன் உள்ளுக்குள் அமிழ்ந்துபோவார். அவர் தனக்குள் பிரயாசைப்பட்டாலன்றி அவரால் புத்தர் சொல்வதைக் கேட்க முடியாது. புத்தரின் மௌனத்தைப் புரிந்துகொள்ள மிக தகுதி உள்ளவர். புத்தர் மௌனத்தில் இருந்தால் அங்கு ஒரு தொடர்பு இருக்கும். ஆனால், புத்தர் ஏதாவது சொன்னால் அவர் அதைக் கேட்பதற்குப் பிரயத் தனப்பட வேண்டும். அவர் தம்மை வெளியே இழுத்துக் கொள்ள வேண்டும். அவர் தமது உடலுக்குள் வர வேண் டும். அவர் மிகுந்த கவனத்தோடு இருக்கவேண்டும். அவர் தமக்குள் இருக்கும் மதுவைப் பருகியிருக்க வேண்டும்.

அதனால்தான் புத்தர் இந்த விதமாகச் சொல்கிறார்: **'நன்றாக மனத்தை ஒருமுகப்படுத்திக் கவனி.'** முதல் முறையாக உங்களுக்கு இந்த வார்த்தைகளை விளக்கிச் சொல்கிறேன். கடந்த இருபத்தைந்து நூற்றாண்டுகளில் யாருமே இந்த வார்த்தைகளுக்கு விளக்கம் தரவில்லை. அந்த வார்த்தைகள் சாதரணமாக எடுத்துக் கொள்ளப் பட்டுள்ளன. புத்தர் எல்லோரிடமும் **'நன்றாக, ஒருமுகப் படுத்திக் கவனி'** என்று சொல்லுவதாகத்தான் எடுத்துக் கொள்ளப்பட்டது. புத்தர் ஒரு சாதாரண மனிதரிடம் பேசவில்லை.

இருபத்தைந்து நூற்றாண்டுகளாக யாருமே சரியாகச் சொல்லவில்லை. மக்கள் எல்லோருமே தாம் சரியாகத் தான் பொருள் விளங்கிக்கொண்டுள்ளதாக நினைத்துக் கொண்டிருக்கின்றனர். வார்த்தைகளுக்குப் பொருள்கள் மாறுகின்றன. யார் இந்த வார்த்தைகளைப் பயன்படுத்துகின்றனர், யாருக்காகப் பயன்படுத்தப்படுகிறது என்பதைப் பொருத்துத்தான் பொருள் மாறுகிறது. வார்த்தைகளுக்கான அர்த்தம் எந்தச் சந்தர்ப்பத்தில், எந்தச் சமயத்தில் பயன்படுத்தப்படுகிறது என்பதைப் பொருத்துத்தான் வேறுபடுகிறது. வார்த்தைகளுக்கு அதனதன் அளவிலே பொருளே இல்லை. வார்த்தைகள் பொருளற்றவை. அர்த்தங்கள் அந்தந்தச் சமயங்களில்தான் உருவாகிறது.

இப்போது இந்தச் சந்தர்ப்பம் மிகவும் அரிதானது. புத்தர் இந்த வார்த்தைகளை ஆயிரம் முறை பயன்படுத்திவிட்டார். அவர் ஒவ்வொரு நாளும், **'நன்றாக மனத்தை ஒருமுகப் படுத்திக் கவனி'** என்று மக்களிடம் சொல்லியிருக்க வேண்டும். அதனால் வைர சூத்திரத்தைப் பற்றி விமர்சனம் செய்தவர்களெல்லாம் இதனை இழந்துவிட்டார்கள். விமர்சனம் செய்தவர்கள் அறிந்தவர்களல்ல என்று நான் நினைக்கிறேன். அவர்களுக்கு மொழி தெரியும். ஆனால், அந்தச் சந்தர்ப்பத்தை முழுமையாக அறிந்திருக்கமாட்டார்கள். புத்தர் சாதாரண மனிதரிடம் பேசவில்லை. புத்தர், புத்தபிராயத்தை அடையப் போகிறவரிடம்தான் பேசிக்கொண்டிருக்கிறார். அவர் புத்த பிராயத்தின் நுழைவாசலில் இருக்கிறார்.

அவர், **'அதனால்'** என்ற வார்த்தையுடன் தமது வாக்கியத்தை ஆரம்பிக்கிறார். **"அதனால் சுபூதி, நன்றாக மனத்தை ஒருமுகப்படுத்திக் கவனி."** இப்போது இந்த 'அதனால்' என்ற வார்த்தை அவ்வளவு சரியாகப் பொருந்தவில்லை. அதனால் (Therefore) என்ற வார்த்தை

ஒரு வாக்கியத்தின் கடைசிப் பகுதியாக வந்தால்தான் பொருத்தமாக அமையும். எல்லா மனிதர்களும் இறக்கிறார் கள். சாக்ரடிஸூம் மனிதர். அதனால் சாக்ரடிஸூம் இறந்தார். இந்த இடத்தில் 'Therefore' சரியாகப் பொருந்துகிறது. இது நியாயமாகவும் இருக்கிறது. இங்கு எதுவும் இந்த வார்த்தைக்கு முன்னர் வரவில்லை. ஆனால் புத்தர் முடிவுரையுடன் 'Therefore' என்று ஆரம்பிக்கிறார்.

அதிலும் ஒரு விந்தை இருக்கிறது. அதுதான் புத்தரின் வழி. சாரிபுத்ராவிடம் இதய சூத்திரத்தைப் பற்றிப் (Heart Sutra) பேசும்போது இப்படி ஆரம்பிக்கிறார்: "அதனால் சாரிபுத்ரா..." இப்படிச் சொல்கிறார். அதனால் சுபூதி... சுபூதி அந்த இடத்தில் 'அதனால்' என்ற வார்த்தையைப் பயன்படுத்தும்படியாக எதுவுமே சொல்லவில்லை. புத்தரும் 'அதனால்' என்ற வார்த்தை வரும்படியாக எதுவும் சொல்லவில்லை. ஆனால் சுபூதியிடம் எதுவோ இருந்திருக் கிறது. அதுதான் 'அதனால்' என்ற வார்த்தையைப் பயன் படுத்துவதற்குக் காரணமாக இருந்திருக்கிறது. வேறெதுவும் பேசப்படவில்லை.

ஒரு குரு உங்களிடம் எது இருக்கிறதோ அதற்குப் பதிலாகத்தான் பேசுகிறார். ஒரு குரு உங்களின் வார்த்தை களைவிட உங்களுடைய மௌனத்திற்கே அதிகம் மதிப்பளிக்கிறார், ஒரு குரு உங்களின் கேள்விகளை விட உங்களது தேடும் மனோபாவத்தையே அதிகம் விரும்புகிறார். ஒரு குரு உங்களின் கேள்விகளைவிட உங்கள் தேவைகளுக்கு அதிகம் ஆர்வம் காட்டுகிறார். இந்த 'அதனால்' என்ற வார்த்தையும்கூடச் சுபூதியின் உள்ளத் தில் இருந்த ஏதோ ஒன்றுக்குக் கிடைக்கும் பதிலாகத்தான் இருந்திருக்க வேண்டும். ஒருவேளை சுபூதியேகூட இதை அறிந்திருக்க வாய்ப்பில்லையோ என்னவோ? ஒருவேளை சுபூதியேகூடச் சற்று நேரம் கழித்து இதனைப் புரிந்து கொண்டிருக்கலாம்.

குரு சீடனின் உள்ளத்தில் இருப்பதைக் கண்டு கொண்டே இருக்க வேண்டும். குரு உள்ளத்தின் தேவைகளைப் பூர்த்தி செய்துகொண்டே இருக்க வேண்டும். வெளிகாட்டப்பட்டதா இல்லையா என்பது முக்கியமல்ல. ஒருவேளை சீடன் தனியே இந்தக் கேள்விகளுக்கு விடை கண்டுபிடிக்க மாதக்கணக்கில், ஏன் வருடக்கணக்கில், ஏன் வாழ்நாள் முழுவதும்கூட ஆகலாம். ஆனால், குரு என்பவர் உங்களது கடந்த காலத்தை மட்டுமல்ல, நிகழ்காலத்தினை மட்டுமல்ல, எதிர்காலத்தையும்கூடக் கவனிப்பார். நாளைக்கு, அடுத்த நாளைக்கு, இந்த வாழ்க்கைக்கு, ஏன் அடுத்த வாழ்க்கையிலும்கூட என்ன நடக்கப்போகிறது என்பதைக் கூர்ந்து கவனிப்பார். குரு உங்களது மொத்த வாழ்க்கைப் பயணத்தையும் அமைக்கிறார். இந்த 'அதனால்' என்ற வார்த்தை சுபூதியின் உள்ளே இருக்கும் எதன் தொடர்பாகவோ வந்திருக்க வேண்டும்.

ஏனென்றால், ஒரு போதிசத்துவரால் வழங்கப்படும் ஒரு பரிசு, எதன் ஆதரவும் இல்லாமல், எவ்விடத்தின் ஆதாரமும் இல்லாமல்தான் வரும்... அப்படிப்பட்ட மகான்கள், பரிசு வழங்கும்போது, எதன் ஆதரவும் இல்லாமல், எந்த நோக்கமும் இல்லாமல்தான் வழங்குவர்.

இந்தக் காரணத்துக்காகவே புத்தர் 'அதனால்' என்ற வார்த்தையைப் பயன்படுத்தியிருக்க வேண்டும். சுபூதியின் ஆழ்மனத்தில் ஓர் எண்ணம், ஒரு நுட்பமான எண்ணம் இருந்திருக்க வேண்டும்.

"நான் என்ன அடைந்துவிட்டேனோ, அதனை மக்களுக்குக் கொடுத்துவிட்டேனானால் எனது மதிப்பு, இன்னும் உயர்ந்து விடும்..." இந்த எண்ணங்கள் வார்த்தைகளில் இல்லாமலிருக்கலாம். அவை இன்னும் எண்ணங்களாக வடிவம் எடுக்காமல்கூட இருக்கலாம். அது ஓர் உணர்ச்சியாக, ஒரு சிற்றலையாக உள் மனத்தில்

இருந்திருக்கலாம். "நான் இந்தத் தர்மத்தை மக்களுக்கு வழங்கினால்..." அது புத்தரின் வாக்குப்படி மகத்தான பரிசுதான். மகத்தான பரிசு எதுவெனில், நீங்கள் அடைந்த ஞானத்தை மக்களுக்குத் தருவது. அதனைப் பகிர்ந்து கொள்வது. அதுதான் மிகவும் மகத்தானது. யாராவது பணத்தைப் பகிர்ந்துகொண்டால் அது ஒன்றுமில்லாதது. அவர் உங்களுடன் பகிர்ந்துகொள்ளவில்லையானாலும் கூட அதை இங்கேயேதான் விட்டுவிட்டு இறக்கப் போகிறார். வேறு யாராவது எதையாவது பகிர்ந்து கொள்வார்கள். ஆனால் ஞானத்தைப் பகிர்ந்துகொள்வது என்றால் புனிதத்தைப் பகிர்ந்துகொள்வதாகும். அழிவற்ற தன்மையைப் பகிர்ந்துகொள்வதாகும். ஞானத்தைப் பகிர்ந்துகொள்வது, பரம்பொருளைப் பகிர்ந்து கொள்வதாகும். புத்தர் இதனை மகத்தான பரிசு என்கிறார்.

இப்போது சுபூதியிடம் அவர் பெற்றிருக்கும் எல்லாவற்றையும் மக்களுடன் பகிர்ந்துகொள்ளும்படி சொல்கிறார். அவர் ஓர் உறுதிமொழி 'சித்தோபத்' எடுத்துக் கொள்ளும்படியும் சொல்கிறார். அந்த உறுதிமொழி: "நீ இங்கு உள்ள உயிர்களையெல்லாம் விடுதலை செய்த பின்புதான் இந்தக் கரையை விட்டு அகல வேண்டும். நீ இங்கிருந்து மறையும் முன்பாக இதைச் செய்வேன் என்று மகத்தான உறுதிமொழி எடுத்துக்கொள்ள வேண்டும்" என்கிறார். உனது படகு இங்கிருந்து கிளம்பும் முன்பாக மக்களுக்கு உதவி புரிய வேண்டும் என்ற மகத்தான ஆசையை வளர்த்துக்கொள். மக்களுக்கு உதவி புரிய வேண்டும் என்ற அவா இந்தக் கரையை இணைக்கும் சங்கிலியாக இருக்கும். இன்னும் அதிக நேரம் ஆவதற் குள்ளாக உறுதிமொழியை எடுத்துக்கொள். 'சித்தோபத்' எடுத்துக்கொள். உனது சக்தியை எல்லாம் ஒன்று திரட்டி "அந்தக் கரையிலிருந்து என்னைக் கவரும் உணர்ச்சி

எவ்வளவாக இருந்தாலும் இந்தக் கரையை விட்டுப் போகமாட்டேன்" என்று உறுதி கொள்.

பெரிய உணர்ச்சித் தூண்டுதல் இருக்கும். எல்லாம் மாறிய பின்பு, உனக்கும் அந்தக் கரைக்குப் போகும் தகுதி உண்டாகிவிட்டது எனும்போது, அதாவது எதற்காக ஆயிரமாயிரம் வாழ்க்கைகளாகத் தவம் கிடந்தாயோ, அது கிடைக்கும்போது இங்கிருக்க வேண்டாமே என்ற எண்ணம் எழும்பும். ஆனால் எதற்காக? நீ வேண்டிய அளவுக்குச் சிரமப்பட்டுவிட்டாய். உனக்கு நிர்வாணத்துக்குப் போவதற்கு அனுமதிச் சீட்டு (Passport) கிடைத்துவிட்டதாகத்தான் பொருள். ஆனால் புத்தர் சொல்கிறார்: "அந்த அனுமதிச் சீட்டை மறுத்துவிடு. அதை வீசி எறி. ஒரு மகத்தான முடிவு எடு. எல்லா உயிர்களையும் விடுதலை செய்யாமல் இந்தக் கரையை விட்டுச் செல்ல மாட்டேன்."

இதைக் கேட்டுச் சுபூதியின் உள்ளத்தில் ஒரு நுணுக்கமான அவா எழுந்திருக்க வேண்டும். "அது மகத்தான ஒன்று. எவ்வளவு கௌரவம், எவ்வளவு புண்ணியம் எனக்குக் கிடைக்கும், எவ்வளவு தூய்மையானவன் ஆவேன்." அது போன்ற சிற்றலை ஒன்று எழுந்திருக்கலாம். அது சுபூதிக்கும்கூடத் தெரிந்துகொள்வதற்கு, அது என்னவென்று படிப்பதற்குக் கடினமாக இருந்திருக்கலாம். அது ஓர் ஒளிக்கீற்றுப் போல, உள்ளத்துள் எழுந்த ஒளிக்கீற்றுப் போல ஒரு கணத்தின் ஒரு பகுதியாகக்கூட இருந்திருக்கலாம். ஆனால், அது புத்தரின் கண்ணாடியில் பிரதிபலித்துவிட்டது.

குரு என்பவரே கண்ணாடிதான். உங்களிடம் என்னென்ன உள்ளதோ அவையெல்லாம் அவரிடம் பிரதிபலித்துவிடும். சில நேரங்களில் நீங்கள் கேட்கும் கேள்விகளுக்கு அவர் பதிலளிக்கமாட்டார். ஏனெனில்,

உங்கள் கேள்வி ஆர்வத்தின் விளைவாக எழுந்திருக்குமே தவிர, அவை உங்கள் உள்ளத்துள்ளிருந்து எழுந்ததாக இருக்காது. அல்லது உங்கள் கேள்வி உங்களது அறிவைப் பறைசாற்றிக் கொள்வதாக அமைந்திருக்கும். அல்லது உங்களது கேள்வி "இங்கே பாருங்கள். எவ்வளவு பெரியவன் நான். உண்மைகளைத் தேடுகிறவன். நான் எவ்வளவு அழகான கேள்விகளைக் கேட்கிறேன் பாருங்கள்" என்று நிரூபிப்பதற்காக எழுந்தவையாக இருக்கும். உங்களது கேள்வி இயல்பாக இல்லாமல், அறிவுஜீவித்தனமாக இருக்கும். அதற்கெல்லாம் குரு பதில் அளிக்கமாட்டார்.

சில சமயங்களில் நீங்கள் கேட்காத கேள்விகளுக்குக் குரு பதில் அளிப்பார். அவை கேட்கப்படாத கேள்விகளாக மட்டும் இருக்கா. அது போன்ற கேள்விகளே இருக் கின்றனவா என்று ஆச்சரியப்படத்தக்கவையாக இருக்கும். ஆனாலும், அவை உங்களுக்குள் ஆழத்தில் தேவையாக, இருப்பதைப் பூர்த்தி செய்பவையாக அமைந்திருக்கும்.

*ஏனென்றால், ஒரு போதிசத்துவரால் வழங்கப்படும் ஒரு பரிசு, எதன் ஆதரவும் இல்லாமல், எவ்விடத்தின் ஆதாரமும் இல்லாமல்தான் வரும்... அப்படிப்பட்ட மகான்கள், பரிசு வழங்கும்போது, எதன் ஆதரவும் இல்லாமல், எந்த நோக்கமும் இல்லாமல்தான் வழங்குவர்.*

ஆதரவு என்றால் ஊக்கப்படுத்துதல் என்று பொருள். ஆதரவு என்றால், "எனக்கு இதிலிருந்து ஏதாவது கிடைக்குமா?" என்று எதிர்பார்ப்பு இருப்பின் நீங்கள் உண்மையான ஆதரவின் உட்பொருளையே புரிந்து கொள்ளவில்லை என்பதாக அர்த்தம். அதன்பின் அது பேரம் என்பதாகிவிடும். அதன் பேர் அது பரிசல்ல. நிர்வாணம் என்பது பரிசு. அது பேரம் அல்ல. அது வியாபாரம் அல்ல. நீங்கள் அதைக் கொடுக்கும் சுகத்துக்காகவே கொடுக்க வேண்டும். அந்தச் செய்கைக்குப் பின்னால் வேறு

எந்த நோக்கமும், இதிலிருந்து எனக்கென்ன கிடைக்கும் என்பதான நோக்கங்கள் இருக்கக்கூடாது. அது போன்ற நோக்கங்கள் ஏதாவது இருக்குமாயின் உங்களால் யாருக்கும் உதவியே செய்ய இயலாது.

உண்மையில் உங்களுக்கே உதவி வேண்டியதாயிருக் கிறது. நீங்களே இன்னும் விடுதலை பெற்றவராயில்லை. உங்களுக்கே இன்னும் அந்தக் கரைக்குச் செல்ல அனுமதிச் சீட்டுக் கிடைத்தபாடில்லை. நீங்கள் ஒருவேளை தப்பாக வழிகாட்டிவிடலாம். ஆனால் சரியாகத்தான் வழிகாட்ட முடியாது.

உண்மையான அன்பளிப்பு என்பது பொங்கி வழியும் தன்மையுடையது. நீங்கள் ஞானம் ததும்பி வழியும் நிலையை அடைந்தவராயிருப்பின் அது பொங்கி வழியும். யார் வேண்டுமானாலும் பெற்றுக் கொள்ளலாம். மற்றவர்கள் உங்களிடமிருந்து எடுத்துக் கொள்ளும்போது நீங்கள் அவர்களுக்குக் கடமைப்பட்டவராக உணர்வீர்கள். ஏனெனில், அவர் உங்களது சுமையைக் குறைக்கிறார். மேகங்கள் ஒன்றாக வந்து மழை பொழியும்போது நீர் மண்ணில் விழுகிறது. அப்போது மேகங்கள் நன்றி சொல்லும் பூமிக்கு. ஏனெனில், பூமி நீரை வாங்கிக் கொண்டதனால் மேகங்களின் பாரம் குறைந்தது. ஆமாம். சரியாக அதே போலத்தான்!

ஞானம் உணரப்படும்போது அது உங்களுள் நிறைகிறது. நீங்கள் எவ்வளவு தேவையோ அவ்வளவையும் மற்றவர்களுடன் பகிர்ந்துகொள்ளலாம்... அது மறுபடியும் மறுபடியும் நிறைந்து வழியும். பொங்கி வழியும். மறுபடியும் மறுபடியும் அதற்கு முடிவே கிடையாது. நீங்கள் முடிவற்ற, உற்பத்தி ஸ்தானத்திற்கு வந்துவிட்டதாக அர்த்தம். இப்போது கருமியாக இருக்கக் கூடாது. இப்போது நீங்கள்

தருபவற்றுக்குப் பதிலாக ஏதும் பெறும் எண்ணத்தை உங்களுக்குள் எழவிடக்கூடாது.

*ஏனென்றால், ஒரு போதிசத்துவரால் வழங்கப்படும் ஒரு பரிசு, எதன் ஆதரவும் இல்லாமல், எவ்விடத்தின் ஆதாரமும் இல்லாமல்தான் வரும்... அப்படிப்பட்ட மகான்கள், பரிசு வழங்கும்போது, எதன் ஆதரவும் இல்லாமல், எந்த நோக்கமும் இல்லாமல்தான் வழங்குவர்.*

அவர், "இது அன்பளிப்பு" என்று நினைக்கமாட்டார். அவர், "நான் கொடுப்பவன். நீ பெறுபவன்" என்று நினைக்கமாட்டார். இந்த எண்ணங்கள் எல்லாவற்றையும் விட்டுவிட வேண்டும். கொடுப்பவரோ, வாங்கிக் கொள்பவரோ அல்லது அன்பளிப்போகூடக் கிடையாது. எல்லாம் ஒன்றிவிட்டது. கொடுக்கும் நீங்கள் ஒருவர். பெறும் மற்றொருவரும் உங்களின் மற்றொரு வடிவமே. நீங்கள் வலக்கையிலிருந்து இடக்கைக்குத் தருகிறீர்கள். அதற்கு எந்த வகையிலும் நீங்கள் பெருமைபடத் தேவை யில்லை. கொடுப்பவரும் இல்லை. பெறுபவரும் இல்லை. அன்பளிப்பும் இல்லை.

*அப்படிப்பட்ட மகான்கள், பரிசு வழங்கும்போது, எதன் ஆதரவும் இல்லாமல், எந்த நோக்கமும் இல்லாமல்தான் வழங்குவர். ஏன் அப்படி? 'போதி-இருப்பில்' இருப்பவர், எவ்வித ஆதரவும் இன்றி வழங்கும் பரிசுத்திரள், அளவிட முடியாததாகும்...*

இப்போது, இந்தப் பிரச்சினையை நீங்கள் திரும்பத் திரும்ப எதிர்கொண்டாக வேண்டும். அந்தப் பிரச்சினை, என்னவென்றால் உங்களது கௌரவம், நீங்கள் இவை பற்றி நினைக்கவில்லை எனில் அதிகமாகும். அதனை நினைத்தால் அது மறைந்து போகும். அதற்கு ஆசைப்பட்டால் அதை நீங்கள் அடையவே முடியாது. அதை அடைய

நீங்கள் அவாவுறவில்லையெனில் அது உங்கள் மீது பொழிந்து கொண்டே இருக்கும்.

சாதாரணக் கோணத்தில் இயேசு சொன்னது சரி. அந்த வார்த்தைகள் சாதாரண மனிதனுக்காகச் சொல்லப் பட்டவை. "கேளுங்கள், கொடுக்கப்படும்; தேடுங்கள், அது உங்களுக்குக் கிடைக்கும். தட்டுங்கள், உங்களுக்காகக் கதவு திறக்கப்படும்" என்பது சாதாரண மனிதனுக்குச் சரி. ஆனால் புத்தர் பேசிக்கொண்டிருப்பது சுபூதியிடம். அவர் சரியாகச் சொல்கிறார்: "கேளுங்கள், அது உங்களுக்குக் கிடைக்காது. தேடுங்கள், அது உங்களுக்குக் கிடைக்காது. தட்டுங்கள். கதவுகள் சினச்சுவரின் பக்கம் திரும்பிக் கொள்ளும். அவை திறக்காது." இதை நினைவில் வையுங்கள். இதை நினைவில் கொள்ளுங்கள். வித்தியாசம் கவனிப்பவர்களைப் பொருத்து. இயேசு கிறிஸ்து சாதாரண மக்களிடம் சொல்கிறார். புத்தர் அசாதரணமானவரிடம் பேசுகிறார்.

*புத்தர் தொடர்ந்தார்: "ததாகதர், தம்முடைய உடைமை களால் அடையாளம் காணப்படக் கூடுமா என்பது பற்றி நீ என்ன நினைக்கிறாய், சுபூதி?"*

*சுபூதி இவ்வாறு மறுமொழி கூறினார்: "பிரபுவே, அது முடியாத காரியம். ஏன் அப்படி? ததாகதரால், எவை உடைமைகள் என்று கூறப்பட்டனவோ, அவை அவரின் உடைமை அடையாளங்கள் அல்ல."*

*புத்தர் மீண்டும் கூறினார்: "எங்கே உடைமையின் அடையாளங்கள் இருக்கின்றனவோ, அது பித்தலாட்ட மாகும். உடைமையின் அடையாளங்கள் இல்லையென்றால், பித்தலாட்டம் இல்லை. அதனால், ததாகதர் அடையாளம் இல்லாமை கொண்டே அடையாளம் காணப்படுகிறார். அடையாளம் இன்மையே அவரது அடையாளம்.*

இவை எல்லாமே புதிர் போலத் தோன்றும். ஆனால் அப்படி அல்ல. அவை புதிர் போலத் தோற்றம் அளித்தாலும் அவை புதிர் அல்ல. ஆனால் புத்தர் பேசும் இடம், அவரது பார்வை மிக உயரத்தில் இருக்கவே அவர் சொல்வது எல்லாமே எதிர்மறை போலத் தோற்றம் கொள்கிறது. எதிர்மறை ஒன்றே வெளிப்பாடு என்பதாகிப் போகின்றது. அவை எதிர்மறை போலத் தோன்றினாலும் பூரண நிலையை அடைந்ததாகும். நியாயவாதம் என்பதற்குப் பொருளே இல்லாமல் போகிறது. நியாயப்படிதான் நடக்க வேண்டுமென்றால் அந்தப் பூரணத்துவ நிலைக்குச் சென்று உண்மையை உரைக்க முடியாது. அந்த உண்மை என்பதே எதிர்மறையாகத்தான் இருக்கும்.

புத்தர் கேட்கிறார்: "சுபூதி நீ என்ன நினைக்கிறாய்? ததாகதாவை அவர் வைத்திருக்கும் அடையாளங்களை வைத்துக் காண முடியுமா?" புத்தரின் புனிதப் புத்தகங்கள் சொல்கின்றன: ஒரு புத்தருக்கு அவர் மகா மனிதர் என்பதற்காக முப்பத்தியிரண்டு அடையாளங்கள் இருக்கின்றன. அந்த முப்பத்தியிரண்டு அடையாளங்கள் தகுதியாகிவிடுமா?

சாதாரண மனிதருக்கு இது பொருந்தும். ஏனெனில் உங்களுக்கு வேறு எந்தக் கண்களும் இல்லை. உங்களால் வெளியில் இருக்கும் அடையாளங்களைத்தான் காண முடியும். ஆனால் சுபூதியைப் போன்ற மனிதருக்கு உள்ளுக்குள்ளும் காண முடியும். புத்தரிடமும் அவர் இதே போலக் காண முடியும். அந்த அடையாளங்கள் தொடர்புடையதாயிருக்கும் என்பதே கிடையாது. மேலும், எதையாவது உடைமையாக வைத்திருத்தல் என்பதே புத்தராவதற்கான தகுதியாவதில்லை. அந்த முப்பத்தி யிரண்டு அடையாளங்களும் கூடத் முக்கியமல்ல. ஒரு

புத்தர் என்பவர் சாதாரணமானவராகவே இருப்பார். ஏனெனில், அவரது உரிமை என்று எதுவுமே கிடையாது. அதுவே உண்மையான அடையாளம் எதையுமே உரிமையாகக் கொள்ளாதது. புத்தபிராயத்தைக்கூட உரிமை கோராமல் இருத்தல். அதுவே உண்மையான புத்த பிராயத்துக்கான அடையாளம். இது போன்றுதான் விஷயங்கள் எதிர்மறையாகி விடுகின்றன.

ஓர் உண்மையான புத்தர் என்பவர், தான் புத்தர் என்ற உரிமையைக்கூடக் கோரமாட்டார். உரிமை கோருதல் என்பதே வஞ்சனையானது. ஒரு புத்தர் எதையுமே கோரமாட்டார். அவருக்கு உரிமை என்பதே கிடையாது. அவருக்கு ஆசையே கிடையாது. அவருக்குத் தம்மை வெளிக்காட்டிக் கொள்வதில் அக்கறையே கிடையாது. அவருக்குத் தான் யார் என்று மற்றவர்களைத் திருப்திப் படுத்துவதிலே ஆர்வமே கிடையாது. அவர் அங்கேயே இருக்கிறார். அவரிடமிருந்து எடுத்துக் கொள்ளலாம். அவருடைய நடனத்தில் கலந்து கொள்ளலாம். அவருடைய கொண்டாட்டத்தைப் பகிர்ந்து கொள்ளலாம். ஆனால், அவர் எதையும் நிரூபணம் செய்வதற்காக அங்கே இருக்கமாட்டார். எதையாவது நிரூபிப்பது என்பது, நீங்கள் அதனை அடையவில்லை என்பதையே நிரூபணம் செய்வ தாக முடியும். அவர் தற்காத்துக் கொள்பவரல்லர்.

அவருடைய வெளி அடையாளர்'களை, புத்தரல்லாதவர் களால்கூட உருவாக்க முடியும். எதை வேண்டுமானாலும் உருவாக்க முடியும். எடுத்துக்காட்டாக, புத்தரது சுவாசம் மிகவும் மௌனமாக இருக்கும். அவர் சுவாசிக்காதது போலவே இருக்கும். ஆனால், அதனை மற்ற எவராலும், புத்தராக மாறாது ஒரு யோகியாக இருப்பவரால்கூட செய்து காட்ட முடியும். நீங்கள் சுவாசப் பயிற்சி செய்யலாம். நீங்கள் உடற்பயிற்சி செய்யலாம். உங்களது

சுவாசத்தை ஒரேயடியாக நிறுத்தும் நிலைக்கேகூடக் கொண்டு வரலாம். நீங்கள் புத்தரையே கூடத் தோற்கடிக்க லாம்.

அவரது சுவாச முறை மிகவும் மெதுவானது. ஏனெனில் அதன் வேகத்தைக் குறைத்துவிட்டார். அவர் ஏதும் சுவாசப் பயிற்சி முறை மேற்கொள்ளுவதால் அல்ல. அவரது சுவாசத்தின் வேகம் குறைவானதற்குக் காரணம் அவர் எங்கும் போகாததுதான். ஏனெனில், அவரது ஆசைகள் அனைத்தும் மறைந்துவிட்டன. அதனால்தான் அவர் சுவாசத்தை மிக மெதுவாக மேற்கொள்கிறார், யாரும் பார்க்க முடியாதவாறு! அதற்குக் காரணம் அவர் பெரிய யோகி என்பதல்ல. காரணம் ஆசைகள் அகன்றுவிட்ட தால் அவருக்கு அவசரம் என்பதில்லை. அவர் காலையில் உலா செல்பவர் போல இருக்கிறார். அவருக்கு எதிர்காலம் இல்லை. கவலைகள் இல்லை.

நீங்கள் கவனித்திருக்கிறீர்களா? நீங்கள் கவலைப்படும் போது உங்கள் சுவாசம் சீராக இருப்பதில்லை. அதற்கு இடையூறு ஏற்படுகிறது. நீங்கள் கோபத்தோடு இருக்கும் போது சுவாசம் மூர்க்கமாகிறது. நீங்கள் காதலிக்கும் போதோ, உணர்ச்சியைக் காட்டும்போதோ அது உங்களது சுவாசத்துக்கு மிகவும் இடையூறாக இருக்கிறது. காய்ச்சல் உண்டாகிறது. ஆனால், புத்தருடைய தீவிர உணர்ச்சி களெல்லாமே தயை, கருணை என்றாகிப் போனது. அவருடைய ஆசைகள் அனைத்துமே அகற்றப்பட்டன. மறைந்து போனது. ஒரு மரத்தின் பழுத்த இலைகள் உதிர்ந்து போனாற்போல, அவருடைய சுவாசம் மெல்ல, மெல்ல, மெல்ல நிதானமாகிப்போனது.

ஆனால், இதுதான் அடையாளம் என்றாகுமேயானால், போலியாக நடிப்பவன்கூட இதேபோல நடிக்க முடியும். புத்தர் மிக மௌனமாக அமர்ந்திருக்கிறார். அவர் அமர்ந்

திருக்கும் நிலை அசையாமல் இருக்கிறது. அவர் ஒரே நிலையில் இருக்கிறார். ஆனால், இதை யார் வேண்டுமானாலும் செய்ய முடியும். சிறிது அளவே பயிற்சி தேவைப்படும். ஆனாலும் அந்தப் பயிற்சியே உங்களைப் புத்தர் ஆக்கிவிடாது.

*புத்தர் மீண்டும் கூறினார்: "எங்கே உடைமையின் அடையாளங்கள் இருக்கின்றனவோ, அது பித்தலாட்டமாகும்."*

*அதனால் யாராவது, "புத்தருடைய அடையாளங்கள் என்னிடம் இருக்கின்றன. பாருங்கள். நான்தான் புத்தர்" என்று சொன்னால், அவர் வஞ்சனையானவர். ஏனெனில் அது போன்று உரிமை கோருதலே வஞ்சனையானதாகும்.*

*உடைமையின் அடையாளங்கள் இலலையென்றால், பித்தலாட்டம் இல்லை. அதனால், ததாகதர் அடையாளம் இல்லாமை கொண்டே அடையாளம் காணப்படுகிறார். அடையாளம் இன்மையே அவரது அடையாளம்.*

புத்தர் சுபூதியிடம் ஏன் திடீரென்று இந்தக் கேள்வியைக் கேட்க வேண்டும்? ஓர் ஆசை- சுபூதியின் மனத்தில் எழுந்திருக்கலாம். அவர் புத்தராகும் தருவாயில் இருந்தார். ஓர் ஆசை அவரது மனத்தில் தோன்றியிருக்கலாம்: "விரைவிலேயே நானும் முப்பத்திரண்டு அடையாளங்களைப் பெற்றுவிடுவேன். சீக்கிரமே நானும் புத்தராகிவிடுவேன். நானும் புத்தர் என அறிவிக்கப்படுவேன். நானும் முப்பத்திரண்டு அடையாளங்களைப் பெற்றுவிடுவேன்."

இது ஒருவேளை பிரக்ஞையில்லாமல் தானே தோன்றிய ஆசையாக இருக்கலாம். ஆனாலும் ஒரு சிற்றலை. புத்தரின் முப்பத்திரண்டு அடையாளங்களைப் பார்த்தவுடன், அவரது கருணையை, அவரது அழகினை... யாருக்குத்தான் ஆசை பிறக்காது? சுபூதி புத்த பிராயத்தின் வாசலில் நிற்கும்

தகுதியுடையவர்தாம். புத்தர் கொடுத்தலைப் பற்றிப் பேசும்போதும் அளிக்கும்போதும், கொடுப்பவர், கொள்பவர், பரிசு என்ற மூன்றும் பாகுபாடு இன்றி மறைந்துவிட வேண்டும் என்கிறார். அப்போதுதான் உங்களது நற்குணங்கள் உயரும் என்று புத்தர் சொல்லும்போது இவற்றையெல்லாம் கவனித்துக்கொண்டிருக்கும் சுபூதிக்கு ஓர் ஆசை பிறந்திருக்கலாம். அவரது ஆசை ஒரு விதை அளவுகூட இருந்திருக்கலாம். ஆனால் ஆசைப்பட்டிருக்கிறார். "அதன்பின் கௌரவத்துடன் நானும் ஒரு புத்தராகி விடுவேன். நானும் முப்பத்திரண்டு அடையாளங்களைப் பெற்று, புத்தரைச் சூழ்ந்திருக்கும் அதே வாசத்துடன், அதே கருணையுடன், அதே ஒளியுடன், அதே தயாள குணத்துடன்! ஆஹா!..." அவர் ஒருவேளை எங்காவது ஆசையை உண்டாக்கியிருக்கலாம்.

அவரது ஆசையைக் கண்ட புத்தர் சொல்கிறார்: "சுபூதி நீ என்ன நினைக்கிறாய்? தக்ககதாவை அவருடைய அடையாளங்களைக் கொண்டு காண முடியுமா என்றுதானே?" சுபூதியின் பிரக்ஞையில், அல்லது நினைவற்ற நிலையிலும் ஆழத்தில் இருக்கும் எண்ணங்களை அறிந்து கொண்டால் அன்றி உங்களால் இந்த வைர சூத்திரத்தைப் புரிந்துகொள்ள முடியாது.

*சுபூதி இவ்வாறு கேட்டார்: "இனி வரப்போகும் ஐந்நூறு ஆண்டுக் காலத்திற்குப் பிறகு, நல்ல கோட்பாடுகள் எல்லாம் நாசமடையும் காலக்கட்டத்தில், இந்தச் சூத்திரத்தின் உண்மையான சொற்பொருள்களை எல்லாம் புரிந்து கொள்கிறவர்கள் இருப்பார்களா?"*

உங்களுக்கு ஆச்சரியமாக இருக்கலாம். சுபூதி குறிப்பிட்ட காலம் இதுதான், அவர் குறிப்பிட்ட மக்கள் நீங்கள்தான். இரண்டாயிரத்து ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன்பு சுபூதி உங்களைப் பற்றிக் கேட்டிருக்கிறார்.

புத்தர் சொன்னார்: "எப்போதெல்லாம் ஆரம்பிக்கப் பட்டாலும், எப்போதெல்லாம் ஒரு புத்தர் தர்ம சக்கரத்தைச் சுழற்றினாலும், இயல்பாகவே, சிறிது சிறிதாக அந்தச் சக்கரம் நிற்கத் துவங்கிவிடும். அது தனது வேகத்தை இழந்துவிடுகிறது. நீங்கள் ஒரு சக்கரத்தினைச் சுழற்ற ஆரம்பித்தாலும், அது சுழல ஆரம்பிக்கும். அதற்கப்புறம் சிறிது சிறிதாக அது தனது வேகத்தை இழந்து முடிவில் நின்றுவிடும்.

ஒரு புத்தர் தர்ம சக்கரத்தைச் சுழற்ற ஆரம்பிக்கும்போது, அது நிற்பதற்கு இரண்டாயிரத்து ஐந்நூறு வருடங்கள் ஆகியிருக்கின்றன. ஒவ்வொரு ஐந்நூறு ஆண்டுகளுக்குப் பின்னரும் அது தனது வேகத்தைச் சிறிது சிறிதாக இழந்து கொண்டு வந்திருக்கிறது. முடிவில் இரண்டாயிரத்து ஐந்நூறு வருடங்களுக்குப் பின்னர் ஒரேயடியாக நிற்கும். அதை மீண்டும் சுழற்றிவிட இன்னொரு புத்தர் தேவைப்படும். அதன்பின் மற்றொரு இருபத்தைந்து நூற்றாண்டுகளுக்கு அது சுழலும்.

இது மிகவும் அரிதான ஒன்று. சுபூதி புத்தரிடம் இது போன்று கேட்பது, மிகவும் மறைவாக உள்ளே ஒன்றை வைத்துப் பேசுவது போலக்கூட இருக்கிறது.

சுபூதி இவ்வாறு கேட்டார்: "இனி வரப்போகும் ஐந்நூறு ஆண்டுக் காலத்திற்குப் பிறகு, நல்ல கோட்பாடுகள் எல்லாம் நாசமடையும் காலக்கட்டத்தில், இந்தச் சூத்திரத்தின் உண்மை யான சொற்பொருள்களை எல்லாம் புரிந்து கொள்கிறவர்கள் இருப்பார்களா?"

அதற்குப் புத்தர் சொன்னார்: "இப்படியெல்லாம் பேசாதே சுபூதி. ஆம். இப்போது கற்றுக் கொடுக்கப்படும் இந்தச் சூத்திரங்களின் உண்மைப் பொருள்களையெல்லாம் அப்போது புரிந்துகொள்ளவே செய்வார்கள். அந்தக் காலக்கட்டத்திலும்

கூட போதிசத்துவர்கள் இருக்கவே செய்வார்கள். சுபூதி... அந்தப் போதிசத்துவர் 'ஒரு' புத்தரால் மட்டும் மரியாதை செய்யப்பட்டவர்களாக இருக்கமாட்டார்கள். அவர்களுடைய மதிப்பிற்குரிய வேர்கள், ஒற்றைப் புத்தருக்கடியில் மட்டும் ஊன்றி நிற்பனவாக இருக்காது.

"சுபூதி, அதற்கு மாறாக, இந்தச் சூத்திரங்களின் மெய்மையைக் கற்றுக்கொண்ட அந்தப் போதிசத்துவர்கள், ஒரே ஒரு புனித எண்ணத்தாலே நம்பிக்கை பெற்று விடுவார்கள். இலட்சக்கணக்கான புத்தர்களால் அவர்கள் ஆசீர்வதிக்கப்பட்டவர்களாக இருப்பார்கள். அவர்களுடைய ஆதார வேர்கள் இலட்சக்கணக்கான புத்தர்களின் கீழே நிலை கொண்டிருக்கும்.

"அவர்கள், ததாகதரின் புத்த தரிசனத்தால் அறியப்படுவார்கள், சுபூதி. அவர்கள், ததாகதரின் புத்த விழியால் காணப்படுவார்கள், சுபூதி. அவர்கள், ததாகதரால் முழுமையாக அறியப்படுவார்கள், சுபூதி. அவர்கள், கணக்கிட முடியாத, அளவிட முடியாத மரியாதை பெறுவார்கள், சுபூதி."

புத்தர் உங்களைப் பற்றிப் பேசுகிறார். அந்தச் சூத்திரம் உங்களுக்குப் படைக்கப்பட்டது. இருபத்தைந்து நூற்றாண்டுகள் மறைந்துவிட்டன. சுபூதி உங்களைப் பற்றிக் கேட்டிருக்கிறார்.

ஏற்கெனவே ஒருநாள் நான் உங்களுக்குச் சொன்னேன்: 'உங்களில் நிறையப் பேர் போதிசத்துவர்களாவீர்களென்றும், நிறையப் பேர் அப்படி ஆகும் தருவாயில் இருக்கிறீர்கள் என்றும்.' சுபூதி இது போன்ற கேள்வியைக் கேட்டது ஆச்சரியமாக இருக்கிறது. அதைவிட ஆச்சரியம் புத்தர் அளித்த பதில்: "இருபத்தைந்து நூற்றாண்டுகளுக்குப் பின்னர் வரப்போகும் மக்கள் உன்னைவிட எந்த விதத்திலும் அதிர்ஷ்டம் குறைந்தவர்களாக இருக்க

மாட்டார்கள். உண்மையில் உன்னைவிட அதிர்ஷ்டம் மிகுந்தவராகவே இருப்பார்கள்."

ஏன்? நான் உனக்குப் பல முறைகள் சொல்லிக்கொண்டு வருகிறேன். பழங்காலத்திலிருந்து நீங்களும் இந்தப் பூமியில் நிறையத் தடவைகள் நடந்து வந்திருக்கிறீர்கள். தர்மத்தை முதல் தடவையாக நீங்களும் கேட்கவில்லை. இது போன்ற நிறையப் புத்தர்கள் உங்களது வாழ்க்கையில் வந்துள்ளார்கள். - சில நேரங்களில், ஒரு கிருஷ்ணராக, சில நேரங்களில் கிறிஸ்துவாக, சில நேரங்களில் மஹாவீரராக, சில சமயங்களில் முகம்மதுவாக, நிறையத் தடவைகள் நிறைய நிறையப் புத்தர்கள் உங்களது வாழ்க்கையில் வந்துள்ளார்கள். நிறைய ஞானிகள்!

நீங்கள் இவ்வளவு புத்தர்களைப் பார்த்ததற்கு அதிர்ஷ்டம் செய்திருக்க வேண்டும். நீங்கள் கொஞ்சம் ஜாக்கிரதையாக இருந்தால் இந்தப் புத்தர்களெல்லாம் தூவிய விதைகள் உங்களில் முளை விட ஆரம்பிக்கும். கிளை விட ஆரம்பிக்கும். மலரவும் ஆரம்பிக்கும்.

சுபூதி, அதற்கு மாறாக, இந்தச் சூத்திரங்களின் மெய்மையைக் கற்றுக்கொண்ட அந்தப் போதிசத்துவர்கள், ஒரே ஒரு புனித எண்ணத்தாலே நம்பிக்கை பெற்றுவிடுவார்கள். இலட்சக்கணக்கான புத்தர்களால் அவர்கள் ஆசீர்வதிக்கப்பட்டவர்களாக இருப்பார்கள். அவர்களுடைய ஆதார வேர்கள் இலட்சக்கணக்கான புத்தர்களின் கீழே நிலை கொண்டிருக்கும்.

இது புரியாத மர்மமாக இருக்கிறது. ஆனாலும் இது சாத்தியமே. ஒரு புத்தா என்பவருக்கு எதிர்காலத்தைக் கண்டுணரும் சக்தி இருக்கிறது. அவர் எதிர்காலத்தை மறைத்திருக்கும் மூடுபனியைக்கூட ஊடுருவிப் பார்க்க முடியும். அவரது பார்வை அவ்வளவு தெளிவானது. அவர் புலப்படாத எதிர்காலத்தின் மேல் படும்படியாக ஒளியைப் பாய்ச்சலாம். அவரால் பார்க்க முடியும். புத்தரது வைர

சூத்திரத்தை நீங்கள் கவனித்துக் கேட்பது புரியாத மர்மமாகக்கூடத் தோற்றமளிக்கலாம். உங்களது கோணத்தி லிருந்து இது நம்பவே முடியாத விஷயமாகக் கூட இருக்கலாம். ஏனெனில் உங்களுக்கு நிகழ்காலத்தைப் பார்ப்பது எப்படி என்றே தெரியவில்லை. யாரோ ஒருவர் எதிர்காலத்தைக் காண முடியும் என்பதனை எப்படி நம்ப முடியும்?

உங்களால் செய்ய முடிந்தது ஒன்றே ஒன்றுதான். அதுதான், கடந்த காலத்தைப் பார்க்க முடிவது. உங்களால் திரும்பிப் பார்க்கத்தான் முடியும். நீங்கள் பழமையிலேயே வாழ்ந்துகொண்டிருப்பவர்கள். நீங்கள் எதிர்காலத்தை நினைக்கும்போது அது எதிர்காலத்தைப் பார்க்கும் பார்வையாக இருக்காது. அது பழைய காலத்தைச் செப்பனிட்டதாகத்தான் இருக்கும். அது எதிர்காலமே அல்ல. அது உங்கள் 'நேற்று' என்பதே. மறுபடி 'நாளை'யாக வரப்போகிறது.

நீங்கள் நேற்று எதையோ சுவைத்தீர்கள். அது இனிப்பாக இருக்கவே அதை மறுபடியும் நாளைக்கும் வேண்டுகிறீர்கள். அதுவே உங்களது எதிர்காலம். நீங்கள் யாரையோ காதலித்தீர்கள். நாளைக்கு நீங்கள் காதல் புரிய வேண்டும். அதுவே உங்களது எதிர்காலம். அது கடந்த காலமே மீண்டும் வருவதுதான். அது உங்களது எதிர்காலமே அல்ல. உங்களால் எதிர்காலம் என்ன என்பதை அறிய முடியாது. ஏனெனில், உங்களது நிகழ்காலத்தையே உணர முடிய வில்லை. நிகழ்காலம் உங்களிடம் இருக்கிறது. இங்கு ஏற்கெனவே இருப்பதையே பார்க்க முடியாத அளவுக்கு நீங்கள் பார்வையற்றவராக இருக்கிறீர்கள்.

ஆனால், உங்களது கண்களைத் திறந்து வைத்துக் கொண்டால், நீங்கள் இங்கு இல்லாததைக்கூடக் காண

முடியும். என்ன நிகழப் போகிறதோ, அதைக்கூடக் காண முடியும். அந்தக் கணங்களைக்கூடத் தரிசனம் செய்ய முடியும். எதிர்காலத்தைக் காண்பது என்பதற்கு முன்பாக நிகழ்காலத்தைக் காண வேண்டும். நிகழ்காலத்தில் முற்றிலுமாக இருக்க முடிபவர்களால்தான் எதிர்காலத் தைப் பார்க்க முடியும்.

நீங்கள் வைர சூத்திரத்தைக் கேட்பதை கௌதம புத்தர் பார்த்திருக்கிறார் என்பதே பெரும் மகிழ்ச்சி தருவதாகும். வைர விதிகளைப் பற்றி நீங்கள் பேசிக் கொண்டிருக் கிறீர்கள். அதனால்தான் நான் அதைத் தேர்ந்தெடுத்தேன். இந்த வார்த்தைகள் வரும்போது நான் நினைத்தேன்: "இது எனது மக்களுக்காகவே! அவர்களைக் கௌதம புத்தர் கவனிக்கிறார் என்பதை அவர்கள் உணர வேண்டும். அவர் களைப் பற்றிய அந்தச் சில விஷயங்கள் இருபத்தைந்து நூற்றாண்டுகளுக்கு முன்னரே சொல்லப்பட்டவை. அவை முன்னரே கணிக்கப்பட்டவை."

புத்தரால் நகர்த்தப்பட்ட சக்கரம் நின்றுவிட்டது. அந்தச் சக்கரம் மறுபடியும் சுழற்றப்பட வேண்டும். அதுவே எனது மற்றும் உங்களுடைய வாழ்க்கைப் பணியாகும். சக்கரம் மறுபடியும் சுழற்றி விடப்பட வேண்டும். அது மறுபடியும் சுழற்றப்பட்டு விட்டால் இன்னும் இருபத்தைந்து நூற்றாண்டுகளுக்குச் சுற்றிக்கொண்டிருக்கும். அது மறு படியும் இருபத்தைந்து நூற்றாண்டுகளுக்காவது வாழ்ந்து கொண்டிருக்கும்.

அதை மறுபடியும் மறுபடியும் செய்துகொண்டே இருக்க வேண்டும். ஏனெனில், எல்லாமே வேகம் இழந்து விடுகின்றன. எல்லாமே இயற்கையின் விதிப்படிதான் இயங்கிக் கொண்டிருக்கின்றன, இயந்திர விதிப்படி! நீங்கள் ஒரு கல்லை வீசி எறியுங்கள். அதை மிக்க பலத்துடன் வீசி எறியுங்கள். அது சில நூறு அடிகள் மேலே போய், பின்பு

கீழேதான் விழும். அதேபோலத் தர்மமும் அப்போதைக்கப் போது உயிரூட்டப்படல் வேண்டும். அது ஓர் இருபத் தைந்து நூற்றாண்டுகளுக்கு உயிரோடு இருந்து பின்னர் இறந்துவிடும். பிறந்தது எல்லாம் இறக்கத்தான் வேண்டும்.

ஆனால் புத்தர் சொல்கிறார்: "சுபூதி இதுபோல் பேசாதே." சுபூதி நினைத்துக்கொண்டிருக்க வேண்டும். "நாம்தான் அதிருஷ்டசாலி. நாம் புத்தரைக் கவனித்து விட்டோம். புத்தருடனேயே வாழ்ந்துவிட்டோம். புத்தருடன் நடந்துவிட்டோம். நாம் அதிர்ஷ்டசாலி. நாம் ஆசீர்வதிக்கப்பட்டவனாகிவிட்டோம். இருபத்தைந்து நூற்றாண்டுகளுக்குப் பின்னர்த் தர்ம சக்கரம் முற்றிலுமாக நின்ற பிறகு என்ன ஆகும்?" அவர் உங்களைப் பற்றியெல்லாம் துரதிர்ஷ்டசாலிகள் என்பது போல நினைக்கிறார்.

புத்தர் சொல்கிறார்: "அது போலப் பேசாதே. நீ ஒருவன் தான் அதிர்ஷ்டசாலி என்பது போல நினைக்காதே." அது ஒரு நுட்பமான அகந்தை. "நாம் அதிர்ஷ்டசாலி. வேறு யாருமே நம்மளவுக்கு அதிர்ஷ்டசாலி இல்லை." புத்தர் உடனே சுபூதியின் வாய் மேல் கை வைக்கிறார்.

இப்படியெல்லாம் பேசாதே சுபூதி. ஆம். இப்போது கற்றுக் கொடுக்கப்படும் இந்தச் சூத்திரங்களின் உண்மைப் பொருள் களையெல்லாம் அப்போது புரிந்து கொள்ளவே செய்வார்கள்.

எனக்குத் தெரியும். இங்கே உண்மையைப் புரிந்து கொள்ளும் மக்கள் இருக்கிறார்கள். கொஞ்சம் கொஞ்சமாகக் காலை விடிந்துகொண்டிருக்கிறது. காரிருள் மறைந்துகொண்டிருக்கிறது. கொஞ்சம் கொஞ்சமாக விதை நிலத்தில் ஊன்றிக் கொண்டிருக்கிறது. அது உங்களது இதயத்திலும் நுழைந்து கொண்டிருக்கிறது.

*அந்தக் காலக்கட்டத்திலும்கூடப் போதிசத்துவர்கள் இருக்கவே செய்வார்கள்.*

நிறையப் பேர் இங்கே போதிசத்துவர்களாகப் போகிறார்கள். இன்னும் சிறிதளவு அதிகமாக வேலை செய்தால், சிறிது அதிகமாக விளையாட்டு... தியான ஈடுபாட்டின் மேல் இன்னும் சிறிது முயற்சி, உங்களது சக்தியை இன்னும் சிறிது பொழியுங்கள். உங்களது சக்தியை இன்னும் சிறிதே ஒருமுகப்படுத்துங்கள். கவனத்தைச் சிதறவிடுவதைச் சிறிது தள்ளுங்கள். அப்போது நிச்சயம் இது நிகழும். நிறையப் பேருக்கு இது நிகழப் போகிறது. நீங்களும் அந்த அதிர்ஷ்டக்காரர்களில் ஒருவர்தான். இப்படியாகப் புத்தர் சொல்கிறார். I am.

*"சுபூதி... அந்தப் போதிசத்துவர்கள் 'ஒரு' புத்தரால் மட்டும் மரியாதை செய்யப்பட்டவர்களாக இருக்க மாட்டார்கள். அவர்களுடைய மதிப்பிற்குரிய வேர்கள், ஒற்றைப் புத்தருக் கடியில் மட்டும் ஊன்றி நிற்பனவாக இருக்காது.*

*"சுபூதி, அதற்கு மாறாக, இந்தச் சூத்திரங்களின் மெய்மை யைக் கற்றுக்கொண்ட அந்தப் போதிசத்துவர்கள், ஒரே ஒரு புனித எண்ணத்தாலே நம்பிக்கை பெற்று விடுவார்கள். இலட்சக்கணக்கான புத்தர்களால் அவர்கள் ஆசீர்வதிக்கப்பட்ட வர்களாக இருப்பார்கள். அவர்களுடைய ஆதார வேர்கள் இலட்சக்கணக்கான புத்தர்களின் கீழே நிலை கொண்டிருக்கும்."*

உன்னால் வைர சூத்திரத்தில் வரும் ஒரே ஒரு வார்த்தையைப் புரிந்துகொள்ள முடிந்தாலும்கூட, உன்னைப் பார்க்கும் எனது கண்களின் ஒரு பார்வையைப் புரிந்துகொள்ள முடிந்தாலும் கூட, எனது உள்ளத்து நடனத்தில் ஒரே ஒரு சைகையைப் புரிந்துகொள்ள முடிந்தாலும் கூட...

புத்தர் சொல்கிறார்:

"ஒரே ஒரு புனித எண்ணத்தாலே நம்பிக்கை பெற்று விடுவார்கள். இலட்சக்கணக்கான புத்தர்களால் அவர்கள் ஆசீர்வதிக்கப்பட்டவர்களாக இருப்பார்கள். அவர்களுடைய ஆதார வேர்கள் இலட்சக்கணக்கான புத்தர்களின் கீழே நிலை கொண்டிருக்கும்.

"அவர்கள், ததாகதரின் புத்தத் தரிசனத்தால் அறியப்படு வார்கள், சுபூதி. அவர்கள், ததாகதரின் புத்த விழியால் காணப் படுவார்கள், சுபூதி. அவர்கள், ததாகதரால் முழுமையாக அறியப்படுவார்கள், சுபூதி. அவர்கள் கணக்கிட முடியாத, அளவிட முடியாத மரியாதை பெறுவார்கள், சுபூதி."

புத்தர் பேசுவது உங்களைப் பற்றித்தான். உங்களைத்தான் நான் சார்ந்திருக்கிறேன். தர்ம சக்கரம் நின்றுவிட்டது. அது மறுபடியும் சுழற்றப்பட வேண்டும்.

இன்றைக்கு இது போதும்.

எனது அன்பான ஓஷோ,
எங்குத் தவறு நடந்து விட்டது? மக்கள்
எல்லோரும் புதியதாக இருக்கும்
எல்லாவற்றையுமே, மிகவும் வேண்டா
வெறுப்பாகச் சந்திக்கிறார்களே. மேலும்
ஆர்வத்துடனும், மகிழ்ச்சியுடனும் சந்திப்பதற்குப்
பதிலாகப் பயத்துடன் சந்திக்கிறார்களே?

புதியது என்பதே உங்களிடமிருந்து எழுவதில்லை. அது அப்பாலிலிருந்து, புலப்படாத இடத்திலிருந்து வருகிறது. அது உங்களின் ஒரு பகுதி அல்ல. உங்களுடைய கடந்த காலம் முழுவதும் ஒரு நிறுத்தத்தில் வந்து நின்றிருக்கிறது. புதியது என்பது உங்களிடமிருந்து தொடர்பற்றதாயிருக்கிறது. அதனால்தான் இந்த அச்சம். நீங்கள் ஒரே மாதிரி வாழ்ந்துவிட்டீர்கள். நீங்கள் ஒரே மாதிரி யோசித்துவிட்டீர்கள். உங்களது நம்பிக்கைகளின் அடிப்படையில் நீங்கள் மிகவும் வசதியாக வாழ்ந்து விட்டீர்கள். அதன்பின் புதியதாக எதுவோ ஒன்று உங்களின் கதவைத் தட்டுகிறது. இப்போது உங்களது கடந்த காலம் முழுவதும் இடையூறு செய்யப்படப் போகிறது. இப்போது புதியதை நீங்கள் அனுமதித்தால் மறுபடியும் பழைய மாதிரி இருக்கப்போவதில்லை. புதியது உங்களை அடியோடு மாற்றிவிடப் போகிறது.

அது மிகவும் அபாயகரமானது. யாருக்குமே, இந்தப் புதியதன் முடிவில் நீங்கள் எங்கிருக்கப் போகிறீர்கள் என்று தெரியாது. பழையது என்பது தெரிந்தது. பழக்கமானது. நீங்கள் அதனுடன் பல ஆண்டுகளாக வாழ்ந்துவிட்டீர்கள். உங்களுக்கு அது பிடிபட்டுப் போயிருக்கிறது. அது உங்களுக்கு நண்பனாக மாறியிருக்கலாம். புதியது என்பது உங்களுக்குப் பழக்கமில்லாதது. அது உங்களுக்கு நண்பனாக இருக்கலாம், எதிரியாகவும் இருக்கலாம். யாருக்குத் தெரியும்? அதைக் கண்டுபிடிப்பதற்கு வழியே இல்லை. அதைக் கண்டுபிடிப்பதற்கு ஒரே வழி அதை அனுமதிப்பது தான். அதனால்தான் இந்த பயம்.

அதனைப் புறக்கணித்துக்கொண்டே இருக்கவும் முடியாது. ஏனெனில் நீங்கள் தேடுவதை, பழையன, இதுவரையில் உங்களுக்குக் கொடுக்கவில்லை. பழையன உங்களுக்கு உறுதிமொழிகள் அளித்திருக்கின்றன. ஆனால் அம்மொழிகள் காப்பாற்றப்படவில்லை. பழையன உங்களுக்குத் தெரிந்தவையாக இருக்கலாம். ஆனால் அது மிகவும் துயரமானவை. புதியது உங்களுக்கு வசதியில்லாமலிருக்கலாம். ஆனாலும் அதனால் சில சாதகங்கள் வரக்கூடும். அது உங்களுக்கு ஒரு பேரானந்தத்தைக் கொடுக்கக்கூடும். அதனால் அதனை உங்களால் புறக்கணிக்கவும் முடியாமல், ஒப்புக்கொள்ளவும் முடியாமல் மன உளைச்சல் படுகிறீர்கள். நீங்கள் நடுங்குகிறீர்கள். நீங்கள் உணர்ச்சி வசப்படுகிறீர்கள். அது இயல்பானது. எங்கும் தவறு நேரவில்லை. இப்படித்தான் இதுவரையில் இருந்து வந்திருக்கிறது. இனிமேலும் இருக்கப் போகிறது.

புதியன காட்சியளிக்கும்போது அவற்றைப் புரிந்து கொள்ள முயலுங்கள். இந்த உலகத்தில் உள்ள எல்லோருமே புதியதாகத்தான் விரும்புகிறார்கள். ஏனெனில் பழமையாயிருப்பதுடன் யாருக்குமே திருப்தியில்லை.

பழைய மாதிரியே இருப்பதில் திருப்தி இருக்க முடியாது. ஏனெனில் பழையன எப்படியிருந்தாலும் அது உங்களுக்குத் தெரிந்திருக்கிறதே. ஒருமுறை தெரிந்துவிட்டால் அது திரும்பத் திரும்பப் பார்த்ததாகிவிடுகிறது. தெரிந்தது எல்லாமே மனச்சோர்வைத் தருவதாகிவிடுகிறது. அதிலிருந்து வெளியே வர விரும்புகிறீர்கள். புதியதாக எதையாவது கண்டுபிடிக்க விரும்புகிறீர்கள். உங்களுக்குச் சாகசம் தேவைப்படுகிறது. நீங்கள் புதியவராக விரும்புகிறீர்கள். ஆனாலும் புதுமை உங்களது வீட்டின் கதவைத் தட்டும்போது உடனே சுருங்கிக்கொள்கிறீர்கள்; விலகுகிறீர்கள்; பழமைக்குள் ஒளிந்து கொள்கிறீர்கள். இதுதான் போராட்டமே.

நீங்கள் எப்படிப் புதியவராவீர்கள்? எல்லோருமே புதியவராக விரும்புகிறீர்கள். துணிவு வேண்டும். சாதாரணமான துணிவு அல்ல. அசாதாரணமான துணிவு. இந்த உலகம் கோழைகளால் நிரம்பப் பெற்றது. அதனால் மக்கள் வளர்ச்சியடைவதை நிறுத்திவிட்டார்கள். நீங்கள் கோழைகளாக இருந்தால் எப்படி வளர்ச்சியடைவது? ஒவ்வொரு வாய்ப்பின் போதும் நீங்கள் சுருங்கிக் கொள்கிறீர்கள். உங்களது கண்களை மூடிக்கொள்கிறீர்கள். எப்படி வளர்ச்சியடைவீர்கள்? நீங்கள் எப்படி இருப்பீர்கள்? நீங்கள் இருப்பதாக நடிக்கத்தான் இயலும்.

உங்களால் வளர்ச்சியடைய முடியாததால் பதிலுக்கு வேறு வளர்ச்சிகளைத் தேட ஆரம்பிக்கிறீர்கள். உங்களால் வளர முடியாது. உங்கள் வங்கிக் கணக்கின் இருப்பு வளர முடியும். அதுதான் மாற்று. அதற்குத் துணிவு தேவையில்லை. அது உங்களது கோழைத்தனத்துக்குச் சரியாகப் பொருந்திவரும். உங்களது வங்கிக் கணக்கு இருப்பு வளர்ந்து கொண்டே வரும்போது நீங்கள் வளர்ச்சியடைவதாக நம்புகிறீர்கள். நீங்கள் கௌரவமானவர்களாகக் கருதப்

படுகிறீர்கள். உங்களது பெயரும், புகழும் வளர்ந்து கொண்டே போகும்போது நீங்களே வளருவதாக நினைக்கிறீர்கள். நீங்கள் உங்களையே ஏமாற்றிக் கொள்கிறீர்கள். உங்களது பெயர் என்பது நீங்கள் கிடையாது. உங்களது புகழும் நீங்கள் அல்ல. உங்களது வங்கிக் கணக்கின் இருப்பும் நீங்களாக முடியாது. உங்களைப் பற்றி நினைக்கத் தொடங்கும்போது நீங்கள் நடுங்கத் தொடங்குகிறீர்கள். ஏனெனில், நீங்கள் வளர்ச்சியடைய வேண்டுமெனில் உங்களது கோழைத்தனத்தை விட வேண்டும்.

எப்படிப் புதியவராக மாறுவது? நாம் புதியவராக மாற முடியாது. புதியது என்பதே புலப்படாத இடத்திலிருந்து வருகிறது. கடவுளிலிருந்து என்று வைத்துக் கொள்ளலாம். புதியது வாழ்க்கையிலிருந்து வருகிறது. மனம் எப்போதும் பழமையானது. மனம் எப்போதும் புதியதாக இருக்காது. பழையனவற்றின் தொகுப்புத்தான் மனம். புதியது புலப்படாத இடத்திலிருந்துதான் வருகிறது. அது கடவுளின் பரிசாகும். அது புலப்படாத இடத்திலிருந்து வருவது, புலப்படாத இடத்தைச் சேர்ந்தது. அறியாதவை, அறிய முடியாதவை, புலப்படாத இடத்திலிருப்பவை, எல்லாமே உங்களுக்குள் புகுந்துவிட்டன. அவை உங்களுக்குள் புகுந்ததன் காரணம் நீங்கள் உங்களைச் சரியாக மூடிக் கொள்ளாமல் இருந்ததுதான். நீங்கள் தீவுகளில்லை. நீங்கள் புலப்படாத இடத்திலிருப்பதை மறந்துவிட்டீர்கள். ஆனால் புலப்படாத இடத்தில் இருக்கும் சக்தி உங்களை மறக்கவில்லை. குழந்தை தாயை மறந்துவிட்டது. தாய் குழந்தையை மறக்கவில்லை. ஒரு பகுதி 'நான் தனி' என்று நினைக்கத் தொடங்கிவிட்டது. ஆனால், முழுமை நீ தனியானவன் அல்ல என்பதை உணர்ந்துள்ளது. முழுமை உங்களுக்குள் இடம் பிடித்துள்ளது. அது உங்களுடன் இன்னமும் தொடர்பு வைத்துள்ளது. அதனால்தான் புதுமை எப்போதும் வந்த வண்ணம் உள்ளது. நீங்கள் அதனை வர

வேற்கவில்லை எனினும்கூட அது ஒவ்வொரு காலையிலும் வருகின்றது. ஒவ்வொரு மாலையிலும் வருகின்றது. அது ஆயிரத்தொரு வழிகளில் வருகிறது. உங்களுக்குப் பார்க்கக் கண்கள் இருந்து பார்க்க முடிந்தால் அவை தொடர்ச்சி யாக வந்துகொண்டே இருக்கும்.

வாழ்க்கை என்பது உங்களின் மீது பொழிந்து கொண்டே இருக்கிறது. ஆனாலும்கூட உங்களின் கடந்த காலம் உங்களை உறைக்குள் வைத்திருக்கிறது. நீங்கள் ஏற்கெனவே ஒரு கல்லறையில்தான் இருக்கிறீர்கள். உங்களது கோழைத்தனத்தினால் நீங்கள் உணர்ச்சியற்றுப் போய்விட்டீர்கள். உணர்ச்சியோடு இருப்பதற்கான அடையாளம் புதியனவற்றை உணர்வது. அதில் உள்ள சாகசத்தினை அனுபவிப்பது. புதியதில் பெருவிருப்பம் கொள்வது சாகசங்களை உருவாக்கும். அதன்பின் நீங்கள் புதியதற்குள் நுழைகிறீர்கள் என்பது தெரியாமலேயே புதியதற்குள் நுழைவீர்கள்.

மனம் அதனைப் பைத்தியக்காரத்தனமானதாகக் கருதுகிறது. மனம் அவற்றை, 'பழையனவற்றை விட்டு விடுதல் நியாயமானதாகாது' என்று நினைக்கிறது. ஆனால் இறைமை எப்போதும் புதிதானது. அதனால்தான் கடவு ளைக் குறிப்பிடும்போது கடந்த காலத்திலோ, எதிர்காலத் திலோ, குறிப்பிடப்படுவதில்லை. நாம் 'கடவுள் இருந்தார்' என்றோ, 'கடவுள் இருப்பார்' என்றோ சொல்ல முடிய வில்லை. நாம் நிகழ்காலத்தில் மட்டுமே 'கடவுள் இருக் கிறார்' என்று சொல்கிறோம். 'கடவுள் இருக்கிறார்'- இது எவ்வளவு புதியதாக, கன்னித்தன்மை வாய்ந்ததாக உள்ளது. அது உங்களுக்குள் உறைந்திருக்கிறது.

நினைவில் கொள்ளுங்கள். புதியதாக உங்கள் வாழ்க்கை யில் எது வந்தாலும் அது கடவுளிடமிருந்து வந்ததாகத்தான் இருக்கும். அதை நீங்கள் ஒப்புக்கொண்டால் நீங்கள் ஆன்

மிகமானவர்களாக ஆவீர்கள். அதை நீங்கள் ஒப்புக் கொள்ளவில்லையெனில் நீங்கள் ஆன்மிகமற்றவர்களாவீர் கள். புதியதை ஒப்புக்கொள்ள மனிதன் இன்னும் சிறிது தளர்வாக, ஓய்வாக இருக்க வேண்டும். புதியனவற்றை உள்ளேவிட, கதவைத் திறக்க, சிறிது நேரம் எடுத்துக் கொள் கிறான். தெய்விகமானவை உங்களுக்குள் நுழைவதற்கு வழி விடுங்கள்.

அதுவே பிரார்த்தனையின் அல்லது தியானத்தின் முழு அர்த்தமாகும். நீங்கள் திறந்துவிடுங்கள். சரி என்று சொல்லுங்கள். 'உள்ளே வரவும்' என்று சொல்லுங்கள். 'நான் உனக்காகக் காத்திருந்தேன், காத்திருந்தேன். கடைசியில் நீ வந்தாயே. மிக்க நன்றி' என்று சொல்லுங்கள். எப்போதுமே புதியனவற்றுக்கு மகிழ்ச்சியோடு வரவேற்புக் கொடுங்கள். சில நேரங்களில் புதியனவாக இருப்பவை உங்களுக்கு வசதியின்மையைக் கொடுக்கலாம். ஆனாலும் வரவேற்புக் கொடுங்கள். சில நேரங்களில் புதியன உங்களை ஒரு பள்ளத்தில் கொண்டு போய் விடலாம். ஆனாலும் அவை நல்லவைதாம். காரணம், சிரமங்கள் தாம் உங்களை வளர்க்கின்றன. தவறுகளின் மூலம்தான் நீங்கள் கற்றுக் கொள்கிறீர்கள். புதியன உங்களுக்குச் சிரமங்களைக் கொண்டு வரலாம். அதனால்தான் நீங்கள் பழையனவற்றையே தேர்ந்தெடுக்கிறீர்கள். பழையன எந்த கஷ்டங்களையும் கொண்டு வராது. அது ஓர் ஆறுதல். அது ஓர் அடைக்கலம்.

புதியனவாக இருப்பனவற்றை ஆழமாக, முற்றிலுமாக ஒப்புக் கொண்டோமேயானால், அது உங்களை மாற்றும் தன்மையுடையது. நீங்கள் புதுமையை உங்களது வாழ்க்கையில் கொண்டு வர முடியாது. அவை தாமே உங்களிடம் வந்து சேரும். நீங்கள் அதை ஒப்புக் கொள்ளலாம் அல்லது மறுதலிக்கலாம். அதனை நீங்கள்

மறுப்பீர்களேயானால் நீங்கள் கல்லைப் போன்று, மூடியபடி இறந்து போனாற்போலக் கிடக்க வேண்டியது தான். அவற்றைப் பெற்றுக்கொண்டால் நீங்கள் ஒரு மலரைப் போல, திறந்து கொள்ள ஆரம்பிப்பீர்கள். அப்படித் திறப்பதுதான் ஒரு விழாவாகும்.

புதியன வருவதால் மட்டுமே மாற்றம் நிகழும். மாற்றம் கொண்டுவருவதற்கு வேறு வழியே இல்லை. ஆனால் நினைவில் கொள்ளுங்கள். அதற்கும், உங்களுக்கும், உங்களது முயற்சிகளுக்கும் எந்த விதத்திலும் தொடர்பு இல்லை. ஆனால், எதுவுமே செய்யாமலிருப்பது என்பது. செயலில்லாமல் இருப்பது என்று பொருளல்ல. அது உங்களின் கடந்த காலத்திலிருந்தோ, விருப்பமில்லாமலோ, அல்லது இயக்குதல் இல்லாமலோ செய்வதாகத்தான் அர்த்தம். புதியதைத் தேடுவது என்பது சாதாரணத் தேடுதலாக இருக்க முடியாது. ஏனெனில், அது புதியதைத் தேடுவது என்பதாகும். எப்படி நீங்கள் அதைத் தேட முடியும்? உங்களுக்குத் தெரியாது. நீங்கள் சந்தித்திருக்க மாட்டீர்கள். புதியதைத் தேடுவது என்பது வெளிப்படை யான சோதனையாகும். ஒருவருக்கும் தெரியாது. ஒருவர் தனக்கு ஒன்றுமே தெரியாத நிலையில்தான் இதைத் துவங்க நேரிடும். ஒருவர் குழந்தையைப் போலக் களங்கமில்லாமல் நகர வேண்டியிருக்கும். சாத்தியக்கூறுகள் இதில் அதிகம். அதைப் பார்த்து நீங்களே பிரமிப்படைவீர்கள்.

நீங்கள் புதியதை உருவாக்க எதுவுமே செய்ய முடியாது. ஏனெனில், நீங்கள் என்ன செய்தாலும் அவை பழையன வாகவே இருக்கும், பழையனவற்றிலிருந்துதான் இருக்கும். நீங்கள் எதுவும் செய்யாமலிருக்க வேண்டும் என்று அர்த்தமல்ல. நீங்கள் உங்களது கடந்த காலத்திய உணர்ச்சி வேகங்கள் இல்லாமல், அப்போதைய இயக்கங்கள் இல்லா மல், செலுத்துதல்கள் இல்லாமல் இயங்க வேண்டும்.

அதாவது மிதமாகச் செய்ய வேண்டும். அந்தக் கணத்தின் முடிவுப்படி செயல்படுங்கள். அந்தக் கணம் முடிவெடுப்ப தாக இருக்கட்டும்.

நீங்கள் உங்களது முடிவுகளைத் திணிக்காதீர்கள். ஏனெனில், உங்களது முடிவு கடந்த காலத்தின் அடிப்படை யில் அமைந்ததாக இருக்கும். அது புதியதை அழித்துவிடும். நீங்கள் அந்தந்தக் கணத்தில் ஒரு குழந்தையைப் போலச் செயல்படுங்கள். அந்தக் கணத்தில் முற்றிலுமாக ஒப்படைத்துவிட்டால், ஒவ்வொரு நாளும் புதிய கதவு திறக்கும். புதிய ஒளி புதிய உள்ளொளி பிறக்கும். அந்தப் புதிய உள்ளொளி உங்களை மாற்றிக்கொண்டேயிருக்கும். ஒருநாள், திடீரென்று நீங்கள் உங்களின் ஒவ்வொரு கணமும் புதிய கணமாக மாறியிருப்பதை உணர்வீர்கள். பழையன உங்களைத் தாமதப்படுத்தாது. பழையன மேகத் தைப் போன்று உங்களிடம் தொங்கிக்கொண்டிருக்காது. பனித்துளி போலப் புதியதாக, இளமையாக இருப்பீர்கள்.

நினைவில் கொள்ளுங்கள். ஒரு புத்தர் ஒவ்வொரு கணமும் வாழ்கிறார். அது கடலில் அலை புதிது புதிதாக எழும்புமே, கம்பீரமான அலை, அது போல! மிகுந்த மகிழ்ச்சியுடனும், நடனமாடிய படியும், நம்பிக்கையுடனும், கனவுகளுடனும், நட்சத்திரத்தைத் தொடுவதுபோல அது வரும். அதன்பின் ஒரு கணத்துக்கு விளையாட்டு. உடனே அந்த அலை மறைந்துவிடும். அது மறுபடி வரும். அதற்கு மற்றுமொரு நாள். அது மறுபடியும் நடனமாடியபடி வரும். மறுபடியும் மறைந்துவிடும். அதே போலத்தான் கடவுளும் வருவார்... மறைந்துவிடுவார்... மறுபடியும் வருவார்... மறைந்துவிடுவார். அதே போலத்தான் புத்தரது உணர்வும். ஒவ்வொரு கணம் வரும்போதும் செயல்படும், மறைந்து விடும், மறுபடியும் வரும், போகும். அது ஓர் அணுவுக் கொப்பானது.

இரண்டு கணங்களுக்கிடையே உள்ள இடைவெளியில் புத்தர் மறைந்துவிடுவார். நான் ஒரு வார்த்தை சொல்கிறேன். பின் மறைந்துவிடுகிறேன். அதன்பின் நான் இன்னொரு வார்த்தை சொல்கிறேன். நான் அப்போது அங்கிருக்கிறேன். மறுபடியும் மறைந்து விடுகிறேன். நான் உங்களுக்குப் பதில் செயல்பட்டவுடன் நான் அங்கில்லாமல் போய்விடுகிறேன். இந்த இடைவேளைகளில், அந்த ஏதுமற்ற நேரங்கள்தாம் ஒருவர் தன்னைப் புதுப்பித்துக் கொள்ள உதவுகிறது. ஏனெனில், மரணம்தான் உங்களை முழுமையாக உயிரோடு வைத்திருக்கிறது.

நீங்கள் ஒரு முறை எழுபது ஆண்டுகளுக்குப் பின்னர் இறக்கிறீர்கள் எனில், நீங்கள் எழுபது வருடத்துக் குப்பைகளைச் சேர்த்து வைத்திருக்கிறீர்கள் என்று பொருள். ஒரு புத்தர் ஒவ்வொரு கணமும் இறக்கிறார். அவரிடம் குப்பைகளோ அல்லது வேறெதுவோ சேர்த்து வைத்துக் கொள்வதில்லை. அதனால்தான் புத்தர் வேறொரு நாள் அடையாளங்களை வைத்திருத்தல் என்பது வஞ்சகமாகும் என்று சொன்னார். ஏனெனில், வைத்திருப்பது என்பது பழமை ஆகும். எதையும் சேர்த்து வைத்திருக்காமல் இருத்தல் என்பது புத்தரின் குணமாகும்.

இதை நினைத்துப் பாருங்கள். ஒவ்வொரு கணமும் புதியதாக எழும் சுவாசக் காற்றைப் போல, நீங்கள் மூச்சை உள்ளே இழுக்கிறீர்கள். நீங்கள் மூச்சை வெளியே விடுகிறீர்கள். மறுபடியும் உள்ளே இழுக்கிறீர்கள். வெளியே விடுகிறீர்கள். ஒவ்வொரு முறை உள்ளே இழுக்கும் சுவாசமும் வாழ்க்கையைக் குறிக்கிறது. ஒவ்வொரு வெளிச் சுவாசமும் இறப்பாகும். ஒவ்வொரு கணமும் பிறத்தலும், இறத்தலுமாக இருக்கட்டும். அதன்பின் நீங்கள் புதியவராக இருப்பீர்கள்.

ஆனால், இந்தப் புதியவை உங்களது கடந்தகாலத்துக்கு ஒன்றும் செய்யப்போவதில்லை. உங்கள் விருப்பம், உங்கள் திசை, உங்களது உணர்ச்சி வேகம், அந்தக் கணத்தில் செயல்படுவதாக இருக்கும். அது பதில்தானே தவிர பதிலுக்குச் செய்தல் என்பதாகாது. பழையதிலிருந்து செய்யும் எல்லாமே பழையதாகத்தானிருக்கும். அதனால் தானே செய்தால் ஒருவரால் புதியதைச் செய்யவே முடியாது. இதைப் பார்க்கும்போது பழையதிலிருந்து, நீங்களே, கடந்த காலத்தியதாகத்தான் செய்ய முடியும். அவ்வளவுதான் செய்ய முடியும். ஆனால் எல்லாமே அவ்வளவுதான். பழையது முடியும்போது புதியது அதனைப் பின்பற்றி வரும். அல்லது வராது. அதைப் பற்றிக் கவலைப்படக்கூடாது. புதியதை விரும்புவது என்பதே பழையதை விரும்புவதுதான். அப்போதுதான் ஒருவர் திறந்த மனிதராகிறார். புதியது வேண்டும் என்று கேட்பதே கூடப் பழையனவற்றை விரும்புவதுதான்.

ஒரு புத்தர் எதையும் புதியதாகக் கேட்பதே கிடையாது. அவருக்கு எதன் மீதும் ஆசை கிடையாது. 'இதைப் போன்று இருக்க வேண்டும்' என்பதே கிடையாது. உங்களுக்கு ஆசை இருந்தால் நீங்கள் அதற்கேற்றாற்போல் செயல்படுவீர்கள். நீங்கள் உங்களையே அதில் ஈடுபடுத்திக்கொள்வீர்கள். வாழ்க்கையை ஆசையற்றுப் பாருங்கள். வாழ்க்கையை எந்தவித நிர்ப்பந்தங்களும் இன்றிப் பாருங்கள். வாழ்க்கை எப்படி இருக்கிறதோ அப்படியே பாருங்கள். 'யதா புதம்'– அப்போது நீங்கள் தொடர்ச்சியாகப் புதுப்பிக்கப்படுவீர்கள். இளமையாக உணர்வீர்கள்.

மீண்டு வருதல் என்பதற்கான சரியான பொருள் இதுவே. இதை நீங்கள் புரிந்துகொண்டால் நீங்கள் உங் களின் நினைவுகளிலிருந்து, மனோதத்துவ நினைவுகளி லிருந்து விடுபடலாம். ஞாபகம் என்பதே இறந்து போன

ஒன்று. ஞாபகம் என்பதே உண்மை கிடையாது. உண்மையாக இருக்க முடியாது. ஏனெனில் உண்மை என்பது வாழ்ந்துகொண்டிருப்பது. வாழ்வே உண்மை யானது. ஞாபகம் என்பது இப்போது இல்லாமலிருப்பதைப் பற்றி இருப்பதாக நினைப்பது. அது ஆவி உலகம். ஆனால் அது நம்மைச் சேர்ந்திருக்கிறது. அது நமக்குச் சிறை. உண்மையில் அதுவே நாம். ஞாபகம் ஒரு முடிச்சைப் போட்டுவிடுகிறது. 'நான்' என்ற முடிச்சை. அகந்தை என்ற முடிச்சை. இயற்கையாகவே இந்த 'நான்' மரணத்தைக் கண்டு தொடர்ந்து பயப்படுகிறது. அதனால்தான் நீங்கள் புதியதைக் கண்டு பயப்படுகிறீர்கள்.

இந்த 'நான்' தான் பயப்படுகிறது. நீங்கள் இல்லை. உங்களுக்கு அச்சமே கிடையாது. ஆனால் அந்த அகந்தை தான் பயப்படுகிறது. அதற்கு மரணத்தைக் கண்டாலே எப்போதும் பயம்தான். அது மேலோட்டமானது. அது போலியானது. அது தற்காலிகமானது. அது ஒன்றாக அமைக்கப்பட்டுள்ளது. அது எப்போது வேண்டுமானாலும் தனித்தனியாகப் பிரிந்து விடும்.

புதியது உள்ளே புகும்போது பயம் ஏற்படுகிறது. அகந்தை அச்சப்படுகிறது. அது தனியாகப் பிரிந்துவிடும். அது எப்படியோ தன்னை ஒன்றாக இணைத்துக் காட்டிக் கொள்கிறது. அப்போது புதியது வருகிறது. அது தூள் தூளாகப் போகிறது. அதனால்தான் நீங்கள் புதியதை மனமகிழ்ச்சியுடன் வரவேற்பதில்லை. அகந்தையினால் தனது மரணத்தினை சந்தோஷத்துடன் ஒப்புக்கொள்வ தில்லை. அதனால் எப்படித் தன்னுடைய மரணத்தினை சந்தோஷமாக ஒப்புக்கொள்ள முடியும்?

நீங்கள் அகந்தை இல்லை என்று புரிந்துகொண்டு ஒப்புக்கொண்டால் அன்றி, உங்களால் புதியதை வரவேற்க முடியாது. ஒரே ஒருமுறை, 'உங்களது கர்வம்' உங்களது

கடந்தகாலம்தான், வேறில்லை என்றும், நீங்கள் உங்களது ஞாபகமில்லை என்றும் புரிந்துகொண்டால் போதும். உங்களது நினைவுகள் என்பவையே உயிரற்ற கணினியாகும். அது ஓர் இயந்திரம். ஓர் இயந்திர யுக்தி. பயன்படுத்தக்கூடியது. ஆனால், நீங்கள் இதற்கப்பால் இருக்கிறீர்கள். நீங்கள்தான் பிரக்ஞை. உங்களது நினைவுகள் அல்ல. பிரக்ஞையில் நினைவு என்பது கலந்துள்ளது. ஆனால் நீங்கள் பிரக்ஞையே!

எடுத்துக்காட்டாக, நீங்கள் சாலையில் யாரோ நடந்து போவதைப் பார்க்கிறீர்கள். உங்களுக்கு அவர்களது முகம் நினைவிருக்கிறது. ஆனால் பெயர் நினைவில் இல்லை. நீங்கள்தான் ஞாபகம் என்றால் இரண்டுமே நினைவில் இருந்திருக்க வேண்டும். ஆனால் நீங்கள் 'நான் முகத்தை நினைவில் வைத்துள்ளேன். ஆனால் பெயர் நினைவில் இல்லை' என்றுதானே சொல்கிறீர்கள். அதன்பின் உங்களது நினைவுக்குள் செல்லத் துவங்குகிறீர்கள். இந்தப் பக்கமும் அந்தப் பக்கமும் பார்க்கிறீர்கள். கடைசியில் திடீரென்று பெயர் பளிச்சிடுகிறது. 'ஆமாம். இதுதான் அவரது பெயர்' என்கிறீர்கள். ஞாபகம் என்பது குறிப்பேடு. நீங்கள் அந்தக் குறிப்பேடுகளில் பார்க்கிறவர். நீங்களே ஞாபகம் என்பதாகக் கருதக் கூடாது.

இது நிறையத் தடவைகள், நீங்கள் மிகுந்த பதற்றத்துடன் இருக்கும்போது நிகழ்கிறது. அப்போதெல்லாம் நீங்கள் எதையாவது நினைவுபடுத்திக் கொள்ளும்போது, நினைவுக்குக் கொண்டு வருவது கடினமாக இருக்கிறது. ஏனெனில் உங்களின் மீது ஏற்படும் பதற்றம், மிகுந்த அழுத்தம், உங்களின் நினைவுகளிலிருந்து செய்திகளைக் கொண்டு வர விடாமல் தடுக்கிறது. நீங்கள் யாருடைய பெயரையாவது கொண்டு வர முயலும்போது அது வர மறுக்கிறது. அது உங்களது நாக்குக்கு அருகிலேயே

இருப்பதாகச் சொல்கிறீர்கள். உங்களுக்குத் தெரியும் என்பது உங்களுக்குத் தெரியும். இருந்தும்கூட வருவதில்லை.

இது மிகவும் விந்தையாக இருக்கிறது. நீங்கள்தாம் உங்களது நினைவுகள் என்றால் அதன் பின் உங்களை யார் தடுப்பது? அது எப்படி வரவில்லை? "எனக்குத் தெரியும். ஆனாலும் அது வரமாட்டேன் என்கிறது" என்று சொல்வது யார்? அதன்பின் நீங்கள் கடினமாக முயற்சி செய்கிறீர்கள். மிகக் கடினமாக முயற்சி செய்யச் செய்ய மேலும் கடினமாகிறது. அதன்பின் சோர்வடைந்துபோய் அதனை விட்டுவிட்டு ஒரு தோட்டத்துக்குச் சென்று நடந்துகொண்டிருக்கும்போது ஒரு ரோஜாச் செடியைப் பார்த்துக் கொண்டிருக்கையில் அது திடீரென்று மேலுக்கு வருகிறது.

உங்களது நினைவுகள் என்பது நீங்கள் இல்லை. நீங்கள் பிரக்ஞை. நினைவு என்பது தற்காலிகமானது. ஆனால் நினைவு என்பதுதான் உங்களது அகந்தைக்கு வாழ்க்கைச் சக்தி அளிப்பதே. நினைவு என்பது, பழமையானதுதான். அதற்குப் புதுமையிடம் பயம்தான். புதுமை என்பது இடைஞ்சல் தரக்கூடியதுதான். புதுமை என்பது உங்களால் ஜீரணிக்க முடியாமல் இருப்பதுதான். புதுமை என்பது உங்களுக்குச் சிரமத்தைக் கொண்டுவருவதுதான். உங்களை மாற்றிக்கொண்டும், திரும்ப மாற்றிக் கொண்டும் இருக்க வேண்டியிருக்கும். நீங்கள் உங்களைச் சூழ்நிலைக்கேற்ப மாற்றிக்கொண்டே இருக்க வேண்டும். அது மிகவும் சிரமமான செயல்தான்.

ஒருவன் புதியவன் ஆக வேண்டுமெனில் தனது அகந்தையிலிருந்து அடையாளத்தை இழக்க வேண்டும். ஒரு முறை நீங்கள் உங்களது அகந்தையிலிருந்து விடுதலை பெற்றுவிட்டீர்களெனில் அதன்பின் அது உயிர் வாழ்கிறதா அல்லது இறந்துவிட்டதா என்பதைப் பற்றிக் கவலைப்படத்

தேவையில்லை. அது இறந்துவிட்டது. அது ஓர் இயந்திரத் தன்மை. நீங்கள் அதனைப் பயன்படுத்துங்கள். ஆனால் அதனால் பயன்படுத்தப்படாமலிருங்கள். அகந்தை தொடர்ச்சியாக மரணத்தைக் கண்டு பயந்துகொண்டிருப்ப தற்குக் காரணம் அது தற்காலிகமானது. அதனால்தான் அச்சம். அது இருப்பிலிருந்து உருவாகவில்லை. அது இருப்பி லிருந்து உருவாக முடியாது. ஏனெனில் உயிர் என்பது வாழ்க்கை எப்படி இறப்பைப் பார்த்துப் பயப்படும்? வாழ்க்கைக்கு இறப்பைப் பற்றி ஒன்றுமே தெரியாது.

அது மனம்போன போக்கில் உருவாவது. போலியானது. அது எப்படியோ ஒன்றாகச் சேர்ந்துள்ளது. பொய்யானது. ஆனாலும் கூட... ஆனாலும் கூட... அது போகவிடப் பட்டுள்ளது. இறப்பு எப்படி மனிதனை வாழ வைத்துள் ளதோ, அகந்தையில் இறப்பது என்பது புதியவனாய்ப் பிறப்பது என்பதாகப் பொருள். பரிசுத்தத்தில் பிறப்பதாகும்.

புதியது என்பது வாழ்க்கையின் தூதுவன். புதியது என்பதுவே செய்தியாகும். வாழ்க்கையிலிருந்து பெறும் நற்செய்தி! புதியதைக் கவனியுங்கள். புதியதுடன் செல்லுங் கள். எனக்குத் தெரியும் நீங்கள் பயப்படுவீர்கள் என்று. பயமிருந்தாலும் அவற்றுடன் செல்லுங்கள். உங்களது வாழ்க்கை மேன்மேலும் வளமாகும். ஒருநாள் சிறை வைக்கப்பட்ட பிரகாசத்தை, ஒளியை உங்களால் விடுவிக்க முடியும்.

> எனது அன்பான ஓஷோ,
> வாழ்க்கை பூரணமானது என்று நீங்கள்
> சொல்வதற்கு என்ன அர்த்தம்?

நான் அதைத்தான் சொல்கிறேன். வாழ்க்கை பூரணமானது. ஆனால், இந்தக் கேள்வி ஏன் எழுந்தது என்பது எனக்குப் புரிகின்றது. இந்தக் கேள்வி எழுந்ததன் காரணம் நீங்கள் பூரணத்துவத்தைப் பற்றி ஒரு கருத்து

வைத்திருக்கிறீர்கள். அக்கருத்து வாழ்க்கைக்குப் பொருத்த மில்லாமல் இருந்திருக்க வேண்டும். அதனால் வாழ்க்கை பூரணமில்லாதது என்று சொல்கிறீர்கள்.

நான் வாழ்க்கை பூரணமானது என்று சொல்லும்போது நான் பூரணத்துவத்தைப் பற்றி ஒரு கருத்து வைத்துக் கொண்டு அதனோடு வாழ்க்கை பொருந்துகிறது என்பதாக அர்த்தம் கொள்ள வேண்டாம். எனக்கு அதைப் பற்றிக் கருத்தே இல்லை. நான் வாழ்க்கை பூரணத்துவமானது எனும்போது வாழ்க்கையோடு எதனையும் ஒப்பிட்டுப் பார்க்க இயலாது. இலட்சியம் என்பதாக எதுவும் கிடையாது என்று சொல்கிறேன். இதுதான் அனைத்தும். அது பூரணமானதாகத்தான் இருக்கும். நீங்கள் ஒப்பிட்டுப் பார்க்கிறீர்கள். என்னுடைய பூரணமானது என்பது ஒரு நடப்பைப் பற்றிச் சொல்வது மட்டுமே. ஒப்பிடுவது இல்லை. நீங்கள் ஒப்பிட்ட பின், சொல்கிறீர்கள்: "ஆமாம். இதுவே பூரணத்துவமானது. இது பூரணத்துவமற்றது" என்று. உங்களுக்கென்று பூரணத்துவத்தைப் பற்றி ஓர் அளவு, குறியீடு வைத்திருக்கிறீர்கள்.

ஓர் வயதான சூஃபி குரு சில பேரிடம் சிற்றுண்டிச் சாலையில் பேசிக்கொண்டிருந்தார். அப்போது அவர் சொன்னார்: "வாழ்க்கை என்பது பூரணத்துவமானது. எல்லாமே சரியாகத்தான் இருக்கிறார்கள். எல்லோருமே பூரணத்துவமானவர்கள்."

ஒரு கூனல் முதுகு விழுந்தவன் அதைக் கவனித்துக் கொண்டிருந்தான். அவன் சொன்னான்: "என்னைப் பாருங்கள், வாழ்க்கை பூரணத்துவமில்லாதது என்பதற்கு நானே உதாரணம். என்னைப் பாருங்கள், வாழ்க்கை பூரணத்துவமற்றது என்பதற்கு இதுவே போதுமான நிரூபணம். என்னைப் பாருங்கள், எவ்வளவு குரூபியாக

இருக்கிறேன். எவ்வளவு சிரமங்களுக்கு இடையில் நான் கூனல் முதுகோடு இருக்கிறேன்."

சூஃபி அவனைப் பார்த்துவிட்டுச் சொன்னார்: "ஆனாலும் நான் பார்த்ததிலேயே பூரணத்துவமாக அமைந்த கூனல் முதுகு உனக்குத்தான் இருக்கிறது." பூரணத்துவமான கூனல் முதுகு...

ஒருமுறை வாழ்க்கையை அப்படியே பார்க்கத் துவங்கிவிட்டீர்கள் என்றால், உங்களுக்கு அது எப்படி இருக்க வேண்டும் என்பது இல்லாமல்போய் எல்லாமே பூரணமானதாகத் தோன்றும். வாழ்க்கை பூரணமானது என்று நான் சொல்லும் போது அது மிகவும் எளிமையான ஒரு வார்த்தை. உங்களது இலட்சியத்தையெல்லாம் கொண்டுவராதீர்கள் என்று சொல்கிறேன். இல்லாவிடில் வாழ்க்கையை நீங்கள் பூரணத்துவமற்றதாக்கி விடுவீர்கள். ஏனெனில் உங்களது இலட்சியத்தை ஒரு முறை கொண்டு வந்துவிட்டால் அதன்பின் பூரணத்துவமில்லாததை உருவாக்கிவிட்டீர்கள் என்று அர்த்தம். மனிதன் ஏழடி உயரம் இருக்க வேண்டும் என்று சொன்னீர்களேயானால், அப்படி இல்லையெனில் அது சிரமமானதாகி விடும். அல்லது மனிதன் நான்கடி உயரம் இருக்கவேண்டும் என்று கருத்து வைத்திருந்தால் அப்படி இல்லையென்றால் அதுவும் கஷ்டம்தான். வாழ்க்கை எளிதானது. சில பேர் ஏழடி உயரம் இருக்கிறார்கள். சில பேர் நான்கு அடி உயரம் இருக்கிறார்கள். ஒரு மரம் மேகத்தை முட்டும் அளவுக்கு வளர்கிறது. ஒரு மரம் சிறியதாகவே நின்று விடுகிறது. எல்லாமே பூரணமாகத்தான் இருக்கின்றன. எல்லாம் எப்படி இருக்க வேண்டுமோ அப்படியே இருக்கின்றன. ஏனெனில், 'இப்படித்தான்' என்பது என் மனத்தில் கிடையாது. நான் வாழ்க்கையை எளிமையாக அப்படியே கவனிக்கிறேன். எனக்கு இப்படித்தான் இருக்க

வேண்டும் என்பதான கருத்து எதுவும் கிடையாது. அதனால்தான் எப்படி இருக்க வேண்டுமோ அப்படி இருக்கிறது என்று சொல்கிறேன். வேறு வாழ்க்கை என்பதே இல்லை.

செய்தி இதுதான்: ஒப்பிட்டுப் பார்ப்பதை விட்டு விடுங்கள். தீர்ப்புக் கூறுவதை விட்டுவிடுங்கள். அப்படி இல்லை எனில், நீங்கள் பரிதாபமாகப் போக வேண்டியது தான். காரணம், உங்களது ஒப்பிட்டுப் பார்த்தலும், தீர்மானம் செய்தலும்தான். வாழ்க்கையைத் தீர்மானங்கள் எதுவுமின்றிப் பாருங்கள். நீங்கள் யார் தீர்மானிப்பதற்கு? உங்களுக்கு வாழ்க்கையைப் பற்றி என்ன தெரியும்? உங்களைப் பற்றியேகூட உங்களுக்கு என்ன தெரியும்? தீர்மானிப்பதற்கு நீங்கள் யார்? தீர்மானம் என்பதே உங்களுக்குத் தெரியும் என்ற எண்ணத்தின் அடிப்படையில் எழுந்ததுதான். தீர்மானம் என்பது அறிந்திருத்தல்.

வாழ்க்கையைத் தெரியாத நிலையில் இருந்துகொண்டு பாருங்கள். தெரியாத நிலையின் மூலம் வாழ்க்கையை பாருங்கள். வாழ்க்கையை ஆச்சரியத்தோடு பாருங்கள். திடீரென்று எல்லாம் பூரணமாகத் தெரியும். ஆமாம். சில நேரங்களில் மேகமூட்டமாக இருக்கிறது. சில நேரங்களில் பூரணமாக இருக்கிறது. சில நேரங்களில் வெயிலடித்துக் கொண்டிருக்கிறது. பூரணமாக இருக்கிறது. சில நேரங்களில் மழையடித்துக் கொண்டிருக்கிறது. சில நேரங்களில் மழை பெய்யாமல் இருக்கிறது. பூரணத்துவமாகவும் இருக்கிறது. அப்படியே பார்க்கும்போது இது ஓர் ஆசீர்வாதம்தான். இந்த ஆசீர்வாதத்துக்கு உகந்ததாக இருப்பதே பிரார்த்தனை யோடு இருப்பதாகும்.

**எனது அன்பான ஓஷோ,**
**நீங்கள் மக்களைப் பற்றிப் பேசுகையில் சில நேரங்களில் மக்கள் தவற விட்டுவிட்டார்கள்**

**என்கிறீர்கள். அது ஓர் இலட்சியம் இருப்பதாகவும், அதனைத் தவற விடலாம் அல்லது அடையலாம் என்பது போலவும் தொனிக்கிறதே. ஆனால் மறுபடியும் நீங்களே இலக்கு என்பதே இல்லை. எல்லாமே அப்படி அப்படியே இருக்கிறது என்றும் சொல்கிறீர்கள். அப்போது நான் எப்படி இழக்க முடியும்?**

தினேஷ், நீ மறுபடியும் தவற விட்டுவிட்டாய். எப்படி என்று கேட்ட மாத்திரத்திலேயே தவற விட்டுவிட்டாய். அதில் ஒரு விஷயம் இருக்கிறது. உணரப்படக் கூடாது. ஆனால் அடையாளம் காணப்பட வேண்டும். 'எவ்விதம்' என்பதே கிடையாது. காரணம், அது ஏற்கெனவே உள்ளது. நீ அதைப் பார்க்க வேண்டும். நீ மௌனமாக இருக்கும் சமயங்களில் காண முடியும். காண வேண்டும். அப்போது தான் உன்னால் பார்க்க முடியும். நீ எதுவும் செய்யாது அந்தக் கணத்திலேயே இருக்க வேண்டும். எங்கும் செல்லா மல், எதையும் சீர்திருத்துவதற்கு முயலாமல் ஓய்வாக, அந்த மௌனத்தில், அந்த ஓய்வில் இருக்கும்போது அது அங்கே இருக்கும். அது ஓர் அங்கீகாரம். முற்றிலுமாக அறிந்து கொள்ளுதல் அல்ல. அங்கீகாரம். ஏனெனில் உங்களது ஆழ்மனத்தில் நீங்கள் ஏற்கெனவே அதுவாக இருக்கிறீர்கள். எப்போதுமே அதுவாகத்தான் இருந்து வந்துள்ளீர்கள்.

எவ்விதம் என்று கேட்டால், மறுபடியும் நீ இழந்து விட்டாய். ஏனெனில், எவ்விதம் எனும்போது அதற்கு ஏதாவது செய்ய வேண்டும் என்பதாகிறது. எந்த முறைகளும் தேவையில்லை. எந்த வழியும் தேவையில்லை. எந்தச் செயல்முறையும் தேவையில்லை. எல்லாச் செயல்முறைக ளும், எல்லா வழிகளும், எல்லா முறைகளும் கைவிடப்பட வேண்டும். நீ மௌனமான நிலையில் இருக்க வேண்டும். இருந்தால், உன்னால் உனக்குள் ஒரு சிறிய குரலைக் கேட்க

முடியும். அது எப்போதும் அங்கேயேதான் இருக்கிறது. ஆனால், நீ உனது விருப்பங்களுடன் சப்தமாக இருக்கவே, உன்னால் உனது சங்கீதத்தைக் கேட்க முடியவில்லை.

எப்படி என்று கேட்டு, இதுவரையில் எப்படி என்று கேட்டுச் சேகரித்த முறைகளையெல்லாம் விட்டுவிடு. ஒரு மௌனமான இடைவெளியில் வீழ்ந்துவிடு. அது ஒரு திறமை. ஆனால் ஒரு தொழில் நுட்பமன்று. காலைச் சூரியன் உதிப்பதை மௌனமாக அமர்ந்து பார்க்கிறாய். அங்கு என்ன செய்ய வேண்டியிருக்கிறது? வானத்தில் நிலவும் இருக்கிறது. புல்வெளியில் படுத்து அந்தச் சந்திரனுடன் இரு. வெண்மேகங்கள் வானில் தவழ்ந்து கொண்டிருக்கின்றன. அவற்றுடன் இரு. பறவைகள் சங்கீதம் இசைக்கின்றன. குழந்தைகள் விளையாடுகிறார்கள். அதற்கெல்லாம் நீ எதுவும் செய்வதில்லை.

செயலற்று இரு. உன்னுடைய செயலற்ற தன்மையில் கடவுள் வருவார். பெண்மைத் தன்மையோடு இரு. பெண்மைத் தன்மையோடு இருக்கும்போதுதான் கடவுள் வருவார். நீ கவனித்ததில்லையா? புத்தர் பெண்மைத் தன்மையோடுதான் இருப்பார். கிருஷ்ணரும் பெண்மைத் தன்மையோடுதான் இருப்பார். ஏன்? அது ஒரு வகை உருவகம். அவர்கள் பெண்மைத் தன்மையோடுதான் சித்திரிக்கப்பட்டிருக்கிறார்கள், கருணையுள்ளவர்களாகி அவர்களுடைய ஏற்றுக்கொள்ளும் உள்மனத் தன்மையை சித்திரிக்க வேண்டி!

நீ ஏதாவது செய்துகொண்டிருக்கும்போது நீ மிகவும் ஆக்கிரமிக்கும் மனோபாவத்துடன் இருக்கிறாய். நீ எதுவும் செய்யாமல் இருக்கும்போது ஆக்கிரமிக்கும் மனோபாவ மில்லாமல் இருக்கிறாய். எல்லையற்றதை வெற்றி பெற முடியாது. அது உன்னை வெற்றி பெறும்படி அனுமதிக்கத் தான் முடியும்.

**எனது அன்பான ஓஷோ,**
**குருவுக்கு மரியாதை செலுத்துதல் என்றால் என்ன? நாங்கள் எப்படி உங்களுக்கு மரியாதை செய்வது? உங்களுக்கு மரியாதை செய்யச் சடங்குகள் தேவையா? நாங்கள் உங்களுடன் தமாஷ் செய்யலாமா? சூஃபி நடனத்தில் நாங்கள் கேலியாகக்கூட ஏதாவது நினைத்துக் கொள்ளலாம் என்பதாகச் சொல்லப்பட்டதே. நான் நீங்கள் வாழைப்பழத் தோலில் வழுக்கி விழுவதாக நினைத்துக் கொண்டேன். அது உங்களை அவமானப்படுத்தியதாகுமா? அல்லது பரவாயில்லையா?**

அது நான் எனும்போது சரியானதே. ஆனால் வாழைப் பழத் தோலைப் பொருத்தவரைக்கும் தன்னை அவமானப் படுத்தியதாகத்தான் கருதும். நினைவில் கொள். வாழைப் பழங்கள், புத்தர்களில்லை. அவை உன்னை மன்னிக்காது.

எனது அன்பான ஓஷோ,
தியானம் என்பது உணர்ச்சி மிகுந்ததா?

ஆமாம். தியானம் புரிய அது ஒன்றுதான் வழி. உணர்ச்சிதான் சக்தி. உணர்ச்சிதான் நெருப்பு. உணர்ச்சி தான் வாழ்க்கை.

நீங்கள் உணர்ச்சியற்ற முறையில், தீவிரமாக இல்லாமல், நெருப்பில்லாமல், தியானம் செய்கிறீர்களென்றால், எதுவும் நிகழாது. நீங்கள் கடனே என்று தியானம் செய்தீர்கள் என்றால், உங்கள் மனத்தில் எழுந்துள்ளது அன்பு என்று சொல்ல முடியாது. அது அர்த்தமற்றது. அது அபத்தமானது. நீங்கள் உணர்ச்சியற்ற முறையில் தியானம் செய்தீர்கள் என்றால் உங்களுக்கும் கடவுளுக்கும் தொடர்பில்லை என்றாகிறது. உணர்ச்சிதான் பாலமாக,

தாகமாக, பசியாக இருக்க முடியும். உங்களுக்குத் தாகம் அதிகமாகும் போதுதான் சாத்தியமும் அதிகரிக்கிறது. உங்களுக்கு முழுவதும் தாகமாக இருக்கும்போது, நீங்களே தாகமாக மாறிவிடும்போதுதான், நீங்கள் முழுவதும் உணர்ச்சிமயமாக மாறும்போதுதான், அதன் பின்னர் தான், அந்தத் தீவிரத்தில்தான், அந்த நூறு டிகிரி கணத்தில் தான் ஏதோ ஒன்று நிகழ்கிறது.

மிதமான சூட்டில் இருக்காதீர்கள். மக்கள் மிதமான சூட்டில்தான் வாழ்கிறார்கள். அவர்கள் இதுவுமில்லாமல், அதுவுமில்லாமல், மத்தியதரமாக இருக்கிறார்கள். நீங்கள் மத்திய தரத்தைக் கடந்து செல்ல வேண்டுமென்றால் உணர்ச்சியான வாழ்க்கை வாழுங்கள். நீங்கள் என்ன செய் தாலும் உணர்ச்சியோடு செய்யுங்கள். நீங்கள் பாடினால் உணர்ச்சியோடு பாடுங்கள். நீங்கள் காதலித்தால் உணர்ச்சியோடு காதலியுங்கள். நீங்கள் வண்ணம் தீட்டினால் உணர்ச்சியோடு வண்ணம் தீட்டுங்கள். நீங்கள் பேசினால் உணர்ச்சியோடு பேசுங்கள். நீங்கள் கவனித்தால் உணர்ச்சியோடு கவனியுங்கள். நீங்கள் தியானம் செய்தால் உணர்ச்சியோடு தியானம் செய்யுங்கள்.

உணர்ச்சியோடு இருக்கும்போது எல்லா இடங்களி லிருந்தும், பரம்பொருளிடமிருந்தும் உங்களுக்குத் தொடர்பு கிடைக்க ஆரம்பிக்கும். நீங்கள் முழுமையான உணர்ச்சி யோடு வண்ணம் தீட்டும்போது வண்ணம் தீட்டல்தான் தியானம். மற்றொரு தியானத்துக்கு அவசியமேயில்லை. நீங்கள் முழுமையான உணர்ச்சியுடன் நடனம் ஆடினீர்கள் என்றால் நடனம் ஆடுபவர் மறைந்து போய் நடனம் மட்டுமே இருக்கும். அதுதான் தியானம். வேறு எதுவும் தேவையில்லை. வேறெங்கும் போகத் தேவை யில்லை. யோக முத்திரைகள் தேவையில்லை. அதுதான்

யோக நிலை. நடனமாடுபவர் மறைந்து போய் நடனம் மட்டுமே நிற்கிறதே, அதுவே சக்தி. சக்தி அதிர்வுகள்.

அந்த நிலையில்தான் நீங்கள் தொடர்பு கொள்கிறீர்கள். ஏன் அந்த நிலை? ஏனெனில், உணர்ச்சி அதிகமாக இருக்கும்போது அகந்தை இறக்கிறது. அகந்தை என்பதே மத்தியதர மனமுள்ளவர்களிடம்தான் இருக்கும். மத்தியதர மனமுள்ளவர்கள்தாம் அகந்தையுடன் இருக்க முடியும். உண்மையிலேயே மகத்தான மனிதர்களுக்கு அகந்தையே கிடையாது. அவர்களால் அப்படி இருக்க முடியாது. ஆனால் அவர்களுடைய வாழ்க்கை முழுவதும் வித்தியாச மான பரிமாணம் கொண்டது. வித்தியாசமான பரிமாணம் உணர்ச்சிப் பரிமாணம்.

நீங்கள் இந்த இரண்டு வார்த்தைகளைக் கவனித்திருக் கிறீர்களா? Passion and Compassion–அதீத உணர்ச்சி, கருணை. அதீத உணர்ச்சிதான் பின்னர்க் கருணையாக மாறுகிறது. உணர்ச்சியிலிருந்து ஒரேயடியாகத் தாவும் போது கருணைக்குச் செல்ல முடிகிறது. ஆனால் ஒரேயடியாகத் தாவுதல் எப்போது நிகழ்கின்றது என்றால், நூறு டிகிரி கொதிக்கும்போதுதான் தண்ணீர் ஆவியாகிறது. அதே அளவான சக்திதான் ஒருநாள் உணர்ச்சியிலிருந்து கருணைக்கு மாறுகிறது. கருணை என்பது உணர்ச்சிக்கு எதிரி கிடையாது. உணர்ச்சிதான் வயதுக்கு வருகிறது. உணர்ச்சிதான் மலருகிறது. உணர்ச்சியின் இளவேனிற் காலம்தான் கருணை. நான் உணர்ச்சியின் பக்கம்தான். நீங்கள் எதை வேண்டுமானாலும் செய்யுங்கள். அதிலேயே மூழ்கிவிடுங்கள். உங்களை அதிலேயே எரித்து விடுங்கள். அதிலேயே கரைத்து விடுவதுதான் ஒரே தீர்வு.

எனது அன்பான ஓஷோ,
இன்று காலை உங்களது சொற்பொழிவுக்குப்
பிறகு உங்கள் கால் அருகே அமர்ந்திருந்தேன்.

**அப்போது நீங்கள் அருவிகளைப் பற்றியும், மரங்களைப் பற்றியும், சந்தோஷத்தைப் பற்றியும் அழகான கதைகள் சொல்லிக் கொண்டிருந்தீர்கள். நீங்கள் புன்னகைத்தபடி இருந்தபோது அங்குச் சந்தோஷம் நிலவியது. ஆனாலும் நீங்கள் அந்த இடத்தை விட்டு அகலுவதற்குச் சில நிமிடங்களுக்கு முன்னால் என்னுடைய தலையில் ஒரு பெரிய கழியைக் கொண்டு அடித்தது போல் ஓர் உணர்வு ஏற்பட்டது. ஓஷோ, நீங்கள் எங்களுக்கு என்ன செய்கிறீர்கள்? நீங்கள் அழகிய கதைகளைச் சொல்கிறீர்களா? அல்லது பெரிய கழியால் தலையில் அடிக்கிறீர்களா? என்ன செய்கிறீர்கள்?**

சமதா, அந்தக் கதைகளெல்லாமே அடி விழுவதற்கு முன்னால் தயார் செய்வதற்காகத்தான், நான் இரண்டையும் செய்கிறேன். முதலில் நான் உங்களுக்கெல்லாம் கதை சொல்கிறேன். மரங்களைப் பற்றி, மலைகளைப் பற்றி, மேகங்களைப் பற்றிய அழகிய கதைகள், அந்தக் கரையைப் பற்றி அழகிய கதைகள், புத்த பிராயத்தைப் பற்றி, போதிசத்துவப் பிராயம் பற்றி அழகிய கதைகள் எல்லாம் சொல்கிறேன். அந்தக் கதைகளில் நீங்கள் கரைந்திருப்பதைப் பார்க்கும்போது நான் உங்களை அடிக்கிறேன். ஆனால் நீங்கள் கோபப்படமாட்டீர்கள். அந்தக் கதைகள் உங்களைத் தயார்ப்படுத்துவதற்காகத்தான். ஆனால், முதன்மையான வேலை உங்களை ஒரு சுத்தியல் கொண்டு தலையில் அடிப்பதுதான். நான் உங்களை அழிக்க வேண்டும்.

இயல்பாகவே எனது வேலை உங்களைத் தூண்ட வேண்டும் என்பதுதான். முதலில் உங்களை அருகில்... அருகில்... அருகில்... வசீகரிக்க வேண்டும். அதன்பின்தான்

ஒரு சுத்தியல் கொண்டு திடீரென்று தாக்க வேண்டும். அப்படியில்லை எனில் நீங்கள் தப்பித்து விடுவீர்கள். ஆனால், அந்தக் கதைகள் உங்களைத் தப்பிக்க விடாது. அவை உங்களை மேலும் அருகில் அழைத்துவரும். அந்த அழகிய கதைகள் உங்களுக்கும் எனக்கும் இடையில் ஓர் ஒட்டுகின்ற கோந்து போன்று அமைகின்றது. அதன்பின் சரியான நேரம் வரும்போது நான் தாக்குகிறேன். நான் உங்களைத் தாக்கும்போது உணர்ச்சியோடு தாக்குகிறேன்.

எனது அன்பான ஓஷோ,
நீங்கள் எங்கள் எல்லோரையும் போதி
சத்துவர்களாக வேண்டும் என்று சொல்கிறீர்கள்.
இதன் பொருள், ஒருவன் எல்லோரையும் அந்தக்
கரைக்கு அழைத்துச் செல்ல உறுதிமொழி
எடுத்துக்கொள்ள வேண்டும் என்பதாகும்.
ஆனால் என்னால் அந்த முடிவை எடுக்க
முடியவில்லை. சில நேரங்களில் நான்
மற்றவர்களின் மீது அன்பு செலுத்துகிறேன். சில
நேரங்களில் எனது வேலைகளில் மும்முரமாக
இருக்கிறேன். அதனால் நான் காத்திருக்க
வேண்டுமா? அல்லது இந்த முடிவை ஒரு
பொருட்டாகக் கருத வேண்டாமா? அல்லது பழம்
பழுப்பது போல் அது தானாக பழுக்க
வேண்டுமா? பின் ஏன் புத்தர் ஒரு
போதிசத்துவராக ஆகாமல் புத்தராகவே
இருந்தார்?

முதலில் இந்த மூன்றையும் புரிந்துகொள்ள வேண்டும். ஒன்று; சாதாரண மன நிலையில் இந்த உலகின் மீது பற்று வைத்திருக்கும்போது, இந்தக் கரையின் மீது பற்றுக் கொண்டிருக்கும்போது, அந்தக் கரை என்பதே போலியாக, இல்லாதது போலத் தோன்றும். அந்தக் கரையை நம்பவே

முடியாது. இந்தக் கரையின் மீது அவ்வளவு பற்று வைத்திருக்கும்போது அதை எப்படி இழப்பது, எப்படிப் பற்றற்றுப் போகச் செய்வது? அதுதான் பிரச்சினை.

இப்போதே, சந்தேகா, நீ இப்போதே போதிசத்துவரைப் போல நினைக்கத் துவங்கினால் இது உனக்கு உதவப் போவதில்லை. இது மிகவும் அபாயகரமானது. இது இந்தக் கரையின் மீது வைத்திருக்கும் பற்றை விடாமல் இருப்பதற்குச் செய்யும் தந்திரம்தான். நீ இந்தக் கரையிலிருந்து விடுவிக்கப்படவில்லை. இது இந்தக் கரையிலேயே ஒட்டிக் கொண்டிருக்கக் கண்டுபிடிக்கப்பட்ட புதிய வழியாக இருக்கும். இது ஒரு தந்திர வழியாகும். இப்போது இது மதத்தின் பேரில், அல்லது கருணையின் பேரில், மக்களின் மீது வைத்திருக்கும் அன்பின் பேரில், சேவையின் பேரில் இப்படி ஏதோ ஒன்றின் பேரில் இருக்கலாம். இப்போது இதற்குள் ஒரு கொள்கை இருக்கிறது. 'நான் இங்கு மக்களுக்குச் சேவை செய்யப் போகிறேன். அதனால்தான் நான் அந்தக் கரைக்குப் போகவில்லை' என்பதாக ஒரு கொள்கை. நீங்கள் அந்தக் கரைக்குச் செல்ல விரும்பவில்லை. உங்களுக்கு அந்தக் கரை இருக்கிறதா என்பதிலே நம்பிக்கைகூட இல்லை. இப்போது நீங்கள் ஒரு நுண்ணிய பொறிக்குள் அகப்பட்டுக் கொள்கிறீர்கள்.

சாதாரண மனத்தின் முதல் நிலை இது. அது இந்த உலகுடன் பற்றுக் கொள்கிறது. அது மேலும் மேலும் புதிய காரணங்களை இந்த உலகுடன் பற்றுக்கொள்ளத் தேடிக் கொண்டேயிருக்கிறது. பற்றை விடுவது என்பது மிகக் கடினமான செயலாகும். இரண்டாவது நிலை போதிசத்துவருடையது. இந்த உலகுடன் இருக்கும் பற்றை விலக்கிக் கொண்டு அந்தக் கரைக்குச் செல்லத் தயாராக இருப்பது. அவரால் இந்தக் கரையில் இனிமேல் வேரூன்ற முடியாது.

முதல் நிலையில் பற்றற்று இருக்க முடியாது. இரண்டாவது நிலையில் பற்றுடன் இருக்க முடியாது.

வைர சூத்திரம் என்பது இரண்டாவது நிலையில் இருப்பவர்களுக்கு. முதல் நிலையில் இருப்பவர்களுக்கு அல்ல. முதலில் நீங்கள் பற்றற்று இருக்க வேண்டும். முதலில் நீங்கள் இந்த உலகுடன் இருக்கும் வேர்களை எல்லாம் அழிக்க வேண்டும். இவ்வுலகுடன் இருக்கும் உங்களுடைய எல்லா வேர்களையும் அழித்த பின்புதான் நீங்கள் மற்றவர்களுக்கு உதவியாக இருக்க முடியும். அப்படி யில்லை எனில் நீங்கள் மற்றவர்களுக்கு உதவியாக இருக்க முடியாது. நீங்கள் மற்றவர்களுடன் பகிர்ந்து கொள்ள ஏதுமில்லை. நீங்கள் 'நான் மக்களை விரும்புகிறேன்' என்று நம்பிக்கொண்டிருக்கலாம். ஆனால் உங்களுக்கு மக்களிடம் அன்பில்லை. நீங்கள் இன்னமும் மக்கள் உங்களிடம் அன்பு காட்ட வேண்டும் என்று எதிர்பார்க்கிறீர்கள். நீங்கள் இன்னமும் பிச்சைக்காரர்கள்தாம். நீங்கள் இன்னமும்கூட எதிர்பார்ப்பின்றி உங்களது அன்பை மற்றவருடன் பகிர்ந்துகொள்ளும் மகிழ்ச்சிக்காகவே பகிர்ந்துகொள்ளத் தயாராகவில்லை.

முதலில் இரண்டாவது நிலையை அடையுங்கள். முதலில் நீங்கள் அகந்தையற்றவராக மாறுங்கள். இந்த உலகில் உங்களுக்குள்ள பற்றையெல்லாம் விட்டுவிடுங்கள். சொந்தம் கொண்டாடாதீர்கள். அதன்பின்தான் புத்தர் சொன்னது உங்களுக்குப் பொருந்தும். அதன்பின்தான் பிரச்சினை துவங்குகிறது. முதலில் எப்படிப் பற்றை விடுவது என்பது. அதன்பின் இன்னும் பற்றோடு இருப்பது எப்படி என்பதாகும்.

புத்தர் சொல்கிறார்: "உங்களுக்கு வேர் இங்கில்லை யெனில் நீங்கள் இங்கே தேவைப்படுகிறீர்கள்.

"பின் உங்களிடம் பகிர்ந்துகொள்வதற்கு ஏதோ இங்கிருக்கிறது. அதன்பின் உங்களிடம் பகிர்ந்து கொள்வதற்கு வைரம் இருக்கிறது. நீங்கள் இங்கு விட்டுப் போகுமுன்பாகப் பகிர்ந்துகொள்ளுங்கள். எவ்வளவு காலம் இருக்க முடியுமோ அவ்வளவு காலம் இருங்கள். அது இரண்டாவது நிலை. மூன்றாவது நிலை என்னவெனில், அடுத்த கரைக்குச் சென்றுவிட்ட புத்தரின் நிலை.

இப்போது நீங்கள் கேட்டீர்கள்: "பின் ஏன் புத்தர் புத்தராக இருக்கிறார்? போதிசத்துவராகவில்லை" என்று. மூன்றாவது நிலை மிகவும் கடினமான ஒன்று. அந்தக் கரையில் இருந்துகொண்டே இந்தக் கரையில் இருப்பது. இது மிகவும் கடினமான ஒன்று. அந்தக் கரையில் இருந்து கொண்டே மக்களுக்குச் உதவி செய்துகொண்டே இருப்பது. ஆனால், இவை மூன்றும் சிரமமானவை. முதலில், இந்தக் கரையில் பற்றை விட வேண்டும். இரண்டாவது, பற்றை விட்ட பின்பும் இந்தக் கரையிலேயே இருப்பது. மூன்றாவது, இந்தக் கரையில் இருக்க முடியாமல் போவது.. ஏனெனில், ஒரு நிலையில் இந்தக் கரையில் இருக்க முடியாமல் போகும்.

ஒவ்வொரு போதிசத்துவரும் புத்தராகத்தான் வேண்டும். நீங்கள் இந்தக் கரையிலேயே இருக்க முடியாது. அது சட்டப்படி தவறானதாகும். ஒரு நிலையில் நீங்கள் இங்கிருந்து கிளம்பித்தான் ஆக வேண்டும். சிறிதளவு இருக்க முடியும். ஒரு வாழ்க்கைக்கு வேண்டுமெனில் இருக்கலாம். அதற்கு மேல் முடியாது. அதன்பின் நீங்கள் கிளம்பித்தான் ஆக வேண்டும். ஒரு வாழ்க்கைக்கு வேண்டுமானால் நீங்கள் இருக்க முடியும். ஏனெனில், உங்களின் வேர்கள் எல்லாமே அழிக்கப்பட்டுவிட்டன. ஆனாலும் உங்களது உடம்பு இருக்கிறது. அதனால் அந்த உடம்பினுள் இருக்கலாம். ஒரு வாழ்க்கைக்கு வேண்டுமானால் நீங்கள்

இருக்க முடியும். அதன்பின் நீங்கள் கிளம்ப வேண்டியது தான்.

அதன்பின் மூன்றாவது நிலை வருகிறது -புத்தரின் நிலை. புத்தர் இங்கிருந்து கிளம்பிச் சென்றுவிட்ட பிறகும்கூட மக்களுக்கு உதவி புரிந்துகொண்டே இருந்தார். ஆனால் நினைவில் கொள்ளுங்கள். நீங்கள் போதிசத்துவராக இருந்தால் மட்டுமே, அதன்பின்தான் நீங்கள் மூன்றாவது நிலையிலும்கூட மக்களுக்கு உதவி புரிய முடியும். அப்படி இல்லையெனில் முடியாது.

இரண்டு வார்த்தைகளைப் புரிந்துகொள்ள வேண்டும். ஒன்று 'அராத்', மற்றொன்று, போதிசத்துவர். முதலாவதாக அராத். இந்த நிலையில் அகந்தை அகற்றப்பட்டுவிட்டது. இந்த உலகம் அழிக்கப்பட்டுவிட்டது. பற்றில்லாத நிலை. ஆனால், உடனே அந்தக் கரைக்குச் சென்றுவிடுகிறார்கள். அவர் 'அராத்' என்று அழைக்கப்படுகிறார். அவருக்கு மற்றவர்களைப் பற்றி அக்கறையில்லை. அவர் தயாரான வுடன் அடுத்த கரைக்குச் சென்றுவிடுகிறார். அராத் அந்தக் கரையிலிருந்தபடி மக்களுக்கு உதவி செய்ய முடியாது. காரணம், அவருக்கு எப்படி உதவி செய்வது என்று தெரியாது. அவர் உதவி செய்வதற்கான பயிற்சி பெறவில்லை. ஒரு போதிசத்துவரும்கூட அராத்தின் நிலையில்தான் இருக்கிறார். அவருக்குத் தெரியும். அவர் பார்த்திருக்கிறார். அவர் உண்மையாயிருக்கிறார். ஆனால் அவர் இந்தக் கரையிலிருந்துகொண்டே சற்றே அதிக நேரம் ஏதோவொரு வழியில் உதவி புரிந்துகொண்டிருக்கிறார். அவர் உதவி புரிவது எப்படி என்று கற்றிருக்கிறார்.

நீங்கள் போதிசத்துவர்களாக இருந்து பின் அந்தக் கரைக்குச் செல்லலாம். அந்தக் கரையிலிருக்கும் அராத்தும் புத்தர்தான். போதிசத்துவரும் புத்தர்தான். அந்தக் கரை என்பதே புத்தபிராயத்துக்குண்டான கரை. ஆனால் இந்தக்

கரையில் போதிசத்துவர்களாயிருந்தவர்கள் அந்தக் கரைக் குச் சென்ற பின்பும் அந்தக் கரையிலிருந்து கொண்டேகூட உதவி செய்ய முடியும். அவர் வழிகளையும், முறைகளையும் கண்டுபிடிப்பார். புத்தர் நூற்றாண்டுகளுக்கு உதவி செய்துகொண்டே இருப்பார்.

இப்போதும்கூட நீங்கள் புத்தரிடம் மனம் திறந்து காட்டினால் உங்களுக்கு உதவி வந்து சேரும். இப்போதும் கூட உணர்ச்சி மிகுந்த நிலையில் புத்தரிடம் அன்பு செலுத்தினால் உங்களுக்கு உதவி வந்து கொண்டே யிருக்கும். அவர் இன்னும் அந்தக் கரையிலிருந்து குரல் கொடுத்துக்கொண்டே இருக்கிறார். ஆனால் அந்தக் குரல் வெகு தூரத்திலிருந்து ஒலிக்கிறது. நீங்கள் அதை மிகவும் கவனமாகக் கேட்க வேண்டும். என்னைக் கேட்பதைவிடக் கவனமாகக் கேட்க வேண்டும். ஏனெனில், குரல் அந்தக் கரையிலிருந்து வருகிறது.

உடனேயோ அல்லது தாமதமாகவோ நான் போய் விடுவேன். என்னிடம் கவனிப்பது எப்படி என்று கற்றுக் கொண்டீர்களேயானால் உங்களில் பலர் என்னை அந்தக் கரையிலிருந்துகூடக் கேட்க முடியும்.

புத்தபிராயம் என்பது பிரக்ஞையின் கடைசி நிலை. ஆனால், நீங்கள் போதிசத்துவப் பிராயத்தைக் கடந்து சென்றால்தான் இந்த உலகத்துக்குப் பயன்படும்படி இருப்பீர்கள். நீங்கள் கடவுளை அடைவதற்கான சாளரமாக இருப்பீர்கள். ஆனால், நீங்கள் போதிசத்துவப் பிராயத்தைக் கடக்கவில்லையெனில் நீங்கள் எல்லையற்ற பரம்பொருளி டம் மறைந்து போவீர்கள். ஆனால், உங்களால் யாருக்கும் பயனில்லாமல் போய்விடும்.

எனது அன்பான ஓஷோ,
நீங்கள் எப்போதும் புத்தப் பிராயத்தை அடைய
வேண்டும் என்பது பற்றிப் பேசும்போது, அது

**திடீரென்று அடையப்படும் என்றும், படிப்படியாக வராது என்றும் சொல்கிறீர்கள். எனக்கு நிகழ்வது என்னவெனில் வெகு நிதானமாகத் திருப்தியடையும் மனோபாவத்தை அடைவதும், அகந்தையினின்று நிதானமாகவே விடுபடுவதும், இப்படித்தான் நடக்கிறது. தாங்கள் நிதானமாக இப்படி நிகழ்வதற்கும், 'திடீரென்று மின்னல்' போல நிகழ்வதற்கும் உள்ள வேறுபாட்டினை விளக்க முடியுமா? மெதுவாகத் திருப்தியடையும் மனோபாவம் அடைவது அபாயகரமானதா?**

இல்லை, தீப்தா. அதில் அபாயம் ஏதும் இல்லை. ஞானம் எப்போதும் மின்னல் போலவே வரும். அது ஓர் ஒளிவெட்டு. அது திடீரென்று வெடிப்பதைப் போன்ற ஒன்றுதான். அது படிப்படியாக வராது. ஏனெனில், அதைப் பிரிக்க முடியாது. அதைச் சிறிய துண்டுகளாகவே அடைய முடியாது.

அதன்பின் தீப்தாவுக்கு என்ன நிகழ்கிறது? அவள் படிப்படியாக, நிதானமாக, திருப்தியடையும் மனோ பாவத்தை அடைவதாகச் சொல்கிறாள். இது ஞானமன்று. இது ஞானம் நிகழ வேண்டிய நிலைக்களன். இந்த நிலைக்களனை வேண்டுமானால் படிப்படியாகத் தயார் செய்யலாம். உண்மையில் இதை படிப்படியாகத்தான் தயார் செய்ய வேண்டும். ஆனால் மின்னல், ஒளிவெட்டு போன்றவற்றைத் தயார் செய்ய முடியாது. சில சமயங் களில் இதற்கான நிலைக்களனைத் தயார் செய்ய வாழ்நாள் முழுவதும்கூட ஆகிவிடும்.

புத்தப்பிராயத்துக்காகத் தயார் செய்வது என்பது வேண்டுமானால் படிப்படியாக இருக்கலாம். ஆனால், உண்மையாகப் புத்தராவது என்பது திடீரென்று வெடிப்பது

போலத்தான் உங்களில் நிகழும். அதனால் நீ பயப்பட வேண்டாம். இது நல்லது. நீ சரியான பாதையில்தான் நகர்கிறாய். இன்னும் இன்னும் திருப்தியடையும் மனோபாவத்தை வளர்த்துக்கொள்.

நீ முற்றிலுமாகத் திருப்தியடையும் நாள் வரும்போது, அப்போது மின்னல் வரும்!

இன்றைக்கு இது போதும்.

சுபூதி, அதற்குக் காரணம் என்ன தெரியுமா? அந்தப் போதிசத்துவர்களிடம்,

சுயம் பற்றிய எந்த உணர்வும் இல்லை
இருப்பைப் பற்றிய எந்த உணர்வும் இல்லை
உயிர் பற்றிய எந்த உணர்வும் இல்லை
ஒரு மனிதன் என்ற உணர்வும் இல்லை.

அல்லது, அந்தப் போதிசத்துவர்களுக்கு,

தர்மம் பற்றிய எந்த உணர்வும் இல்லை
தர்மம் அற்ற நிலை பற்றிய உணர்வும் இல்லை.

உணர்வற்ற நிலை, அல்லது உணர்வு இல்லாத நிலை அவர்களிடம் நிலை கொண்டுவிடும்.

ஏன் அப்படி? சுபூதி, அவர்கள் தர்மம் பற்றிய உணர்வோ, அல்லது தர்மமற்ற உணர்வோ பெற்றுவிடுவார்களானால், அவர்கள், சுயத்தை, இருப்பை, உயிரை, அல்லது ஆளைப் பற்றிக் கொள்ளும் நிலை ஏற்பட்டுவிடும்.

ஏன் அப்படி? ஏனென்றால், ஒரு போதிசத்துவர், தர்மத்தையோ, தர்மமின்மையையோ பற்றிக் கொள்ளக் கூடாது.

அதனால், இந்தக் கருத்து, ததாகதரால், ஓர் உள்ளர்த்தத்தோடு கற்பிக்கப்பட்டுள்ளது. அது: 'தர்மப் பேருரையை அறிந்தவர்கள் படகில் ஏறப் போகிறவர்களைப் போல. அவர்கள் தர்ம மூட்டையைக் கைவிட்டுவிட வேண்டியதுதான்; சகல தர்மங்களையும். அதேசமயம், தர்மம் இல்லா நிலையையும் கூட!'

"மிகச் சிறந்த, மேலான, சரியான, ஞான தர்மம் இதுதான் என்று ததாகதர் பூரணமாக அறிந்துள்ளாரா? அல்லது, ஏதாவது ஒரு தர்மத்தை அவர் மெய்ப்பித்திருக்கிறாரா? இது பற்றி என்ன நினைக்கிறாய் சுபூதி?" என்று புத்தர் கேட்டார்.

சுபூதி இவ்வாறு பதில் சொன்னார்:

"தாங்கள் சொன்னதை நான் புரிந்து கொண்ட அளவுக்கு அப்படி எதுவுமே இல்லை. ஏன் அப்படி? ததாகதர் பூரணமாக உணர்ந்துள்ள, விளக்கிக் காட்டக்கூடிய தர்மம், பற்றிக்கொள்ள முடியாத ஒன்று; பேசப்பட முடியாத ஒன்று. அது ஒரு தர்மமும் அன்று; தர்மம் இல்லாமையும் அன்று. ஏன் அப்படி?

"ஏனென்றால், பூரணத்துவம், புனிதர்களை மிக மேலே உயர்த்தி விடுகிறது."



மீண்டும் நினைவுபடுத்திக் கொள்ள...
கடைசி சூத்திரத்தில் சுபூதி இப்படிக் கேட்டார்:
"நல்ல கோட்பாடுகள் எல்லாம் தகர்ந்து விடும் அந்தக் காலகட்டத்தில், தர்மத்தை யார் புரிந்துகொள்ளப் போகிறார்கள்?"

புத்தர் சொன்னார்: "இப்படியெல்லாம் பேசாதே சுபூதி! ஆம். அந்தக் காலத்திலும் கூட, உண்மையைப் புரிந்து கொள்பவர்கள் இருக்கவே செய்வார்கள். புனிதமான நம்பிக்கையின் ஒரு சிந்தனையே கூடப் போதும், மனிதனை மாற்றுவதற்கு."

அவர்கள், ததாகதரின் புத்தப் பார்வையால், அடையாளம் காணப்படுவார்கள், சுபூதி. ததாகதரின் புத்த விழியால் அவர்கள் முழுமையாக உணரப்படுவார்கள், சுபூதி.

"அவர்கள், ததாகதரின் புத்தப் பார்வையால், அடையா ளம் காணப்படுவார்கள் சுபூதி. ததாகதரின் புத்த விழியால் அவர்கள் முழுமையாக உணரப்படுவார்கள் சுபூதி."

ஒரு சில விஷயங்களை நீங்கள் புரிந்துகொள்ள வேண்டும். அதன்பின் இன்றைய சூத்திரத்தினுள் நுழைய சுலபமாக இருக்கும். முதலில் நல்ல கொள்கை 'தர்மம்.' புத்தர் ஒரு கொள்கையைத் தர்மமானது என்று எப்போது கூறுவாரெனில் அது கொள்கையாக இல்லாத போதுதான். புத்தர் ஒரு தத்துவத்தை ஒரு நல்ல தத்துவம் என்று எப்போது கூறுவாரெனில் அது தத்துவமாக இல்லாத போதுதான். அது ஒரு தத்துவமாக இருப்பின் அது நல்ல தத்துவம் இல்லை.

ஒரு கொள்கை என்பது நிர்ணயிக்கப்பட்ட, மாற்ற முடியாத ஒன்றாகும். இந்தப் பிரபஞ்சம் நகர்ந்து கொண்டேயிருக்கிறது. எந்த ஒரு கொள்கையுமே அதனுடன் நில்லாது. எந்த ஒரு கொள்கையுமே அத்துடன் நிற்காது. எந்தக் கொள்கையுமே வாழ்க்கைக்கு நீதி செய்யாது. எல்லாக் கொள்கைகளுமே குறுகியதுதான்.

அதனால்தான் புத்தர், "என்னுடைய கொள்கை ஒரு கொள்கையல்ல. அது ஒரு பார்வைதான். நான் ஒரு விதிகளின் தொகுப்பைக் கொடுக்கவில்லை. நான் உங்களுக்கு

ஒரு ஒழுங்குமுறையான அமைப்பைக் கொடுக்கவில்லை" என்று சொல்கிறார். '"நான் உங்களுக்கு உண்மையை நோக்கிச் செல்ல ஓர் அணுகுமுறையைத்தான் அளித்திருக் கிறேன். நான் உங்களுக்குக் கதவைத் திறக்கச் சாவியைத் தான் கொடுத்திருக்கிறேன். நான் உங்களுக்குக் கதவைத் திறந்த வுடன் என்ன தெரியும் என்பதைப் பற்றியெல்லாம் எதுவும் சொல்லவில்லை. அதைப்பற்றி எதுவும் சொல்ல முடியாது."

ஓர் அடர்த்தியான குகைக்குள் வாழ்ந்த மனிதனைப் பற்றி நினைத்துப் பாருங்கள். அவனுக்கு ஒளியைப் பற்றி எதுவும் தெரியாது. வண்ணத்தைப் பற்றி எதுவும் தெரியாது. அவன் சூரியனையோ, சந்திரனையோ பார்த்ததே கிடையாது. அவனிடம் வானவில்லைப் பற்றி எப்படிப் பேச முடியும்? அவனிடம் நட்சத்திரத்தைப் பற்றி எப்படிப் பேச முடியும்? அவனிடம் ரோஜாவைப் பற்றி எப்படி விளக்க முடியும்? அது முற்றிலும் முடியாத காரியம். அவனிடம் என்ன சொன்னாலும், அவன் என்னதான் புரிந்து கொண்டாலும், அவ்வளவும் தவறானதாகத்தான் இருக்கும். அவன் ஒரு கொள்கையை உற்பத்தி செய்வான். அதுவும் தவறாகத்தான் இருக்கும்.

அதனால் புத்தர் சொல்கிறார்: "நான் உங்களுக்கு எந்தக் கொள்கையும் கொடுக்கவில்லை. நான் உங்களுக்குக் கதவைத் திறக்கச் சாவிதான் கொடுத்திருக்கிறேன். அதன் பின் அந்தக் கதவைத் திறந்து கொண்டு கறுத்த குகையை விட்டு வெளியே வந்து உங்களை நீங்களே பார்த்துக் கொள்ளுங்கள். அதுவே -யதா பூதம்." அதைப் பற்றி எதுவும் சொல்லப்படவில்லை. அதனால்தான் அது கொள்கையல்ல.

புத்தர் ஒரு தத்துவவாதி அல்லர். அவர் ஒரு வைத்தியர். அதனால் அவர் சரியாகச் சொல்கிறார்: "நான் ஒரு வைத்தியன். தத்துவவாதியல்லன்."

ஒரு தத்துவவாதி என்பவர் ஒரு குருட்டு மனிதனிடம் வண்ணங்களைப் பற்றியும், ஒளியைப் பற்றியும் விளக்கிக் கொண்டே செல்பவர். அவனைக் குழப்பிக்கொண்டே பிரமிக்க வைப்பவர். குருட்டு மனிதன் ஒளியைப் புரிந்து கொள்ளும் சக்தியில்லாதவன். புத்தர் சொல்கிறார்: "நான் ஒளியைப் பற்றித் தத்துவப்படுத்தப்போவதில்லை. நான் உங்களுக்கு எளிமையாக ஒரு மருந்தைக் கொடுக்கப் போகிறேன். நான் உங்களுடைய கண்களைக் குணப் படுத்தப்போகிறேன். அதன்பின் உங்களாலேயே பார்க்க முடியும்." இது நல்ல கொள்கை என்று அழைக்கப்படுகிறது. இது தர்மம் என்று அழைக்கப்படுகிறது. இது முற்றிலும் வேறான பார்வை.

இரண்டாவதாகப் புரிந்துகொள்ள வேண்டியது: புத்தர் சுபூதியிடம் சொல்கிறார், **"சுபூதி, இதுபோன்று பேசாதே." ஏன்?** இந்த யோசனை மக்களிடையே அடிக்கடி வந்து கொண்டிருக்கிறது. சுபூதி போன்ற உயரிய புனிதமான தன்மைகள் உள்ள மனிதர்களிடம்கூட எழுந்து கொண் டிருக்கிறது. அவை சிறப்பானவை. அவர்களுடைய நேரம் சிறப்பானது. அவர்களுடைய காலம் சிறப்பானது. மக்களால் தொட முடியாத உயரம் அவர்களுடையது. அது ஓர் அகந்தையான விஷயம். ஒரு நுணுக்கமான அகந்தை யான மனோபாவம். அது சுபூதியைப் பற்றிக் காட்டுகிறது. அவர் இன்னமும்கூட நுணுக்கமான அகந்தை கொண் டிருக்கிறார்.

பல காலங்களாக எல்லா மக்களுமே இந்த நோயினால் பீடிக்கப்பட்டுள்ளார்கள். அவர்களுடைய காலம் ஏதோ ஒரு சிறப்பான காலம் என்பதைப் போல நினைத்துக்

கொண்டிருக்கிறார்கள். எந்தக் காலமுமே சிறப்பான காலம் அல்ல. கடவுள் எல்லாக் காலங்களிலும் கிடைக்கும்படியாக இருக்கிறார். இந்தியாவில் ஹிந்துக்கள் சொல்கிறார்கள், இப்போது யாருமே ஞானம் பெற முடியாது. ஏனெனில் இது கலியுகம் என்று. இதுவே கடைசியாகும் என்று. இது மோசமான யுகம் என்று -யாருமே ஞானம் பெற முடியாதென்று. சமணர்கள் சொல்கிறார்கள், யாருமே ஞானம் பெற முடியாதென்று. காரணம், இது 'பஞ்ச காலம்', ஐந்தாவது ஊழிக்காலம் என்று. வைர சூத்திரத்தைச் சரியாக உணர்ந்த புத்த மதத்தவர்களும்கூட யாருமே இந்தக் காலத்தில் ஞானம் பெற முடியாது என்று சொல்லிக்கொண்டே இருக்கிறார்கள். அவர்கள் புத்தரது வார்த்தைகளைக்கூட யாருமே ஞானம் பெற முடியாது என்ற வகையில் மொழிபெயர்த்து வருகிறார்கள்.

அன்று ஒரு நாள் வைர சூத்திரத்துக்கான வியாக்யானத்தைப் படித்துக் கொண்டிருந்தேன். அந்த வர்ணனை சொல்கிறது: "ஆமாம். புத்தர் சொல்கிறார்; உண்மையைச் சிறிதே உணர்ந்துகொள்ளும் மக்கள் இருப்பார்கள். அவர்களுடைய தகுதி மெச்சப்படும். ஆனால், அவர்களுடைய தகுதியே ஞானம் என்பதாகாது. தகுதி என்பது நிலைக்களன்தான்."

அதனால் இதனை மொழி மாற்றம் செய்தவர், வர்ணனையாளர் சொல்கிறார்: "இந்த யுகத்தில் யாராலுமே ஞானம் பெற முடியாது. மிகவும் முயற்சி செய்தால் ஒரு தகுதியை வேண்டுமானால் அடையலாம். நீங்கள் ஞானம் பெறுவதற்கான சரியான யுகத்துக்காகக் காத்திருக்க வேண்டும். உங்களுடைய தகுதி அப்போது மிகவும் உதவியாக இருக்கும். அது ஓர் அடித்தளமாக இருக்கும். ஆனால், இப்போதே அந்தப் புனிதத்தைச் செய்ய முடியாது." இது போன்று மக்கள் சொல்லிக்கொண்டே செல்கிறார்கள்.

புத்தர் சொல்வது இதுதான்: தேடுபவருக்கு எல்லாக் காலமும் ஒன்றுதான். அதனால் இது தேடாமல் இருப்பவருக்குத்தான். புத்தருடைய காலத்திலும்கூட ஆயிரக்கணக்கான மக்கள் ஞானமடையாமலே இருந்தார்கள். வெகு சில மக்களே ஞானம் அடைந்திருக்கிறார்கள். எனவே, இது ஓர் இளவேனிற்காலம் மாதிரி இல்லை. இது ஒரு சூழ்நிலையைப் பொருத்தது அன்று. ஒரு குறித்த புனிதமான காலத்தில் மட்டுமே ஞானம் பெறுவதில்லை.

யார் தேடுகிறார்களோ, கேட்கிறார்களோ அவர்கள் அடைகிறார்கள். யார் தேடாமல் இருக்கிறார்களோ, கேட்காமலிருக்கிறார்களோ அவர்களுக்குக் கிடைப்பதில்லை. நல்ல நேரமாக இல்லையென்றாலும் கூட அது ஒரு பொருட்டல்ல. நேரம் என்பது ஒன்றுதான். நல்லது கெட்டது இல்லை. நேரம் என்பது ஞானத்துக்கு ஆதரவாகவோ, எதிராகவோ இல்லை. நீ உன் வாழ்க்கை எப்படியிருக்க வேண்டுமென்று விரும்புகிறாயோ அதற்கு நேரம் வாய்ப்பு கொடுக்கிறது.

நேரம் வஞ்சனையற்றது. அது உன்மேல் எதையுமே திணிப்பதில்லை. அது உங்களுக்குச் சுதந்திரம் அளித்துள்ளது. நீங்கள் விரும்பியபடியே ஞானம் அடையலாம். அல்லது நீங்கள் விரும்பியபடியே ஞானம் அடையாமலும் இருக்கலாம். வாழ்க்கை உங்களுக்கு ஒத்துழைப்புத் தருகிறது. ஆனால் இந்தக் கருத்து அடிக்கடி எழுந்து கொண்டேயிருக்கிறது. நான் உலகில் நிறையப் புனிதப் புத்தகங்கள் படித்திருக்கிறேன். மக்கள் நினைக்கிறார்கள்: “மற்றவர்களுக்கு எதிர்காலத்தில் என்ன நடக்கும்?”

இந்தக் கருத்துச் சாதாரண மனிதனுக்குக் கூடத் தோன்றுகிறது. நீங்கள் பார்த்திருக்கலாம். எந்த முதியவனும் அவனுடைய காலத்தைப் பற்றிப் பேசுவான். அந்த அழகிய காலத்தில், அந்தப் பொன் போன்ற காலத்தில் அவன்

வாழ்ந்தது, அப்போது சிறப்பான காலம் என்றும், இப்போது உலகில் எதுவும் இல்லை என்றும் பேசுவார்கள். நினைவிருக்கட்டும். நீங்களும் வயதாகும்போது உங்கள் குழந்தைகளிடம் அதே மிக நீண்ட கதைகளைச் சொல்வீர் கள். நீங்கள் மறுபடியும் 'அந்தக் காலத்தில்' என்று ஆரம்பிப்பீர்கள்.

நான் ஒரு மனிதனைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன். அவன் எண்பது வயதாக இருக்கும்போது தன் மனைவி யுடன் பாரீசுக்குச் சென்றான். அவர்கள் சுற்றிப் பார்த்தார் கள். அந்த முதியவன் சொன்னான்: "எல்லாமே மாறி விட்டது. பாரீஸ் பாரீஸைப் போலவே இல்லை. நான் ஐம்பது வருடங்களுக்கு முன்னர் எனது முப்பதாவது வயதில் இங்கே வந்துள்ளேன். அதுதான் உண்மையான பாரீஸ்."

அந்தப் பெண் சிரித்தாள். பெண்கள் மிகவும் யதார்த்த மானவர்கள், உண்மையானவர்கள். எனவே அவள் சொன்னாள்: "நான் புரிந்துகொண்டது வேறு. நீங்கள் அப்போது இருந்த நீங்கள் அல்ல. அவ்வளவுதான். பாரீஸ் அதே பாரீஸ்தான். நீங்கள் இளம் வயதினரைப் பாருங்கள். எவ்வளவு மகிழ்ச்சியோடு இருக்கிறார்கள். நீங்கள் உங்கள் இளம் வயதில் எவ்வளவு மகிழ்ச்சியோடு இருக்க வேண்டுமோ அவ்வளவு மகிழ்ச்சியாக இருந்தீர்கள்."

இப்போது ஓர் எண்பது வயது மனிதனுக்குப் பாரீஸ் என்பது ஒன்றுமில்லை. பாரீஸ் என்பதே இரவு வாழ்க்கை. எண்பது வயது மனிதனுக்கு இது தேவையில்லாதது. அவன் இன்னமும்கூட முட்டாளில்லை, அதையெல்லாம் அனுபவித்துக் கொண்டிருக்க. அவனது கனவுகள் மறைந்து விட்டன. நான் அவனது மனைவி சொன்னது சரியென்று நினைக்கிறேன். "நீங்கள் நீங்களில்லை. பாரீஸ் பாரீஸ்தான்."

இது உங்களுக்கேகூட நேரலாம். நீங்களும் உங்களது பிள்ளைப் பிராயத்துக் காலம்தான் அழகானது என்று நினைக்க ஆரம்பிப்பீர்கள். இப்போது காலம் நன்றாக இல்லை. நீங்கள் இப்போது வாழும் குழந்தைகளுக்காக வருத்தப்பட ஆரம்பிக்கிறீர்கள். உங்களுக்குத் தெரியாது. அவர்கள் அவர்களுடைய குழந்தைகளுக்காக மீண்டும் வருத்தப்படுவார்கள். இது அப்படியேதான் நிகழ்ந்து கொண்டிருக்கிறது. ஒவ்வொரு மனிதரும் அவருடைய காலம் மிகவும் சிறப்பு வாய்ந்தது என்று நினைக்கிறார்கள். அது புரட்சிகரமானது.

நான் கேள்விப்பட்டிருக்கிறேன். ஆதாமும், ஏவாளும் ஈடன் தோட்டத்திலிருந்து வெளியேற்றப்பட்டவுடன் முதன்முதலாக ஆதாம் உதிர்த்த வார்த்தைகள் இவைதாம்– ஆதாம் ஏவாளிடம் சொன்னான்: "பார், நாம் வாழ்கிறோம், இப்போது நாம் மகத்தான புரட்சிகரமான காலத்தைக் கடக்கிறோம்." இயல்பாக ஈடன் தோட்டத்திலிருந்து வீசியெறியப்பட்ட போது ஆதாம் பெரிய பிரச்சினையில் அகப்பட்டுக்கொண்டிருக்க வேண்டும். அதுபோலப் பிரச்சினை வேறு யாருக்கும் நேர முடியாது.

புத்தர் சொல்கிறார்: "சுபூதி, இது போன்று பேசாதே. ஏன்? ஏனெனில் எல்லா நேரமும் ஒரே மாதிரி தன்மையுடையதாக இருக்கிறது. காலமும், நேரமும் உங்களால் களங்கப்பட்டுப் போகவில்லை. அவற்றை யாராலும் களங்கப்படுத்தவும் முடியாது. உங்களால் நேரத்தைக் கையில் பிடிக்கக்கூட முடியாது. பின் எப்படி அதைக் களங்கப்படுத்த முடியும்? நீ வேண்டுமானால் காற்றையும் கடலையும் மாசுபடுத்தலாம். ஆனால், நேரத்தை எப்படி மாசுபடுத்த முடியும்? உன்னால் முடியுமா?

உன்னால் எப்படி நேரத்தைக் களங்கப்படுத்த முடியும்? உன்னால் அதைக் கையில் பிடிக்கக்கூட முடியாது. அதைக்

கையில் பிடிக்க முயலுவதற்குள் அது ஓடிவிட்டிருக்கும். நீ அந்தக் கணத்தை உணருவதற்குள்ளாக அந்தக் கணம் இல்லாமல் போய்விடுகிறது. அது ஏற்கெனவே கடந்த காலமாகி விடுகிறது. அது ஏற்கெனவே சரித்திரமாகிப் போனது. உன்னால் நேரத்தைக் களங்கப்படுத்தவே முடியாது. நேரம் என்பது மிகவும் தூய்மையான ஒன்றாகும். அது எப்போதுமே தூய்மையானதுதான்.

அதனால்தான் புத்தர் சொன்னார்: **"இது போன்று பேசாதே சுபூதி. ஆமாம். அப்போதும் உண்மையை உணரும் உயிர்கள் உலகத்தில் இருக்கும்..."** எப்போதுமே உண்மையை உணரும் உயிரினங்கள் இருக்கும். ஏனெனில் உண்மையென்பது சில சமயங்களில் நிகழ்ந்து, சில சமயங்களில் நிகழாமல் இருக்கக்கூடிய தன்மையானதல்ல. உண்மை எப்போதுமே இருக்கிறது. அதைத்தான் உண்மை என்று சொல்கிறோம். அது எப்போதுமே இருக்கிறது.

நேரத்தால் உண்மையை எதுவும் செய்யவே முடியாது. உண்மை முடிவற்றது. நீ உண்மையைப் பகலில் அடையலாம். அல்லது இரவில் அடையலாம். நீ உண்மையைக் கடைத் தெருவில் அடையலாம். நீ உண்மையை ஹிமாலய மலையில் அடையலாம். நீ ஆணாக இருந்தாலும், பெண்ணாக இருந்தாலும், குழந்தையாக இருந்தாலும், வயதானவனாக இருந்தாலும் எப்படியிருந்தாலும் உண்மையை அடையலாம். நீ உண்மையை எந்தக் கணத்திலும், எங்கு வேண்டுமானாலும் அடையலாம். ஏனெனில் உண்மை என்பது எப்போதும் இருக்கிறது. நீதான் அதற்குக் கிடைக்கும்படியாக இருக்க வேண்டும்.

புத்தர் சொல்கிறார்: **"ஒரே ஒரு களங்கமற்ற உயர்ந்த நம்பிக்கை கூட மனிதனை மாற்றிவிடும். ஒரு களங்க மற்ற நம்பிக்கை..."** புத்தரின் பார்வையில் நம்பிக்கை என்றால் என்ன? சாதாரணமாக நம்பிக்கை என்றால்

பயம். நம்பிக்கை என்பது பயம் தவிர வேறில்லை. நீங்கள் மாதா கோயிலுக்கு, கோயிலுக்கு, குருத்வாராவுக்குச் சென்றால் அங்குப் பயமுள்ள மனிதர்களைக் காணலாம். வாழ்க்கையைப் பார்த்துப் பயப்படும் மனிதர்கள், இறப்பைப் பார்த்துப் பயப்படும் மனிதர்கள், வேறு கடவுளரிடம் அடைக்கலம் தேடும் மனிதர்கள், உதவியற்றவராக நினைக்கும் மனிதர்கள், ஏதாவது எங்காவது பாதுகாப்பு தேடும் அல்லது தங்களுடைய தந்தையர்களையோ அல்லது தாயையோ தவற விட்டுவிட்டுச் சொர்க்கத்தில் அவர்களைத் தேடும் மனிதர்கள்.

அவர்கள் மனம் முதிர்ந்தவர்களல்லர். அவர்களால் தமது தந்தையோ அல்லது தாயோ இல்லாமல் இருக்க முடியாது. தந்தை இறந்துவிட்டிருப்பார். தாய் உயிரோடு இருக்கமாட்டார். ஆனாலும் அவர்கள் குழந்தைகள். அவர்களுக்குப் பற்றிக்கொள்ள யாராவது வேண்டும். அவர்களால் தாமே உயிரோடு இருக்க முடியாது. அவர்களுக்குத் தம்மையேகூட நம்ப முடியாது.

நீங்கள் பயத்தோடு இருக்கும்போது உங்களது பயத்தின் காரணமாக நீங்கள் மத நம்பிக்கையுடையவர்கள் ஆகிறீர்கள் என்றால், அந்த மத நம்பிக்கை போலியானது. அந்த மதம் ஒரு வகையான குரங்கு மதம். மனிதக் குரங்கு மதம். பயத்தின் காரணமாக ஒன்றைப் போல நடிக்க ஆரம்பிக்கிறோம். புத்தர் நம்பிக்கை என்னும்போது எதைக் குறிப்பிடுகிறார்? அவருடைய வார்த்தை 'ஷத்தா.' ஷத்தா என்பதற்குச் சமஸ்கிருத வார்த்தை 'ஷ்ரத்தா' என்பதாகும். அதற்கு உண்மையான அர்த்தம் நம்பிக்கை என்பதல்ல. அதற்குத் தன்னம்பிக்கை, தன் மீதே நம்பிக்கை வைத்தல் என்று பொருள்... அது முற்றிலும் வித்தியாசமான மதம். புத்தர் அதை மதம் என்றும் மற்ற மதங்களைத் தவறான மதங்கள் என்றும் சொல்கிறார்.

நீங்கள் பயந்துகொண்டே, நடுங்கிக்கொண்டே உண்மையை நெருங்கினீர்களென்றால் உங்களது அணுகு முறை தவறானது என்று பொருள். நீங்கள் தவறான அணுகுமுறையுடன் அணுகினீர்கள் என்றால் நீங்கள் எதைப் பார்த்தீர்கள் என்றாலும் அது தவறானதாகவே உணருவீர்கள். உங்கள் கண்கள் தவறானவை. உங்கள் மனம் தவறானது. உண்மையைப் பயத்தின் மூலம் அறிய முடியாது. உண்மையை அச்சமின்மைதான் அறிந்து கொள்ள முடியும். ஷரத்தா தேவை. தன்னம்பிக்கை தேவை. தன் மேல் நம்பிக்கை தேவை.

நம்பிக்கையோடு யதார்த்தத்தை அணுக வேண்டும். பயத்தோடு அல்ல. நம்பிக்கையின் சாரமே விட்டுக் கொடுத்தல். பயத்தோடு இருக்கும் மனிதன் எதையும் விடவே மாட்டான். அவன் எப்போதும் தன்னைக் காத்துக் கொள்வதிலேயே இருப்பான். அவன் எப்போதும் சண்டை போடுவான். அவன் எப்போதும் எதிர்ப்பான். அவனுடைய பிரார்த்தனைகள், அவனுடைய தியானம் எல்லாமே தன்னைக் காத்துக் கொள்வதாகவே அமையும்.

நம்பிக்கையுள்ள மனிதனுக்கு எப்படி விட்டுக் கொடுப்பது என்று தெரியும். நம்பிக்கை மனிதனுக்கு எப்படிச் சரண் அடைவது என்று தெரியும். நம்பிக்கை மனிதனுக்கு எப்படி நதியோடு போராடாமல் அதனுட னேயே போவது என்பது தெரியும். அவன் நீரோட்டம் அவனை எங்கே எடுத்துச் சென்றாலும் சரியென்று அதனுடன் செல்கிறான். அவனுக்கு நீரோட்டத்துடன் போகக்கூடிய அளவுக்கு தன்னம்பிக்கையும் துணிச்சலும் இருக்கிறது.

இது என்னுடைய நம்பிக்கையும், அனுபவமும் கூட. எப்போதும் பயப்படும் ஒரு மனிதன் என்னிடம் வந்தாலும் அவனால் சரண் அடைய முடிவதில்லை. அவன் தான்

மிகவும் பலசாலியாக இருப்பதாகக் கருதினாலும் அவனால் சரணடைய முடிவதில்லை. யாருமே தான் மிகவும் பலவீனமானவன் என்று ஒப்புக்கொள்ள விரும்புவதில்லை. குறிப்பாகப் பலஹீனமானவர்கள் அதுபோல நினைக்க விரும்புவதில்லை. அவர்கள் தாம் பலவீனமானவர்கள் என்று உணருவதில்லை. அவர்கள் கோழைகள் என்று உணர விரும்புவதில்லை. அவர்கள் தாம் மிகுந்த பலசாலிகள், அதனால் அவர்களால் சரண் அடைய முடிவதில்லை என்று நினைக்கிறார்கள்.

என்னுடைய சொந்தக் கணிப்பு என்னவெனில், ஒரு மனிதன் எவ்வளவுக்கெவ்வளவு பலசாலியாக இருக்கிறானோ அவ்வளவு எளிதாக அவன் சரண் அடைகிறான். பலசாலியான மனிதன்தான் எளிதாகச் சரண் அடைகிறான். காரணம், அவன் மற்றவர்களின் மீது நம்பிக்கை வைக்கிறான். அவனுக்குத் தன் மீதே நம்பிக்கை இருக்கிறது. அவனால்தான் விட்டுக் கொடுக்க முடியும் என்று தெரியும். அவன் யாரைப் பார்த்தும் பயப்படுவதில்லை. அவன் அறியாத ஒன்றினைக் கண்டுபிடிக்கத் தயாராக இருக்கிறான். புதியதாக ஒன்றிற்குப் போகத் தயாராக இருக்கிறான். அவன் தெரியாத ஒன்றிற்குச் செல்லும் பயணத்தை அனுபவித்து ரசிக்கிறான். அவன் அதனைச் சுவைக்க விரும்புகிறான். அதனுடைய விலை என்னவாக இருந்தாலும், அபாயம் எதுவாக இருப்பினும் அவன் அதை எதிர்கொள்ள விரும்புகிறான். அவன் அபாயத்திலேயே இருக்க விரும்புகிறான்.

நம்பிக்கை உள்ள மனிதன் எப்போதுமே அபாயத்தில் தான் வாழ்கிறான். அபாயம்தான் அவனது புகலிடம். பாதுகாப்பின்மைதான் அவனது பாதுகாப்பு. அவனது அபாரமான தேடும் தாகம்தான் அவனது காதல். அவன் கண்டுபிடிக்க முயல்கிறான், வாழ்க்கையின் அடித்தளத்தை,

அல்லது வாழ்க்கையின் உச்சியை. அவன் அது என்னவென்று கண்டுபிடிக்க விரும்புகிறான். "என்னைச் சுற்றி என்ன நிகழ்கிறது? நான் எதை 'நான்' என்று அழைத்துக் கொண்டே இருக்கிறேன்? நான் யார்?" –இவை அவனது கேள்விகள்.

ஒரு பலமான மனிதன் சரண் அடையத் தயாராக இருக்கிறான். அவன் தான் பயப்படத் தேவையில்லை என்று தெரியும். "நான் வாழ்க்கையைச் சேர்ந்தவன். நான் இங்கு அன்னியன் அல்ல. வாழ்க்கைதான் என்னை ஈன்றெடுத்தது. வாழ்க்கை எனக்கு அன்னியமாகிப் போகாது. வாழ்க்கைதான் என்னை இங்கே கொண்டு வந்தது, நான் வாழ்க்கையினால் உருவாக்கப்பட்டவன். வாழ்க்கை எனக்கென்று விதிக்கப்பட்ட விதியை என் வழியே நிறைவேற்றிக்கொள்ளும்" என்று நினைக்கிறான்.

பலமான மனிதன் 'விதி என்பது இருக்கிறது' என்றே நினைக்கிறான். "நான் வாழ்க்கைக்குத் தேவையாக இருக்கும் விஷயங்களை நிறைவேற்றவே இங்கு இருக்கிறேன். அவற்றை யாராலும் என்னைத் தவிர நிறைவேற்ற முடியாது. அப்படியில்லை எனில், ஏன் உருவாக்கப் பட்டிருக்கிறேன்?" அதனால் அவன் எப்போதுமே இருட்டுக்குள் செல்லத் தயாராக இருக்கிறான். தேடுவதற்கு, கேட்பதற்கு. இதனைப் புத்தர் ஷத்தா என்று சொல்கிறார். நம்பிக்கை உணர்வு. அதனை TRUST என்று மொழிபெயர்த்தால் சரியாக இருக்கும்.

**ஒரே ஒரு தூய்மையான உயர்ந்த நம்பிக்கை (Serene)...** அவர் இதனுடன் வேறு ஒரு நிபந்தனையையும் சேர்க்கிறார். உயர்ந்த நம்பிக்கை. நீங்கள் நம்பிக்கை உணர்வு வைத்திருக்கலாம். அது உயர்ந்ததாக இருக்காது. அது முழுவதும் கலகம் நிறைந்ததாக இருக்கும். அது உதவாது. அவை உங்களை உயரத்துக்கு எடுத்துச் செல்லாது.

நம்பிக்கை உணர்வு என்பது அசைவற்ற நிலையில் இருந்து வரவேண்டும். சப்தத்திலிருந்து அல்ல. நம்பிக்கை உணர்வு என்பது நம்பிக்கை (Belief) அல்ல. நம்பிக்கை மிகவும் சப்தமானது.

நீங்கள் ஒருவருக்கு எதிராக ஒரு நம்பிக்கை வைத்துக் கொள்ளுங்கள். அது முரண்பட்டதாகத்தான் இருக்கும். அது ஒரு மாற்றாகத்தான் இருக்கும். ஆயிரக்கணக்கான நம்பிக்கைகள் உங்களைச் சுற்றி உங்களின் கவனத்தைக் கவர உலவிக்கொண்டிருக்கின்றன. கிறிஸ்துவ, ஹிந்து, முகம்மதிய, புத்த, சமண ஆயிரக்கணக்கான நம்பிக்கைகள். இதுவரை முந்நூறு மதங்கள் உலகில் இருக்கின்றன. அவற்றின் உட்பிரிவுகள் இன்னும் நிறைய இருக்கின்றன. அவை எல்லாம் உங்களுக்காகப் போட்டி போடுகின்றன. அவை உங்களை அடைய விரும்புகின்றன. இயற்கையாக உங்கள் மனம் மிக மிக ஆடிப் போய்ச் சஞ்சலப்பட ஆரம்பிக்கிறது. எதைத் தேர்ந்தெடுப்பது? எதை விடுவது? யாரிடம் பேசுவது?

இந்தக் குழப்பமான சப்தத்துக்கிடையில் ஏதோ வொன்றைத் தேர்ந்தெடுத்தாலும்கூட உங்களது மனத்தின் ஒரு பகுதி திரும்பத் திரும்பச் சொல்கிறது: "நீ சரியாகச் செய்யவில்லை." அந்தப் பகுதி திரும்பத் தாக்கும். விரைவாகவோ அல்லது தாமதமாகவோ அந்தப் பகுதி தன்னை உறுதிப்படுத்திக்கொள்ளும். உங்களைத் தொந்தரவு செய்யத் துவங்கும். நீங்கள் பிளவுபட்டுள்ளதாக உணருவீர்கள்.

புத்தர் ஓர் உயர்ந்த நம்பிக்கை உணர்வு வேண்டும் என்கிறார். உயர்ந்த நம்பிக்கை உணர்வு என்றால் என்ன? நம்பிக்கை உணர்வு என்பது மாற்று ஏற்பாடு இருக்கும் போது உருவாவதில்லை. அது புரிந்து கொள்ளுதலின் பேரில்தான் உருவாகிறது. அன்றொரு நாள் சிந்தனாவிடமிருந்து ஒரு கடிதம் வரப்பெற்றேன். அவள் ஒரு கிறிஸ்துவக்

கன்னிகாஸ்திரீ. அவள் மிகவும் உடைந்து போயிருந்தாள். அவளுக்கு இங்கேயே இருப்பதா? அல்லது திரும்பிக் கன்னிகாமடத்துக்கே போய்விடுவதா? என்று குழப்பம். இப்போது எந்த முடிவெடுத்தாலும் அவள் குழப்பத்தில் தான் முடிவாள். அவள் இங்கேயே இருப்பதாக முடிவெடுத் தால் அவளுடைய ஒரு மனம் அவளுடன் சண்டையிடும். அவள் கன்னிகாமடத்துக்குச் செல்ல முடிவெடுத்தால் அவளின் இன்னொரு மனம் இங்கேயே இருக்கலாமே என்று நினைக்கும்.

இப்போது அவள் எடுக்கும் முடிவு தவறாகத்தான் போகும். அவளுடைய மாற்று முடிவு குழப்பத்தினாலும் ஆர்வத்தாலும்தான் இருக்கும். அது ஒரு வகையான அழுத்தம்தான். அவள் கன்னிகா மடத்துக்குப் போக முடிவெடுத்தால் அவள் என் மீது உள்ள அன்பை அழுத்தி வைத்தாற் போலாகிறது. அவள் என்னைத் தேர்ந்தெடுத் தால் அவளுடைய கன்னிகா மடத்தின் மீது உள்ள ஆசையை அடக்கினாற் போலாகும். தனிமைப்படுதல், பாதுகாப்பு, வசதி, கன்னிகாமடத்தில் உள்ள வசதி.

இப்போது புத்தராயிருந்தால் சிந்தனாவுக்கு என்ன சொல்லியிருப்பார்? புத்தர் தியானம் செய்யச் சொல்லி யிருப்பார். முடிவெடுக்கச் சொல்லியிருக்கமாட்டார். அவசரம் வேண்டாம். தேர்ந்தெடுக்காதே. தியானம் செய். பிரார்த்தனை செய். மேலும் மேலும் மௌனமாக இரு. ஒரு கணம் வரும். ஓர் உயர்ந்த கணம். அப்போது தேர்வு கிடைக்கும். நீங்கள் முடிவுகளை உங்களது ஒரு பகுதிக்கு எதிராக எடுக்கவில்லை. அதுவே அந்த உயர்ந்த கணத்தின் விளைவாக ஒரு தாமரை மலரினைப் போல மலர்ந்தது. அது ஒரு முழுமையான மலர்ச்சி. நீங்கள் உங்களிடமே இருக்கிறீர்கள். அது எந்த வித மாற்று ஏற்பாடுகளின் விளைவும் அல்ல. அது உங்களுடைய மனமேதான்.

இப்போது நீங்கள் கிழிந்து போகவில்லை. இதைத்தான் புத்தர் உயர்ந்த நம்பிக்கை என்கிறார். அவர் சொல்கிறார்: "ஒரே ஓர் எண்ணம், உயர்ந்த நம்பிக்கை உணர்வு ஒரு மனிதனை மாற்றுவதற்குப் போதுமானது."

இதுவே சிந்தனாவுக்கு எனது ஆலோசனை. இன்று அவள் மிகவும் குழப்பமாகவும், கவலையுடனும் இருக்கிறாள். இது டிசம்பர் இருபத்தைந்தாம் நாள். அவள் உடைந்து போவாள். ஆனால், நான் அவளுக்கு இப்போது என்னைத் தேர்ந்தெடுப்பதா அல்லது கன்னிகாமடத்தைத் தேர்ந்தெடுப்பதா என்பது பற்றி ஒன்றும் சொல்ல மாட்டேன். எதையும் தேர்ந்தெடுக்காதே. நீ தியானம் செய். பொறுமையோடு காத்திரு. கடவுள் உனக்காகத் தேர்ந்தெடுக்கட்டும். நீ தியானம் செய். நீ எப்படித் தேர்ந்தெடுக்க முடியும்? நீ அவ்வளவு புத்திசாலி ஆகவில்லை. பிரார்த்தனை செய். காத்திரு.

தந்திரங்கள் செய்யாதே. ஏனெனில், உன்னுடைய மனத்துடன் தந்திரம் செய்யலாம். நீ உன்னுடைய கருத்தை வைத்துக் கொள்ளலாம். நீ உண்மையிலேயே தேர்ந்தெடுக்கலாம். அதன்பின் நீ காத்திருப்பாய். அதன்பின் பின்புறக் கதவு வழியாக நீயே குரல் கொடுத்துவிட்டு அது கடவுளிடமிருந்து வந்ததாக நம்பலாம். இல்லையா? நான் உன்னைத் தேர்ந்தெடுக்காதே என்று சொல்லும்போது தேர்ந்தெடுக்காதே என்று பொருள். தேர்ந்தெடுப்பதைப் பற்றி மறந்துவிடு. நீ எப்படித் தேர்ந்தெடுப்பாய்?

தியானம் செய். உயர்ந்தவளாக மாறு. மௌனமாக இரு. உறைந்து போ. ஒருநாள் உன் மனத்தில் எண்ணமே இல்லாது போகும். திடீரென்று உனக்குள் ஏதோ ஒரு முடிவெடுத்தது போன்று தோன்றும். அதை நீ எடுத்தது போல் தோன்றாது. அதுவே கடவுளின் முடிவு. அது எப்படியிருந்தாலும் அதுதான் நல்லது.

சுபூதி இவ்வாறு பதில் சொன்னார்:

*"தாங்கள் சொன்னதை நான் புரிந்து கொண்ட அளவுக்கு அப்படி எதுவுமே இல்லை. ஏன் அப்படி? ததாகதர் பூரணமாக உணர்ந்துள்ள, விளக்கிக் காட்டக்கூடிய தர்மம், பற்றிக்கொள்ள முடியாத ஒன்று; பேசப்பட முடியாத ஒன்று. அது ஒரு தர்மமும் அன்று; தர்மம் இல்லாமையும் அன்று. ஏன் அப்படி?"*

*"அவர்கள், ததாகதரின் புத்தப் பார்வையால், அடையாளம் காணப்படுவார்கள் சுபூதி. ததாகதரின் புத்த விழியால் அவர்கள் முழுமையாக உணரப்படுவார்கள் சுபூதி."*

இப்போது இரண்டு விஷயங்களைப் புரிந்துகொள்ள வேண்டும். ஒன்று தத்தகதா என்ற வார்த்தை; அது ஒரு வினோதமான வார்த்தை. அதற்கு இரண்டு அர்த்தங்கள் உண்டு. அவை ஒன்றுக்கொன்று எதிரான அர்த்தம் உள்ளவை. இரண்டுமே முற்றிலும் வேறு வேறு அர்த்தமுள்ளவை. அது ஒரு வினோதமான வார்த்தை. முதல் அர்த்தம் தத்–அகாத. இதற்கு 'இப்படி வந்தது' என்று பொருள். இரண்டாவது பொருள் ததகதா. இதற்கு 'இப்படிப் போய்விட்டது' என்று பொருள். இப்படி வந்தது, இப்படிப் போயிற்று என்று பொருள். ஒரு சில மக்கள் முதல் அர்த்தத்தைத் தேர்ந்தெடுக்கிறார்கள். இதற்கு ஒரு மனிதன் அவனாக வரவில்லை. அவனுக்கு இங்கு வருவதற்கான நோக்கம் எதுவுமில்லை. ம்ம்? இதைத்தான் கிறிஸ்துவர்கள் கிறிஸ்துவிடம் விரும்புகிறார்கள். அவர் கடவுளால் அனுப்பப்பட்டவர். அவருக்கு நோக்கம் ஏது மில்லை. அவருடைய ஆசைகள் எதுவும் இங்குத் திருப்திப் படுத்தப்பட வேண்டியதில்லை. அவர் ஒரு தூதுவராக வந்தார்.

இதையே முகம்மதுவிடமும் முகம்மதியர்கள் விரும்பு கிறார்கள். அவர்கள் அவரைப் பைகாம்பர், தூதுவன்

என்கிறார்கள். அவர் தம்முடைய சொந்த விருப்பங்களைப் பூர்த்தி செய்து கொள்வதற்காக வரவில்லை. அவர் மிகவும் திருப்தியானவர். அவருக்கு இங்கு இருப்பதற்கான காரணம் இல்லை. மற்றவர்கள் இங்குக் காரணத்தோடு இருந்தார்கள். அவர்கள் காரணமின்றி வரவில்லை. அவர்கள் தமது ஆசையின் காரணமாக இங்கு வந்திருக்கிறார்கள். அவர்கள் வர விரும்பினார்கள். அதனால்தான் வந்தார்கள்.

புத்தர் வந்தார். அவர் விரும்பி இங்கு வரவில்லை. அவரை அனுப்பி வைத்தது வாழ்க்கையே. அவரது வாழ்க்கைதான் வடிவமெடுத்து அவர் உருவில் வந்தது. அவர் வரவிற்குக் காரணம் கிடையாது. நோக்கம் கிடையாது. சொந்த விருப்பங்கள் கிடையா. அதுவே முதல் அர்த்தம் தத்தகதா இப்படி வந்தார்.

இரண்டாவது அர்த்தத்தைச் சில பேர் தேர்ந்தெடுக்கிறார்கள். இப்படித்தான் போனார். இதற்குப் பொருள் ஒருவர் இங்கிருந்து ஏற்கெனவே போய்விட்டார். புத்தரது வாழ்க்கையை ஆழ்ந்து கவனித்தால் அங்கு யாருமே இருக்க மாட்டார்கள். அவர் வசிக்குமிடத்தை விட்டுச் சென்று விட்டார். அவர் உடலில் மேலும் வசிக்கவே இல்லை. அவர் உடலில் பிரசன்னமாகவே இல்லை. அவர் இல்லாது போய்விட்டார். பூரணமாக அந்தக் கரைக்கு. அவரது உண்மையான வாழ்க்கையே அந்தக் கரையில்தான். இந்தக் கரையில் அவரது நிழல்தான் நகர்ந்துகொண்டிருக்கிறது.

ஆனால், என்னுடைய விருப்பம் இரண்டையும் ஒன்றாகச் சேர்த்துத்தான். நான் தத்தகதா என்ற வார்த்தையை 'இப்படி வந்தார், இப்படிப் போனார்-காற்றைப் போல' என்றுதான் மொழி பெயர்ப்பேன். காற்று தன்னுடைய விருப்பமின்றித்தான் வரும். அதற்குத் தூண்டுதல் எதுவும் தேவையில்லை. அது சூழ்நிலைக்கு,

இயற்கைக்கு முற்றிலுமாகச் சரணடைந்து விடுகிறது. இயற்கை எப்போதெல்லாம் அனுப்புகிறதோ அதுவும் வருகிறது. எப்போதெல்லாம் தேவையிருக்கிறதோ, அப்போதெல்லாம் வருகிறது.

அதற்கென்று இலக்குகள் இல்லை. அது, "நான் வடக்குத் திசைக்குத்தான் செல்வேன். நான் தென்திசைக்குச் செல்லமாட்டேன். தென்திசை எனக்குச் சோர்வை அளித்துவிட்டது" என்று சொல்லாது. அல்லது, "நான் கிழக்குத் திசைக்குச் செல்கிறேனே. ஏனெனில் நான் புனிதமான காற்று" என்றும் சொல்லாது. அல்லது, "நான் மேற்குத் திசைக்கு மட்டுமே செல்வேன். ஏனெனில் நான் வாழ்க்கையை அனுபவிக்க விரும்புகிறேன்" என்றும் சொல்லாது. அந்தக் காற்று எதையும் சொல்லாது. எங்கெங்கெல்லாம் தேவை இருக்கிறதோ அங்கெல்லாம் காற்றுப் போகும். இப்படி வந்தது. அப்படிப் போயிற்று.

அது ஓர் இடத்துக்குப் போகும்போது அது அங்கேயே இணைந்து விடுவதில்லை. ஒரு காற்று வருகிறது. போகிறது. அது, "நான் இப்போது வந்துவிட்டேன். நான் இங்கு வருவதற்கு மிகுந்த சிரமப்பட்டுவிட்டேன். நான் போக மாட்டேன். நான் இங்கேயேதான் இருப்பேன். ஒரு நீண்ட பயணத்திற்குப் பிறகு பல கடல்களையும், மலைகளையும் கடந்து நான் இங்கு வந்திருக்கிறேன். இப்போது நான் போகமாட்டேன். நான் இங்கேயே தங்கிவிடுகிறேன். இல்லையெனில் நான் இங்கு வந்ததன் காரணம் என்ன?" என்று சொல்லாது. காற்று வரும், போகும்.

புத்தர் காற்று மாதிரி. அவர் வந்தார். அப்படியே போனார். பற்றுதல் எதுவுமில்லை. அவர் வந்ததும், போனதும் எல்லாமே விவரிக்க முடியாதவை. அவரது வருகையும், செல்கையும் எதிர்பாராதது. விளக்க முடியாதது. ஏனெனில், காரணங்கள்தாம் விளக்கப்

படலாம். நோக்கங்கள் விளக்கப்படலாம். அவரது முடிவான ஞான நிலையில், அந்தத் தூய்மையில், பூரண நிலையில், விஷயங்கள் மர்மமாக, யாவும் திடீரென்று சாதாரணமாக நிகழ்கின்றன. ஒருவருக்கும் ஏன் என்று தெரியாது. யாரும் ஏன் என்று கேட்கத் தேவையில்லை. எல்லாமே அழகாக, ஓர் ஆசீர்வதிக்கப்பட்டதாக இருக்கின்றது. வருகை ஓர் ஆசீர்வதிக்கப்பட்ட விஷயம். அவரது உடலைவிட்டு அகன்றது ஓர் ஆசீர்வதிக்கப்பட்ட விஷயம். ஒரு மனிதனாகப் பிறந்தது ஆசீர்வதிக்கப்பட்ட விஷயம். ஒரு மனிதனாக இல்லாமல் மறைந்து போனது ஆசீர்வதிக்கப்பட்ட விஷயம். எல்லாமே ஆசீர்வதிக்கப் பட்டவைதாம்.

ஞானத்தின் சுவை என்பதும்கூட ஆசீர்வதிக்கப்பட்ட விஷயம்தான். என்ன நடந்திருந்தாலும் அதில் எந்தவித வித்தியாசமுமில்லை. அது ஒரு பொருட்டே அல்ல. வேறு மாற்றுக் கிடையாது. நோக்கம் எதுவுமில்லை. ஆசை யில்லை. நிகழ்ச்சிகள் அதன் போக்கில் நிகழ்ந்து கொண்டி ருக்கின்றன. அவை மிகவும் மர்மமானவை. அதனால்தான் புத்தரை விளக்கவே முடியாது. புத்தரை அனுபவிக்கலாம். அதனால்தான் சீடர் முறையமைப்பு.

சில நேரங்களில் மக்கள் வந்து கேட்கிறார்கள்: "சன்னியாசி ஆவதன் நோக்கம் என்ன?" தேவை என்ன வெனில் சன்னியாசி ஆகவில்லையெனில் உங்களால் என்னை உணர, சுவைக்க (Taste) முடியாது. சன்னியாசி ஆகாமல் என்னிடம் நெருக்கமாக வரவே முடியாது. உங்களுக்கு அந்த உணர்வுபூர்வமான அனுபவம் அப்போதுதான் கிடைக்கும்.

சன்னியாசம் என்பது 'தான்' என்பதை என்னிடம் அளிப்பது (empathy). முழுவதுமாக என்னிடமே இருப்பது. தன்னுடைய பாதுகாப்பை விட்டுவிட்டு என்னிடம்

இருப்பது, என்னிடம் நெருங்கி வரும்போது என்னுடைய வெறுமை (nothingness) உங்களிடம் பொங்கி வழியும். இனிமேல் எல்லைகளே இல்லாத அளவுக்கு நெருங்கி வருதல். அப்போது நாம் ஒருவர் மேல் ஒருவராக இருக்கும் அளவுக்கு ஆகிவிடுவோம். அந்த ஓர் அனுபவத்துக்குச் சன்னியாசம் தேவை. ஒரு புத்தரை அறிவதற்கு ஒரே வழி தான். வேறு வழி இல்லை.

மற்றொன்று நீங்கள் புரிந்துகொள்ள வேண்டியது என்னவெனில், "நான் புத்தரின் கண்கள் வழியே பார்த்தேன். நான் புத்தரின் உணரும் சக்தி வழியே உணர்ந்தேன்" என்று சொல்லும்போது, புத்தரின் கண்கள், புத்தரின் உணரும் சக்தி என்றால் என்ன? யோகத்தில் மூன்றாவது கண் என்று சொல்லப்படுகிறதே, இந்துக்கள் சிவ நேத்திரம் என்று சொல்கிறார்களே, சிவனின் கண்கள், அதுதான் புத்தரின் புனித நூல்களில் புத்தரின் கண் என்று சொல்லப்படுகிறது.

உங்களுக்கு இரண்டு கண்கள் இருக்கின்றன. அவை இரட்டை என்பதற்கான அடையாளமாக இருக்கிறது. நீங்கள் பிளவுபடக்கூடியவர்கள். பிளவுபடாத பார்வையை, மூன்றாவதாக எழும் ஒரு பார்வையை, ஒன்றாய்ப் பார்க்கும் பார்வையை அடையும் போது, வாழ்க்கையின் ஒருமையைக் காண முடியும். இது, நீங்கள் ஒரு கண்ணாடியை உடைத்தவுடன் அதில் உங்களது முகத்தைப் பார்த்தால் அதில் நிறைய முகங்கள் தெரியுமே, அது போல. உங்களுக்கு ஒரே முகம்தான் இருக்கிறது. ஆனால் உடைந்த கண்ணாடி ஆயிரம் முகங்களைக் காண்பிக்கிறது. பழையபடி அந்தக் கண்ணாடியைச் சேர்த்தால் ஒரே முகம் உருவாகிறது.

உண்மை என்பது ஒன்றுதான். ஆனால் நமக்கு இரண்டு கண்கள். அதனால்தான் எங்குமே உண்மை பிளவுபட்டு

நிற்கிறது. உதாரணத்துக்கு நீங்கள் ஒன்றைக் காதல் என்கிறீர்கள். மற்றொன்றை வெறுப்பு என்கிறீர்கள். உண்மையில் அவை இரண்டுமே ஒன்றுதான். காதலும், வெறுப்பும் அவற்றை விளக்கச் சரியான வார்த்தைகள் அல்ல. சக்தி ஒன்றுதான். காதல்-வெறுப்பு. இந்த (and) 'உம்'மை விட்டுவிட வேண்டும். உண்மையில் இந்த இரண்டு வார்த்தைகளுக்கு நடுவில் ஒரு சிறிய கோடுகூடப் போடக் கூடாது. காதலும் வெறுப்பும் ஒரே வார்த்தை. இரவும் பகலும் ஒரே வார்த்தை. வாழ்வு சாவு ஒரே வார்த்தை. துயரம் மகிழ்ச்சி ஒரே வார்த்தை. வலி சந்தோஷம் ஒரே வார்த்தை. எண்ணம் மனம் ஒரே வார்த்தை. நமக்கு இரண்டு கண்கள் இருக்கவே இதனை இரண்டாகப் பிரித்துவிட்டு அதன்பின் சர்ச்சை செய்து கொண்டே போகிறோம்.

இப்போது ஐந்தாயிரம் வருடங்களாக மனிதன் உடலா அல்லது ஆத்மாவா என்று சர்ச்சை செய்து கொண்டிருக் கிறான். அவை இரண்டு விஷயங்கள் அல்ல. உடல் என்பது ஆன்மாவின் மிக வெளிப்புறத்தில் அமைந்திருக்கும் போர்வைதான். ஆன்மா என்பது உடலின் மையத்தில் அமைந்திருக்கும் ஒரு பகுதிதான். அவை இரண்டல்ல. கடவுளும், உலகமும் இரண்டல்ல. படைத்தவனும் படைப்பும் ஒன்றுதான்.

இதுவே புத்தர் கண்கள் என்பது. உங்களது இரண்டு கண்களும் ஒன்றுகலந்து ஒரு மையப் புள்ளியில் சங்கமித்து உருகி ஒன்றாக ஆகுமே அதுவாகும். ஏசு சொல்கிறார்: "உங்களுடைய இரண்டு கண்களும் ஒன்றாகப் போகும்போது நீங்கள் முழுவதுமாக ஒளியால் நிறைக்கப் படுவீர்கள்." -அதுதான் ஞானம் என்பது.

ஏசு சொன்ன சில அழகிய வார்த்தைகள்: நீங்கள் இரண்டை ஒன்றாக்க ஆரம்பிக்கும்போது, உங்களுடைய

உள்ளத்தை வெளிக்காட்டும்போது, வெளியை உள்ளாக்கும் போது, மேல் கீழாகும்போது, ஆண் ஆணாக இல்லாது, பெண் பெண்ணாக இல்லாது ஆணும் பெண்ணும் ஒன்றாக மாறி போகும்போதுதான் ராஜ்யத்தில் நுழைய முடியும்.

மறுபடியும்: "ஒருவன் இரண்டு குதிரைகளின் மேல் சவாரி செய்ய முடியாது. ஒருவன் இரண்டு அம்புகளை ஒரே சமயத்தில் எய்ய முடியாது. ஒருவன் இரண்டு எஜமானர்களிடம் விசுவாசமாய் இருக்க முடியாது. இல்லையெனில் ஓர் எஜமானருக்குக் கீழ்ப்படிந்து விட்டு மற்றவரை அவமதிப்புச் செய்துவிடுவான். ஆனால் உங்களது கண்கள் இரண்டும் ஒன்றாக இருந்தால் அதன்பின் நீங்களே ஒளிமயமாக ஆகிவிடுவீர்கள்."

புத்த சம்பிரதாயத்தில் ஒருமுகப் பார்வை, பிரிந்திராத பார்வை, முற்றிலுமான பார்வை, முழுமையான பார்வை, இதுவே புத்தரின் கண் என்று அழைக்கப்படுகிறது. புத்தரின் கண் வழியே எதைப் பார்த்தாலும் அது புத்தரின் உணர்தல் என்று பொருள். உங்களுக்குப் புத்தரின் கண் இருந்து அதன் வழியே அந்த ஒருமுகப் பார்வை வழியே வாழ்க்கையைப் பார்த்தால் எல்லாமே ஒற்றுமையாகத் தெரியும். உங்களுக்கு எல்லாவற்றையும் முன்பு இருந்தது போல இல்லாமல் புரிந்துகொள்ள முடியும். அதற்கு முன்பு உங்கள் அறிவு பாகுபாடானது. பிளவுபட்டது. ஒரு பக்கம் மட்டும் பார்க்கக் கூடியது.

இப்போது சூத்திரம்:

*"சுபூதி, அதற்குக் காரணம் என்ன தெரியுமா?"*

*அந்தப் போதிசத்துவர்களிடம், சுயம் பற்றிய எந்த உணர்வும் இல்லை; இருப்பைப் பற்றிய எந்த உணர்வும் இல்லை; உயிர் பற்றி எந்த உணர்வும் இல்லை; ஒரு மனிதன்*

*என்ற உணர்வும் இல்லை; அல்லது அந்தப் போதி சத்துவர்களுக்குத் தர்மம் பற்றிய எந்த உணர்வும் இல்லை; தர்மம் அற்ற நிலை பற்றிய உணர்வும் இல்லை.*

*உணர்வற்ற நிலை, அல்லது உணர்வு இல்லாத நிலை அவர்களிடம் நிலை கொண்டு விடும்.*

*ஏன் அப்படி? சுபூதி, அவர்கள் தர்மம் பற்றிய உணர்வோ, அல்லது தர்மமற்ற உணர்வோ பெற்றுவிடுவார்களானால், அவர்கள் சுயத்தை, இருப்பை, உயிரை அல்லது ஆளைப் பற்றிக்கொள்ளும் நிலை ஏற்பட்டுவிடும்.*

*ஏன் அப்படி? ஏனென்றால், ஒரு போதிசத்துவர், தர்மத் தையோ, தர்மமின்மையையோ பற்றிக்கொள்ளக்கூடாது.*

*அதனால், இந்தக் கருத்து, ததாகதரால், ஓர் உள்ளர்த்தத் தோடு கற்பிக்கப்பட்டுள்ளது. அது: 'தர்மப் பேருரையை அறிந்தவர்கள் படகில் ஏறப் போகிறவர்களைப் போல. அவர்கள் தர்ம மூட்டையைக் கைவிட்டுவிட வேண்டியது தான்; சகல தர்மங்களையும். அதே சமயம், தர்மம் இல்லா நிலையையும் கூட!'*

இந்த எட்டு விஷயங்கள்தான் ஞானத்திற்கான எட்டு தடைகள். அவைகளை புரிந்துகொள்ள வேண்டும். முதலில் இவை. போதிசத்துவாவைப் பற்றிய விளக்கங்கள். யார் போதிசத்துவா? வாழ்க்கை பற்றிய இந்த எட்டுவிதமான தவறான அணுகுமுறைகளையும், தவறான நோக்கங்களை யும் கடந்தவர்தான் அவர்.

முதலாவது, சுயத்தைப் பற்றிய எந்த உணர்வும் இருக்காது. இந்த நான்கு வார்த்தைகளும் புரிந்துகொள்ளப் பட வேண்டியவை. அவை கிட்டத்தட்ட ஒன்று போன்றவை. ஆனால் கிட்டத்தட்டதான்: சுயம், இருப்பு, ஆன்மா, மனிதன். அகராதிகளில் அவை கிட்டத்தட்ட ஒன்றுதான். ஆனால் புத்தர் அவற்றிற்கு வேறுபட்ட

வண்ணங்கள் கொடுக்கிறார், அவற்றுக்கு வேறுபட்ட வண்ணங்கள் உண்டு. சிறிதளவே வித்தியாசமானது.

முதலில் தான் (Self) என்பதன் பொருள் அகந்தை, ego -நான், என்னுடைய, எனக்கு, என்னை உருவாக்கிய ஐந்து மூலங்கள்தாம் அவ்விதம் குறிக்கப்படுகிறது. மனிதன் ஐந்து மூலகங்களால் ஆனவன். இந்த மூலங்களின் கூட்டுத்தான், மனிதன் என்பவன். இந்த ஐந்தையும் தனித்தனியே பிரித்து எடுத்துவிட்டால் மனிதன் மறைந்துபோவான். புத்தர் சொல்கிறார், இந்த ஐந்தைத் தவிர வேறு ஏதும் இல்லை. இது ரதம் மாதிரி. நீங்கள் ரதத்தைப் பிரித்து எடுத்துவிடுங்கள். சக்கரத்தைத் தனியே எடுங்கள். குதிரைகளைத் தனியே எடுங்கள். எல்லாவற்றையும் தனியே எடுத்த பின்பும் அந்த ரதம் எங்கே என்று அறிய விரும்பினால், ரதம் மறைந்து போய்விட்டது என்று அறிந்துகொள்ள வேண்டியதுதான். அந்த ரதம் அந்தப் பகுதிகளால் ஆனது.

இது புத்தரின் மிக மகத்தான ஒளிகளுள் ஒன்று. வேறு எந்த மதமும் இந்த உயரத்தைத் தொடவில்லை. மற்ற எல்லா மதங்களுமே 'தான்' என்பதைப் பற்றிய ஓர் எண்ணத்தோடு, அகந்தையைப் பற்றிய ஓர் எண்ணத்தோடு நின்றுவிட்டன. எவ்வளவு மேன்மையாக இருந்தாலும், எவ்வளவு புனிதமாக இருந்தாலும், எவ்வளவு மாசற்று இருந்தாலும் அகந்தையைப் பற்றிய ஒரு நினைவு மட்டும் மீதம் இருக்கும். நீங்கள் இதை, 'தான்' என்று சொல்லுங்கள். ஆத்மா என்று சொல்லுங்கள். நீங்கள் என்னவென்று அழைக்கிறீர்கள் என்று கவலையில்லை. புத்தர் மிகவும் தெளிவாக இருக்கிறார். உங்களுடைய ஆழ்மனதின் மையத்தில் வெறுமைதான் இருக்கிறது. அங்கு அகந்தை இல்லை.

அதனால் முதல் 'நான்' என்ற வார்த்தையின் பொருள் பயன்படுத்தப்படுவதைப் பொருத்ததாகும். இது உண்மை

யோடு தொடர்பில்லாதது. அது தேவையானது. புத்தர்கூடப் பயன்படுத்துகிறார். தெரிவிப்பதற்கு ஏதுவான வார்த்தையாகும். ஆனாலும் அது உண்மையைக் குறிக்காது.

அதனால் முதல் 'நான்' என்பதற்குப் பொருள் 'நான் இந்த மூலகங்களிலிருந்து வேறானவன்.' புத்தர் சொல்கிறார்: நீ அங்கில்லை. அந்த மூலகங்கள்தாம் அங்கிருக்கின்றன. நீ முற்றிலும் வெறுமையானவன். இரண்டாவது (Being) மனிதன். இருப்பு என்றால் தனித்தன்மை (individuality). சில சமயங்களில் இது போன்று எண்ணம் எழும். தான் ஒரே மாதிரி இருப்பதாகத் தோற்றம் கொள்கிறாற்போல நீங்கள் சொல்கிறீர்கள்: "நான் முன்பு குழந்தையாக இருந்தேன். இப்போது வாலிபன். கூடிய சீக்கிரமே வயதான மனிதன் ஆகிவிடுவேன்." நீங்கள் உறுதியாக இருப்பது போல உங்களுக்கு எண்ணம் இருக்கிறது. ஒரு நாள் நீங்கள் குழந்தையாக இருந்தீர்கள். பின்னர் வாலிபனாக வளர்ந்தீர்கள். ஆனாலும் நீங்கள் அதே மனிதர்தான். பின்னர் நீங்கள் வயதானவராக ஆனாலும் அதே மனிதர்தான். புத்தர் சொல்கிறார்: ஒவ்வொரு கணமும் நீங்கள் மாறிக் கொண்டேயிருக்கிறீர்கள்.

அவருடைய கருத்து ஹிராக்ளிடஸ்ஸின் கருத்துடன் ஒத்துப்போகிறது. நீங்கள் அதே நதியில் இரண்டு முறை கால் நனைக்க முடியாது. நதி ஓடிக்கொண்டே இருக்கிறது. நீங்கள் குழந்தையாக இருந்தபோது வேறு நபர். இப்போது வேறு நபர். நீங்கள் வயதாகும்போது வேறு மனிதர். உண்மையில் ஒவ்வொரு நாளும் நீங்கள் வேறு. ஒவ்வொரு கணமும் வேறு.

ஏன் இந்த 'நான் அதே மனிதர்' என்ற எண்ணம் நிலவுகிறது? இது நிலவக் காரணம், மாற்றம் என்பதே நுணுக்கமானது. உங்களது பார்வை அவ்வளவு நுணுக்கமானது அல்ல. மாலையில் ஒரு மெழுகுவர்த்தியை ஏற்றி

விட்டு அது இரவெல்லாம் எரிந்த பின்னர் காலையில் வந்து அதனை அணைக்கும்போது, 'நான் ஏற்றிய அதே ஜுவாலைதான் இது' என்று சொல்லலாம். ஆனால் அதுவல்ல இது. ஜுவாலை தொடர்ச்சியாக மாறிக் கொண்டே இருக்கிறது. மறைந்துகொண்டேயிருக்கிறது. புதிய ஜுவாலை ஒவ்வொரு கணமும் உருவாகிறது. ஆனால், இரண்டு ஜுவாலைகளின் இடைவெளியில் ஒன்று மறைகிறது. ஒன்று எழுகிறது. அந்த இடைவெளி மிக நுணுக்கமானது. உங்களால் பார்க்கவே முடியாது. அதனால்தான் இந்தத் தனித் தன்மை நிலவுகிறது. புத்தர் வாழ்க்கையே ஓர் ஒழுங்குமுறை அல்லது வேலைக்கிரமம் (Process) என்கிறார். வாழ்க்கை என்பது ஒரு விஷயம் அல்ல. அது தொடர்ச்சியான ஓட்டம். வாழ்க்கை ஒரு ஆறு. புத்தர் சொல்கிறார்: நாம் யதார்த்தத்துக்கு உண்மை யாக இருக்க விரும்பினால் நாம் எல்லாப் பெயர்ச் சொற்களையும் மொழியிலிருந்து விட்டுவிட வேண்டும். வினைச் சொற்கள் மட்டுமே இடம் பெற வேண்டும். மரம் என்பது உண்மையல்ல. மரம் வளர்த்தல் (Treeying) என்பதே உண்மை. காதல் என்பது உண்மையல்ல. காதலித்தல் என் பதே உண்மை. வாழ்க்கை என்பதே வினைச்சொற்களால் ஆனது. பெயர்ச் சொற்களால் ஆனது அல்ல.

மூன்றாவதாக, ஆன்மா (Soul) மேலிருந்து ஒரு சக்தி உடலினுள் உறைகின்றது என்ற எண்ணம். ஒருங்கிணைக் கும், உயிர்ப்பிக்கும் ஒரு சக்தி மற்றெல்லாவற்றிலிருந்தும் வேறாக இருக்கின்றது. இதையும் கூடப் புத்தர் சொல்கிறார்: மேலிருந்து ஒரு சக்தி (Supra Force) என்பதே இல்லை. உன்னுள் ஒன்றுமே உறுதியாக இல்லை. நீங்கள் ஒரு வீடாக இருந்தால் உள்ளே ஒரு குடியிருப்பவரோ, அல்லது விருந்தாளியோ இருக்கலாம். உங்கள் உள்ளே இருப்பது எல்லாம் வெறும் தூய்மையான வெறுமைதான்.

நான்காவதாக, மனிதன் (Person) என்ற எண்ணம். ஒரு பிறவியிலிருந்து மறுபடி வேறு பிறவிக்கு இடம் பெயருதல் என்ற கொள்கையின் மீது நம்பிக்கை. புத்தர் இதை (Person) மனிதன் என்கிறார். நீங்கள் இறந்து மறுபடி உடனேயே மற்றொரு கர்ப்பப் பையினுள்ளே பிறப்பீர்கள். தொடர்ச்சி என்பது உண்டு. ஆனால் Person என்பது இல்லை. தொடர்ச்சி என்பது உண்டு. ஆனால் (Self) 'தான்' என்பது இல்லை. தொடர்ச்சி என்பது உண்டு. ஆனால் தனித் தன்மை (Individuality) என்பது இல்லை. தொடர்ச்சி என்பது உண்டு. ஆனால் ஆன்மா (Soul) என்பது இல்லை.

புத்தரின் பார்வை என்பதே முற்றிலும் அபூர்வமானதாக இருக்கிறது. இந்த ஆன்மீக தேசமான இந்தியாவில் கூடப் புத்தரின் கொள்கைகளை ஜீரணிக்க முடியவில்லை. புத்தர், மதத்தின் எல்லா அடித்தளங்களையுமே அழிப்பதற்குத் தீர்மானித்துவிட்டார் என்று அப்போது கருதினார்கள். அவர் முற்றிலும் வேறான பார்வையை அளித்தார். ஆன்மா, தான் என்பதைப் பற்றியெல்லாம் முற்றிலும் மாறான, மிக உயர்ந்த அர்த்தத்தை அளித்தார். ஏனெனில், இந்த வார்த்தைகளில் உங்களின் அகந்தை புதிய வழிகளில் ஒளிந்துகொண்டிருக்கிறது. அவை அகங்காரம் ஒளிந்து கொள்வதற்கும் தொடர்ந்து வாழ்வதற்குமான வெவ்வேறு வார்த்தைகளே.

*"சுபூதி, அதற்குக் காரணம் என்ன தெரியுமா?"*

*அந்தப் போதிசத்துவர்களிடம், சுயம் பற்றிய எந்த உணர்வும் இல்லை; இருப்பைப் பற்றிய எந்த உணர்வும் இல்லை; உயிர் பற்றி எந்த உணர்வும் இல்லை; ஒரு மனிதன் என்ற உணர்வும் இல்லை; அல்லது அந்தப் போதி சத்துவர் களுக்குத் தர்மம் பற்றிய எந்த உணர்வும் இல்லை; தர்மம் அற்ற நிலை பற்றிய உணர்வும் இல்லை.*

ஒரு மனிதன் தன்னுள் பார்க்கும்போது, உங்கள் மனசாட்சி உட்பக்கமாகத் திரும்பி உங்களையே பார்க்கும் போது காணப்படுவது வெறுமைதான்.

*"சுபூதி, அதற்குக் காரணம் என்ன தெரியுமா?"*

*அந்தப் போதிசத்துவர்களிடம், சுயம் பற்றிய எந்த உணர்வும் இல்லை; இருப்பைப் பற்றிய எந்த உணர்வும் இல்லை; உயிர் பற்றி எந்த உணர்வும் இல்லை; ஒரு மனிதன் என்ற உணர்வும் இல்லை; அல்லது அந்தப் போதி சத்துவர்களுக்குத் தர்மம் பற்றிய எந்த உணர்வும் இல்லை; தர்மம் அற்ற நிலை பற்றிய உணர்வும் இல்லை.*

இந்த நான்கும் உடனே கரைந்து போய்விடும்.

*அல்லது அந்தப் போதிசத்துவர்களுக்குத் தர்மம் பற்றிய எந்த உணர்வும் இல்லை; தர்மம் அற்ற நிலை பற்றிய உணர்வும் இல்லை.*

தர்மம் என்றால் வாழ்க்கையின் உகந்ததான பகுதி. தர்மமற்றது என்றால் வாழ்க்கையின் எதிர்மறையான பகுதி. உகந்தது, எதிர்மறை (Positive, Negative) – இவைகூட உண்மையில்லை என்று புத்தர் சொல்கிறார். அவையும் மறையக்கூடியவை. தர்மம் பற்றிய ஒரு நிலை என்பதே கிடையாது. உண்மையில் நம்பிக்கையான உள் பக்கத்தைப் பார்க்க முடியாது. அதே போல அவநம்பிக்கையான உள்பக்கத்தையும் காண முடியாது. நீங்கள் முற்றிலும் வெறுமையான பக்கத்தைத்தான் காணுவீர்கள்.

நினைவில் கொள்ளுங்கள். வெறுமை என்பதை உண்மையற்றது என்பதற்கோ அல்லது எதிர்மறை என்பதற்கோ உகந்த சொல் எனத் தப்பாகப் பொருள் செய்துகொள்ளக்கூடாது. வெறுமை என்றால் உகந்ததாகவும் இல்லாமல், எதிர்மறையாகவும் இல்லாமல் இருப்பதாகும். இரண்டுமே மறைந்து போகும். இரட்டை

என்பது இனிமேல் இல்லாது போயிற்று. இதுவே மிகுந்த மௌனம். எதையும் தேடாதிருத்தல். உங்களையும்கூடத் தேடாதிருத்தல். நீங்கள் விடுதலை பெற்றுவிட்டீர்கள். நீங்கள் விடுதலை அடைந்து விட்டதல்ல. நீங்கள் உங்களிட மிருந்தே விடுதலை பெற்றுவிட்டீர்கள்.

மற்றவர்கள் விடுதலையைப் பற்றிப் பேசும்போது நீங்கள் விடுதலையடைந்தும் அங்கேயே இருப்பீர்கள் என்பதே. புத்தர் விடுதலையைப் பற்றிப் பேசுகையில் நீங்கள் விடு தலை பெற்றுவிட்ட பின்பு நீங்கள் அங்கு இருக்கமாட் டீர்கள். நீங்கள் விடுதலையில் எப்படி இருக்க முடியும்? நீங்கள் விடுதலை அடைந்த பின்பும் இருப்பீர்களானால் அது ஒரு விதமான சிறை வாழ்க்கைதான். நீங்களே சிறைத் தண்டனையாக இருக்கும்போது எப்படிச் சுதந்திரமாக இருக்க முடியும்? நீங்கள் சுதந்திரமாக இருக்க முடியாது. நீங்கள் இல்லாமல் போனால் அப்போது சுதந்திரம் இருக்கும். 'நீங்கள்' இருந்தால் சுதந்திரம் இல்லை.

ஏழாவதாக, உணரா நிலை. பார்ப்பதற்கு எதுவுமே இல்லையெனில் நீங்கள் பார்ப்பதை உணரா நிலை என்பீர்கள்? தான் என்ற நிலை இல்லை. உகந்தது என்பது இல்லை. எதிர்மறையும் இல்லை. பார்ப்பதற்கு எதுவுமே இல்லை. அப்போது நீங்கள் இந்த உணரும் நிலை என்பதே (Noperception) இடம் பெறவில்லை என்பதாகும். உணர் வதற்கு உணரப்படுபவர் வேண்டும். ஆகவே இந்த ஏழாம் விஷயமாக, உணரா நிலை இடம் பெறுகிறது. பின் நீங்கள் கேட்பீர்கள், "இந்த உணரா நிலை என்பது இருக்கிறதா?"

புத்தர் சொல்கிறார்: பார்ப்பதற்கு யாருமில்லை எனில், பார்ப்பதற்கும் எதுவும் இல்லை எனில் உணரா நிலை எப்படி இருக்கும்? அவர் அகங்காரத்துக்கான வேர்கள் எல்லாவற்றையும் அழித்துவிடுகிறார். எல்லா நுட்பமான வழிகளையும் அடைத்துவிடுகிறார். இவைதாம் எட்டு

தடைகள். இவை எல்லாமே மறந்து போகும்போது ஒரு மனிதன் போதிசத்துவர் ஆகிறார்.

அதன் பின்தான் பிரச்சினையே ஆரம்பிக்கிறது. "இந்தக் கரையிலேயே எப்படி இருக்கிறது?" அதற்கப்புறம்தான்... பிறகுதான் நீங்கள் பகிர்ந்துகொள்ள ஏதோ இருக்கிறது- உங்கள் வெறுமை- பின்னர் உங்களுக்குப் பகிர்ந்துகொள்ளு வதற்கு ஏதாவது கிடைக்கிறது - உங்களது சொர்க்கம். பின் உங்களுக்குப் பகிர்ந்துகொள்ள ஏதோ கிடைக்கிறது- வாழ்க்கை. ஆனால் நீங்கள் இந்தக் கரையிலேயே எப்படி இருப்பது? இங்கிருந்து போவதை எப்படித் தாமதப் படுத்துவது? பின் எப்படி கரையிலேயே தொடர்ந்து இருப்பது?

சுபூதி, அதற்குக் காரணம் என்ன தெரியுமா?

*அந்தப் போதிசத்துவர்களிடம், சுயம் பற்றிய எந்த உணர்வும் இல்லை; இருப்பைப் பற்றிய எந்த உணர்வும் இல்லை; உயிர் பற்றி எந்த உணர்வும் இல்லை; ஒரு மனிதன் என்ற உணர்வும் இல்லை.*

நீங்கள் உங்களின் உள்ளே எதையாவது பார்ப்பீர்களே யானால் நினைவில் கொள்ளுங்கள், நீங்கள் இன்னும் வெளியேதான் இருக்கிறீர்கள் என்று அர்த்தம். கிருஷ்ணர் தமது புல்லாங்குழலில் வாசிக்கும்போதும், கிறிஸ்து சிலுவையில் அறையப்பட்டபோது, அவருடைய புது ரத்தம் கைகளில் வழியும்போதும், போதிமரத்தின் கீழ் மௌனமாக அமர்ந்திருக்கும் புத்தரை- இவர்களைப் பார்த்தாலும் கூட, உங்கள் மனத்தினுள் இவை போன்ற காட்சிகளைப் பார்த்தாலும்கூட நினைவில் வையுங்கள்- நீங்கள் இன்னும் வெளியேதான் இருக்கிறீர்கள். அதனால்தான் புத்தர் சொல்கிறார்: "நீங்கள் என்னை வழியில் பார்த்தால் என்னை உடனே கொன்றுவிடுங்கள்."

ஒருவர் பார்ப்பதற்கு எதுவுமில்லை என்ற நிலைக்கு வர வேண்டும். பார்ப்பதற்கு எதுவுமில்லை என்றால் பார்ப்பவனும் இல்லாமல் போகிறான். அதைத்தான் நினைவில் வைக்கவேண்டும். இதைப் புரிந்துகொள்வது சிரமமான வேலை. பார்ப்பவர் இருப்பது எப்போ தென்றால் பார்ப்பதற்கு ஏதாவது இருக்கும்போதுதான். அதனால்தான் கிருஷ்ணமூர்த்திகூட, "பார்ப்பவர்தாம் பார்க்கப்படுகிறவராகவும் இருக்கிறார்" என்று சொல்கிறார். பார்க்கப்படுவதற்குப் பொருள் எதுவும் இல்லையெனில் நீங்கள் பார்ப்பவராக இருப்பது எவ்விதம்? போதுமென்று சொல்வதற்கு எதுவும் இல்லாதபோது போதுமென்று சொல்பவரும் இல்லாமல் போகிறார். அவை ஒன்றாக இருக்கின்றன. அவை ஒரே நாணயத்தின் இரு பக்கங்கள்.

புத்தர் ஆன்மிக அனுபவம் என்பது போல எதுவுமே இல்லை என்கிறார். எல்லா அனுபவங்களுமே ஆன்மிகமற்ற அனுபவங்கள்தாம். ம்ம்ம்? யாராவது வந்து, "என்னுடைய குண்டலினி எழும்புகிறது'' என்றால் -ஒரு கோபி கிருஷ்ணா சொன்னார்: அவரது குண்டலினி எழும்புவ தாக. அது ஆன்மிகம் அல்ல. குண்டலினி என்பதே ஆன்மிகம் அல்ல. அது உடல் தொடர்பான விஷயம். உலக விஷயம். அது பாலுணர்வு தருவது போலவே உங்களுக்குச் சுகத்தைத் தரும். அதே சக்திதான் மேல் நோக்கி எழும்புகிறது. அது ஆன்மிகத்துக்கு ஒன்றும் செய்ய முடியாது. நிச்சயமாகப் புத்தர் குறிப்பிட்ட ஆன்மிகத்துக்கு எதுவும் செய்ய முடியாது.

கோபி கிருஷ்ணா சொல்கிறார்: அவர் அடைந்து விட்டதாக. ஏனெனில் அவருடைய குண்டலினி எழும்பி விட்டதாக அவருக்கு ஒரு நெருடலான உணர்ச்சி அவருடைய முதுகுத் தண்டில் மேல் நோக்கி எழும்பியதாம். ஆனால் முதுகுத் தண்டு முதுகுத் தண்டுதான். இப்போது

குண்டலினி எழும்பிவிட்டதாம். அது சஹஸ்ராரத்தை-ஏழாவது சக்கரத்தை அடைந்துவிட்டதாம். இப்போது அவர் சிருஷ்டிகர்த்தாவாக மாறிவிட்டாராம். அவர் இப்போது கவிதை எழுதத் துவங்கிவிட்டாராம். அந்தக் கவிதைகளெல்லாம் குப்பைகள். அவை எதையாவது நிரூபணம் செய்யுமாயின் குண்டலினியை மறுத்துவிட வேண்டியதுதான். நான் அதுபோன்ற குப்பைக் கவிதைகளைக் கண்டதேயில்லை. பள்ளிப் பிள்ளைகள் எழுதுவதைப் போல, சில சமயங்களில் அவர்கள்கூட நன்றாக எழுதுகிறார்கள்.

உங்களுக்கு ஓர் ஒப்புமைதான் சொல்லலாம். அது ஸ்ரீசின்மாயுடைய கவிதைகள்தாம். அவர் கவிதை எழுதுகிறார். ஓர் இரவில் அவர் ஆயிரம் கவிதைகள் எழுதுவார். அவற்றைக் கவிதைகள் என்று சொல்வது கூட அதீதமாகி விடும். அவை உரைநடைகூட இல்லை. அவற்றில் கவிதைக்கு வேண்டிய எதுவுமே இல்லை.

ஆனால், இந்த மக்கள் அவர் ஆன்மிக சிருஷ்டியடைந்து விட்டதாக நினைக்கிறார்கள். ஏனெனில், அவருக்குக் குண்டலினி சக்தி எழும்பிவிட்டதாம். சில பேர் அவரது தலையில் ஒளியைப் பார்த்துவிட்டதாகவும் அவர் ஞானம் அடைந்துவிட்டதாகவும் சொல்கிறார்கள். "ஏனெனில் நான் ஒளியைப் பார்த்துவிட்டேன். நான் கண்களை மூடினால் எனக்கு ஒளி தெரிகிறது." நான் ஒளியைப் பார்க்க முடியாது என்றோ, குண்டலினியை எழுப்ப முடியாது என்றோ சொல்ல வரவில்லை. அது எளிதாக எழும்பி விடும். அதை இங்கேயே பார்க்கலாம். கோபிகிருஷ்ணா வைப் போன்று பல சன்னியாசிகள் அந்தக் குண்டலினி சக்தியை அடைந்திருக்கிறார்கள். அதில் ஒரு சிறப்பும் இல்லை.

எந்த ஓர் அனுபவமும் வெளியே கிடைக்கும் அனுப வமே. ஏனெனில், நீங்கள் அனுபவிப்பவராக இருக்கும் போது அனுபவம் உங்களைப் பார்த்துக்கொண்டு அங்கே இருக்கிறது. எல்லா அனுபவங்களும் மறைந்து போகும் போது ஆன்மிகம் வருகிறது. அப்போது ஓர் அதிசய சம்பவம் நிகழ்கிறது. எல்லா அனுபவங்களும் மறைந்து போகும்போது அனுபவிக்கிறவர்களும் மறைந்து போகிறார் கள். அது இருக்க முடியாது. எனவே மறைந்து போகிறது. அது அனுபவமின்றி உயிர் வாழ முடியாது. அது அனுபவத்துக்கு உணவு கொடுக்கிறது. அனுபவிக்கிறவ னுக்கு அனுபவமும் மறைந்து விடும்போது நீதான் போதிசத்துவர்.

*புத்தர் சொன்னார்: "ஆமாம், சுபூதி... புத்தர்களுக்குத் ததாகதர் கற்றுத் தந்த சிறப்புத் தர்மங்கள், புத்தரின் வெறும் சிறப்புத் தர்மங்கள் அல்ல. அதனால்தான் அவை, புத்தர்களுக்கான சிறப்புத் தர்மங்கள் என்று சொல்லப் படுகின்றன.*

*'சுபூதி, அதற்குக் காரணம் என்ன தெரியுமா?*

*'அந்தப் போதிசத்துவர்களிடம், சுயம் பற்றிய எந்த உணர்வும் இல்லை; இருப்பைப் பற்றிய எந்த உணர்வும் இல்லை; உயிர் பற்றி எந்த உணர்வும் இல்லை; ஒரு மனிதன் என்ற உணர்வும் இல்லை. அல்லது, அந்தப் போதி சத்துவர்களுக்குத் தர்மம் பற்றிய எந்த உணர்வும் இல்லை; தர்மம் அற்ற நிலை பற்றிய உணர்வும் இல்லை."*

புத்தர் சொல்கிறார்: "எல்லாவற்றையும் விட்டுவிட வேண்டும். தர்மம், தர்மமற்றவை, அனுபவங்கள், மகத்தான அனுபவங்கள், ஆன்மிக அனுபவங்கள், முடிவாக அனுபவிக்கிறவனைக்கூட விட்டுவிட வேண்டும். எல்லாவற்றையும் விட வேண்டும். எப்போது எதுவும் மிஞ்சவில்லையோ, எந்த அடையாளமும், எதுவும் இல்லை

என்ற எண்ணமும்கூட- இந்த எண்ணம் இருந்தால்கூட தவறு- அது இருந்தால் எல்லாம் இருக்கிறது என்பதாகிறது. இந்த எண்ணத்தில்தான் இந்த உலகமே அடங்கியிருக்கிறது. நீங்கள், "இப்போது இங்கே எதுவும் இல்லை" என்று சொன்னால் நீங்கள் விஷயத்தை விட்டு விட்டீர்கள் என்று பொருள். நீங்கள் அதைக்கூடச் சொல்லக்கூடாது. அந்தக் 'கிடையாது' என்பதுகூடக் கிடையாது. இதை யார் சொல் வது? யார் கவனிப்பது? மௌனம். ஆழ்ந்த மௌனம்.

புத்தர் சொல்கிறார்: "தர்மம், மதம் இவையெல்லாம் ஒரு தெப்பம் மாதிரி." இவை புத்தரின் புகழ் பெற்ற வார்த்தைகள். மஜ்ஜிம் நிகாய என்ற நூலில் புத்தர் சொல்கிறார்: "ஒரு தெப்பத்தைக் கொண்டு சிலவற்றை இந்தக் கரையிலேயே விட்டுவிட்டுச் செல்வது எப்படி என்பது பற்றி உங்களுக்குச் சொல்கிறேன். சகோதரர்களே, ஒரு தெப்பத்தைக் கொண்டு பெரிய பரப்பளவில் உள்ள நீரைக் கடக்கிறோம். அந்தக் கரையில் பயத்தையும், சந்தேகத்தையும் விட்டுவிட்டுச் செல்கிறோம். இருந்தும்கூட அந்தத் தெப்பத்தைத் தோளில் சுமந்து கொண்டா செல்கிறோம்? அந்தக் கரையில் பயத்திலிருந்து விடுதலை யாக இருக்கும் அந்தக் கரைக்குச் செல்வதற்குப் பயன்பட்ட தெப்பத்தை எடுத்துக்கொண்டு செல்வதில்லை. அது நமக்கு மிகவும் பயன்பட்டுள்ளது. இருப்பினும்கூட நமது வேலை முடிந்த பின்னர் அதனை விட்டுவிட்டுச் செல்கிறோம். அதை சுமந்து கொண்டு செல்வதில்லை. இதனை மனத்தில் பார்க்கும்போது சகோதரர்களே, நாம் சரியான வழிகளைக் கூட விட்டுவிட்டுத்தான் செல்கிறோம். இதில் தவறான வழிகளைப் பற்றிச் சொல்லவே தேவையில்லை."

எல்லா முறைகளுமே- யோகா, தந்த்ரா- எல்லா முறைகளுமே, எல்லா ஊடகங்களுமே, எல்லாப் பிரார்த்தனைகளுமே அடுத்த கரைக்கு நம்மைக் கொண்டு

செல்வதற்குத்தான். நீங்கள் அடுத்த கரைக்குச் சென்றவுடன் அவற்றைப் பின்னால் விட்டுவிட்டுச் செல்ல வேண்டியது தான். அவற்றுக்கு நன்றி சொல்லுங்கள். ஆனால், அவற்றைச் சுமந்துகொண்டு செல்லத் தயாராகாதீர்கள். அப்படியில்லை எனில் நீங்கள் ஒரு முட்டாள்.

மறுபடியும் புத்தர் சொல்கிறார்: "தெப்பத்தைப் பற்றிய உதாரணம்- தர்மம் என்பது- தற்காலிகமானதுதான் என்பதை உணர்த்துகிறது. அது முடிவை அடைவதற்கான சாதனம்தான். அதே முறை வெறுமைக்கும் (Emptiness) கூடப் பயன்படும். தர்மத்தை மறுதலிப்பது நோய் தீருவதற்காக. சாப்பிடும் மருந்தும் அப்படித்தான். நோய் தீர்ந்த பின்பு அதே மருந்தைச் சாப்பிட்டுக்கொண்டே இருப்பதில்லை. அதைத் தொடர்ந்து உட்கொண்டால் மறுபடியும் அது நோயைக் கொண்டு வந்துவிடும்."

புத்தர் சொல்கிறார்: "இதே போலத்தான், வாழ்க்கை என்ற தத்துவத்தில் உள்ள நம்பிக்கையைத் தீர்ப்பதற்கு மருந்தாகப் பயன்படுவது வெறுமை என்ற மருந்துதான். வெறுமையின் மீது உள்ள பிடிப்பும் ஒரு நோயே. இதே போலத்தான் வாழ்க்கையின் மீது உள்ள பிடிப்பும் ஒரு நோய்தான். ஆரோக்கியத்தை அடைந்த பின்பும் இந்த வெறுமை என்ற மருந்தைத் தொடர்ந்து உட்கொள்ளுபவர் கள் மறுபடியும் நோயைத்தான் அடைகின்றனர்."

நினைவில் வையுங்கள்: முதல் அடியாக நீங்கள் எல்லாவற்றையும் விட்டுவிட்டு வெறுமையாக மாறுங்கள். பிறகு அந்த வெறுமையையும் விட்டு விடுங்கள். அந்த வெறுமை என்பது மருந்துதான். "நான் ஒரு மருத்துவன். நான் தத்துவவாதி அல்ல" என்று புத்தர் சொன்னது சரிதான். அவர் உங்களுக்குப் பிடித்துக்கொள்வதற்கு ஒரு கொள்கையைக் கொடுக்கவில்லை. அவர் கொடுக்கும் எல்லாமே தற்காலிகமானவைதான். இடைக்காலத்துக்குத்

தான். அவற்றை ஒரு நாள் விட்டுவிட்டு மறந்துவிட வேண்டும்.

எப்போது எல்லாம் மறைந்து விடுகின்றனவோ, இந்த உலகம், கடவுள், விஷயங்கள், மனம், உடல், ஆன்மா, நீங்கள், நான் எல்லாமே மறைந்து போகின்றன. முடிவில் எல்லாமே மறைந்து போய்விடும் என்ற தத்துவமும்கூட மறைந்து போய்விடும். நீங்கள் இங்கு வந்துவிட்டீர்கள். நீங்கள் போதிசத்துவர்களாகிவிட்டீர்கள். அதன் பின்பு பிரச்சினை என்னவெனில், இந்தக் கரையில் இருப்பது எப்படி? இந்தக் கரையில் ஒரு கணமேனும் எப்படி இருப்பது?

நீங்கள் ஓர் உறுதியினை, 'சித்தோபத்' மேற்கொள்ளுங்கள். "வேறு சிலர் இருளில் தவிக்கின்றனர். நான் அடைந்து விட்டேன். - நான் இதைப் பகிர்ந்துகொள்ள வேண்டும்." சித்தோபத்தின் காரணமாகப் புதிய மனத்தைச் சிருஷ்டி செய்த பிறகு... ஏனெனில் பழைய மனம் போய்விட்டது. அந்தப் போய்விட்ட மனத்தினை வைத்துக் கொண்டு இங்கு இருக்க முடியாது. நீங்கள் புதிய மனத்தை உற்பத்தி செய்ய வேண்டும்.

இரண்டு வார்த்தைகளைப் புரிந்துகொள்ள வேண்டும். ஒன்று அதீத உணர்ச்சி (Passion). மற்றொன்று கருணை (Compassion). இவை இரண்டிலுமே Passion உள்ளது. உணர்ச்சி என்பது பழைய மனம். ஆசைப்படும் மனம். ஆசைகள் நிறைந்திருக்கும் மனம். ஆசைகள் மறையும் போது, உங்களது பழைய மனம் மறைந்து விடும்போது, உடனேயே கருணையை வளர்த்துக்கொள்ள வேண்டும். அந்தக் கருணையின் மூலம்தான் இங்கு இருக்க வேண்டும். சிறிது காலத்திற்கு நீங்கள் இங்கு உதவி செய்யலாம். அதன் மூலம் அவர்களது கண்கள் அடுத்த கரையை நோக்கித்

திரும்பலாம். சிறிது காலத்திற்கு மக்கள் சிலருக்கு நீ அந்த வழியை காட்டலாம்.

*" 'மிகச் சிறந்த, மேலான, சரியான, ஞான தர்மம் இதுதான்' என்று ததாகதர் பூரணமாக அறிந்துள்ளாரா? அல்லது, ஏதாவது ஒரு தர்மத்தை அவர் மெய்ப்பித்திருக்கிறாரா? இது பற்றி என்ன நினைக்கிறாய் சுபூதி?" என்று புத்தர் கேட்டார்.*

இது புத்தரின் முறைகளுள் ஒன்று. அவர் சில நேரங்களில் தமது சீடர்களைக் கேட்பார்: "சுபூதி, நீ என்ன நினைக்கிறாய்? நீ தர்மத்தை அடைந்துவிட்டதாக நினைக்கிறாயா? அல்லது தர்மத்தை மக்களுக்கு மட்டும் உபதேசித்துக் கொண்டிருக்கிறேனா? இதைப் பற்றி என்ன நினைக்கிறாய்?"

*"சுபூதி, அதற்குக் காரணம் என்ன தெரியுமா?*

*'அந்தப் போதிசத்துவர்களிடம், சுயம் பற்றிய எந்த உணர்வும் இல்லை; இருப்பைப் பற்றிய எந்த உணர்வும் இல்லை; உயிர் பற்றி எந்த உணர்வும் இல்லை; ஒரு மனிதன் என்ற உணர்வும் இல்லை. அல்லது, அந்தப் போதி சத்துவர்களுக்குத் தர்மம் பற்றிய எந்த உணர்வும் இல்லை; தர்மம் அற்ற நிலை பற்றிய உணர்வும் இல்லை.*

*'உணர்வற்ற நிலை, அல்லது உணர்வு இல்லாத நிலை அவர்களிடம் நிலைகொண்டு விடும்.*

*ஏன் அப்படி? சுபூதி, அவர்கள் தர்மம் பற்றிய உணர்வோ, அல்லது தர்மமற்ற உணர்வோ பெற்றுவிடுவார்களானால், அவர்கள், சுயத்தை, இருப்பை, உயிரை அல்லது ஆளைப் பற்றிக்கொள்ளும் நிலை ஏற்பட்டுவிடும்.*

*ஏன் அப்படி? ஏனென்றால், ஒரு போதிசத்துவர், தர்மத்தையோ, தர்மமின்மையையோ பற்றிக்கொள்ளக்கூடாது.*

*அதனால், இந்தக் கருத்து, ததாகதரால், ஓர் உள்ளர்த்தத் தோடு கற்பிக்கப்பட்டுள்ளது. அது: 'தர்மப் பேருரையை அறிந்தவர்கள் படகில் ஏறப் போகிறவர்களைப் போல. அவர்கள் தர்ம மூட்டையைக் கைவிட்டுவிட வேண்டியது தான்; சகல தர்மங்களையும். அதேசமயம், தர்மம் இல்லா நிலையையும் கூட!'*

*" 'மிகச் சிறந்த, மேலான, சரியான, ஞான தர்மம் இதுதான்' என்று ததாகதர் பூரணமாக அறிந்துள்ளாரா? அல்லது, ஏதாவது ஒரு தர்மத்தை அவர் மெய்ப்பித்திருக்கிறாரா? இது பற்றி என்ன நினைக்கிறாய் சுபூதி?" என்று புத்தர் கேட்டார்.*

*சுபூதி இவ்வாறு பதில் சொன்னார்:*

*"தாங்கள் சொன்னதை நான் புரிந்து கொண்ட அளவுக்கு அப்படி எதுவுமே இல்லை."*

புத்தரின் பொறிக்குள் விழுவது மிகச் சுலபமாகும். இந்தக் கேள்வி மிகக் கடினமானது. இந்தக் கேள்விக்கு ஒருவர் 'ஆமாம்' என்றுதான் பதில் சொல்லத் தோன்றும். "ஆமாம், புத்தர் அடைந்துவிட்டார். அப்படி இல்லையெனில் வேறு யார் அடைந்திருப்பார்கள்?" ஆனால் இந்த 'அடைவது' என்ற எண்ணமே ஆன்மிகமற்றது. இங்கு அடைவதற் கென்று ஒன்றுமே இல்லை. யாரும் எதையும் அடையத் தேவையில்லை' என்பனவே புத்தரின் வார்த்தைகள்.

ஆனால் சுபூதி மிகவும் எளிதாக "ஆமாம், பகவானே, நீங்கள் வேறு யாராலும் உபதேசிக்க முடியாத அளவுக்கு உபதேசித்துவிட்டீர்கள். நீங்கள் வேறு யாராலும் விளக்க முடியாத அளவுக்கு விளக்கிவிட்டீர்கள்." ஆனால் எதுவும் அடைவதற்கென்று இல்லை. யாரும் எதையும் அடையத் தேவையும் இல்லை. எப்போது யார், எதனை அடைவதற் காக உபதேசம் செய்ய வேண்டும்? உபதேசம் செய்ய என்ன இருக்கிறது?

ஆனால் சுபூதி புத்தரின் வார்த்தைகளால் ஏமாற்றப்பட வில்லை.

சுபூதி இவ்வாறு பதில் சொன்னார்:

*"தாங்கள் சொன்னதை நான் புரிந்து கொண்ட அளவுக்கு அப்படி எதுவுமே இல்லை." ஏன் அப்படி? ததாகதர் பூரணமாக உணர்ந்துள்ள, விளக்கிக் காட்டக்கூடிய தர்மம், பற்றிக்கொள்ள முடியாத ஒன்று; பேசப்பட முடியாத ஒன்று. அது ஒரு தர்மமும் அன்று; தர்மம் இல்லாமையும் அன்று. ஏன் அப்படி?*

ஆகவே அவர் முதலில் சொல்கிறார்: "இல்லை, நீங்கள் எதனையும் அடைந்துவிடவில்லை. ஏனெனில், நான் உங்களை சரியாகப் புரிந்துகொண்டு இருக்கிறேன் என்றால் அடைவதற்கென்று எதுவுமில்லை. நீங்கள் சொன்னது போலவே, நீங்கள் அப்பாலுக்கப்பாலாக, வெறுமைக்கும் அப்பாலாக இருக்கும் ஒன்றைப் பற்றி எப்படி உபதேசிப் பது? அதனை எப்படி உபதேசிப்பது? அதனைக் கிரகித்துக் கொள்வதற்கு வழி ஏதுமில்லை. அதனைச் சொல்வதற்கும் வழி ஏதுமில்லை. அது ஒப்புக் கொள்வதாகவும் இல்லாமல், ஒப்புக் கொள்ள முடியாததாகவும் இல்லாமல் இருக்கும் ஒன்றாகும். அதைப் புரிந்துகொள்வதற்கும் இயலாததாக இருக்கிறது.

பின் ஏன்? ஏனெனில், முழுமைதான் புனிதமானவர் களைப் பெருமைப்படுத்துகிறது.

முழுமை என்றால் அப்பால் என்று பொருள். மேம்படுத் தும் ஒன்று. அன்புக்கும், வெறுப்புக்கும் அப்பாற்பட்ட நிலை. வாழ்க்கைக்கும் இறப்புக்கும் அப்பாற்பட்ட நிலை. சொர்க்கத்துக்கும் நரகத்துக்கும் அப்பாற்பட்ட நிலை. இரண்டாக இருக்கும் எல்லாவற்றிற்கும் அப்பாற்பட்ட நிலை. பூரணமான ஒன்று - முழுமைதான் புனிதமானவர்

களைப் பெருமைப்படுத்துகிறது என்பது அதனால்தான். முழுமை, அந்த முழுமை, அந்த முழுமைதான் உங்களை மேம்படுத்தும்.

இதற்கான சமஸ்கிருத வார்த்தை மிகப் பொருள் செறிந்தது. அது 'பிரபவீதா.' அதற்குப் பல அர்த்தங்கள் உள்ளன. அதற்கு 'மேன்மைப்படுத்தப்பட்ட,' 'பிரகாசப் படுத்தப்பட்ட' 'தனது பலத்தைப் பெற்ற' 'தனது ஒளியைக் கொடுக்கும்' இப்படி நிறைய அர்த்தங்கள். சந்திரன் சூரியனின் ஒளியைப் பெற்றுப் பிரதிபலிக்கிறது. அதுவே பிரபவீதா –அது ஒரு கண்ணாடிதான்.

இதே போலத்தான் புத்தரும். புத்தர் ஒரு வெறுமையான கண்ணாடி. அவர் நீங்கள் எப்படி இருக்கிறீர்களோ அதனை அப்படியே பிரதிபலிப்பார் – யதாபூதம். அவராக எதுவும் சொல்வது கிடையாது. ஒரு கண்ணாடி எதுவும் சொல்வதில்லை. ஒரு கண்ணாடியிடம் சொல்வதற்கு எதுவும் இல்லை. அது சாதாரணமாகப் பிரதிபலிக்கிறது. யதாபூதம்.

புத்தரிடம் வாழ்க்கை பிரதிபலிக்கப்படுகிறது. முழுமை மேன்மை பெறுகிறது. முழுமை பிரதிபலிக்கப்படுகிறது. புத்தர் எதையுமே செய்வது கிடையாது.

ஓர் உண்மையான குரு என்பவர் ஒரு கண்ணாடியைப் போன்றவர். அவர் எல்லாவற்றையும் அப்படியே பிரதிபலிப்பவர். அவரிடம் விளக்குவதற்கென்று தத்துவம் எதுவும் கிடையாது. கொள்கைகளை ஸ்தாபிக்க வேண்டிய அவசியமும் இல்லை. வாழ்க்கையே ஒரு கொள்கைதான். அவரது நோக்கமே கிடையாது. அவரே இல்லாதவர் ஆகிறார். அதனால்தான் அவர் கண்ணாடியாகி விடுகிறார்.

ஒரு போதிசத்துவராக இருப்பவர் கண்ணாடியாகும் தருவாயில் இருப்பவர். அவரால் ஒரு புதிய மனத்தை

உருவாக்க முடிந்தால், ஒரு புதிய வழியை உருவாக்க முடிந்தால் - சித்தோபத் - கருணையின் வழியே அவர் இந்தக் கரையில் சற்று நேரம் அதிகமாக இருப்பார். இது ஓர் அதிசயமாகும். ஏனெனில், அவர் இனிமேலும் இந்த உலகைச் சேர்ந்தவரில்லை. அவரிடம் இந்த உலகம் இனிமேலும் இல்லை. இன்னமும்கூட இந்த அதிசயம் நிகழ்கிறது.

புத்தர் இந்தக் கரையில் இருப்பதென்பது, இன்னும் சில நாள்கள் இருப்பதென்பது, சில வருடங்கள் இருப்பதென்பது இன்னும் மகத்தான ஓர் அதிசயம்தான்.

ஒரு மனிதன் புத்தரிடம் வந்து, "நீங்கள் ஏதாவது அதிசயம் நிகழ்த்தக் கூடாதா?" என்று கேட்டான்.

புத்தர் பதிலளித்தார்: "நான்தான் அந்த அதிசயம்."

இன்றைக்கு இது போதும்.

எனது அன்பான ஓஷோ,
இந்தப் போதிசத்துவப் பிராயம் என்பதெல்லாம் என்ன? எனக்கு அவற்றில் ஒரு வார்த்தையின் மேல் கூட நம்பிக்கை வரவில்லை. அதுபோன்ற ஒன்றே இல்லை.

ஆமாம், சோமேந்திரா, அவை எல்லாமே அபத்தம்தான். ஆனால் இந்த 'NONSENSE'- அபத்தம் என்ற வார்த்தையைப் புரிந்துகொள்ள வேண்டும். அது புலன்களுக்கு அப்பாற் பட்டது. அதை நீ நம்ப வேண்டாம். அதனை உன்னால் நம்பவும் முடியாது. அது ஓர் அனுபவம் மட்டுமே. அதை அனுபவிக்க மட்டுமே முடியும். அது ஓர் அபத்தமான அனுபவம். ஆனாலும் அது உண்மையானது. நிச்சயமான உண்மை. அது நிகழ்கின்றது. அது நிகழ்கின்ற வரையிலும் அதனை நம்புவதற்கு வழியே இல்லை. அதற்குத் தேவையுமில்லை. புத்தர் எந்த ஒரு நம்பிக்கைக்கும் சாதகமானவராக இல்லை. அவர் எது சொன்னாலும் அது அனுபவமே. அது உண்மையில் இருக்கின்ற ஒன்றாகும். அது மனத்துக்கு அப்பாற்பட்டதாகும்.

சாதாரணமாக நாம் 'அபத்தம்' (NONSENSE) என்ற வார்த்தையை மனத்திற்கும் கீழானவைக்கும் மட்டுமே பயன்படுத்துகிறோம். ஆனால் மனத்திற்கு அப்பாற்பட்ட

தாகவும் சில இருக்கின்றன. அவையும் அபத்தமானவை யாகும். மனத்தினால் அதில் எந்த ஒரு அர்த்தத்தையும் கற்பித்துக்கொள்ள முடியாது. உங்களது மனமே மறைந்து போனால் தவிர உங்களால் ஒரு போதிமனிதரைப் புரிந்துகொள்ள முடியாது. அது ஒரு விஷயமல்ல, உண்மைதான். அது ஓர் அனுபவம் மட்டுமே.

உங்களுக்கு ஆசையைப் பற்றித் தெரியும். உங்களுக்கு உணர்ச்சியைத் தெரியும். உங்களுக்குப் பாலுணர்வைத் தெரியும். உங்களுக்குக் காதலையும் தெரியும். அவற்றைப் பாலுணர்ச்சி இன்னும் முகிழ்க்காத ஒரு குழந்தைக்கு விளக்கிப் பாருங்கள். அது அவற்றை அபத்தமானது என்றே சொல்லும். ஒரு நான்கு வயதுக் குழந்தைக்கு நீங்கள் காதல் வயப்பட்டிருக்கும் விஷயத்தைச் சொல்லிப் பாருங்கள். அது உங்களை நம்ப முடியாத கண்களோடு பார்க்கும். "நீங்கள் எதைப் பற்றிப் பேசுகிறீர்கள்? இந்தக் 'காதல்' என்ற விஷயம் என்ன?" என்று கேட்கும்.

உங்களது காதலெல்லாம், உங்களது கவிதையெல்லாம், மனங் கவரும் இந்த விஷயமெல்லாம் ஒரு குழந்தைக்குப் புரியவைப்பது எங்கனம்? அந்தக் குழந்தை அந்த அனுபவங்களையெல்லாம் நுகரவில்லை. அந்த ஆசைக ளெல்லாம் இன்னும் அக்குழந்தைக்குத் தோன்றவில்லை. அது இவற்றை அறியாது. புத்தர் இவற்றை 'வாசனா' என்கிறார். இந்த வாசனா இன்னும் அதற்குத் தோன்ற வில்லை. அந்த வாசனா அதற்குத் தோன்றாத வரையில் இவற்றையெல்லாம் அதற்குப் புரியவைப்பது என்பது முடியாத காரியம்தான்.

இந்த வாசனாவே, இந்தச் சக்தியே ஆசைக்கும் உந்துகோலாக இருக்கிறது. ஆசை ஒரு நாள் கட்டவிழ்த்து விடும்போது பாலுணர்வாக, காதலாகப் பரிணமிக்கிறது. ஒரு நாள் ஆசை விழுந்துவிடுகிறது. அது எப்படி ஒரு

நாள் எழுந்ததோ அதே போல வீழ்ந்துவிடவும் செய்கிறது. பிறந்தது எல்லாமே இறக்கத்தான் வேண்டும். ஆரம்பிப்பது எல்லாமே முடியத்தான் வேண்டும். வாழ்க்கை என்பதும் இயல்பாக அதன் போக்கில் சென்றால், அந்தக் கணத்தி லேயே நடப்பதாக இருந்தால், ஒரு கட்டத்தில் இது நிகழாமல் நின்றும் விடும்.

பதினான்கு வயதில் பாலுணர்வு தோன்றுகிறது. பாலுணர்வில் முதிர்ச்சி நிலை. ஒரு குழந்தை ஏதோ தெரியாத ஒன்றைக் கண்டு ஆச்சரியமும், அதிசயமும் படுகிறது. அந்தக் குழந்தைக்கு ஆசை என்னும் காற்று வீசத் துவங்குகிறது. ஒரு பெரிய உணர்ச்சி, நெருப்பு அந்தக் குழந்தையுள் எழுகின்றது. இனிமேல் அக்குழந்தை மறுபடியும் களங்கமற்றதாக இருக்கப் போவதில்லை. இந்த ஆசை எழுவதற்கு முன்னர் இருந்த நிலை இப்போது இல்லை. அது இனிமேலும் தன்னைச் சுற்றியுள்ளவற்றை அதே களங்கமற்ற பார்வையோடு பார்க்கப் போவதில்லை.

வாழ்க்கை அந்தக் கணத்தில் முடிவெடுக்கும்படியாக வாழ்வதாக இருந்தால், உங்களது இறப்புக்குச் சரியாகப் பதினான்கு வருடங்களுக்கு முன்னதாக இந்த ஆசையும் மறைந்து போகும். சரியாகப் பதினான்கு ஆண்டுகளுக்கு முன்னதாக உங்களுக்குப் பாலுணர்வு என்பது அர்த்தமற்ற தாகப் போய்விடும். திடீரென்று உங்களுக்கு இந்தக் கனவு இல்லாமல் போய்விடும். அந்த உணர்ச்சி மங்கிவிடும். அந்தப் புயல் மறைந்து போகும். அப்போது அமைதி வந்துவிடும். முற்றிலுமான அமைதி. ஆனால் ஆசையில் அடங்கியிருந்த உங்களது உணர்ச்சி, ஆசை அற்றுப் போய் விடுகிறது. அந்தச் சக்தி எங்கே போகும்?

நீங்கள் இன்னமும்கூட அந்தச் சக்தியை உணவின் மூலமும், சுவாசிப்பதன் மூலமும், உடற்பயிற்சியின் வழியாகவும், வாழ்வதன் வழியாகவும் உண்டாக்குகிறீர்கள்.

அந்தப் புனிதமான சக்தியை மனித சக்தியாக மாற்றிக் கொண்டே இருக்கிறீர்கள். அந்தச் சக்தி எங்கே போகும்? பழைய பாதை இனியும் இல்லை. பழைய பாதை இனிமேலும் கிடைக்கப் போவதில்லை. அது இனிமேல் பாலுணர்ச்சி என்ற வழியில் செல்ல முடியாது. அது எப்படி நகரும்? புத்தரிடம் அதற்கு இன்னொரு வார்த்தை உள்ளது. அதனைக் 'கருணை' என்று அழைக்கிறார்.

உணர்ச்சி இனிமேலும் முக்கியத்துவம் வாய்ந்ததல்ல. சக்தி இன்னும் கிடைக்கிறது. மகத்தான சக்தி கிடைக்கிறது. அது எந்தத் திசையிலாவது நகர்ந்தாக வேண்டும். ஏனெனில், சக்தி என்பது ஒரே இடத்தில் நிற்க முடியாது. அதன் இயல்பே வேகம்தான். அது கருணை மேவிடும் போது உங்களிலிருந்து ததும்பி வழியும். அதைத்தான் போதிசத்துவப் பிராயம் என்றழைக்கிறோம். பாலுணர்வு அற்றுப் போகும்போது ஆசையும் இல்லாது போகிறது. எதிர்காலம் என்பது மறைந்து போகிறது. நீங்கள் இங்கிருக்கும்போது திடீரென்று அந்த மகத்தான சக்தி உங்களிலிருந்து ததும்பி வழிய ஆரம்பிக்கிறது. உங்களது கோப்பையில் வழிய ஆரம்பிக்கிறது. அதுவே கருணை என்பதாகும். அதுவே போதிசத்துவ நிலை என்பதாகும். அது ஒரு பொருளல்ல. அது சாதாரணமாக நிகழுவ தில்லை. மனிதர்கள் இயல்பு நிலையிலிருந்து வழுவிவிட் டார்கள். அதனால்தான் உலகின் எல்லா மொழிகளிலுமே ஒரு வயதான மனிதன் பாலுணர்வில் ஈடுபட விரும்பினா னென்றால் அது ஏதோ ஓர் அசிங்கமான, அற்பமான விஷயமாகக் கருதப்படுகிறது. அவரை அசிங்கமான கிழவர் என்றே அழைக்கின்றனர். ஏன் அசிங்கம்? வாலிபன் என்பவன் அசிங்கமானவனாகக் கருதப்படுவதில்லை. ஆனால், வயதானவர்கள் மட்டும் ஏன் அப்படிக் கருதப்பட வேண்டும்?

பழங்காலம் முதலே இந்த வார்த்தைகள் காலங் காலமாகப் புழங்கி வருகிறது. நிகழக்கூடாத ஒரு விஷய மாக அது ஒரு நடக்கக்கூடாத நிகழ்ச்சியாகக் கருதப் படுகிறது. அது சாதாரணமானதல்ல. அசாதாரணமானது. ஏதோ ஒரு தவறு நிகழ்ந்துவிட்டது. அப்படியில்லையெனில் உங்களது இறப்புக்கு முன்னர் அது மறைந்து போக வேண்டும். அப்படியில்லையெனில் நீங்கள் அந்த ஆசை மறைந்து போகும் நிலைக்கு வரவில்லையெனில் என்ன செய்துகொண்டிருந்தீர்கள்? நீங்கள் வாழ்வதற்கான வாய்ப்பை இழந்துவிட்டீர்கள்.

நினைவில் கொள்ளுங்கள். நான் ஆசைக்கு எதிரானவன் அல்ல. எனக்கு அதனை ஒப்புக்கொள்ளும்படியான எண்ணமே உள்ளது. அதற்கான நேரம் வரும்போது அதனுள்ளே செல்லுங்கள். அதனுள்ளே முழுமையாகச் செல்லுங்கள். அதிலிருந்து வெளியேறுவதற்கான நேரம் வரும்போது வெளியேறுங்கள். அதனுள் முழுமையாகச் செல்பவன் மட்டுமே அதிலிருந்து முழுமையாக வெளியேற முடியும். அதனுள் பாதி மனத்தோடு, ஒரு பகுதி எண்ணத் தோடு மட்டுமே, அழுத்தப்பட்ட மனத்தோடு செல்லுபவன் அந்தத் தளையிலிருந்து முழு மனத்தோடு வெளியே வர முடியாது. அதில் இருக்கும் அபத்தத்தைப் பார்க்கவே முடியாது. அதில் உள்ள மாயையைப் பார்க்கவே முடியாது.

ஆகவே, நான் ஆசைக்கு எதிரானவன் அல்ல. நான் உணர்ச்சிக்கு ஆதரவானவன்தான். அதனுள் செல்லுங்கள். அதனுள் முழுமையாக, முழு மனத்தோடு செல்லுங்கள். அதற்கான நேரம் வரும்போது என்னென்ன முடியுமோ அவ்வளவையும் காணுங்கள். அந்த முழுமையாகப் பார்த்தல் என்பதே உங்களை விடுவிக்கும். ஒரு நாள் பழம் பழுத்துக் கீழே விழும். பழுத்த பழம் கீழே விழும்போது மரம் பாரத்தை இறக்கி வைக்கிறது. அந்தப் பாரம் இறக்கி

வைத்தலில் நீங்கள் என்ன செய்கிறீர்கள்? சக்தி இன்னமும் இருக்கிறது. அதிகமாக இருக்கிறது. ஏனெனில், முன்னர் அந்தச் சக்தி பல விஷயங்களில் ஈடுபட்டுக் கொண்டிருந்தது. இப்போது அது எதிலும் ஈடுபடவில்லை. ஓய்வெடுங்கள். நீங்கள் சக்தியின் தேக்கிடமாக இருப்பீர்கள். அந்தச் சக்தி உங்களிலிருந்து ததும்பி வழியத் துவங்கும். எந்தக் காரணமுமே இன்றி இது நிகழும்.

ஒரு போதிசத்துவர் என்பவர் தான் மற்றவர்களுக்கு அளிப்பதற்கெனவே நிறைய வைத்துக்கொண்டிருப்பவர். அவர் நிறைய வைத்துக்கொண்டிருப்பவர். நீங்கள் அவரது அன்பை, அவரையே, அவரது ஞானத்தை... நீங்கள் அவரிடம் பணிந்தாலே போதும். அவர் ஒரு வாசம் நிரம்பிய மலரைப் போன்றவர். அந்த வாசம் காற்றில் கட்டவிழ்த்து விடுவதற்காகவே தயாராக இருக்கிறது. அல்லது அவர் நீர் நிறைந்திருக்கும் மேகத்தைப் போன்றவர். தாகமெடுக்கும் பூமியைத் தேடி அலைந்து கொண்டிருக்கும், தன்னை வரவேற்கக் காத்திருக்கும் பூமியைத் தேடும், தன்னை உறிஞ்சிக்கொள்ளும் பூமியைத் தேடும் மேகத்தைப் போன்றவர். ஆகவே போதிசத்துவர் என்பவர், நீர் நிரம்பிய மேகத்தைப் போல, அங்கும் இங்கும் தாகமெடுக்கும் ஆன்மாவைத் தேடி அலையும் மேகத்தைப் போன்றவர். தன்னை வரவேற்கக் காத்திருப்பவர்களைத் தேடி அலைபவர், நீங்கள் பரிசைப் பெற்றுக் கொள்ளுவதற்காகவே போதிசத்துவர் தாம் கடமைப் பட்டிருப்பதாக நினைக்கிறார்.

போதிசத்துவ நிலை என்பதே பிரக்ஞையின் ஒரு நிலைதான். அது ஓர் அபத்தம்தான். உண்மை. அது ஒரு பொருளல்ல. உண்மை. சோமேந்திரா– ஆனாலும் அது நிகழ்கிறது. அது தர்க்கத்திற்கும் நியாயத்திற்கும் அப்பாற்பட்டதுதான். அது அபத்தமானதாகத்தான் தெரிகிறது.

ஏனெனில், அது உனது அனுபவத்திற்குள்ளானதாக இல்லை. ஆனால் வெகு சீக்கிரமே நீ அதன் எல்லைக்குள் நுழையப் போகிறாய். உங்களில் பலர் அந்த நுழைவாயிலில் நின்று கொண்டிருப்பதைப் பார்க்க முடிகிறது. உங்களால் பார்க்க முடியாது. என்னால் நீங்கள் அங்கு நிற்பதைக் காண முடிகிறது. ஒரு பெரிய தாவலை மேற்கொள்ளும் நிலையில் உங்களைப் பார்க்க முடிகிறது. அது நிகழும் போது அதன் பின்னர் நீங்கள் புத்தர் எதைப் பற்றிப் பேசுகிறார் என்று உங்களால் புரிந்துகொள்ள முடியும்.

வைர சூத்திரம் சாதாரண மனிதர்களுக்குப் போதிக்கப் படவில்லை. அது சன்னியாசிகளுக்குப் போதிக்கப்பட்ட தாகும். போதிசத்துவ நிலைக்கு வருகிறவர்களுக்கு, வந்து விட்டவர்களுக்காகச் சொல்லப்பட்டதாகும். உண்மையில் அது போதிசத்துவ நிலைக்கு வருவதற்கு முன்னராகவே போதிக்கப்படல் வேண்டும். ஏனெனில், போதிசத்துவ நிலையை அடையும் அந்தக் கணத்தில் உங்களுக்கு என்ன செய்ய வேண்டும் என்று தெரியவில்லையெனில், உங்களது பாரத்தை இறக்கி வைக்கத் தெரியவில்லையெனில், அந்த ஒளிவெள்ளப் பிரவாகத்தை இறக்கி வைக்க முடியவில்லை யெனில், அவற்றை வைத்துக்கொண்டுதான் ஆகவேண்டும் என்பதாக எதுவுமில்லை– உங்களுக்கு அவற்றைப் பற்றியெல்லாம் ஒன்றுமே தெரியவில்லை எனில், அது மிகவும் சிரமமாகப் போய்விடும். மிகக் கடினமாகிவிடும். உங்களது ஞானமே உங்களுக்கு மார்பு வலியாக முடிந்து விடும். இதயத்தில் அது வலியாக மாறிவிடும். அது ஒரு நடனமாகவும், சங்கீதமாகவும் மாறுவதற்குப் பதிலாக ஒரு வலியாக முடிந்துவிடும்.

உங்களுக்குத் தெரியுமா? ஞானம் என்பதே மிகுதியாகும் போது அது வலி நிறைந்ததாகவும் ஆகிப்போகிறது. ஒளி என்பது அதீதமாகும்போது, கண்களைக் கூசச் செய்வதாக

இருக்கும்போது, அது உங்களது கண்களைக் குருடாக்கி விடுகிறது. அன்பு என்பது மிகும்போது உங்களால் தாங்க முடியாது. அது வலி மிகுந்ததாகிவிடுகிறது. அதைப் பற்றி எதுவும் தெரியவில்லையெனில், போதிசத்துவ நிலை என்ற மகிழ்ச்சியும் அப்படிப்பட்டதுதான். அதன் பரிமாணம், ஞானம் என்பதும் அப்படிப்பட்டதுதான். அதன் அடர்த்தியும் அதன் காரணமாக இறந்து போகவும் செய்வீர்கள். அல்லது பைத்தியம் பிடித்தவர்களாகி விடுவீர்கள்.

உலகிலேயே புத்தமதம் ஒன்றில்தான் போதிசத்துவர்கள் என்பவர்கள் பைத்தியம் பிடிக்காதவர்களாக இருக்கிறார்கள். ஏன்? சுஃபிஸத்தில் பைத்தியமாகிப் போகிறார்கள். இந்து மதத்தில் பைத்தியமாகிப் போகிறார்கள். பல பேர் பைத்தியமாகிப் போயிருக்கிறார்கள். சுஃபிஸத்தில் அதற்கென்று பிரத்தியேகமாகப் பெயரே இருக்கிறது. 'மஸ்தாஸ்.' ஆனால், புத்தக் கலாசாரத்தில் அதுபோன்றெல்லாம் இல்லை. ஏன்? புத்தருக்கு எல்லாச் சாத்தியங்களும் தெரிந்திருக்கின்றன. அதனால் அதற்கான பாதையை அவர் அறிவியல் பூர்வமாகத் தயாரித்து வைத்திருக்கிறார். எதிர்காலத்தில் நிகழப்போகும் அந்தக் கணத்துக்காக முன் கூட்டியே தயார் செய்திருக்கிறார்.

இருபத்தைந்து நூற்றாண்டுகளாகவே ஒரு புத்தத் துறவியும் மனநிலை சரியில்லாமல் போனதாகத் தெரியவில்லை. அது மிகவும் அபூர்வமானது. சுஃபிஸத்தில் பல பேர் மனநிலை சரியில்லாமல் போயிருக்கிறார்கள். இந்து மதத்திலும் பல பேர் அப்படி ஆகியிருக்கிறார்கள். காரணம் இந்து மதத்திலும், சுஃபிஸத்திலும் போதிசத்துவ நிலைக்கு ஒப்பிட்டுப் பார்க்கிறாற்போல் ஒன்றுமில்லை. எந்த ஒரு போதனையும் கொடுக்கப்படவில்லை. மேற்கில் இந்தப் பிரச்சினை இன்னமும் சிக்கலாகிப் போயிருக்கிறது. கிறிஸ்துவ மதத்தில் இதைப் பற்றிய ஒரு தெளிவே இல்லை.

ஆகவே, கிறிஸ்துவ மதத்தில் சாதாரண மனிதர்கள், எந்த ஒரு விதத்திலும் துறவிகளாக இல்லாதவர்களெல்லாம்கூட வணக்கத்திற்குரியவர்களாகக் கருதப்பட்டுள்ளார்கள். துறவியாக இருந்தவர்களெல்லாம் பைத்தியங்களாகவும், பேய் பிடித்தவர்களாகவும் கருதப்பட்டுள்ளார்கள்.

பல மேற்கத்திய விடுதிகளில் உண்மையிலேயே பைத்திய மாக இல்லாமல் போதிசத்துவ நிலையை அடைந்தவர் களாக இருந்ததன் காரணமாகவே பைத்தியமாகியிருக் கிறார்கள். அவர்களுக்கு மனோதத்துவச் சிகிச்சைகள் தேவைப்படவில்லை. அவர்களுக்கு மின்சார அதிர்ச்சியும் தேவைப்படவில்லை. அவர்களுக்கு மயக்கமருந்தும் தேவைப்படவில்லை. அவர்களுக்கு அனாவசியமான வேதனைகளும், மனோதத்துவப் பரிசோதனைகளும் தேவையேயில்லை. அவர்களுக்குத் தேவையானதெல்லாம் கருணையைச் செலுத்தும் புத்தர்கள்தாம். புத்தரின் பிரசன்னமே அவர்களுக்குத் தேவையானதாகும். புத்தரின் அருகாமையே அவர்களைப் பழைய நிலைக்குக் கொண்டு வரும். அவர்களுக்கு ஒரு பெரிய காந்த சக்தி தேவைப்படுகிறது. அவர்களைப் பழைய பிரக்ஞை நிலைக்கு அதுவே கொண்டு வரும். ஆனால் அவர்கள் அவஸ்தைக்கு உள்ளாக்கப்படுகிறார்கள். அவர்கள் அனாவசியமானவை களுக்கெல்லாம் உள்ளாக்கப்படுகின்றனர். ஏனெனில், ஒரு முறை அவர்களைப் பைத்தியங்கள் என்று கருதத் துவங்கி விட்டால், அவர்கள் பைத்தியங்களைப் போலவே சிகிச்சையளிக்கப்படுகின்றனர்.

புத்தமதம் என்பது உலக மதங்களிலேயே அறிவியல் பூர்வமான மதங்களுள் ஒன்றாகும். அதில் எல்லா வரைபடங்களும், பிரக்ஞையை வளர்ப்பதற்கான எல்லா அம்சமும் இருக்கின்றன. போதிசத்துவ நிலையும் மிக முக்கியமான ஒன்றாகும். ஒருவர் புத்தராவதற்கு முன்னால்

போதிசத்துவ நிலையைக் கடந்துதான் ஆக வேண்டும். ஆனால் சோமேந்திரா, அது அபத்தமானதுதான். அது உண்மை!

> **எனது அன்பான ஓஷோ,**
> **மற்றவர்கள் மீது அக்கறை கொள்வது என்பது எப்போது குறுக்கீடாக மாறுகிறது?**

கொள்கை என்பது எப்போது உள்ளே புகுகிறதோ அப்போதே குறுக்கீடாக மாறிவிடுகிறது. காதல் என்பது கசந்துபோய், வெறுப்புணர்ச்சியாகவே மாறிவிடுகிறது. உங்களது பாதுகாப்பே சிறையாகிவிடுகிறது. கொள்கை என்பதே வித்தியாசங்களுக்கெல்லாம் காரணம்.

உதாரணத்துக்கு, நீங்கள் ஒரு தாய். உங்களது குழந்தையின் மீது அக்கறை செலுத்துகிறீர்கள். அதற்கும் நீங்கள் வேண்டும். அது நீங்களில்லாமல் வாழவே முடியாது. நீங்கள் அவசியம் தேவை.

அதற்கு உணவு வேண்டும். அதற்கு அன்பு வேண்டும். அதற்கு அக்கறையும் வேண்டும். ஆனால், அதற்கு உங்களது கொள்கை தேவையில்லை. உங்களது இலட்சியங்கள் தேவையில்லை. உங்களது கிறிஸ்துவ மதமோ, உங்களது இந்து மதமோ, உங்களது இஸ்லாம் மதமோ, உங்களது புத்த மதமோ தேவையில்லை. அதற்கு உங்களது புனிதப் புத்தகங்கள் தேவையில்லை. அதற்கு உங்களது நம்பிக்கைகள் தேவையில்லை. அது எப்படியிருக்க வேண்டும் என்பதற்கான உங்களது இலட்சியங்கள் தேவையில்லை.

கொள்கைகளை, இலட்சியங்களை, முடிவுகளை, எல்லாமே விட்டுவிடுங்கள். அதன்பின் அக்கறை மிகவும் அழகானதாக இருக்கும். அதன் பின்னர்க் களங்கமற்றதாக இருக்கும். அப்படியில்லையெனில் அக்கறை என்பதே தந்திரம் மிக்கதாகத்தானிருக்கும்.

உங்களது அக்கறையில் உங்களது கொள்கையைத் திணிக்கவில்லையெனில் நீங்கள் உங்களது குழந்தையை ஒரு கிறிஸ்துவனாக, அல்லது இந்துவாக மாற்ற முயல மாட்டீர்கள். ஒரு கம்யூனிஸ்டாக அல்லது பாஸிஸ்டாக அல்லது உங்களது குழந்தை ஒரு வியாபாரியாக, ஒரு மருத்துவராக, ஓர் எஞ்சினீயராக வரவேண்டும் என்று எண்ணமாட்டீர்கள். நீங்கள் உங்களது குழந்தையைப் பற்றி எந்த எண்ணத்தையுமே வைத்துக்கொள்ள மாட்டீர்கள். நீங்கள் சொல்வது என்னவெனில், "நான் உன் மீது அன்பாயிருக்கிறேன். நீ பெரியவனாகும்போது நீயே தேர்ந்தெடுத்துக்கொள். நீ இயல்பாக என்னவாக நினைக்கிறாயோ அது போல வா. எனது ஆசிர்வாதங்கள். நீ என்னவாக இருந்தாலும் எனது வாழ்த்துக்கள். நீ என்னவாக ஆனாலும், எனது பக்கத்திலிருந்து, அது வரவேற்கப்பட்டு ஏற்றுக் கொள்ளப்படும். நீ ஒரு தேசத்துக்கு ஜனாதிபதியாக ஆனால் மட்டும்தானென்று இல்லை. நீ ஒரு சாதாரணமான தச்சு வேலைக்காரனாக ஆனால் ஏற்றுக் கொள்ளமாட்டேன். அப்போது உன்னைப் பார்த்து வெட்கப்படுவேன் என்பதில்லை. நீ தங்கப் பதக்கத்தைப் பல்கலைக் கழகத்தில் படிக்கும்போது வென்று வந்தால் மட்டுமே வரவேற்கப்படுவாய். நீ தோல்வியடைந்து வந்தால் நான் வெட்கப்படுவேன் என்பதில்லை. நீ நல்லவனாக, புத்திசாலியாக நற்பண்புகளமைந்திருந்தால் மட்டுமே எனது குழந்தை. அப்படியில்லையெனில் நீ எனக்கு உறவில்லை. நான் உனக்கு உறவில்லை" என்று கிடையாது என்பதுதான்.

எந்தக் கணத்தில் ஒரு நோக்கத்தைக் கொண்டு வருகின்றீர்களோ அப்போதே உறவில் விஷத்தைக் கொண்டு வந்து விட்டீர்கள். அக்கறை என்பது மிகவும் அழகானது. ஆனால், அந்த அக்கறையில் ஒரு நோக்கம் வரும்போது அது தந்திரம் மிகுந்ததாகிவிடுகிறது. அது ஒரு

பேரமாகி விடுகிறது. அதில் நிபந்தனைகள் வந்து விடுகிறது. நமது எல்லா அன்புமே தந்திரம் மிகுந்ததாகத்தானிருக்கிறது. அதனால்தான் இந்த உலகத்தில் இவ்வளவு துயரங்களும்– இந்த நரகமும் இதனால்தான். அக்கறை என்பது இல்லை என்றில்லை. அக்கறையிருக்கிறது. ஆனால் நிறையத் தந்திரங்களுடன் அது இருக்கிறது. தாய் அன்பு செலுத்துகிறாள். தந்தை அன்பு செலுத்துகிறார். கணவன் அன்பு செலுத்துகிறான். மனைவி அன்பு செலுத்துகிறாள். சகோதரன், சகோதரி எல்லோருமே அன்பும் அக்கறையும் செலுத்துகின்றனர். நான் யாருமே அன்பு செலுத்துவதில்லை என்று சொல்லமாட்டேன். மக்கள் அதிகப்படியாகவே அக்கறையும் அன்பும் செலுத்துகின்றனர். ஆனாலும், இந்த உலகம் இன்னமும் ஒரு நரகமாகவே உள்ளது.

ஏதோ தவறாக இருக்கிறது. ஏதோ ஒன்று அடிப்படையிலேயே தவறாக இருக்கிறது. அடிப்படையில் எங்குத் தவறு நடக்கிறது? எங்கு விஷயங்கள் தவறாகப் போகின்றன? அன்பு செலுத்துதலில் நிபந்தனைகள் உள்ளன. 'இதனைச் செய். அந்த மாதிரியாக வா.' நீங்கள் நிபந்தனையின்றி யாரையாவது அன்பு செலுத்தியதுண்டா? யாரையாவது அவளை அப்படியிருக்கிறாற்போலவே அல்லது அவனை அப்படியிருக்கிறாற்போலவே அன்பு செலுத்தியதுண்டா? நீங்கள் முன்னேற்றமடைய விரும்புவதே இல்லை. நீங்கள் மாறுவதற்கு விரும்புவதே இல்லை. உங்களது ஒப்புதல் முழுமையானது. முற்றிலுமானது. அப்போதுதான் அன்பு காட்டுவது என்றால் என்னவென்று தெரியும். நீங்கள் அந்த அன்பு காட்டுதலில் முழுமையடைவீர்கள். அப்போது உங்களுக்கு அதிகமாகவே உதவியளிக்கப்படும். நினைவு கொள்ளுங்கள். உங்களது அன்பில் வியாபாரம் இல்லையெனில், அதில் ஆசையில்லையெனில், நீங்கள் யார் மீது அன்பு காட்டுகிறீர்களோ அவர்களும் உங்களிடம் எப்போ

தும் அன்போடிருப்பார்கள். ஆனால், உங்களது அன்பில் ஏதேனும் எண்ணம் இருக்குமாயின் அதன் பின்னர் நீங்கள் அன்பு காட்டியவர்கள் உங்களை மன்னிக்கத் தயாராக இருக்கவே மாட்டார்கள். அதனால்தான் குழந்தைகள் தங்களது பெற்றோர்களை மன்னிக்கச் சக்தியற்றவர்களாக இருக்கின்றனர்.

நீங்கள் மனோசிகிச்சை மருத்துவர்களிடம் கேட்டுப் பாருங்கள். அவர்களிடம் வரும் நோயாளிகள் எல்லோருமே குழந்தையாக, பெற்றோர்களால் அதிகப்படியாகவே நேசிக்கப்பட்ட குழந்தைகளாகவே இருப்பார்கள். ஆனால் அவர்களது அன்பு வியாபாரத்தனம் மிகுந்ததாக இருந்திருக்கும். அது கணக்குப் பார்த்த அன்பாக இருக்கும். அவர்கள் தங்களது சில இலட்சியங்களை, தமது குழந்தைகள் வழியே தீர்த்துக்கொள்ள முயன்றிருப்பார்கள். அன்பு என்பதே இலவசப் பரிசாக இருத்தல் வேண்டும். அதனுடன் ஒரு விலைச்சீட்டுத் தொங்கவிடப்படும்போது அது அன்பாக இருப்பதில்லை.

எனது அன்பான ஓஷோ,
நீங்கள் ஆசிரமத்தில் ஏன் மாமிச உணவை
அனுமதிப்பதில்லை?

இந்தக் கேள்வி யோகா சின்மயாவிடமிருந்து வந்துள்ளது. சின்மயாவின் மனத்தில் மாமிசம் உண்பதைப் பற்றிய எண்ணம் ஏதோ வந்திருக்க வேண்டும். ஆழ்மனதில் ஏதோ ஒரு கொடுமையான, பலாத்கார எண்ணம். அப்படியில்லையெனில் எப்படி இந்தக் கேள்வி ஒரு மரக்கறி உண்பவரிடமிருந்து வந்துள்ளது? பல ஆயிரக்கணக்கான மாமிசம் உண்பவர்கள் இங்கிருக்கும்போது இவரிடமிருந்து இப்படிப்பட்ட கேள்வி வந்துள்ளது. இது மிகவும் அபத்தமாகப்படுகிறது. ஆனால் இப்படித்தான் எல்லாம் இருக்கின்றன. சைவ உணவை உண்பவன் உண்மையான

சைவ உணவுக்காரனாக இருப்பதில்லை. அவன் ஓர் அழுத்தப்பட்ட மனோபாவம் உள்ளவனாகவே இருக் கிறான். ஆசை எழுகிறது.

ஆனால், இங்கு ஆசிரமத்தில் மாமிச உணவை அனுமதிக்காமல் இருப்பதற்கும் மதத்திற்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை. அது முற்றிலும் அழகியல் உணர்ச்சியுடன் தொடர்புடையது. நான் மாமிச உணவை உண்பவர்கள் எல்லோரும் ஞானத்தை அடைய முடியாது என்ற கொள்கை உடையவனும் அல்ல. இயேசு ஞான மடைந்தார். முகம்மது ஞானமடைந்தார். ராமகிருஷ்ணரும் ஞானம் அடைந்தவர்தாம். அதில் எந்தவொரு பிரச்சினை யும் இல்லை. நீங்கள் மாமிச உணவை உட்கொண்ட பிறகும் ஞானமடையலாம். அதனால் மதப் பிரச்சினை ஏதும் இல்லை.

எனக்கு இது ஓர் அழகியல் உணர்ச்சி தொடர்பான பிரச்சினைதான். ஏனெனில் இயேசு மாமிசம் சாப்பிடு வதைத் தொடர்ந்தார். எனக்கென்னவோ அவருக்கு ஒரு பெரிய அழகியல் உணர்ச்சி இருந்ததாகக் கருத முடிய வில்லை. அவர் புனிதமானவரல்ல என்று நான் சொல்ல வில்லை. அவர் முற்றிலும் மதவாதிதான். புத்தரைப் போலவே, புனிதமானவர்தான். ஆனால் ஏதோவொன்று அவரிடம் இல்லாது போய்விட்டது. ராமகிருஷ்ணரும் மீன் சாப்பிடுவதைத் தொடர்ந்தார். அதுவும் அழகியல் உணர்ச்சியற்ற செயல்தான். அது மிகவும் அழகற்றதாகக் கூட இருக்கிறது.

ஞானமடைவது என்பது தடைப்படுவது கிடையாது. ஆனால் கவிதை என்பது தடைப்படுகின்றது. உங்களது அழகுணர்ச்சி தடைப்படுகிறது. உங்களது மனிதாபிமானம் தடைப்படுகிறது. உங்களது மேம்பட்ட மனிதத் தன்மை (Super-humanity) தடைப்படுவதில்லை. ஆகவேதான்

அதனை எனது ஆசிரமத்தில் அனுமதிப்பது இல்லை. இது முற்றிலும் அழகியல் சம்பந்தப்பட்ட பிரச்சினைதான்.

இதனைப் புரிந்துகொண்டால் பல விஷயங்கள் உங்களுக்குத் தெளிவாகிவிடும். மது வகைககள்கூட இந்த ஆசிரமத்தில் அனுமதிக்கப்படும். ஆனால், மாமிச உணவு அனுமதிக்கப்படமாட்டாது. ஏனெனில் மது வகைகள் சைவ உணவு வகையைச் சேர்ந்தவை. பழச்சாறுதானே அவை. புளிப்பூட்டப்பட்டவை. ஆனாலும் அது பழச்சாறுதான். சில நேரங்களில் கொஞ்சம் மது அருந்துதல் என்பது ஒரு கவித்துவமான நிலைக்கு இட்டுச் செல்கிறது. அது சாத்தியமானதே. அது அனுமதிக்கப்படல் வேண்டும். நமது புதிய கம்யூன் ஏற்பாடு செய்யப்படும்போது ஒரு மதுச்சாலையும்–உமர்கய்யாம்– இருக்கும். உமர்கய்யாம் ஒரு சூஃபித் துறவி. ஒரு ஞானமடைந்த துறவி.

ஆனால் மாமிசம் அனுமதிக்கப்பட மாட்டாது. அது மிகவும் அசிங்கமானது. நீங்கள் ஒரு மிருகத்தைக் கொலை செய்வதை நினைத்தால், அதனை உண்பதையும் நினைத் தால், அந்த எண்ணமே மிகவும் அழகியல் உணர்ச்சிக்கு அப்பாற்பட்டதாக இருக்கிறது. ஒரு மிருகம் கொலை செய்யப்படுகிறது என்பதற்காக நான் இதனை எதிர்க்க வில்லை. ஏனெனில் மிருகங்களுள் அவசியமானவை வாழும். அவற்றைக் கொலை செய்தல் இயலாது. தேவை யற்றவை நீங்களே கொலை செய்யவில்லை யென்றாலும் நிச்சயம் இறக்கத்தான் போகின்றன. அது தேவையற்றது. அந்த விஷயத்தை நான் விவாதிப்பது தேவையற்றது. கேள்வி என்னவெனில் நீங்கள் கொலை புரிகிறீர்கள். கொலை என்பது நல்லதல்ல என்பதும் அல்ல. அழகான மரக்கறி உணவு இருக்கும்போது எதற்காக மற்றொன்று? ஒரு வேளை மரக்கறி உணவு கிடைக்கவில்லையெனில் அதனை ஒரு விஷயமாக எடுத்துக் கொள்ளலாம். ஆனால், அந்த

உணவு கிடைக்கிறது. அதன்பின் எதற்காக? எதற்காக ஓர் உடலை அழிக்க வேண்டும்? ஒரு மிருகத்தைக் கொலை செய்கையில் நீங்கள் ஏன் மனிதர்களையே உண்ணும் Cannibal ஆக இருக்கக்கூடாது? ஒரு மனிதனைக் கொலை செய்தலில் என்ன தவறு இருக்கிறது? மனித உடலில் இருந்து பெறப்படும் மாமிசம் நிச்சயம் உங்களுக்கு உகந்ததாகவே இருக்கலாம். ஏன் மனித உடல்களையே உண்ண ஆரம்பிக்கக் கூடாது? அதுவும் ஓர் அழகியல் உணர்ச்சி தொடர்பான கேள்விதான்.

மிருகங்களும் நமக்குச் சகோதர, சகோதரிகள்தாம். ஏனெனில் மனிதன் அவற்றிலிருந்து வந்தவன்தான். அவை நமது குடும்பத்தைச் சேர்ந்தவையே. ஒரு மனிதனைக் கொல்லுதல் என்பது ஒரு வளர்ச்சியடைந்த மிருகத்தைக் கொல்வதற்கு ஒப்பானதே. அல்லது ஒரு மிருகத்தைக் கொல்வது என்பது வளர்ச்சியடையும் பருவத்தில் இருக்கும் யாரோ ஒரு மனிதனைக் கொல்வதற்கொப்பானதே. அது இரண்டும் ஒன்றுதான். முதல் பருவத்தில் இருக்கும் ஒரு குழந்தையைக் கொன்றாலும், அல்லது பல்கலைக்கழகத்தில் கடைசி வகுப்புப் படித்துக்கொண்டிருக்கும் ஒரு வாலிபனைக் கொன்றாலும் அதிக வித்தியாசமில்லை. மனித வர்க்கமே ஒரு காலத்தில் மிருகங்களாக இருந்தவைதாம். மிருகங்கள் எல்லாமே மனிதர்களாக ஆகும் முயற்சியில் ஈடுபட்டிருப்பவைதாம். அது ஓர் அழகியல் தொடர்பான பிரச்சினைதான். நீங்கள் ஏன் உங்களது மனைவியைக் கொன்று தின்னக் கூடாது? அவள் மிகவும் அழகாக இருக்கிறாள். அதனால் சுவையாகக்கூட இருப்பாள்.

ஒரு நண்பன், தனது மனிதர்களையே உண்ணும் கூட்டத்தைச் சார்ந்த மற்றொரு நண்பனைப் பார்க்க வந்தானாம். அவனுக்கு விருந்தாகச் சுவையான உணவு

தயாரிக்கப்பட்டு, இதுவரை ருசி பார்த்திராத அளவுக்குத் தயாரிக்கப்பட்டு வழங்கப்பட்டது. அது மிகவும் ருசியாக இருந்தது. அவன் கிளம்புவதற்கு முன்னதாக Cannibal நண்பரிடம், “எனக்கு இந்த உணவு மிகவும் பிடித்திருந்தது. நான் இதுவரையில் இது போன்று ருசித்து உண்டதே யில்லை. நான் அடுத்த முறை வரும்போதும் இதே உணவைத் தயார் செய்” என்றான்.

மனித உணவுக்காரன் பதிலாக, “அது மிகவும் கடினமான ஒன்று. ஏனெனில் எனக்கு ஒரே ஒரு அம்மா தான் இருந்தாள்” என்று சொன்னானாம்.

நீங்களும் ஏன் உங்களது தாயை உண்ணக்கூடாது? உங்களது கணவரை, குழந்தையை உண்ணக் கூடாது? மிகவும் ருசியாக இருக்கும். இது மதத் தொடர்பான கேள்வி யல்ல. நான் உங்களுக்கு மீண்டும் நினைவுபடுத்த விரும்பு கிறேன். அது ஓர் அழகியல் தொடர்பான பிரச்சினைதான். ஓர் அழகியல் உணர்ச்சி படைத்த மனிதன் எல்லா மிருகங்களையும் அழகானது என்ற கண்ணோடுதான் பார்க்கிறான். அவனுக்கு வாழ்க்கையே அழகானதாக இருக்கிறது. அசிங்கமாக ஏதுமில்லை. ராத்திரி வேளை களில் பயமுறுத்துவதாக எதுவுமில்லை.

ஆனால், சின்மயாவின் மனத்தில் இது போன்று தோன்றியிருக்கிறது. அது ஏதோவொன்றைக் குறிக்கிறது. இந்தியாவில் மக்கள் சைவ உணவு உண்ணுபவர்களாக இருக்கும்போதே அவர்கள் உண்மையான சைவ உணவு உண்பவர்களாக இருப்பதில்லை. அது ஏனெனில் அவர்கள் சைவ உணவுப் பழக்கத்தில் இருக்கும் குடும்பத்தில் பிறந்தவர்களாக இருப்பதனால், ஆரம்பம் முதலே சைவ உணவுப் பழக்கத்தில் திணிக்கப்பட்டிருக்கின்றனர். இயல்பாகவே அவர்கள் அசைவ உணவு வகையின் மீது ஆர்வம் காட்டுபவர்களாக இருப்பதனால், அவர்களுக்கு

அந்த எண்ணம் எழுகிறது. இந்த உலகம் முழுவதுமே அசைவ உணவுக்காரர்களால் நிரம்பியதுதான். மக்கள் மகிழ்ச்சியாகத்தான் இருக்கிறார்கள். சைவ உணவுக்காரன், தான் எதையோ இழந்துவிட்டதாக நினைக்கிறான். அதனாலேயே இந்தக் கேள்வி எழுகிறது.

தியானத்துக்கும் இதற்கும் ஒரு தொடர்புமில்லை. நீங்கள் மாமிச உணவு உண்ணும்போது தியானமும் செய்யலாம். நீங்கள் மாமிசம் உண்ணும்போது அன்பு செலுத்தவும் செய்யலாம். அதற்கும் அன்புக்கும் ஒரு சம்பந்தமும் இல்லை. ஆனால் இந்தச் செய்கை உங்களிடம் ஒன்றைக் காட்டிக் கொடுக்கிறது. நீங்கள் கொடுமைக் காரராக, நீங்கள் இன்னமும் தொடக்க நிலையிலேயே இருப்பவரென்பதாக, கலாசாரத்தில் முன்னேறாதவராக, நாகரிகமடையாதவராக இருப்பதையே, உங்களுக்கு வாழ்க்கை என்றால் எப்படி வாழ வேண்டும் என்ற ஒரு எண்ணத்தை ஏற்படுத்திக் கொள்ளாதவராக இருப்பதையே குறிக்கிறது. அழகியல் உணர்ச்சியின் காரணமாக அந்த அடிப்படையிலேதான் சைவ உணவுப் பழக்கமே பிறந்தது. அது மதத்தில் பிணைக்கப்பட்டது. அதன் பின் முக்கியத்துவம் இழந்தது. அதனை மதத்திலிருந்து வெளியே எடுத்துவிட வேண்டும்.

மக்கள் என்னிடம் வந்து கேட்கிறார்கள். ஒரு சமண மதத்தைச் சார்ந்தவர் என்னிடம் வந்து கேட்டார்: "நீங்கள் எப்படி இயேசு கிறிஸ்து ஞானமடைந்தவர் எனக் கூறுகிறீர்கள்? ஏனெனில் அவர் மாமிசம் உண்டவர்." அவரது கேள்வி அவரைப் பொருத்தவரையில் நியாயமானதே. காரணம் மாமிச உணவு உண்பவர்கள் எல்லோரும் ஞானமடைய முடியாது என்பதாக அவர் கருதுகிறார். மாமிசம் உண்பவர்களும் ஞானம் அடையலாம். மனிதர்கள் எப்படிக் கவிஞர்களாகிறார்களோ அதே போல

ஞானமும் அடையலாம். அது ஒரு தடையல்ல. மக்கள் அழகியல் உணர்ச்சியற்றுப் போய் விடுகின்றனர். ஒரு ரோஜா மலரில் இருக்கும் அழகை யார் பார்க்காமல் இருக்க முடியும்? அவர் ஞானமடைய முடியும். ஒரு சந்திரனில் உள்ள அழகைப் பார்க்க முடியாமல் இருக்க முடியுமா? அவரும் ஞானமடைய முடியும். பீதோவனின் சங்கீதத்தில் மனத்தைப் பறி கொடுக்காமல் இருக்க முடியுமா? அவர்களும் ஞானமடைய முடியும். ஆனால் இயேசு பக்குவப்படாத ஒன்றைக் காண்பிக்கிறார். ஒருவேளை அவருக்குச் சாத்தியமில்லாமல் போயிருக்க லாம். ஒருவேளை அவர் மாமிசம் உண்ணும் மக்களி டையே வாழ்ந்திருக்கலாம். ஆகவே அவருக்குச் சைவ உணவுப் பழக்கத்தினராக இருக்க முடியாமலிருக்கலாம். அது முற்றிலுமாகவேகூடச் சாத்தியமில்லாது போயிருக்க லாம். ஆனால் இருந்தும் கூட, அவர் முயற்சி செய்திருக் கலாம்.

ஆனால் நினைவில் வையுங்கள். எனது மொத்த அணுகுமுறையுமே ஒருங்கிணைக்கப்பட்டதாக இருக்கிறது. தியானம் என்பது தேவையானதுதான். அதேபோலக் கவிதையும். அதேபோல அழகியல் உணர்ச்சியும். அதேபோல மதமும், அதேபோல சங்கீதமும், அதேபோல கலையும். எல்லாமே தேவையானதுதான். மனிதன் எல்லாப் பரிமாணங்களிலுமே ஒருங்கிணைக்கப்பட்ட வகையில் வளர வேண்டும். அதன் பின்னரே மலர்ச்சி என்பது நிகழும். இதழ்கள் விரிந்து நீங்கள் மிகவும் மகிழ்ச்சி யடைய, மகத்தான தியாக உணர்வை வாழ்க்கையில் பெற முடியும்.

துறவி பிரான்ஸிஸ் இயேசு கிறிஸ்துவைவிட மிகவும் அழகியல் உணர்வு படைத்தவர். அவரைப் பற்றி இயல்பாகவே கதைகள் உண்டு. அவரிடம் பறவைகள் வந்து

தோள்களில் அமருமாம். மீன்கள் நதிகளிலிருந்து துள்ளி அவரைக் காண வருமாம். அவருக்கு மிருக வர்க்கத்தின் மீது ஓர் அலாதியான பிரியம் இருந்தது. அவர் மரங்களிடம் உரையாடுவார். அவர் அவற்றைச் சகோதரிகள் எனவும், பறவைகளைச் சகோதரர்கள் என்றுமே அழைப்பாராம். சூரியனிடமும், சந்திரனிடமும் உறவாடுவார். அது இயேசு விடம் நிகழவில்லை. அது முகம்மதுவிடமும் நிகழவில்லை. அது நிகழ முடியாது.

ஆனால் இன்னமும் நான் சொல்கிறேன்: அவர்கள் ஞானமடைந்தவர்கள்தாம். ஆனால் அவர்களின் ஞான மடைதலில் ஏதோ ஒன்று இல்லாமல் இருக்கிறது. அழகியல் உணர்ச்சிதான் அது. அதை ஏன் இழக்கிறீர்கள்? அதனை நீங்கள் ஏன் முழுமையாக அடையக் கூடாது? சாத்திய மாகும் எல்லா வழிகளிலும் ஏன் நீங்கள் ஞானத்தை அடையக் கூடாது?

> எனது அன்பான ஓஷோ,
> உங்களிடத்தில் எதனைச் சரண் செய்தல்
> வேண்டும்?

சவிதா, உன்னிடம் எது இல்லையோ அது இருப்பதாக நினைக்கிறாயோ அதனையே சரண் செய்தல் வேண்டும். உன்னிடம் உண்மையில் அகங்காரம் என்பது இல்லை. நான் என்ற உணர்வு, தான் என்ற நினைப்பு. அது உண்மையில் உன்னிடம் இல்லை. நீ உண்மையில் வாழ்க்கையிலிருந்து தனியே இருப்பதாக நினைத்துக் கொண்டிருக்கிறாய். அந்தப் பிரிவு என்பது, உண்மையில் இல்லை. நீ உண்மையில் ஒரு கணம்கூடத் தனியாக வாழ முடியாது. நீ ஒரு தீவைப் போல வாழ முடியாது. நீ இந்த முழுமையில் ஒரு பகுதிதான். இந்த முழுமை எப்போதுமே உன்னில் பங்கு வகிக்கிறது. இந்த முழுமை என்பது எப்போதுமே அதன் சக்தியை உன்மேல் பொழிந்து

கொண்டிருக்கிறது. ஆனாலும் 'நான் தனி' என்ற உணர்வுடன் எப்போதுமே இருக்கிறாய்.

அந்த 'நான்' என்ற உணர்வினைச் சரணடையச் செய்ய வேண்டும். அது உன்னிடமில்லை. அதனால் உண்மையில் அதனைச் சரண் செய்தல் என்பதும் முடியாது. அது ஒரு மாயைதான். நான் மீண்டும் சொல்கிறேன். அது உன்னிடம் இல்லை. அதனை உன்னிடமிருந்து வெளியே எடுத்துக் கொள்ளப் போகிறேன். எது உன்னிடமிருக்கிறதோ, அதனை உன்னிடமே திருப்பித் தரப்போகிறேன். உன்னுடைய யதார்த்தத்தை உன்னிடமே திருப்பியளிக்கப் போகிறேன். நீ அதைப் பற்றி மறந்தே விட்டாய். உன்னுடைய யதார்த்தமில்லாதவற்றையெல்லாம் நான் எடுத்துக்கொள்ளப் போகிறேன்.

நினைவில் கொள். நீ உன்னுடைய அகங்காரத்தைச் சரணடையச் செய்கையில் நீ எதையும் இழப்பதில்லை. நீ லாபமடைகிறாய். நீ உண்மையான லாபமாக அடைகிறாய். அது எப்படியெனில், நீ உறங்கிக்கொண்டிருக்கும்போது கனவு கண்டுகொண்டிருக்கையில் நான் வந்து உன்னை எழுப்பி விடுகிறேன். உனது கனவு கலைந்துவிட்டது. அப்போது நீ எதையேனும் இழக்கிறாயா? முதலாக அந்தக் கனவு அங்கே இல்லாமல் போகிறது. அது உண்மையல்ல. அது கனவுதான். வெறும் கனவுதான். இப்போது உனது கண்களைத் திறந்து பார்க்கும்போது காலை விடிந்து சூரியன் உதித்துக்கொண்டிருக்கிறான். பறவைகள் சங்கீத மிசைத்துக் கொண்டிருக்கின்றன. மரங்களும் புதிய தினத்தை வரவேற்றுக் கொண்டிருக்கின்றன.

நான் எது இருக்கிறதோ அதனை அளித்துவிட்டு எது இல்லையோ அதனை எடுத்துக் கொள்கிறேன். நான் உன்னை விழிப்படையச் செய்கிறேன். நீ எதையும் இழப்ப தில்லை. நினைவில் கொள். நான் உனது சரணடையச்

செய்தலின் வழியாக எதையும் பெறுவதில்லை. ஆகவே நீ கஞ்சத்தனமாக நடந்துகொள்ள வேண்டாம். உங்களின் சரணடைதல் மூலமாக நான் எதையும் பெறுவதில்லை. ஆகவே நீ கஞ்சத்தனமாக நடந்து கொள்ள வேண்டாம். உங்களை எழுப்பும்போது நீங்கள் கனவை மட்டுமே இழக்கிறீர்கள். ஆனால் அந்தக் கனவை நான் பெறுவ தில்லை. அப்படியில்லையெனில் உங்களது அகங்காரத்தை என்னிடம் சரணடையச் செய்யுங்கள் என்று கேட்கவே மாட்டேன். அப்படியில்லையெனில் நான் முழுவதுமாக நசுக்கப்பட்டு விடுவேன். கொலையே செய்யப்பட்டு விடுவேன்.

ஒரு சலிப்படைந்த மனிதன் தனது நண்பனைக் காண்பதற்காக வந்தான். அந்த நண்பன் தன்னுடைய பழைய அனுபவங்களின் காரணமாகப் பயந்து போயிருந் தான். அவன் இவனை மிகவும் பேசிப் பேசிச் சோர் வடையச் செய்திருந்தான். அவன் திரும்பிப் போகும்போது, “என்ன விந்தையாக இருக்கிறது. நான் வரும் போது எனக்கு ஓரே தலைவலியாக இருந்தது. ஆனால் இப்போது போய் விட்டது” என்றான்.

பதிலுக்கு அவதிக்குள்ளாகியிருந்த நண்பன், “அதைப் பற்றிக் கவலைப்படத் தேவையில்லை. அது வேறெங்கும் போகவில்லை. என்னிடம் வந்துவிட்டது” என்று சொன்னானாம்.

உன்னுடைய அகங்காரத்தைச் சரணடையச் செய்யும் போது, நான் அதனைப் பெறுவதில்லை. உன்னுடைய தலைவலியைச் சரண் செய்யும்போது நான் அதனிலிருந்து எதையும் பெறுவதில்லை. ஆகவே துயரப்பட வேண்டாம். பல மனிதர்கள் என்னிடம் சரண் செய்வதால் நான் ஏதோ நிறையச் சேர்த்து வைத்திருப்பதாகக் கருத வேண்டாம். நான் எதையும் பெறுவதில்லை. நீங்கள் சரண் செய்வ

தெல்லாம் ஒன்றுமேயில்லை. ஆனால் சரண் செய்வதன் மூலம் நீங்கள் நிறையப் பெறுகிறீர்கள். நீங்கள் உண்மையைப் பெறுகிறீர்கள்.

உங்களது நம்பகத் தன்மையைப் பெறுகிறீர்கள்.

எனது அன்பான ஓஷோ,
நீங்கள் புத்தரைப் பற்றியும் சாரிபுத்ராவைப்
பற்றிப் பேசும்போதும், சுபூதி- ஆனந்தரைப் பற்றி,
மகாகாஷ்யபாவைப் பற்றிப் பேசும்போதும் புத்தர்
இருக்கும்போது நீங்களும் இருந்தாற்போலவே,
நீங்கள் அவற்றைப் புரிந்து கொண்டதால்
மட்டுமேயல்லாமல், அந்த உணர்வையே
பெற்றவராக மட்டும் அன்றி அவர் உடலோடு
இருந்தபோது அவரை நேரடியாக
அனுபவித்தவராகவே நான் கருதுகிறேன். அது
உண்மையா?

பிரமோத், உண்மையில் அது சரிதான். ஆனால் அதனை யாரிடமும் சொல்ல வேண்டாம். அதனை ரகசியமாக வைத்துக் கொள்ளவும். அதைப் பற்றி மறுபடியும் ஒரு கேள்வியும் கேட்க வேண்டாம்.

எனது அன்பான ஓஷோ,
நீங்கள் என்ன நினைக்கிறீர்கள் ஓஷோ? நீங்கள்
பேசுவதைப் பற்றியெல்லாம் நான் சிறிதளவேனும்
புரிந்து கொண்டதாக நினைக்கிறீர்களா?

ஆமாம், சுபூதி.

எனது அன்பான ஓஷோ,
நாம் என்ன நினைத்தோமோ, அதன்
விளைவாகவே இப்போதிருக்கிறோம் என்பதாகப்
புத்தர் சொல்கிறார். ஒரு மனிதன் மனத்தில்

**விதைக்கப்பட்டுள்ளது என்னவெனில், அவனது மனம் எதனால் ஆனது என்றால், ஒருவன் தூய்மையான எண்ணத்துடன் நடந்தாலோ அல்லது பேசினாலோ இன்பம் அவனை நிழலாய்த் தொடரும். இது மனமற்ற நிலை என்பதற்கு எப்படித் தொடர்புடையதாகும்? நாம் எப்படி நமது எண்ணங்களைக் கட்டுப்படுத்துவது?**

முதலாவதாக, மூன்று மனோநிலைகள் சாத்தியமாக இருக்கின்றன. ஒன்று, கெட்ட மனோநிலை. அது எப்போதுமே அழிவான வழிகளிலேயே எண்ணும். எப்போதும் அழிப்பதைப் பற்றியே எண்ணமிடும். அது மக்களுக்குத் துன்பம் உண்டாக்குவதிலேயே இன்பம் காணும் தன்மை படைத்தது. அந்த வகையான மனத்துடன் துன்பம் என்பதும் நிழலாகத் தொடரும் என்று புத்தர் சொல்கிறார். நீங்கள் மற்றவர்களுக்குத் துன்பமிழைக்க விரும்பினால் முடிவாக உங்களுக்கே துன்பம் வந்து சேரும். நீங்கள் வாழ்க்கைக்கு முரண்பாடாக நினைத்தால் வாழ்க்கையும் உங்களுக்கு எதிராக மாறிவிடும். ஏனெனில் வாழ்க்கை என்பதே ஒரு கண்ணாடிதான். அது பிரதிபலிக்கும்.

நீங்கள் சபித்தால் அதேபோலச் சபித்தல் உங்களுக்கே திரும்பி வந்து சேரும். நீங்கள் ஓர் அழகான பாடலைப் பாடினால் அந்தச் சங்கீதம் திரும்ப வந்து உங்களின் மீது பொழிந்து இன்பமுற வைக்கும். நீங்கள் ஒன்றை அளிப்பீர் களேயானால், அதுவே பல ஆயிரக்கணக்கான மடங்கில் உங்களையே வந்தடையும். நீங்கள் எதை விதைக்கிறீர்களோ அதுவே ஆயிரம் மடங்காக விளையும். ஆகவே கெடுதல் செய்யும் மனம் துயரத்தை பின் தொடர வைக்கும். அதனை நரகமே பின் தொடரும். கெடுதல் செய்யும் மனமென்பது கொடுமைப்படுத்துவதை, அழிப்பதை, கொலை புரிவதை

ரசிக்கிறது. டாமர்லேன், செங்கிஸ்கான், அடால்ஃப் ஹிட்லர், ஜோசப் ஸ்டாலின் எல்லோரும் இத்தகையோரே. அவர்கள் கெடுதல் செய்யும் மனம் கொண்டவர்கள்.

அதன் பின்னர்ப் புனித மனம் படைத்தவர்கள். இவர்கள் கேடுபுரியும் மனமுடையவர்களுக்கு எதிரானவர்கள். நேர் எதிர்மறையானவர்கள். அவர்கள் உருவாக்குபவர்கள். அவர்கள் மக்கள் மகிழ்ச்சியடைவதைப் பார்த்துச் சந்தோஷமடைபவர்கள். அவர்கள் உதவி புரிவார்கள். அவர்கள் சேவை மனப்பான்மையுடையவர்கள். அவர்கள் மற்றவர்களின் மீது மகிழ்ச்சியைப் பொழிபவர்கள். அவர்கள் மக்கள் சந்தோஷமாக இருப்பதைப் பார்க்க விரும்புபவர்கள். அவர்களைச் சந்தோஷம் நிழலாகப் பின் தொடரும்- அந்தப் புனித மனங்களை!

ஆனால் இவற்றுக்கெல்லாம் மேலே ஒன்று, நீங்கள் அறியாத ஒன்றிருக்கிறது. மகிழ்ச்சி என்று ஒன்றிருக்கும் போது அதனைக் கடந்து துயரமும் இருக்கும். மகிழ்ச்சி யற்றதாக சில இருக்குமேயானால் அதன் எல்லையில் மகிழ்ச்சியானவையும் இருக்கும். அவை ஒன்றாகவே செல்லும். கேடு செய்யும் மனத்தைத் துயரம் நிழலாகப் பின் தொடரும். நரகம் பின் தொடரும். ஆனால் நரகத்தை எங்கோ ஓரிடத்தில் சொர்க்கமும் பின் தொடரும் அல்லவா? புனிதமான தூய்மையான மனத்தை மகிழ்ச்சி பின் தொடரும். ஆனால் மகிழ்ச்சியைத் தொடர்ந்து வருவது துயரம்தானே? ஏனெனில் அவை தனியாக இருக்க முடியாது. அவை தனித்தனியானவை அல்ல.

உங்களால் துக்கமாக இருக்க முடியவில்லையெனில் மகிழ்ச்சியாக இருப்பது எங்ஙனம் சாத்தியம்? துயரம் என்பது என்னவென்று நீங்கள் மறந்துவிட்டிருந்தால் மகிழ்ச்சியாக இருப்பதையும் மறந்துவிட்டிருக்கிறீர்கள் என்றுதான் அர்த்தம். உங்களுக்கு நோய் என்றால் என்ன

வென்று தெரியவில்லையெனில், உங்களால் நல்ல ஆரோக்கியத்தையும் உணர முடியாது என்பதாகத்தான் அர்த்தம்.

நீங்கள் உண்மையிலேயே ஆரோக்கியமாக இருக்க வேண்டுமெனில் சில நேரங்களில் காய்ச்சலும் தேவையானதுதான்.

உங்களால் வெள்ளைச் சாக்பீஸினால் வெள்ளைப் பலகையில் எழுத முடியாது. உங்களால் எழுத முடியாது என்று அர்த்தமல்ல. உங்களால் முடியும். ஆனால் அதை யாராலும் படிக்க முடியாது. நீங்கள் வெள்ளை சாக் பீஸினால் எழுத வேண்டும் என நினைத்தால் அதற்குத் தேவையானது கரும்பலகைதான். கரும்பலகை என்பது பின்புலமாக உதவுகிறது. வெள்ளைச் சாக்பீஸ் உருவமாகி றது. அதுபோலவேதான் வாழ்க்கையும். உங்களது மகிழ்ச்சி என்பது வெள்ளைச் சாக்பீஸ் போன்றது. அதற்கு ஒரு கருமையான பின்புலம் தேவை. புனிதமான மனிதன் மகிழ்ச்சியிலேயே வாழ்கிறான். ஆனால் அவனது மகிழ்ச்சி யான நிலையே அவனுக்கு உருவமாகிறது. ஆனால் அவனது மகிழ்ச்சியற்ற தன்மையே பின்புலமாக இருக்கிறது. மகிழ்ச்சியற்றவை இல்லாமல் சந்தோஷம் என்றால் என்னவென்று அறிந்துகொள்ளவே முடியாது. வித்தியாசப் படுத்தும் அம்சங்களில்லாமல் புரிந்து கொள்ளுதல் சாத்தியமில்லை.

ஆகவே புனிதமான, தூய்மையான மனம் படைத்தவ னும் கேடு செய்யும் மனம் படைத்தவனும் உண்மையில் வேறானவர்கள் இல்லை. ஒரு நாணயத்தின் இரண்டு பக்கங்கள். துறவியும், பாவியும் ஒரே இடத்தில் இணை கின்றனர். புனிதத் துறவி எப்போது வேண்டுமானாலும் பாவியாகும் சாத்தியம் இருக்கிறது. அதேபோலப் பாவியும் எப்போது வேண்டுமானாலும் புனிதமானவராவார்.

அவர்கள் வெகு தூரத்திலில்லை. அவர்கள் தொலைவில் இல்லை, பக்கத்து வீட்டுக்காரர்கள். அவர்கள் அருகிலேயே வாழ்கின்றனர். அவர்கள் மிக நெருக்கமானவர்கள். அவர்களது எல்லைகள் சந்தித்து ஒன்றாகி விடுகின்றன.

மூன்றாவது மனமே மனமற்ற நிலை. புனிதத் துறவியு மல்லாது, பாவியுமல்லாது, மகிழ்ச்சியுமல்லாது, துயரமு மல்லாத நிலை. இரட்டை நிலை இங்கே தவிர்க்கப்படுகிறது. அப்போது ஓர் அமைதி, களங்கமற்ற நிலை தோன்றும். அப்போது ஓர் அமைதிநிலை தவழும். குழப்பங்கள் போய்விடும். நினைவில் கொள்ளுங்கள். மகிழ்ச்சியான நிலையும்கூட ஒரு விதத்தில் குழப்பத்தைத்தான் உண்டு பண்ணும். மகிழ்ச்சியும்கூடக் காய்ச்சல் நிலைதான். உங்களுக்கு அது பிடிக்கும். அது வேறு விஷயம். ஆனாலும் காய்ச்சல்தான். அது ஒரு காய்ச்சல் மனோ நிலைதான். நீங்கள் கவனித்ததில்லையா? நீங்கள் மகிழ்ச்சியோடு இருக்கும்போது உங்களால் நீண்ட நேரம் மகிழ்ச்சியோடு இருக்க முடியாமற் போகிறது. வெகு சீக்கிரமாகவே நீங்கள் சலிப்படைந்து விடுகிறீர்கள். சோர்வடைந்து போகிறீர்கள்.

நீங்கள் அதிகம் சந்தோஷமாக இருக்கும்போதும்கூட உங்களால் இரவு வேளைகளில் உறங்க முடியாமல் போய் விடுகிறது. அதேபோலவே நீங்கள் அதிக அளவில் துயரமாக இருக்கும்போதும்கூட உறங்க முடியாமல் போகிறது. உங்களால் ஓய்வெடுக்க முடியாமல் போகிறது. மகிழ்ச்சி என்பதும் ஓர் இறுக்கமான கெடுபிடியான நிலைதான். இரண்டுமே சலிப்பை ஏற்படுத்தக் கூடியவைதாம். உங்களை மகிழ்ச்சி சோர்வடையச் செய்யும்போது, நீங்கள் துயரத்தின் பக்கம் திரும்புகிறீர்கள். உங்களைத் துயரம் சோர்வடையச் செய்யும்போது, நீங்கள் மகிழ்ச்சியின் பக்கம் செல்லத் துவங்குகிறீர்கள். வாழ்க்கை என்ற கடிகார ஊசல் அப்படித்தான் ஊஞ்சலாடுகிறது. ஒரு பக்கத்திலிருந்து மறு

பக்கத்திற்கு அப்படித்தான் ஊஞ்சலாடுகிறது. மனமற்ற நிலை என்பது முற்றிலும் மாறானது. அதற்கும் மகிழ்ச்சியான மனத்திற்குமோ அல்லது கேடு செய்யும் மனத்திற்குமோ, புனிதத்துக்கோ, அல்லது புனிதமற்றவைக்கோ தொடர்பே இல்லை.

உங்களுக்கு நினைவிருக்கிறதா? போதிதர்மர் சீனாவிற்குச் சென்றிருந்தபோது, அவரை வியூ சக்கரவர்த்தி சில கேள்விகளைக் கேட்டார். அதில் ஒரு கேள்வி என்னவெனில், "நான் பல மடாலயங்களை உருவாக்கியிருக்கிறேன். பல புத்தர் கோயில்களை உண்டாக்கியிருக்கிறேன். எனது கருவூலத்தைத் திறந்து புத்தரின் செய்திகளைப் பரப்புவதற்காகப் பயன்படுத்தியிருக்கிறேன். அவை எல்லாம் புனிதமானவையாக நீங்கள் கருதவில்லையா?" என்பதுதான்.

போதிதர்மர் சிரித்துவிட்டுச் சொன்னார்: "இதில் புனிதம் எங்கிருக்கிறது? இது ஒரு வகையான வியாபாரம் தானே? நீ அடுத்த உலகிற்காகத் திட்டம் தீட்டுகிறாய். நீ சொர்க்கத்துக்குச் செல்ல முயற்சி செய்கிறாய். அதில் புனிதம் என்பதாக ஒன்றுமில்லை. அது மற்றவற்றைப் போலவே புனிதமற்றதுதான்."

போதிதர்மர் என்ன சொல்ல முயலுகிறார்? புனிதமானவை என்று நீங்கள் கூறும் அனைத்தையுமே புனிதமற்றவை தொடர்ந்தே வரும் என்று கூறுகிறார். ஏனெனில் ஆழமாகப் பார்க்கையில் அவற்றில் இருக்கும் ஆசை புனிதமற்றதாக இருக்கிறது.

சக்கரவர்த்தி தர்மசங்கடமான நிலைக்கு உள்ளானார். அதிர்ச்சியடைந்து கோபமுற்றுச் சொன்னார்: "அதன்பின் நீங்கள் என்னதான் நினைக்கிறீர்கள், அப்போது புத்தர் ஒரு புனிதமானவரில்லையா?"

போதிதர்மர் மீண்டும் சிரித்துவிட்டுச் சொன்னார்: அவர் புனிதமானவரும் அல்லர். அவர் ஒரு மனிதருமல்லர். அவர் முற்றிலும் வெறுமையானவர். அங்குப் புனிதம் எப்படியிருக்க முடியும்? அது ஒரு வகையான அழுக்கே. அவர் முற்றிலும் மௌனமானவர். அவர் வெறுமையா னவர்.

மனமற்ற நிலை என்பது புனிதமானதோ அல்லது புனிதமற்றதோ இல்லை. புத்தர் ஒரு துறவியோ அல்லது பாவியோ அல்ல. அவர் இரட்டை நிலையைக் கடந்தவர். புத்தர் அனைத்தையும் கடந்தவர்.

ஆகவே தயவுசெய்து நினைவில் கொள்ளுங்கள். ஒரு கேடு செய்யும் மனத்திலிருந்து ஒரு புனிதமான மனமாக மாற முடியும். ஆனால் உண்மையான நிலைமாற்றம் அங்கு இல்லை. கோணங்கள் மட்டுமே மாறுபடுகின்றன. நீங்கள் மனத்தைக் கடந்த நிலைக்குச் செல்ல வில்லை. மனமே இல்லாத நிலை மட்டுமே உங்களை விடுவிக்க முடியும்.

ஆகவே நீங்கள் புனிதமானவராக முயலாதீர்கள். புனிதமானவர்கள் எல்லாமே புனிதமற்றவர்கள்தாம். துறவியாவதற்கு முயலாதீர்கள். ஏனெனில் அப்படிப்பட்ட முயற்சிகள் எல்லாமே அகங்காரத்தின் பயணம்தான். மனம் விளையாடும் புதிய விளையாட்டுகள், நுணுக்கமான விளையாட்டுகள். அந்த அபத்தங்களையெல்லாம் விட்டு விடுங்கள். புனிதமாக இருப்பது, அல்லது புனிதமற்றதாக இருப்பது எல்லாவற்றையுமே. அவை இரண்டுக்குமே வணக்கம் சொல்லி விடைபெறுங்கள். இருள், ஒளி இரண்டுக்குமே வணக்கம். சொர்க்கம், நரகம் இரண்டுக் குமே வணக்கம் சொல்லுங்கள்.

அதன் பின்னர்ப் புதிய உலகம், முற்றிலும் புதிய உலகம் நீங்கள் இதுவரையில் கனவில்கூடக் காணாததாக உருவாகும். அப்போது ஓர் அலாதியான அமைதி, சமாதா

னம் உருவாகும். அப்போது குழப்பங்களில்லை. அப்போது குமிழ்கள் உண்டாகாது. அந்த நிலையே, புத்த நிலை என்பதாகும். அப்போது வலியுமில்லை. இன்பமும் இல்லை. ஏனெனில் துன்பம் என்பது மகிழ்ச்சியிலிருந்து வேறானது இல்லை. வலி என்பது சந்தோஷத்திலிருந்து வித்தியாசமான தில்லை.

பின்னர் அப்போது என்ன இருக்கும்? புத்தர் அதைப் பற்றி மௌனமாக இருக்கிறார். அதைப் பற்றி எதுவுமே சொல்லப்படவில்லை. ஏனெனில் அதைப் பற்றி என்ன சொன்னாலும் அது இரட்டை நிலையின் ஒரு பகுதி யாகவே இருக்கும். நீங்கள் அதனை ஒரு பரவச நிலை என்பீர்களேயானால், பின்னர் நீங்கள் அது துயரமில்லை என்று சொல்வதாக அர்த்தமாகி விடும். நீங்கள் அதை ஒளி என்று சொல்வீர்களேயானால், அது இருளல்ல என்று நினைப்பதாகிவிடும். நீங்கள் அதை வெயிற்காலம் என்று சொன்னால், அதனை இளவேனிற்காலமல்ல என்று சொல்வதாகப் பொருளாகிவிடும். நீங்கள் அது ஒரு வகையான மலர் என்று சொன்னால், அது முள்ளல்ல என்று சொன்னாற்போலாகிவிடும். ஆனால் நீங்கள் இன்னமும்கூட இரட்டை நிலையிலேயே யோசிக்கிறீர்கள் என்று பொருள் கொள்ள வேண்டியிருக்கும்.

புத்தர் இதைப் பற்றியெல்லாம் முற்றிலும் அமைதியாக இருக்கிறார். காரணம், அந்த நிலையை மௌனத்தால் மட்டுமே விளக்க முடியும். அது அமைதி நிலை. நீங்கள் மௌனத்தை எப்படி வார்த்தையால் விவரிக்க முடியும்?

> எனது அன்பான ஓஷோ,
> சில வருடங்களுக்கு முன்னர் யோகாவின் மூலமாகவும், தியானத்தின் வழியாகவும் நான் பிரார்த்தனையின் உச்ச நிலையை அடைந்தேன். எனது முழுமையுமே ஒரு பரவச நிலைக்கு

ஆளானேன். எல்லாமே புனிதமாக, அன்பு மயமாக, நன்றியுணர்வுடன் கூடியதாக இருந்தன. சில காரணங்களுக்காக அந்த நிலையிலிருந்து வெளியே வந்துவிட்டேன். நான் இப்போது மீண்டும் ஓர் இருளடைந்த பள்ளத்தாக்கில் வீழ்ந்துவிட்டதாகக் கருதுகிறேன். ஏதோ சில விஷயங்கள் தவறாகப் போய்விட்டன. நான் குற்ற உணர்வுடையவனாக, மீண்டும் எழுந்து நிற்க முடியாதவனாக இருக்கிறேன். இதைப் பற்றித் தங்களது கருத்தைக் கூறுங்களேன்.

உங்களது மௌனமும் பரவச நிலையும் ஏதோ ஒன்றால் உருவாக்கப்பட்டதென்றால், அது மறைந்து போகவும் வாய்ப்பிருக்கிறது. நிகழ்த்தப்பட்டது எல்லாமே முடிவற்று இருக்க முடியாது. நீங்கள் யோகாவின் மூலமும், தியானத்தின் வழியாகவும் அவற்றை இருத்திக் கொண்டீர்கள். ஆனால் அவை இயல்பாக நிகழவில்லை. அது செயற்கையானது. அது இடைக்காலத் தன்மை கொண்டது. அது நீங்கள் ரசாயன மருந்துகளினால் நீட்டிப்புச் செய்வது போன்றதேயாகும். ஆனால், அந்த மருந்து சீக்கிரமாகவே கலைந்து போகும்.

நீங்கள் சிறிதளவு எல்.எஸ்.டி. என்னும் மாத்திரையை உட்கொண்டீர்கள். அப்போது ஒரு பரவச நிலையை அடைவீர்கள். எல்லாமே பரவசமாக, மகிழ்ச்சியாக, வாழ்க்கையே முற்றிலும் மகிழ்ச்சியாக, அழகானதாகத் தோற்றமளிக்கும். மரங்கள் இன்னும் பசுமையாக, ரோஜாக்கள் இன்னும் சிகப்பு நிறத்தில், எல்லா முகங்களுமே மகிழ்ச்சியாகக் காட்சியளிக்கும். வாழ்க்கை ஒளிமயமாக, ஒரு மனோவசியத்துக்குள்ளானதாக இருக்கும். ஆனால் எல்.எஸ்.டி.யின் சக்தி இல்லாமல் போகும். நாளை காலையில் நீங்கள் மரங்களைக்

காணுகையில் அவை தூசி படர்ந்ததாகப் பழைய தோற்றம் கொண்டதாகவே இருக்கும். அந்தப் பசுமை அங்கேயிருக்காது. அந்த ஒளித்தன்மை அங்கிருக்காது. அவை உள்ளுக்குள்ளிருந்து ஒளியேற்றப்படவில்லை. மக்களின் முகங்களைக் காணுகிறீர்கள். அவை மிகவும் சோகமாகத் தெரிகின்றன. எல்லாமே சாதாரணமாகப் புழுதி படர்ந்ததாகவே இருக்கும்.

இதே அனுபவம் யோகாவின் மூலம் நிகழ வாய்ப் பிருக்கிறது. இதே அனுபவம் உண்ணாவிரதத்தின் மூலமும் ஏற்பட வாய்ப்புள்ளது. இந்த அனுபவம் எந்த யுக்தியினா லும் ஏற்பட வாய்ப்பிருக்கிறது. இந்தத் தொழில் நுணுக்கம் ஒரு நொடியில் பார்க்கும்போது நல்லதாகத்தான் தெரியும். அதுவே உங்களது நிரந்தர நிலையாக, உங்களது பிரக்ஞை யாக இருக்க முடியாது.

ஆகவே இது ஒரு பிரச்சினையே அல்ல. அது மிகவும் எளிமையானது. அது தவறே அல்ல. தவறு எதில் என்றால் உங்களது மனோபாவத்தில்தான். நீங்கள் யோகாவின் மூலமாக, தியானத்தின் வழியாக எல்லையற்றதற்கான ஏதோவொன்றை அடைந்ததாக நினைத்த மனோபாவம். அது சாத்தியமானதே இல்லை. முடிவற்றதாக இருப்பதை, உருவாக்க முடியாது. உருவாக்கப்பட்டது எல்லாமே ஒரு நாள் வீழ்ந்துதானாக வேண்டும். சீக்கிரமாகவோ, தாமத மாகவோ மறைந்துதான் போகும்.

முடிவற்றதாக இருப்பது உருவாக்கப்படாமலேயே வந்து சேரும். எல்லையற்றது என்பது நிகழும். அது செய்யப் படுவதில்லை. நீங்கள் தொழில் நுணுக்கங்களுக்கப்பால், செய்முறைகளுக்கப்பால் செல்லும்போது, எல்லாச் செயல்களையும், முறைகளையும் விட்டுவிடும்போது ஒரு விஷயத்தைப் பார்க்கும்போது அதாவது இருப்பே போது மானது. வேறொன்றும் தேவையில்லை. அதற்காக எதுவும்

ஏற்பாடுகள் செய்யத் தேவையில்லை. எல்லா உயிர்களுமே ஆரம்பத்திலிருந்தே புத்தர்கள்தாம். இதனைப் புரிந்து கொள்ளும்போது... நீங்கள் வேறு எதுவுமாக வளரத் தேவையிருக்காது. ஏற்கெனவே இருப்பது போலவே இருங்கள். அப்போது இயல்பாக இருப்பீர்கள்.

அந்த ஓய்வெடுத்தல் என்பதும்கூட ஒரு செய்முறையாக இருக்கக் கூடாது. நீங்கள் ஒரு யோகாசனத்தின் மூலமாக ஓய்வெடுக்கக் கூடாது. புரிந்து கொள்ளுதலே ஓய்வெடுத்தலாகும். இந்தப் புரிந்து கொள்ளுதல் மட்டுமே ஓய்வெடுப்பது என்பதாகும். நீங்கள் ஓய்வெடுக்கையில், முயற்சி மறைந்துபோகும். நீங்கள் சாதாரண வாழ்க்கை வாழ்வீர்கள். மரங்களை வெட்டிக் கொண்டு, கிணற்றிலிருந்து தண்ணீரைச் சுமந்துகொண்டு, சமைத்துக்கொண்டு, சாப்பிட்டுக்கொண்டு, உறங்கிக்கொண்டு, காதலித்துக்கொண்டு, இப்படிச் சாதாரணமான செயல்களைப் புரிந்துகொண்டு, அசாதாரணமான எவற்றின் மீதும் ஆசை வைக்காமல் இருப்பீர்கள்.

அதன்பின் ஒருநாள், அது அங்கேயிருக்கும். நீங்கள் செய்திருக்கமாட்டீர்கள். திடீரென்று ஒரு நாள் அது அங்கேயிருக்கும். ஒரு நாள் நீங்கள் உங்கள் கண்களைத் திறந்து பார்க்கும்போது அது அங்கே இருக்கும். அதன்பின் அது உங்களை விட்டு அகலவே அகலாது. ஆனால் அது தானாக வரவேண்டும். அப்படியில்லையெனில் நீங்கள் அதனை எப்படியாவது வரவைத்தீர்களேயானால் அதுவும் அதேபோலவே சென்றுவிடும். அது ஒரு கண நேரத்துக்குத் தானிருக்கும்.

"சில வருடங்களுக்கு முன்னதாக யோகாவின் மூலமாகவும், தியானத்தின் வழியாகவும் பிரார்த்தனையின் உச்ச நிலையை அனுபவித்ததாகச்" சொன்னாய். அவை உருவாக்கப்பட்ட சிகரங்கள். அவை கனவுகள். கற்பனைகள்.

நீங்களே உருவாக்கிக் கொண்டவை. “எனது முழுமையுமே ஒரு பரவச நிலைக்கு உள்ளாக்கப்பட்டேன்.” ஆனாலும் நீ அங்குத்தான் இருந்தாய். அந்தப் பரவச நிலையை அனுபவிக்கும்போது நீ அங்கு இருந்தாய். நீ மறைந்து போகவில்லை. “எல்லாமே புனிதமாக இருந்தது.” அது ஒரு இடைச்செருகல்தான். மனம் அப்போது இயங்கிக் கொண்டிருந்தது. “எல்லாமே புனிதமாக இருந்தன” என்று மனம்தானே சொல்லிற்று. நீங்கள் கேள்விப்பட்டிருப்பீர்கள். நீங்கள் படித்திருப்பீர்கள். உங்களது மனம் இடைச்செருகல் செய்தது. எல்லாமே புனிதமான காதல்தான். நன்றி யுணர்ச்சியுள்ளவைதாம். இவை மனத்தில் மிதந்து கொண்டிருக்கும் கருத்துக்கள்.

ஆனாலும் நீ அங்கிருந்தாய். நினைவு அங்கிருந்தது. கடந்த காலம் அங்கிருந்தது. அப்படியில்லையெனில் “எல்லாமே புனிதமாக இருந்தது” என்று யார் சொல்கிறார் கள்? எல்லாமே புனிதமானவை என்றால் அப்போது எல்லாமே புனிதமாக இருந்தது என்று சொல்வதற்கான அவசியம் எங்கு வந்தது? அதைச் சொல்ல வேண்டிய அவசியம்கூட இல்லை. அதனைச் சொல்லும்போதே எல்லாமே புனிதமானவை அல்ல என்பது உங்களுக்குத் தெரிந்திருக்கிறது என்று சொல்வதாகப் பொருள். சொல்வதிலிருந்தே பாவனை செய்வதாக, திணிப்பதாக அர்த்தம்.

ஆமாம், தியானத்தின் மூலமாகவும், யோகாவின் மூலமாகவும் ஒரு வகையான மகிழ்ச்சி நிலை உருவாக்கப் பட்டிருப்பது சாத்தியமே. ஒரு வகையான சந்தோஷம். அதன் மகிழ்ச்சி உங்களது மொத்தத் தத்துவத்தையுமே உருவாக்கியிருக்கிறது. இதுதான் கடவுள் என்பதாக, இதுவே புனிதமான அனுபவம் என்பதாக, இதுவே காதல் என்பதாக, நன்றியுணர்வு என்பதாக நினைத்து ஒரு சில

நாள்களுக்கு அந்தக் கனவை அனுபவித்திருக்கிறாய். அது வெறுங் கனவே.

"ஒரு சில காரணங்களுக்காக வெளியே வந்தேன்." சில காரணங்களுக்காக அல்ல. அது மிகவும் எளிமையானது. நீ அதை விட்டு வெளியே வந்துதான் ஆக வேண்டும். நீ கனவிலேயே நீண்ட நாள்கள் வாழ முடியாது. கனவு நிலையில் யாருமே நீண்ட காலம் இருக்க முடியாது. ஒரு கனவு என்பது எப்போதும் இருக்காது. அப்படியில்லை யெனில் நினைவுக்கும் கனவுக்கும் இடையே ஏன் வித்தியாசமிருக்கிறது? கனவு என்பதே சில கணங்களுக்குத்தான். சீக்கிரமாகவோ தாமதமாகவோ நீங்கள் விழித்தெழுவீர்கள். நீங்கள் உங்களது கண்களைத் திறந்து பார்க்கும்போது அந்தக் கனவு அங்கில்லாது போய்ச் சாதாரண வாழ்க்கை அங்கே இருக்கும்.

"நான் அதை விட்டு வெளியே வந்து இப்போது பழைய படி இருண்ட பள்ளத்தாக்கில் இருக்கிறேன்." நீ அந்த சூரிய ஒளிபடும் சிகரத்தில் இருந்ததாகவும் மீண்டும் அந்த இருளடர்ந்த பள்ளத்தாக்கில் வீழ்ந்ததாகவும் குறிப்பிடுகிறாய். இரண்டிலும் உன்னிடம் ஒரு விஷயம் ஒரே மாதிரியாக இருக்கிறது. இருள் படர்ந்த பள்ளத்தாக்கு, சூரிய ஒளி படும் சிகரம். அதைப் பற்றிய கவலையில்லை. எல்லாமே ஒன்றுதான். இதில் முக்கியமானது எதுவென்றால் நீதான். அகங்காரம் அங்கிருக்கிறது. இருள் படர்ந்த பள்ளத்தாக்கில் அகங்காரமிருக்கிறது. சூரிய ஒளி படும் சிகரத்தில் அகங்காரமிருக்கிறது. அந்த அகங்காரம்தான் கனவுகளை உருவாக்கிய வண்ணமிருக்கிறது.

நான் ஒன்று சொல்கிறேன். இருளடர்ந்த பள்ளத்தாக்கும் உனது கனவுதான். உனது உருவகம்தான். உனது எண்ணம்தான். இருள் படர்ந்த பள்ளத்தாக்கு என்பதாக எதுவுமே இல்லை. எல்லாமே புனிதமானவை எனும்போது

இருள் பள்ளத்தாக்கு எங்கிருந்து வரும்? இருள் பள்ளத் தாக்கு இருக்கிறது என்றால் எப்படி எல்லாமே இறைமை என்றாகும். இருளடர்ந்த பள்ளத்தாக்கோ அல்லது சூரிய ஒளி மின்னும் சிகரமோ இரண்டுமே இல்லை. அது அகங்காரத்தின் விளையாட்டுத் தான். அது துருவங்களுக்கு மாறிமாறி சென்று கொண்டிருக்கும். ஒரு நிலையிலிருந்து மற்றொரு நிலைக்குச் சென்று கொண்டேயிருக்கும். அதைப் பார்க்கும்போது அது ஓர் இனிய கனவாகத் தோன்றும். அதே போல இரவு பயங்கரங்களும். இரண்டுமே கனவுகள் தாம். எழுந்திருந்தால் இரண்டுமே மறைந்து போகும். அதன் பின்னர் முதல் முறையாக நீங்கள் உண்மையுடன் தொடர்பு கொள்வீர்கள்.

ஆனால் நினைவு கொள்ளுங்கள். அந்த உண்மை நிலை தோன்றும்போது நீங்கள் அங்கிருக்கமாட்டீர்கள். இந்த ஒரே ஒரு விஷயத்தைப் புரிந்துகொள்ள வேண்டும். வேறு எந்த நிபந்தனையுமல்ல. ஒரே ஒரு வழிகாட்டும் குறிப்பு என்னவெனில் இந்த அனுபவம் உண்மையானதென்றால் நீங்கள் அங்கிருக்கமாட்டீர்கள். நீங்கள் அங்கிருக்கவே முடியாது. நீங்கள் முழுமையாக மறைந்துவிடுவீர்கள். ஒரு பரவச நிலை அங்கிருக்கும். நீங்கள் அங்கிருக்கமாட்டீர்கள். அங்கு, "நான் தெய்விக நிலையை அனுபவிக்கிறேன்" என்று சொல்வதற்கு யாரும் இருக்கமாட்டார்கள். கடவுள் அங்கிருப்பார். ஆனால் நீங்கள் அங்கிருக்கமாட்டீர்கள். அங்கு, "எல்லாமே தெய்விகமானவைதாம்" என்று சொல்ல யாரும் இருக்கமாட்டார்கள். அதனை நினைவில் இருத்திக் கொள்ள வேண்டும்.

இது தானே நிகழுமேயன்றி அதனை நிகழ்த்த முடியாது. அதனை உருவாக்க முடியாது. உருவாக்கப்பட்ட பொருள் கள் எல்லாமே செயற்கையானவைதாம். அது சில காலங்களுக்குச் சென்று பின்னர் மறைந்து போகும். அது

மிகவும் அற்பமானது. நீங்கள் என்ன செய்கிறீர்கள் என்று யோசித்துப் பாருங்கள். நீங்கள் யோகா செய்யும்போது என்ன செய்கிறீர்கள்? உங்களது தலையால் தலைகீழாக நின்றபடி – தலை கீழாக இருப்பது எப்படி ஞானத்தைக் கொண்டு வரும்? எப்படி? உங்களது தலையால் நிற்பதா? அற்பமாக இருக்கிறது!

தலைகீழாக நிற்பது வேண்டுமானால் உங்களது தலைக்கு ஓர் அதிர்ச்சியைக் கொடுக்கும். அது ஓர் அதிர்ச்சி வைத்தியமாக வேண்டுமானால் இருக்கலாம். அபரிமிதமான ரத்தம் தலைக்குப் பாயும்போது ஒரு வகையான நிறுத்தத்தை ஏற்படுத்தலாம். அப்போது யோசிப்பது நிறுத்தப்படுகிறது. நீங்கள் தலைகீழாக நிற்கையில் பூமியின் ஈர்த்தல் சக்தியின் காரணமாக ரத்த ஓட்டம் தலைக்குப் பாய்கிறது. அதை உங்களது தலை தாங்க முடியவில்லை. ஒரு கணத்துக்கு யோசிப்பது நிறுத்தப்படுகிறது. அப்படி நிறுத்தப்படும்போது, “நான் மிகவும் மகிழ்ச்சியாக இருக்கிறேன். நான் பரவசமாக இருக்கிறேன். எல்லாமே தெய்விகமானவை'' என்று நினைக்கலாம். ஆனால் நீ எத்தனை காலம் தலைகீழாக நின்றுகொண்டிருக்க முடியும்? உங்களால் நீண்ட நேரம் நிற்க முடிந்தாலும்கூட மனம் அந்த நிலையிலேயே எப்படி எண்ண ஓட்டத்தைத் தொடர்வது என்று கற்றுக்கொண்டு விடும். அது ஒரு பிரச்சினையல்ல. மனமும் அதனை மெல்ல மெல்லக் கற்றுக்கொண்டுவிடும். அதன் பின்னர்த் தலைகீழாக நின்றபடியே எல்லாவற்றையும் யோசிக்கலாம்.

நான் சிறுவனாக இருக்கும்போது தலைகீழாக நீண்ட நேரம் நிற்பேன். அது எனக்கு ஒரு மாதிரி பழக்கமாகிப் போய் அப்படியே தூங்கிவிட்டேன். அது மிகவும் முடியாத காரியமாகும். நான் எங்களது கிராமத்தில் இருந்த ஒரு யோகியிடம் இதைப் பற்றித் தெரிவித்தபோது அவர், “இது சாத்தியமேயில்லாத விஷயம், இது எனக்கே நிகழவில்லை.

தலைகீழாக நின்றபடி தூங்குவதா?" என்றார். ஏனெனில் தூக்கம் வரவேண்டுமெனில் உங்களது தலைக்குச் சாதாரணமாக இருப்பதைவிடச் சிறிதளவுதான் ரத்த ஓட்டம் தேவைப்படுகிறது. அதனால்தான் தலையணைகளை ராத்திரி வேளையில் தலைக்குக் கீழாகக் கொடுத்துக் கொள்கிறோம். அதனால் தலை சிறிது மேல்நோக்கித் தூக்கப்பட்டு ரத்த ஓட்டம் சிறிதளவு குறைக்கப்படுகிறது. அப்படியில்லையெனில் மூளை தொடர்ந்து வேலை செய்ய ஆரம்பித்துவிடும். அதிக புத்திமானாக ஒருவன் இருந்தால் இன்னும் பெரிய தலையணை தேவைப்படும். இரண்டு, மூன்று, நான்கு தலையணைகள்கூடத் தேவைப்படலாம். அப்படியில்லையெனில் சிறிதளவு ரத்த ஓட்டம் வந்தவுடன் மூளை மறுபடியும் இயங்க ஆரம்பித்து விடும். ஆகவே உணவிடுதல் முற்றிலுமாக நிறுத்தப்பட வேண்டும்.

வயதான மனிதர் சொன்னார்: "இது சாத்தியமேயில்லாதது." ஆனால் அது எனக்கு நிகழ்ந்துவிட்டது. நான் உறக்கத்தில் மட்டும் விழவில்லை, எனது சிரசாசனத்திலிருந்தும் விழுந்துவிட்டேன். அது எனக்குப் பழக்கமாகி விட்டது. எண்ணங்கள் மட்டுமல்ல. உறக்கமும் கனவும் கூடச் சாத்தியமானவைதாம். ஆகவே நீ உனது தலையைக் கீழாக வைத்து நிற்க முடியுமென்றால், அது பழகிவிட்டதென்றால் அந்தச் சந்தோஷ நிலை முதலில் ஏற்பட்டதே, அது மறுபடியும் ஏற்படாது.

நீ தியானம் செய்யும்போது என்ன நடக்கிறது? ஞானமடைவது என்பதை எப்படி யோகாவின் மூலமாகவும், தியானத்தின் வழியாகவும், உண்ணாவிரதத்தின் மூலமாகவும், உணவினைக் கட்டுப்படுத்தல் மூலமாகவும் அடைய முடிகிறது? இல்லை. இது முற்றிலும் அப்பாலிலுள்ளது. நட்சத்திரங்களுக்கும் அப்பாலில் இருக்கிறது. இந்தச் சிறிய விஷயங்களெல்லாம் மிகவும் யதார்த்தமானவை. அவை

உங்களைச் சுத்தப்படுத்தும். ஆமாம் அவை உங்களைத் தூய்மைப்படுத்தும். ஆனால் அவை உங்களுக்கு ஞானத்தை அளிக்கா. சில கணங்களுக்குச் சந்தோஷத்தை அளிக்கும். அந்த மகிழ்ச்சியே தெய்விக உணர்வாக மொழிபெயர்க்கப் படக்கூடாது. அப்படிச் செய்யக்கூடாது. ஏனெனில் நீங்கள் அங்கிருக்கிறீர்கள். அந்த அனுபவம் சில நேரங்களில் உங்களில் பெரிய ஒளியை நிரப்பும். ஆனால், அந்த ஒளி எல்லையற்றதாக இருக்காது. அந்த எல்லையற்ற ஒளியினை அடைய நீங்கள் பெண்தன்மை படைத்தவராக இருத்தல் வேண்டும். நீங்கள் எப்போதும் எதையாவது செய்து கொண்டே இருக்கக் கூடாது. நீங்கள் ஒரே மாதிரியான செயலற்ற தன்மை கொண்டவராக இருக்க வேண்டும். மிதமான நிலை. பொறுமையாகக் காத்திருக்க வேண்டும். சாதாரணமாக இருங்கள். பொறுமையோடு காத்திருங்கள்.

நான் உங்களை யோகப் பயிற்சி செய்யக்கூடாது என்று சொல்லவில்லை. அவை உடலுக்கு நல்லவைதாம். நான் உங்களைத் தியானம் செய்யக் கூடாது என்று சொல்ல வில்லை. அவை முழுமையாக நல்லவை. தூய்மைப் படுத்துபவைதாம். ஆனால், யோகாவைச் செய்தல் மூலமாகவோ அல்லது தியானம் செய்தல் வழியாகவோ கடவுளைக் கொண்டு வந்துவிடலாம் என்று எண்ணாதீர் கள். கடவுளைக் கொண்டு வரவே முடியாது. ஆனால் நீங்கள் தூய்மைப்படுத்தப்படுவீர்கள். அப்போது தெய்விகம் நிகழுவதற்குச் சாத்தியக் கூறுகள் அதிகமாகின்றன என்பது உண்மை.

ஆனால் கடவுள் வருவது என்பது நீங்கள் அறியாம லிருக்கும் போதுதான், நீங்கள் அவரை எதிர்பார்க்காமல் இருக்கும்போது மட்டுமே, சாதாரணமாக அமர்ந்து கொண்டிருக்கும்போது, எதையும் செய்யாமல், ஆசையே இல்லாமலிருக்கும்போது மட்டுமே வருவார். வேறு யார்

மாதிரியாக ஆகவேண்டுமென்ற ஆசையோ, வேறு எது மாதிரியாகவோ மாற வேண்டுமென்ற ஆவலோ, ஞானமடைவது பற்றிய உறுத்தலோ, இது எல்லாமுமோ போன்ற ஆசையின் ஒரு துகள்கூட இல்லாமல் நீங்கள் எதுவுமே இன்றி இயல்பாக இருக்கும்போது, அது எப்போதுமே திடீரென்றுதான் நிகழும். அது உங்களைத் திடீரென்று தாக்கும். ஆனால், அதன் பின்னர் நீங்கள் இல்லாமலே போய்விடுவீர்கள். ஞானமிருக்கும்போது நீங்களில்லை. கடவுள் இருப்பார். நீங்கள் அங்கிருக்க மாட்டீர்கள்.

> எனது அன்பான ஓஷோ,
> நான் இரண்டு மாதங்களாக 'ஏஏ' என்ற குழுவில் இருந்தேன். அதன் பின்னர் பிரான்சில் வேறு ஒரு குழுவில் இருந்தேன். அவை எல்லாமே தோல்வியைத் தழுவின. வெறுப்பு என்பது பற்றுதலை விட அதிகரித்துவிட்டது. பல எண்ணங்களுடைய ஒரு குழுவில் இருக்கும்போதோ, தடைகளற்ற பாலுணர்வுடன் கூடிய குழுவில் இருக்கும் போதோ நான் இன்னும் முழுமையாக வாழ்க்கை நடத்த முடியும் என்று நினைக்கிறேன். குழுவில் வாழும் முறை பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?

பிரச்சினை நீ வசித்த இடத்தில் இல்லை. உன்னிடம்தான் இருக்கிறது. நீ ஒரு குழுவிற்குச் சென்றால் அங்கு உன்னுடைய பிரச்சினைகளையெல்லாம் சுமந்து செல்வாய். வேறு சிலர் அந்தக் குழுவிற்கு வந்தவர்கள் எல்லோரும்கூட உன்னைப் போலவே பிரச்சினைகளுடன் வந்தவர்கள்தாம். சீக்கிரமாகவோ, தாமதமாகவோ அந்தப் பிரச்சினைகள் மேல் நோக்கி வரும். இந்த வெளிப்பூச்சு வேலைகள் பயன் படாது. அவை கவனத்தைச் சிதறடிக்கும் விஷயங்கள்தாம்.

உண்மையான மாற்றம் என்பது உனக்குள் ஏற்பட வேண்டும். குழுவோ அல்லது குழுவற்றதோ அதைப் பற்றிக் கவலைப்படத் தேவையில்லை. உண்மையான மாற்றம் என்பது உனக்குள் ஆழத்தில் நிகழ வேண்டும். அப்படி நிகழ்ந்ததெனில் வாழ்க்கை வேறுவிதமாக இருக்கும். அப்படியில்லையெனில் அது வேறுவிதமாக இருக்காது.

நீ சொல்கிறாய்: "அவை எல்லாமே தோல்வியைத் தழுவிக் கொண்டன" என்று. அவை எல்லாமே தோல்வியடைந்ததன் காரணம் நீயும் அதே போல் இருந்ததனால் தான். அவை உண்மையிலேயே தோல்வியடையவில்லை. அவற்றின் தோல்வி நீ வெறுப்படைந்ததையே, உன்னிடமிருக்கும் எதிர்பார்ப்புகளை அவை நிறைவேற்றாமல் போனதையே காட்டுகின்றன. உன்னுடைய எதிர்பார்ப்புகள் என்ன? நீ ஒரு குழுவில் வசித்தால் மட்டுமே போதுமானது என்று நினைத்தாய். உனது பிரச்சினைகள் தீர்ந்துபோகும் என்று நினைத்தாய.

ஒரு குழுவும் உதவி புரியாது. இமாலய மலைக்குச் சென்று ஒரு குகையில் வசித்தாலும் அது உனக்கு உதவி புரியாது. வாழ்க்கை என்பதை யதார்த்தமாகச் சமாளிக்க வேண்டும். உனது பிரச்சினைகளுக்குள் சென்று பார்க்க வேண்டும். அதன் வேருக்குச் சென்று, அந்தப் பிரச்சினைகளுக்கான விதையை எரித்துப் பார்க்க வேண்டும். அதன் பின்னரே, அது எங்கு வேண்டுமானாலும் நிகழலாம்.

நீ சொர்க்கத்தைத் தேடிக்கொண்டிருக்கிறாய். ம்ம்ம்? அதைத்தான் பலகாலமாக மக்கள் செய்து கொண்டிருக்கின்றனர். அவர்கள் தங்களை மாற்றிக்கொள்ள மறுக்கிறார்கள். அவர்கள் சொர்க்கத்துக்காக ஏங்க ஆரம்பித்து விடுகின்றனர். அவர்கள் எங்கெல்லாம் செல்கின்றனரோ, அங்கெல்லாம் நரகத்தையே உருவாக்குகிறார்கள். அவர்களே நரகம்தான். சொர்க்கத்தை வேறெங்கோ

காணும்படியான ஒரு கேள்வியல்ல இது. அதை நீ ஏற்கெனவே உன்னுள் வைத்திருந்தாலன்றி நீ அதனை வேறெங்கும் காண முடியாது.

அநுபோதி எனக்கு ஓர் அழகான கதை அனுப்பி யுள்ளார்.

பல காலத்துக்கு முன்னர்ச் சொர்க்கத்துக்கும் நரகத்துக்கும் செலவு செய்துகொண்டு போகக்கூடிய ஒரு போட்டியில் வெற்றியடைந்த மனிதனை எனக்குத் தெரியும். அவனிடம் முதலில் எங்குச் செல்வாய் என்று கேட்கப்பட்டது. "நான் முதலில் நரகத்தைத்தான் பார்க்க விரும்புகிறேன்" என்று பதில் சொன்னான். உடனே அதே போல ஏற்பாடு செய்யப்பட்டது.

அங்குச் சென்றவுடன் ஒரு பெரிய காட்சியைக் காண நேர்ந்தது. தான் ஒரு பெரிய விருந்து மண்டபத்தில் இருப்பதை, பெரிய மேசைகள் நிறைந்த கூடத்தை, கற்பனை செய்ய முடிந்த அளவுக்கான உணவு வகைகள் படைக்கப் பட்டு இருந்த காட்சியைக் காண நேர்ந்தது. மக்கள் மேசையின் பக்கத்தில் அமர்ந்திருந்தார்கள். கரண்டிகள் உணவின் மீது வைக்கப்பட்டிருந்தன. வாசனை காற்றில் பரவி மூக்கைத் துளைக்க, ஆனால் யாரும் சாப்பிடா மலேயே அமர்ந்திருந்தனர்.

அந்த மனிதன் ஆச்சரியப்பட்டான். ஆனால் அருகில் சென்று பார்த்தபோது அங்கு இருந்த எல்லோருமே தோள்பட்டையில் ஒரு வகையான முடக்கு வாதத்தினால் பீடிக்கப்பட்டதைப் பார்த்தான். எவ்வளவு முயன்றாலும் உணவை வாய்க்குள் கொண்டு செல்லவே முடியவில்லை.

"இதுதான் நரகம் போலும். ஏராளமாக எல்லாம் இருந்தும் ஏராளத்துக்கு நடுவே பட்டினியாக இருப்பது

என்பது, தனக்கு உணவு ஊட்டிக்கொள்ள முடியாமலிருப்பது, இதுதான் நரகமோ" என்று அவன் நினைத்தான்.

அதன்பின் அந்த மனிதன் சொர்க்கத்துக்கு அழைத்துச் செல்லப்பட்டான். அங்கும் அதே போன்ற பெரிய விருந்து மண்டபத்தில் அதே போன்று பெரிய மேசைகளில் வகை வகையான உணவு வகைகள் படைக்கப்பட்டிருந்தன. அருகில் சென்று பார்த்தபோது அதே போன்று தோள் பட்டையில் முடக்கு வாதத்தினால் எல்லோருமே பீடிக்கப்பட்டிருந்தனர். "இதுவா சொர்க்கம்?" என்று உரத்துக் கத்துவதற்குக் குரலெடுத்தான். இன்னும் அருகே சென்றபோது ஒரு வித்தியாசத்தைக் கண்டுணர்ந்தான். நரகத்துக்கும் சொர்க்கத்துக்குமிடையே ஒரு வித்தியாசம் இருந்தது. ஒரு சிறிய வித்தியாசமே. இரண்டையும் வேறுபடுத்தியிருந்தது. சொர்க்கத்தில் ஒருவருக்கொருவர் உணவூட்டிக் கொண்டிருந்தனர்.

அதே போலவே முடக்குவாதத்தினால் அவதிக்குள்ளாகியிருந்தும்கூட ஒருவருக்கொருவர் உணவூட்டிக் கொண்டிருந்தனர். தனது வாய்க்கு உணவைக் கொண்டு வருவது வேண்டுமானால் சிரமமாக இருந்ததே தவிர மற்றவருக்கு ஊட்டி விடுதல் என்பது முடியும் காரியமாகத்தானிருந்தது. மற்றவர்கள் இவர்களுக்கு ஊட்டி விட்டுக் கொண்டிருந்தார்கள்.

இதுவே பெரிய வித்தியாசம். ஆனால், அந்த வித்தியாசம் உள்ளார்ந்து அமைந்திருந்தது. கருணை என்பது இருந்தது. நீங்கள் போதிசத்துவர்களாக இருந்தாலன்றி, நீங்கள் எங்கெல்லாம் இருக்கிறீர்களோ அங்கெல்லாம் நரகம்தான். உணர்ச்சி என்பது கருணையாக மாறும்போது நீங்கள் இருக்கும் இடமெல்லாம் சொர்க்கமாகவும் திகழும். அது ஒன்றுதான் சொர்க்கம் என்பதே.

இன்றைக்கு இது போதும்.

புத்தர் சொன்னார்: "ஆமாம், சுபூதி... புத்தர்களுக்கு ததாகதர் கற்றுத் தந்த சிறப்புத் தர்மங்கள், புத்தரின் வெறும் சிறப்புத் தர்மங்கள் அல்ல. அதனால்தான் அவை, புத்தர்களுக்கான சிறப்புத் தர்மங்கள் என்று சொல்லப் படுகின்றன."

புத்தர் கேட்டார்: "சுபூதி, நீரோடு போகிறவன் 'நீரோடு போவதன் பலன் என்னால் பெற முடியுமா?' என்று நினைத்துக் கொள்வானா?"

சுபூதி சொன்னார்: "இல்லை, குருவே. ஏன் அப்படி?" "ஏனென்றால், அவன் எந்தத் தர்மத்தையும் வெல்லவில்லை. அதனால்தான் அவனை 'நீரோடு போகிறவன்' என்கிறோம். கட்புலனாகும் எந்தப் பொருளையோ, ஓசையையோ, வாசனையையோ, சுவையையோ, தொடு உணர்வையோ அல்லது மனதில் தோன்றும் பொருளையோ அவன் வெல்லவில்லை. அதனால்தான் அவன் நீரோட்டத்தோடு போகிறவன் என்று குறிப்பிடப்படுகிறான்."

"பிரபுவே, அப்படி அந்த உணர்வு அவனுக்கு ஏற்படுமானால், 'என்னால், நீரோட்டத்தோடு போவதன் பலன் பெறப்பட்டது' என்பது அவனுக்குத் தோன்றும். அப்போது அவன், தன் சுயத்தைப் பற்றிக்கொள்வான்; தன் இருப்பைப் பற்றிக்கொள்வான்; தன் உயிரைப் பற்றிக் கொள்வான்; தனது ஆளாகும் தன்மையைப் பற்றிக்கொள்வான்..."



புத்தர் இவ்வாறு கேட்டார்: " 'என்னால் அருகத நிலை அடையப்பட்டது என்று அருகதருக்குத் தோன்றும் என்று நீ நினைக்கிறாயா சுபூதி?"

சுபூதி சொன்னார்: "இல்லை பிரபு, அவ்வாறு தோன்றாது? ஏன் அப்படி? 'ஏனென்றால், எந்தத் தர்மத்திற்கும் 'அருகத்' என்று பெயரில்லை. அதனால்தான் ஒருவர் அருகதர் என்று குறிப்பிடப்படுகிறார்... ஏன் அப்படி? சாந்தி நிலையில் வாழ்பவர்களில் முதன்மையானவன் நான் ஒருவன்தான் என்று ததாகதர் சுட்டிக் காட்டினார் குருவே. பிரபு, நான் பேராசையிலிருந்து விடுபட்ட அருகதன். அவ்வாறிருந்தும், 'நான் பேராசையிலிருந்து விடுபட்டவன்' என்று எனக்குத் தோன்றவில்லை."

ததாகதர் என்னைப் பற்றி, "சுபூதி நல்ல குடும்பத்தில் பிறந்தவன். சாந்திநிலையில் வாழ்பவரில் முதன்மையானவன். இவன் எங்கும் வாழாதவன். அதனால்தான் இவன் 'சாந்திநிலையில் வாழ்பவன், சாந்தி நிலையில் வாழ்பவன்' என்று அழைக்கப்படுகிறான்" என்று குறிப்பிட்டார்.

நான் அருகத நிலையை அடைந்ததை உணர்ந்திருந்தால் அவர் இவ்வாறு குறிப்பிட்டிருக்க மாட்டார்.

பெரும்பாலோருக்கு வைர சூத்திரம் ஓர் அபத்தமாகத் தோன்றும், பைத்தியக்காரத்தனமாகத் தோன்றும். அது பகுத்தறிய முடியாதது. ஆனால் பகுத்தறிவுக்கு எதிரானது அல்ல. அது காரணங்களுக்கு அப்பாற்பட்டது, அதனால் தான் அதனை வார்த்தைகளில் வெளிப்படுத்துவது கடினமாக உள்ளது.

ஒரு முறை விஸ்கி குடிக்கும், தொடர்ச்சியாகப் புகைக்கும், பாப்கார்ன் சுவைத்துக் கொண்டேயிருக்கும் அமெரிக்கக் குருமார் ஒருவர் என்னுடன் தங்கியிருந்தார். என்னுடைய நூலகத்தில் அலைந்துகொண்டிருந்தவர் எதேச்சையாக வைர சூத்திரத்தைக் கண்டெடுத்தார். பத்திலிருந்து பதினைந்து நிமிடங்கள் வரை அதை அப்படியும் இப்படியுமாகப் புரட்டிப் பார்த்துவிட்டு என்னிடம் வந்து சொன்னார்: "இந்த மனிதர், புத்தர் ஒரு மன நிலை சரியற்றவராக இருப்பார் போலிருக்கிறது. அவர் மன நிலை சரியில்லாதவராக இருப்பது மட்டுமல்லாமல் மனநிலை சரியில்லாத சீடர்களையும் வேறு கொண்டுள்ளார்."

என்னால் அவரது கூற்றைப் புரிந்துகொள்ள முடிகிறது. புத்தர் உங்களுக்கும்கூடப் பைத்தியம் போலத்தான் காட்சி தருவார். ஏனெனில், அவர் எதைச் சொல்ல முடியாதோ அதைச் சொல்ல முயலுகிறார். எளிதில் ஏமாற்றக்கூடிய ஏதோவொன்றைப் பிடிக்க முயற்சி செய்கிறார். அதனால்

தான் இந்த விந்தையான பேச்சுகள். அவை விந்தை யானவைதாம். ஏனெனில், அவற்றைச் சொன்னவிதம் அப்படி. அவற்றை வெளிப்படுத்திய விதம் அப்படி. அவை எவ்வகையான பொருளையும் தரா. மேலோட்டமாகக் கூடத் தரா.

அவற்றுக்கப்பால் உணர முடியவில்லையெனில் புத்தர் என்ன சொல்ல முயற்சி செய்கிறார் என்று புரிந்து கொள்வதற்கு மிகவும் கடினமாகத்தான் இருக்கும். நாம் எதை அனுபவித்தோமோ அதனைத்தான் புரிந்துகொள்ள முடியும். அதனை முழுமையாக முடியவில்லையெனினும் கூடப் பகுதியை உணர முடியும். அப்படியில்லையெனில் நமது புரிந்துகொள்ளுதல் என்பது நமது அனுபவத்தின் அடிப்படையில்தான் அமையும்.

இப்போது சொல்வது நடந்தது. சார்லி முதல் முறையாக அன்று காலை பள்ளிக்குச் சென்றான். அவன் திரும்ப வீட்டுக்கு வந்தபோது அவனுடைய தாய் கேட்டாள்: "நல்லது சார்லி, உனக்கு எப்படி, பள்ளிக்கூடம் பிடித் திருந்ததா?"

"எனக்கு மிகவும் பிடித்திருந்தது. ஆனால் எனக்கு 'வருகை' (present) இன்னும் கிடைக்கவில்லை."

"என்னது, வருகை கிடைக்கவில்லையா? என்ன சொல்கிறாய்?"

"ஆமாம், எனது ஆசிரியை என்னைப் பார்த்தவுடன், 'நீ இங்கே உட்கார்ந்தால் வருகை கிடைக்கும்' என்றாள். காலை நேரமெல்லாம் உட்கார்ந்தேன். ஆனாலும்கூட வருகை கிடைக்கவில்லை."

ஒரு சிறிய குழந்தையின் புரிந்துகொள்ளும் உணர்வு என்பது அவ்வளவுதான். அதே போலத்தான் நீங்களும் இருக்கிறீர்கள். புத்தரைப் பொருத்தவரையில் நீங்கள் சிறு

குழந்தைகள்தாம். அவரது பேச்சுகளைப் பொருத்தவரை யில் நீங்கள் சிறுவர்கள்தாம். அவர் சொல்பவை எல்லாமே அவரது முடிவான அனுபவங்கள். நீங்கள் மிக மிகப் பொறுமையாக இருக்க வேண்டும். அதன் பின்னர்தான் உங்களுக்குச் சில விஷயங்கள் உங்களது உணர்வில் புரிய ஆரம்பிக்கும். அவை மிக முக்கியமானவை. அவற்றில் ஒரே ஒரு வார்த்தையைப் புரிந்துகொண்டாலும்கூட அது உங்களில் பெரிய மாற்றத்தை உண்டாக்கும். அது உங்களை வேரோடு மாற்றிவிடும்.

ஒரு தந்தை தமது மகனை முதன்முறையாக ஒரு மேற்கத்திய இசை நிகழ்ச்சிக்கு அழைத்துச் சென்றிருந்தார். இசையமைப்பாளர் இசை நிகழ்ச்சி துவங்குவதற்காகத் தமது குச்சியை மேலும் கீழும் அசைக்கத் துவங்கினார். உடனே உச்சக் குரலில் பெண் பாடகி பாட ஆரம்பித்தார். அந்தப் பையன் எல்லாவற்றையும் பார்த்துவிட்டுத் தனது தந்தையிடம் கேட்டான்: "ஏன் அப்பா அவர் குச்சியால் அந்தப் பெண்ணை அடிக்கிறார்?"

தந்தை பதிலளித்தார்: "அவளைக் குச்சியால் அடிக்க வில்லையே."

உடனே மகன் திரும்பக் கேட்டான்: "பின் ஏன் அந்தப் பெண் கதறுகிறாள்?"

உங்களது மனத்திலும் இவ்வகையான எண்ணங்கள் திரும்பத் திரும்ப வரும். புத்தர் என்ன சொல்கிறார்? அவை முட்டாள்தனமாக இருக்கின்றனவே. அவை அர்த்தமுள்ள வையாகவே இல்லையே. அர்த்தத்துக்கு அப்பால் இருக்கிறதே. நீங்கள் உங்களை முற்றிலுமாகச் சேகரித்துக் கொண்டால்தான் உங்களைவிட மேலே போக முடியும். உங்களது கைகளை எல்லைக்கப்பால் நீட்டி வைத்துக் கொள்ள வேண்டும். உங்களால் இவற்றில் ஒரே ஒரு

துகளைப் பிடிக்க முடிந்தால்கூட உங்களது வாழ்க்கை முன்னர்போல இருக்காது.

ஆனால் அது கடினம். இந்தப் பூமியில் நாம் வேரூன்றி விட்டோம். நாம் மரங்களைப்போல வேரூன்றிவிட்டோம். புத்தர் ஒரு பறவையைப் போன்று தமது சிறகுகளால் வானத்திலிருக்கிறார். இப்போது பூமியில் வேரூன்றிவிட்ட மரங்களெல்லாம் பூமியில் எந்தவித வேரும் இல்லாமல் போய்விட்ட அந்தப் பறவையின் செய்திகளை, பரந்த எல்லைகளைக் கண்ட அந்தப் பறவையின் செய்திகளை, வானத்தின் எல்லையைக் கண்ட அந்தப் பறவையின் செய்திகளைப் புரிந்துகொள்ள முயலுகின்றன. அவர் வித்தியாசமான புரிந்துகொள்ளுதலும், வித்தியாசமான பார்வையும் கொண்டவர். தொலைவோ வெகு தூரம். மிகச் சிலர் மட்டுமே புத்தர் சொல்ல வந்ததன் ஒளிக் கீற்றை அறிந்துகொள்ள முடியும். மதிப்பு வாய்ந்த சில விஷயங்கள் உங்களுக்குச் சொல்லப்பட்டிருக்கின்றன. புரிந்துகொள்ள முடியவில்லை என்றால் உங்களால் புரிந்துகொள்ள முடியவில்லை என்றே பொருள். விஸ்கி அருந்தும், தொடர்ச்சியாய்ப் புகை பிடிக்கும், பாப்கார்ன் சாப்பிட்டுக்கொண்டிருக்கும் குருமாரைப் போலப் புத்தர் மனநலமற்றவர் என்று சொல்லாதீர்கள். ஜாக்கிரதையாக இருங்கள். நீங்கள் புரிந்துகொள்ள வேண்டியதிலிருந்து விடுதலை அளித்துவிட்டால் நீங்கள் இது போலச் சுலப மாகச் சொல்லக் கூடும். அதன்பின் இந்த வைர சூத்தி ரத்தை மூடி வைத்துவிட்டு இதனை மறந்துபோய் விடலாம்.

'இது எனக்கு அப்பாற்பட்டது' என்று சொல்வீர்களே யானால் ஒரு சவால் காத்திருக்கிறது. 'நான் குழந்தைத் தனமானவன். விடலைப் பையன் போன்றவன். என்னால் புரிந்துகொள்ள இயலாது. நான் புரிந்து கொள்வதற்கு இன்னும் வளர வேண்டும். புத்தர் எப்படி மனநிலை சரி

யில்லாதவராக இருக்க முடியும்?' என்று சொல்வீர்களே யானால் நீங்கள் வளருகிறீர்கள் என்பதாக அர்த்தம்.

எப்போதும் நினைவில் கொள்ளுங்கள். இன்னொருவரைப் பற்றி முடிவெடுக்காதீர்கள். புத்தர் மனநிலை சரியில்லாதவராக இருந்தாலும்கூட அவரை ஒரு சவாலாக எடுத்துக் கொள்ளுங்கள். அதனால் நீங்கள் எதையும் இழக்கப் போவதில்லை. அவர் அப்படியே இருந்தாலும்கூட அவரைப் புரிந்துகொள்ளும் முயற்சியில் நீங்கள் உங்களது எல்லையைக் கடந்து வெகுதூரம் சென்றிருக்கிறீர்கள். அவர் மனநிலை சரியில்லாதவராக இல்லாது போனால் நீங்கள் ஏதோ ஒரு விலை மதிப்பற்ற ஒன்றைச் சந்திப்பதாக அர்த்தம். ஒரு கருவூலத்தின் மீது இடறி விழுந்ததாகப் பொருள்.

*புத்தர் சொன்னார்: "ஆமாம், சுபூதி... புத்தர்களுக்குத் ததாகதர் கற்றுத் தந்த சிறப்புத் தர்மங்கள், புத்தரின் வெறும் சிறப்புத் தர்மங்கள் அல்ல. அதனால்தான் அவை, புத்தர்களுக்கான சிறப்புத் தர்மங்கள் என்று சொல்லப்படுகின்றன."*

இதில் உள்ள அபத்தத்தைப் பாருங்கள். ஆனால் இது முக்கியமானது. இது அர்த்தம் உள்ளது. புத்தருக்கென்ற தர்மங்கள் யாவை? புத்தருக்கேற்ற பிரத்தியேகக் குணங்கள் என்ன? அவை என்னவென்றால் குணங்களே இல்லாதது தான். அவர் மிகவும் சாதாரணமானவர். அவரை நீங்கள் கடந்து செல்லும்போது அடையாளம்கூடக் கண்டு கொள்ள முடியாது.

அவர் நிகழ்த்திக் காட்டுபவர் அல்லர். அவர் அரசியல்வாதியல்லர். அவர் நடிகர் அல்லர். அவருக்கு அகங்காரம் என்பது இல்லை. அவர் தம்முடைய முக்கியத்துவத்தை யாருக்கும் காண்பித்துச் சம்மதம் பெறவேண்டிய அவசியம் இல்லாதவர். அவர் இல்லாமலே போய்விடுவார். அதுவே அவரது இருப்பினைத்

தெரிவிக்கும். அதனால்தான் இந்தக் கூற்று அபத்தமாகத் தோன்றுகிறது. அவருடைய குணம் என்னவெனில் அவர் இல்லாமல் போனது போலவே இருப்பார். அவர் நடக்கும் போது யாருமே அவருடன் நடக்க முடியாது. அவர் பேசுவார். ஆனால் யாருமே அவருடன் பேச முடியாது. அங்கு அமைதி நிலவும். அது தடையே படாது.

ஜென் துறவிகள் புத்தர் ஒரு வார்த்தைகூட உதிர்த்தது கிடையாது என்கிறார்கள். பிறகு புத்தர் நாற்பத்தைந்து வருடங்கள் தொடர்ச்சியாகப் பேசிக்கொண்டே இருந்தார் என்றும் சொல்கிறார்கள். அவரை யாராவது மிஞ்ச முடியுமென்றால் அது நானாகத்தான் இருக்க முடியும். வேறு யாராலும் மிஞ்ச முடியாது. நான் உங்களுக்குச் சொல்கிறேன். நானும்கூட ஒரு வார்த்தை பேசியது கிடையாது. ஜென் துறவிகள் சொல்வது சரியானதுதான். நான் எனது அனுபவத்திலிருந்து அவர்கள் சொல்வதை ஒத்துக் கொள்கிறேன். நான் உங்களுக்குச் சொல்லிக் கொண்டே போகிறேனே தவிர எனது ஆழ்மனத்தில் ஓர் அமைதிதான் நிலவுகிறது. பேரமைதி. நான் சொல்வது என்னையே தொந்தரவு செய்யாத அளவுக்கு அமைதி. நான் பேசும்போதுகூட அமைதி அங்கிருக்கிறது. ஒரு சிறிய குமிழ்கூட உருவாவது இல்லை.

நான் இங்கிருக்கிறேன். ஒரு வகையில் முழுவதுமாக பிரசன்னமாகியிருக்கிறேன். மற்றொரு வகையில் முழுவது மாக இல்லாமலிருக்கிறேன். ஏனெனில் என்னுள்ளிருந்து ‘நான்’ என்பது எழுவதே கிடையாது. நான் அந்த வார்த்தையைப் பயன்படுத்துவதில்லை என்று பொருளல்ல. அந்த வார்த்தையைப் பயன்படுத்தித்தான் ஆக வேண்டும். அது பயன்படுத்த வேண்டியதுதான். ஆனால் அது எனக்கு எந்த உண்மையையும் உணர்த்துவதில்லை. அது வெறும் பயன்பாடுதான். ஒரு வசதி, மொழியைப் பயன்படுத்தும் விதம். அது உண்மைக்குத் தொடர்பில்லாதது.

நான் 'நான்' என்று சொல்லும்போது நான் சாதாரண மாக என்னைக் குறிக்கும் வார்த்தையாகத்தான் அதனை உபயோகிக்கின்றேன். ஆனால் நீங்கள் என்னைப் பார்த்தீர்கள் என்றால் அங்கு 'நான்' இருக்கவே மாட்டேன். நான் கண்டுபிடிக்கவே இல்லை. நான் பார்த்துக்கொண்டே, பார்த்துக்கொண்டே, பார்த்துக் கொண்டே இருக்கிறேன். நான் மேலும் பார்க்கும்போது இந்த 'நான்' ஆவியாகிப் போய்விடுகிறது. நாம் நம்மை உள்ளுக்குள் பார்க்காதபோது தான் 'நான்' இங்கிருக்கிறது. அது நீங்கள் பார்க்காத போதுதான் இருக்கிறது. நீங்கள் எந்தக் கணத்தில் பார்த்தீர்களோ அப்போதே 'நான்' மறைந்து போகிறது.

அது விளக்கை ஓர் இருட்டறையில் கொண்டு வந்தவுடனே இருள் மறைந்து போகிறதே, அப்படித்தான். உள்ளுக்குள் பார்ப்பது இருக்கிறதே அது ஒரு விளக்கு. ஒரு ஜுவாலை. நீங்கள் அங்கே இருட்டைப் பார்க்கவே முடியாது. உங்களுடைய 'நான்' இருக்கிறதே அது வேறொன்றுமில்லை. சுருக்கப்பட்ட இருள்தான் அது!

புத்தரின் அடிப்படையான குணம் என்பது, புத்த தர்மம் என்பது, அவரது தனிப்பட்ட சுபாவம் என்பது, அவர் இல்லாமல் போய்விடுவதுதான். அவருக்கென்று எதுவும் வைத்துக் கொள்ளாமை. அவர் விவரிக்க இயலாதவர். நீங்கள் அவரை என்ன சொல்லி விவரித்தாலும், அது நியாயமானதாக இருக்காது. அது அவரைக் குறிப்பிடப்பட முடியாமல் போய்விடும். அவரை எல்லைக்குள் கொண்டு வந்து விடும். அவர் எல்லைக்குட்படாதவர். அவர் தூய்மையான வெளி. அவர் யாரென்று சொல்ல முடியாதவர்.

புத்தர் மிகவும் சாதாரணமானவர். அவரைக் கடந்து செல்லும்போதுகூட உங்களால் அவரைக் கண்டுபிடிக்க முடியாது. நீங்கள் ஓர் அரசரை அடையாளம் காண

முடியும். அரசரை எந்த மொழியின் வழியேயும் அடையா ளம் காண முடியும் என்பது உங்களுக்குத் தெரியும். அதேபோல அரசருக்கும் உங்களிடம் எந்த மொழியில் பேச வேண்டும் என்று தெரியும். அவர் உங்களைத் தயார் செய்கிறார். ஒத்திகையும் பார்ப்பார். தான் சிறப்பானவர் என்பதை உங்களுக்குப் புரிய வைக்கப் பிரத்தியேக முறைகள் எடுத்துக் கொள்வார். புத்தருக்கு இது மாதிரியெல்லாம் எதுவும் கிடையாது. அவர் யாருக்கும் எதையும் புரிய வைக்கும் முயற்சிகளில் ஈடுபடுவது கிடையாது. அவர் உங்களால் அடையாளம் காணப்பட வேண்டும் என்றுகூட நினைப்பதில்லை. அவர் அடையா ளம் காணப்பட வேண்டிய அவசியமே இல்லாதவர். அவர் வீடு திரும்பிவிட்டார். அவருக்கு உங்களது கவனம் தேவையில்லை.

நினைவு கொள்ளுங்கள். அடையாளம் என்பது மனோதத்துவ அடிப்படையிலானது. அதைப் புரிந்து கொள்ள வேண்டும். எதற்காக மக்கள் அவ்வளவு கவனத்தை ஈர்க்க வேண்டும்? முதலாவதாக எதற்காக எல்லோரும் அவர்களுடைய கவனத்தை நம் பக்கம் திரும்ப வைக்க வேண்டும்? ஏன் மனிதர்கள் அனைவரும் சிறப்பானவர்களாக இருக்க வேண்டும்? உங்களுக்குள் ஏதோ ஒன்றை இழந்திருக்க வேண்டும். உங்களுக்கே நீங்கள் யார் என்று தெரியாது. உங்களை மற்றவர்கள் அடை யாளம் கண்ட வழியாகத்தான் உங்களுக்கே உங்களைத் தெரியும். உங்களுக்கு நேரிடையான அணுகுமுறை உங்களைப் பற்றியே கிடையாது. நீங்கள் மற்றவர்களின் வழியாகத்தான் உங்களுக்குள் செல்கிறீர்கள்.

யாராவது உங்களை நல்லவர் என்று சொன்னாலே உடனே நீங்கள் நல்லவர் என்று நினைக்கிறீர்கள். யாராவது உங்களை நல்லவர் இல்லை என்று சொன்னால் உடனே மனமுடைந்து போகிறீர்கள். அதனால் நீங்கள் நல்ல

வரல்லாதவராகி விடுகிறீர்கள். நீங்கள் யாரென்று உங்களுக்கே தெரிவதில்லை. உங்களை யாராவது அழகான வர் என்று சொல்லிவிட்டால் உடனே சந்தோஷப்படுகிறீர் கள். யாராவது அசிங்கமானவர் என்று கூறிவிட்டால் உடனே துக்கப்படுகிறீர்கள். உங்களுக்கே நீங்கள் யார் என்று தெரியவில்லை. நீங்கள் மற்றவர்களின் அபிப்பிராயத்தில் தான் வாழுகிறீர்கள். நீங்கள் அபிப்பிராயங்களைச் சேகரித்துக்கொண்டே போகிறீர்கள். -நேரடியாக, உடனடி யாக -உங்களைப் பற்றி எந்தவித அங்கீகாரமும் இல்லை. அதனால்தான் நீங்கள் கடன்வாங்கிய ஒரு மனிதராக இருக்கிறீர்கள். அதனால்தான் கவனம் தேவைப்படுகிறது.

மக்கள் உங்களைக் கவனித்தால் உடனே நீங்கள் நேசிக்கப்பட்டதாக உணருகிறீர்கள். ஏனெனில் அன்பு காட்டும்போது ஒருவரையொருவர் கவனிக்கிறோம். இரண்டு பேர் காதலில் ஆழ்ந்திருந்தால் இந்த உலகம் முழுவதையுமே மறந்துவிடுகிறார்கள். ஒருவரில் ஒருவர் முழுவதுமாக ஈடுபட்டு விடுகிறார்கள். ஒருவரின் கண்களை மற்றவர் பார்க்கிறார். அந்த ஒரு கணத்துக்கு மற்ற எல்லாமே மறைந்துபோகின்றன. இல்லாமலே போகின்றன. அந்தத் தூய்மையான கணத்தில் அவர்களே இல்லாது போகிறார்கள். அவர்கள் உயரமான வான வெளியில் எங்கோ ஒரு வெளியில் வாழ்கிறார்கள். அல்லது சொர்க்கத்தில் வாழ்கிறார்கள். அவர்கள் ஒட்டுமொத்த மான கவனத்தை ஒருவருக்கொருவர் செலுத்திக் கொள்கிறார்கள்.

அன்பு என்பதே கவனம் செலுத்துவதுதான் - எல்லோருமே அன்பை இழந்துவிட்டார்கள். மிகவும் அபூர்வமான மக்களே அன்பை அடைந்திருக்கிறார்கள். ஏனெனில் அன்பு புனிதமானது. லட்சக் கணக்கானவர்கள் அன்பே இல்லாமல் வாழ்கிறார்கள். ஏனெனில் லட்சக் கணக்கானவர்கள் புனிதமில்லாமலே வாழ்கிறார்கள்.

அன்பு இழக்கப்பட்டுவிட்டது. அந்த இடைவெளிக்கு எப்படி மாற்றுக் கண்டுபிடிப்பது? சுலபமான மாற்று மக்களின் கவனத்தை ஈர்ப்பது. அது உங்களை ஏமாற்றிக் கொள்வதேயாகும். அவர்கள் உங்களிடம் அன்பு செலுத்துகிறார்கள் என்பதாக உங்களை ஏமாற்றிக் கொள்வதாகும்.

அரசியல் தலைவர்களுக்கு நிகழுவது இதுதான். அவர் ஒரு நாட்டுக்குப் பிரதம மந்திரியாகவோ, அல்லது ஜனாதிபதியாகவோ ஆகிறார். அவருக்கு ஒரு நாடு முழுவதுமே மரியாதை செலுத்த வேண்டும். அவர் மிகவும் நன்றாக உணர்கிறார். அவர் பிரதிநிதித்துவத்தின் அடிப்படையில் அன்பு செலுத்தப்படுகிறார். யாருமே அவரிடம் அன்பு செலுத்துவதில்லை. அவர் அந்தப் பதவியை விட்டு வெளியேறிவிட்டால் யாருமே அவரை யார் என்றுகூடக் கேட்கப் போவதில்லை.

ரிச்சர்டு நிக்சனை யார் கவனிக்கப் போகிறார்கள்? அவர் இப்போது உயிரோடு இருக்கிறாரா அல்லது இறந்து விட்டாரா என்று யாருக்குக் கவலை? அவர் இறக்கும் போதுதான் அவரைப் பற்றி உங்களுக்குத் தெரியும். அப்போது செய்தித்தாள்களும் அவரைப் பற்றி ஏதாவது சொல்லியாக வேண்டும். அப்போது உங்களுக்குத் திடீரென்று தெரியும். "ஓ, அவர் இதுவரை உயிரோடு இருந்தாரா?" பதவியிலில்லாத ஓர் அரசியல்வாதியைப் பற்றி யார் கவலைப்படப் போகிறார்கள்? ஆனால் அவர் பதவியில் இருக்கும்போது அனைவரும் அவரைக் கவனிக்கிறார்கள். ஆனால் அரசியல்வாதி தன்னைத்தான் எல்லாரும் கவனிப்பதாக நினைத்துக்கொள்கிறான்.

அரசியல்வாதி என்பவன் அன்பு செலுத்துவதற்காகத் தேடிக் கொண்டிருக்கிறான். ஆனால் அன்பு செலுத்த முடியாமல் இருக்கிறான். அதே போல அன்பு செலுத்தப்

பட முடியாதவனாகவும் இருக்கிறான். அவனுடைய தேடுதல் அன்புக்காக, அது மிக மிக நுணுக்கமான மாற்றத்தையும், திருப்பத்தையும் கொண்டது. இப்போது அது கவனத்தைத் தேடும் முயற்சியாக ஆகிப் போகிறது. அவன் தன்னுடைய படம் செய்தித்தாளில் தினமும் வெளியாக வேண்டும் என்று நினைக்கிறான். ஒரே ஒரு நாள் அவனுடைய படம் வெளியாகவில்லையெனில் உடனே தான் புறக்கணிக்கப்பட்டதாக நினைக்கிறான்.

அவன் தன்னுடைய அன்புக்கான தேடுதல் வேட்கையைத் தணித்துக் கொள்கிறான். ஆனால் அது எப்போதுமே தணிக்கப்படப் போவதில்லை. அன்பு, அது எப்போது நிகழ்ந்தாலும் அது தன்னுடன் கவன ஈர்ப்பையும் ஒரு நிழலைப்போலக் கொண்டுவரும். ஆனால் கவனம் என்பது அன்பைக் கொண்டு வராது. கவனம் என்பது ஆயிரம் வழிகளில் வரலாம். நீங்கள் ஒரு தவறு செய்துவிட்டால்கூட எல்லோரும் உங்கள் மீது கவனம் செலுத்துவார்கள். ஓர் அரசியல்வாதியின் தேவையும் ஓர் அயோக்கியனுடைய தேவையும் ஒன்றானவைதான்.

ஒரு குற்றவாளிக்குத் தேவைப்படுவதும் அதேதான், கவனம். அவன் கொலை செய்த பின்பு அவனுடைய படம் செய்தித் தாள்களில் வருகிறது. அவனுடைய பெயர் வானொலியில் வாசிக்கப்படுகிறது. தொலைக்காட்சியில் தெரிகிறான். அவன் இப்போது நன்றாக உணர்கிறான். இப்போது அவன் யாரென்று எல்லோருக்கும் தெரியும். இப்போது எல்லோரும் அவனையே நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். அவனுடைய பெயர், உலகெங்கும் தெரியும். புகழ்பெற்றவர்களும், குற்றவாளிகளாக அடையாளம் காணப்படுபவர்களும் ஒன்றையேதான் விரும்புகிறார்கள்.

புத்தர் பரிபூரணமான அன்பின் வடிவம். அவர் வாழ்க்கையை நேசித்தார். வாழ்க்கை அவரை நேசித்தது. முழுமையான பரவசமாகும்படியான (orgasm) உறவு இருக்குமானால் அதுவே சமாதியாகும். அவருக்குப் பூரணமான அன்பு இருக்கிறது. உடல் ரீதியான அன்போ, அல்லது மனம் ரீதியானதாகவோ அல்லாமல் முழுமை யானதாக, பகுதியானதாக இல்லாத அன்பு! அவர் ஒரு பரவசமான நிலையை அடைந்தார். இப்போது யாரிடம் இருந்தும் எந்த விதக் கவனத்தையும் கேட்பதற்குத் தேவையில்லாதவராக இருக்கிறார்.

அவர் உங்களைக் கடந்து செல்லும் போதுகூட நீங்கள் அவரைப் பார்க்க இயலாதவராக இருக்கிறீர்கள். காரணம், நீங்கள் அரசியல்வாதிகளை, குற்றவாளிகளை அதே போன்ற மக்களை மட்டுமே கவனிக்கக் கூடியவர்களாக இருக்கிறீர்கள். நீங்கள் ஒரு பைத்தியக்காரனைக்கூடக் கவனிக்கிறீர்கள். காரணம், அவன் பல விதச் சேட்டைகள் செய்கிறான். ஆனால் நீங்கள் புத்தரைக் கவனிப்பதில்லை. புத்தர் மிகவும் அமைதியாக எந்தவித மூச்சு விடும் சப்தமும்கூட இன்றி கடந்து போவார். அதுவே அவரது தலையாய குணம். அவர் இல்லாதது போலவே இருப்பார். இல்லாதது போலவே இருக்கிறார் என்றால், அதுதான் அவரது முக்கிய சுபாவம் என்றால், அவருக்குக் குணங் களே இல்லை என்று பொருள்.

அதைத்தான் புத்தர் சொல்லும்போது:

*"ஆமாம், சுபூதி... புத்தர்களுக்குத் ததாகதர் கற்றுத் தந்த சிறப்புத் தர்மங்கள், புத்தரின் வெறும் சிறப்புத் தர்மங்கள் அல்ல. அதனால்தான் அவை, புத்தர்களுக்கான சிறப்புத் தர்மங்கள் என்று சொல்லப்படுகின்றன."*

புத்தரின் அசாதாரணத் தன்மை என்பதே அவரது சாதாரணத் தன்மைதான். அவரது சாதாரணத் தன்மை

என்பதே அசாதாரணத் தன்மை. சாதாரணமாக இருப்பது என்பதே இந்த உலகத்தில் அசாதாரணமானதுதான்.

அன்று ஒரு நாள் இரவு பிரான்ஸிஸ் என்னும் கிறிஸ்தவத் துறவியைப் பற்றிய அழகான கதை ஒன்றைக் கேட்க நேர்ந்தது. அவரும் ஒரு புத்தர்

அஸிஸியின் பிரான்ஸிஸ் துறவி தமது மரணப் படுக்கையில் இருந்தார். அவர் தமது சுற்றமெல்லாம் கேட்கும் படியாக உரத்த குரலெடுத்துப் பாடிக் கொண்டிருந்தார். எலியாஸ் என்னும் பிரான்ஸிஸ் சகோதரர் வகையிலானவர் மெல்ல அருகில் வந்து பிரான்ஸிஸிடம் சொன்னார்: "தந்தையே, அருகில் உள்ள ஜன்னல்களின் பக்கமெல்லாம் ஏராளமானோர் நிற்கிறார்கள்.'' நிறையப் பேர் வந்திருக்கிறார்கள். பிரான்ஸிஸின் கடைசிக் காலம் வந்து விட்டதாக அன்பு செலுத்தும் அனைவரும் வீட்டைச் சுற்றி நின்றிருக்கிறார்கள்.

சகோதரர் எலியாஸ் சொன்னார்: "நீங்கள் பாடுவதை அவர்கள் கேட்க விடாமல் செய்வதற்கு நான் என்ன செய்தாலும் முடியாது போலிருக்கிறது. இந்தக் கடைசிக் காலத்தில் நீங்கள் பாடுவது ஒரு தர்ம சங்கடமான நிலையாக இருக்கிறது. தந்தையே, தாங்கள் வகித்த பதவிக்கும்கூட இவ்வகையான செய்கை தகுதிக்கும் கீழானதாக்கிவிடும் போலிருக்கிறது. ஒரு வேளை தாங்கள் மிதமிஞ்சிப் போகவே தங்களைத் துறவி என்ற வகையில் காண வந்துள்ளவர்களையெல்லாம்கூட காணத் தவற விட்டிருக்கலாம். அவர்களின் முன்னிலையில் தாங்கள் இன்னமும் கிறிஸ்துவ மத முறைப்படி இறந்தீர்களென்றால் நன்றாக இருக்கும்.''

"என் சகோதரனே, தயவுசெய்து என்னை மன்னித்து விடு. ஆனால், எனது இருதயத்தில் மகிழ்ச்சியுடன்

இருப்பதால் நான் பாடாமல் இருப்பது என்பது முடியாத காரியம். நான் பாடியே ஆக வேண்டும்."

அவர் முடிவில் பாடிக்கொண்டே இறந்தார். கிறிஸ்துவ மத சரித்திரம் முழுவதையும் பார்த்தாலும்கூட அவர் ஒருவர்தான் பாடிக்கொண்டே இறந்தார். நிறைய ஜென் மதத்தவர்கள் பாடிக்கொண்டே இறந்திருக்கிறார்கள். ஆனால் அவர்கள் கிறிஸ்துவ மதத்தைச் சேர்ந்தவர்கள் அல்ல. அவர் ஒருவர்தான் கிறிஸ்துவத் துறவிகளுள் ஜென் குருவாக வாழ்ந்தார். அவர் கிறிஸ்துவச் சம்பிரதாயத்தைப் பற்றி ஒரு துளிகூடக் கவலைப்படவில்லை.

இப்போது என்ன நடந்தது? சகோதரர் எலியாஸ் பிரான்ஸிஸ் துறவி கிறிஸ்துவ மதத்தைச் சேர்ந்தவர் என்று நிரூபிக்க நினைத்தார். மக்கள் அவர் துறவியல்ல என்று நினைத்து விடுவார்களோ என்று பயந்தார். அவர்கள் பிரான்ஸிஸ் ஒரு மன நிலை சரியற்றவர் என்று நினைத்து விடுவார்களோ என்று நினைத்தார். துறவி என்பவர் பெயருக்காகவேனும் மிகத் துக்ககரமாக இருக்க வேண்டும். கிறிஸ்தவர்கள் சோகமாகக் காட்சி தரும் துறவிகளைத்தாம் நம்புவார்கள். அவர்கள் இயேசு கிறிஸ்து சிரித்தார் என்று நம்பத் தயாராக இல்லை. அது கிறிஸ்தவர்களின் தகுதிக்குக் கீழானதாக அவர்கள் நினைக்கின்றனர். சிரிப்பு? -மனிதத்து வமானது, சாதாரணமானது. அவர்களுக்குத் தெரிந்த தெல்லாம் ஒன்றுதான். கிறிஸ்துவை மனிதத்துவத்துக்கு மேலானவராக வைப்பது. அதன்பின் அவரிடமிருந்து மனிதத்துவமானது எல்லாவற்றையும் எடுத்துவிடுவது. அதன்பின் அவர் இறந்தவராகி விடுகின்றார். ரத்தமில்லாத வராகி விடுகிறார்.

சகோதரர் எலியாஸ் வருத்தமுற்றார். இதுவே கடைசித் தருணம். பிரான்ஸிஸ் இப்போது இறந்து போகப் போகிறார். தமக்குப் பின்னால் ஓர் அவப் பெயரை

விட்டுச் செல்லப் போகிறார். மக்கள் அவர் துறவியே அல்ல, அவர் ஒரு மனநோயாளி என்றே கருதப் போகிறார்கள். அவர் மிகுந்த வருத்தமுற்றதன் காரணம் அவர் எப்படியாவது நிரூபிக்க வேண்டும் என்று நினைத்ததுதான். உண்மையில் அவர் பிரான்ஸிஸைப் பற்றிக்கூடக் கவலைப்படவில்லை. அவரது கவலை யெல்லாம் தம்மைப் பற்றியும், மதச் சடங்குகளைப் பற்றியும்தான். "நமக்குப் பின்னால் மிகவும் தர்ம சங்கடமாக இருக்கப் போகிறது. நாம் எப்படி மக்களுக்குப் பதில் சொல்லப் போகிறோம்? கடைசித் தருணங்களில் என்ன நடந்தது என்று அவர்கள் கேட்டால் என்ன பதில் சொல்வது?" அவர் தம்மைப் பற்றிக் கவலைப்பட்டார். குரு மனநிலை சரியில்லாதவராக இருப்பின் சீடனைப் பற்றி என்ன சொல்வது? அவர் ஒரு சீடர்.

ஆனால் இரண்டு வெவ்வேறு தளங்களைப் பாருங்கள். இரண்டும் முற்றிலுமாக வெவ்வேறு தளங்கள். எலியாஸ் மக்களின் அபிப்பிராயத்தைத்தான் முக்கியமாகக் கருதினார். அவருக்குத் தம்முடைய குரு மகத்தான குரு என்று நிரூபிப்பதில்தான் குறிக்கோள். துறவிகளில் எல்லாம் மகத்தான துறவியாக நிரூபிப்பதற்கு அவருக்கு ஒரே வழி தான் தெரிந்தது. அவர் மிகவும் ஆழ்ந்த யோசனையுடன் கூடிய, வாழ்க்கையை மிகவும் யோசித்து ஏற்றுக் கொள்ளக்கூடிய வகையில், கொஞ்சமும் சிரிக்காத, சங்கீதம் இசைக்காதவராய், நடனம் ஆடாத... இப்படிச் சித்திரிப்பதில்தான் அவருக்கு நாட்டமிருந்தது. அவர் மிகவும் மனிதத்துவம் மிகுந்தவராக, சாதாரணமானவரா கவே இருந்தார். சாதாரண மக்கள் மன்னிக்கப்படலாம். ஆனால் பிரான்ஸிஸ் துறவியைப் போன்றவர்கள் சாதாரணமானவர்கள் அல்லவே.

ஆனால் பிரான்ஸிஸ் துறவி வித்தியாசமான பார்வை கொண்டவராக, சாதாரணமானவராக இருந்தார். "தயவு

செய்து என்னை மன்னியுங்கள். சகோதரனே, நான் என் உள்ளத்துக்குள்ளே, இதயத்தினுள்ளே மிகவும் மகிழ்ச்சியுடன் இருக்கிறேன். நான் பாடுவதைத் தவிர்க்க இயலாது" என்று சொன்னார். உண்மையில் பிரான்ஸிஸ் துறவி பாடவில்லை. அவர் பாடலாகவே மாறிவிட்டார். அதனால்தான் அவரால் தவிர்க்க முடியவில்லை. அவரால் கட்டுப்படுத்திக் கொள்ள இயலவில்லை. அங்கு அவரைக் கட்டுப்படுத்தவும் யாருமில்லை. அங்குச் சங்கீதம் நிகழ்ந்தது என்றால் சங்கீதம் நிகழ்ந்ததுதான். அது ஒரு கட்டுப் பாட்டுக்குள் இல்லை. அது முடியவும் முடியாது. ஏனெனில் கட்டுப்படுத்த வேண்டியவர் மறைந்துவிட்டார். 'தான்' என்பதும் அகங்காரமும் அங்கு ஒரு மனிதனைப் போல் இல்லாது போய்விட்டது. ஒரு முழுமையான அமைதி உள்ளே நிலவுகிறது. அந்த அமைதியிலிருந்துதான் சங்கீதம் பிறந்தது. பிரான்ஸிஸ் என்ன செய்ய முடியும்? அதனால்தான், "நான் என்ன செய்ய முடியும்? நான் பாடித்தான் ஆகவேண்டும்" என்கிறார்.

அவர் பாடிக்கொண்டே இறந்தார். இதைவிடச் சிறப்பாக மரணம் ஏற்படுவதென்பது முடியாத காரியம். உங்களால் பாடிக்கொண்டே இறக்க முடியும் என்றால் நீங்கள் பாடிக்கொண்டே வாழ்ந்திருக்கிறீர்கள் என்று பொருள். உங்களது வாழ்க்கை சந்தோஷமானது. உங்களது இறப்பு, சங்கீதத்தின் ஆரோகணமாக விளங்கியது என்றும், உன்னதமான நிலையை அடைந்துவிட்டது என்றும் பொருள்.

பிரான்ஸிஸ் துறவியும் ஒரு புத்தர்தான். புத்தருடைய குணாதிசயமே சாதாரணமாக இருப்பதுதான். அவருக்குத் தமக்கென்று தம்மைப் பற்றிய ஓர் எண்ணமும், தான் எப்படி இருக்கவேண்டும் என்பதற்கான ஓர் எண்ணமும், இல்லவே இல்லை. அவர் அப்போதைக்கப்போது வாழ்பவர். எது நடந்தாலும் நடந்ததுதான். அவர்

அந்தந்தக் கணத்தில் வாழ்பவர். அவரே அதற்கான நிரூபணம். நீங்கள் அதை அவரது குணாதிசயம் என்று கூறலாம். ஆனால் அது எந்த வகையிலானது? அது எளிமையாகச் சொன்னால் குணம் இல்லாமலிருப்பது தான். அவர் தமக்கென்று சட்டை போட்டுக் கொள்வது போலத் தம்மைச் சுற்றி ஒரு குணத்தைக் கொள்ளாதவர். தமக்கென்று ஒரு கேடயமில்லாதவர். அவர் தமது கடந்த காலத்திலிருந்து வாழாதவர். அவர் கிறிஸ்தவர்களுக்கான கண்ணியம் என்ன என்று தெரியாதவர். அவர் ஒரு குழந்தையைப் போல அந்தக் கணத்திலே வாழ்பவர்.

*புத்தர் சொன்னார்: "ஆமாம், சுபூதி... புத்தர்களுக்குத் ததாகதர் கற்றுத் தந்த சிறப்புத் தர்மங்கள், புத்தரின் வெறும் சிறப்புத் தர்மங்கள் அல்ல. அதனால்தான் அவை, புத்தர்களுக் கான சிறப்புத் தர்மங்கள் என்று சொல்லப்படுகின்றன."*

சாதாரணமானது என்பதுதான் அவரது அசாதாரணத் தன்மையே! யாருமற்றவராக இருப்பதே அவர் யாரோவாக இருப்பது. இல்லாமலிருப்பதே இருப்பதென் பது. மரணமே வாழ்வதென்பது.

*புத்தர் கேட்டார்: "சுபூதி, நீரோடு போகிறவன் 'நீரோடு போவதன் பலன் என்னால் பெற முடியுமா?' என்று நினைத்துக் கொள்வானா?"*

*சுபூதி சொன்னார்: "இல்லை, குருவே." "ஏன் அப்படி?" "ஏனென்றால், அவன் எந்தத் தர்மத்தையும் வெல்லவில்லை. அதனால்தான் அவனை 'நீரோடு போகிறவன்' என்கிறோம். கட்புலனாகும் எந்தப் பொருளையோ, ஓசையையோ, வாசனையையோ, கவலையையோ, தொடு உணர்வையோ, அல்லது மனத்தில் தோன்றும் பொருளையோ அவன் வெல்லவில்லை. அதனால்தான் அவன் நீரோட்டத்தோடு போகிறவன் என்று குறிப்பிடப்படுகிறான்."*

***"பிரபுவே, அப்படி அந்த உணர்வு அவனுக்கு ஏற்படு மானால், 'என்னால், நீரோட்டத்தோடு போவதன் பலன் பெறப்பட்டது' என்பது அவனுக்குத் தோன்றும். அப்போது அவன், தன் சுயத்தைப் பற்றிக்கொள்வான்; தன் இருப்பைப் பற்றிக்கொள்வான்; தன் உயிரைப் பற்றிக் கொள்வான்; தனது ஆளாகும் தன்மையைப் பற்றிக் கொள்வான்..."***

தேடுபவரின் நிலையைப் புத்தர் நான்கு நிலைகளாகப் பிரித்துள்ளார். முதல் நிலையை Streamwinner (நீரோட்டத்தை வென்றவர்) என்கிறார். நீரோட்டத்தை வென்றவர் என்றால் புத்தரது எல்லைக்குள் நுழைந்துள்ளவர். அது ஆரம்ப நிலையிலிருப்பவரைக் குறிப்பது. அது துறவியாக இருப்பவரைக் குறிப்பது. அவரை ஏன் நீரோட்டத்தை வென்றவர் என்று குறிப்பிட வேண்டும்? ஏனெனில் அவர் இனிமேலும் கரையில் நிற்பவராக இல்லை. இனிமேலும் அவர் அசையாது நிற்பவரென்று சொல்ல முடியாது. அவர் வாழ்க்கையின் நீரோட்டத்தோடு நகர ஆரம்பித்து விட்டார். அவர் இனிமேலும் வாழ்க்கையுடன் போராட்டம் நடத்துபவராக இல்லை. நதியோடு போர் செய்யும் அகந்தையும், நீரோட்டத்தை எதிர்த்துச் செல்லத் தேவையான அகந்தையும் இனிமேலும் அங்கு இல்லை.

இப்போது மறுபடியும் உங்களுக்கு அபத்தமாகப் படும். நீரோட்டம் வெல்லப்பட்டுவிட்டது. அதனால்தான் அவர் நீரோட்டத்தை வென்றவர் என்றழைக்கப்படுகிறார். அவர் முரண்களையெல்லாம் கைவிட்டுவிட்டார். அவர் சரணாகதியடைந்துவிட்டார். அதனாலேயே அவர் வெற்றிகரமானவராக இருக்கிறார். அதனால்தான் அவர் நீரோட்டத்தை வென்றவர் என்றழைக்கப்படுகிறார். விந்தையான வார்த்தைகள். முதலில் அவர் நீரோட்டத்தை வெல்வதற்கு முயன்றார். இதைத்தான் உலகில் எல்லோரும் முதலில் செய்கின்றனர். தன்னுடைய எண்ணத்துக்கேற்றாற் போல, திட்டத்துக்கேற்றாற்போல, ஒரு வாழ்க்கையை

அமைத்துக்கொள்ள முயலுகின்றனர். தன்னுடைய விருப்பத்துக்கேற்றாற்போல் ஒரு வாழ்க்கை முறையை, தனது கனவுகளுக்கேற்றாற்போல ஒரு வாழ்க்கையை அமைத்துக் கொள்ள முயல்கின்றனர். எல்லோருமே நீரோட்டத்தை எதிர்த்தே செல்ல விரும்புகின்றனர். வாழ்க்கையோடு அனைவருமே போர் புரிகின்றனர். இயற்கையோடு போர் புரிகின்றனர். கடவுளோடு போர் புரிகின்றனர். சாதாரண மனிதனின் வாழ்க்கை என்பதே முரண்பாடான வாழ்க்கையாகப் போய்விட்டது.

ஆனால் நீங்கள் யாருடன் போர் புரிகிறீர்கள்? நீங்கள் உங்களது மூலத்திடமேதான் போர் புரிகிறீர்கள். நீங்கள் யாரிடம் போர் புரிகிறீர்கள்? உங்களிடமேதான் புரிகிறீர்கள். இந்தப் போர் என்பது ஆழமாக, இன்னும் ஆழமாக சலிப்புக்கே வழி வகுக்கப் போகின்றது. ஏனெனில் நீங்கள் வெற்றியடையப் போவதில்லை. வெற்றியடைவதற்கு அது வழியல்ல. நீங்கள் தோற்கடிக்கப்படப் போகிறீர்கள். நீங்கள் சிறிய பகுதி. வாழ்க்கை என்பது பரந்தது. அபரிமிதமானது. நீங்கள் அதனை எதிர்த்து வெல்ல முடியாது. அதனுட னேயே சென்றுதான் வெல்ல முடியும்.

அதனை எதிர்த்து வெல்ல முடியாது. அதனுள் வழியாகத்தான் வெல்ல முடியும். அது உங்களை ஆதரித்தால்தான் நீங்கள் வெல்ல முடியும். அது உங்களை ஆதரிக்கவில்லையெனில் நீங்கள் தொடர்ந்து நம்பிக் கொண்டே இருக்கலாம். ஆனால் நீங்கள் தோற்றுவிடுவீர் கள். நேரம் ஒன்றுதான் கேள்விக்குறி. வெகு சீக்கிரமாகவோ அல்லது தாமதமாகவோ நீங்கள் சலிப்படைந்துபோய், சோர்வடைந்துபோய், போர் முடிவடைந்துபோய்க் கடைசியில் கைவிட்டு விடுவீர்கள். ஆனால் நீங்கள் கடைசியில் தோல்வியில் விழுந்து விடுவீர்கள். அந்தத் தோல்வியில் மகிழ்ச்சி இருக்காது. தோல்வியில் எப்படி மகிழ்ச்சி இருக்க முடியும்? புரிந்து கொள்பவர்களுக்குத்

தெரியும், தோல்வி வரும் முன்னரே நீங்கள் சரணடைந்து விட்டீர்களேயானால் மகிழ்ச்சி வந்து சேரும் என்று!

சரண் என்பதும் தோல்வி என்பதும் மிகவும் வித்தியாசமான, அதே சமயத்தில் ஒரே மாதிரியான ஒன்றாகும். தோல்வியுற்றவர்கள் அதே சமயம் சரணடைந்து விட்டவர்கள் போலவும் தோற்றமளிப்பார்கள். சரணடைந்தவர்கள் தோல்வியுற்றவர்கள் போலவும் தோற்றமளிப்பார்கள். ஆனால் மேல் தோற்றத்திற்குத்தான் அப்படித் தெரியும். ஆனால் அடித்தளத்தில் இரு வேறுபட்ட உலகங்களே யாகும். தோல்வியுற்றவன் கோபத்துடன், கடுங்கோபத்துடன், சலிப்புடன், ஒரு நரகத்தில் இருக்கிறான். சரணாகதி அடைந்தவனுக்குத் துயரமில்லை. அவன் மேன்மைப் படுத்தப்படுகிறான். அவன் பரவச நிலையிலிருக்கிறான். அவனுக்குப் போர் முழுவதுமே அபத்தமானது என்று தெரியும். எல்லாப் போர்களுமே தோல்வியில்தான் முடிய வேண்டும் என்று விதிக்கப்பட்டிருக்கிறது என்று தெரியும். தோல்வியில் விழப்போகிறது என்று தெரியும்.

அது எப்படி எனில் எனது வலக்கை இடக்கையுடன் சண்டை போடுவது போலாகும். அது எனது விரல்கள் எனது உடலுடன் போர் புரிவது போன்றதாகும். அவை எப்படி வெற்றி பெற இயலும்? அது முன்னமேயே வீழ்வதென்று தீர்மானிக்கப்பட்டுவிட்டது. புரிந்துகொள்ளும் மனிதன் சரணடைந்துவிடுகிறான். "கடவுள் இருக்கிறார். அவர் விருப்பப்படியே நடக்கும். அவரது சாம்ராஜ்யமே வரும்" என்றே அவன் சொல்கிறான். "நான் ஒன்றுமே யில்லை. என்னுள் புகுந்து செல். நான் ஓர் உள் ஓட்டை யான மூங்கில். ஒரு துளையுள்ள புல்லாங்குழல். நீ விருப்பப்பட்டால் என் வழியே கீதம் இசை. உனது விருப்பம் அது இல்லையெனில் மௌனம் என்னுள் புகுந்து வரட்டும்" என்று அவன் சொல்கிறான். அவன் வெறும் பாதையாக மாறிவிடுகிறான். அவன் நீரோட்டத்துடனேயே

நகர ஆரம்பிக்கிறான். "வாழ்வெனும் நீரோட்டம் என்னை ஆக்கிரமித்துக் கொள்ளட்டும். நான் போர் புரிய மாட்டேன். நான் நீந்தக் கூட முயலமாட்டேன். நான் மிதப்பேன். நான் காற்றுடனேயே அதன் போக்கிலேயே செல்வேன்" என்று சொல்கிறான்.

வாழ்க்கையை அந்த அளவுக்குப் புரிந்துகொண்டவன் நீரோட்டத்தை வென்றவன் ஆகிறான். ஆனால் அது ஒரு விந்தையான வார்த்தை. சரணாகதி என்பது வெற்றி என்றே அழைக்கப்படும். ஏனெனில் சண்டை என்பது தோல்விக்கே இட்டுச் செல்லும். சரணடைதல் என்பது வெற்றிக்கு இட்டுச் செல்லும்.

வாழ்க்கை என்பது முரண்பட்டதுபோல இருந்தாலும் உண்மையானது. புத்தரால் என்ன செய்ய முடியும்? வாழ்க்கை முரண்பட்டதுதான். சரணடைந்தவர்கள் எல்லாரும் வெற்றியடைந்தவர்களாகவே இருக்கிறார்கள். போர் புரிந்தவர்களெல்லோரும் கடைசியில் ஒருநாள் தன்னுடைய சக்தியை எல்லாம் இழந்துபோய் முடிவில் வெற்றியின் அடையாளம்கூட இல்லாதவர்களாகிப் போகிறார்கள்.

நினைவில் வையுங்கள். அலெக்ஸாண்டர் தோல்வி யுற்றார். ஆனால் பிரான்ஸிஸ் தோல்வியுறவில்லை. நெப் போலியன் தோல்வியுற்றார். ஆனால் ஜீசஸ் தோல்வியுற வில்லை. செங்கிஸ்கானும், டாமர்லேனும் தோற்றனர். ஆனால் புத்தர் தோல்வியுறவில்லை. உண்மையான சரித்திரம் என்பது தோல்வியைப் பற்றி, செங்கிஸ்கான், டாமர்லேன், அலெக்ஸாண்டர் ஆகியோரைப் பற்றிக் கவலைப்படக்கூடாது. உண்மையான சரித்திரம் என்பது புத்தரைப் பற்றி, பிரான்ஸிஸைப் பற்றி, இயேசுவைப் பற்றித்தான் கவலைப்பட வேண்டும். இவ்வுண்மையானவர்

கள் அனைவரும் வெற்றி பெற்றார்கள். ஆனால் அவர்களின் வெற்றி சரணடைதலின் மூலம் கிடைத்தது.

சற்றே நினைத்துப் பாருங்கள். நீங்கள் சண்டையிடாத போது கிடைக்கும் அழகையும், தயாள குணத்தையும் சற்றே நினைத்துப் பாருங்கள். நீங்கள் அந்த நதியினூடே செல்லும்போது கிடைக்கும் அழகைப் பாருங்கள், அது உங்களைக் கடலுக்கு எடுத்துச் செல்லும். அது கடலுக்குத் தான் போகிறது. நீங்கள் அனாவசியமான பாவனைகள் செய்கிறீர்கள். அது ஏற்கெனவே போய்க்கொண்டுதான் இருக்கிறது. நீங்கள் அதனுடனேயே சென்று கடலை அடைகிறீர்கள். முடிவை அடைகிறீர்கள். எல்லையை அடைகிறீர்கள். சரணடைதல் என்பதுதான் நீரோட்டத்தை வென்றவன், முடிவாக அடைந்த பலன் என்று புத்தர் கூறுகிறார்.

இரண்டாவது நிலை என்பது என்னவெனில், திரும்ப வந்தவன் (Once-returner). மூன்றாவது நிலை திரும்பவே வராதவன் (Never returner), நான்காவது நிலை அர்ஹாத் (arhat). நீரோட்டத்தை வென்றவன் என்பவன் மூன்று தளைகளிலிருந்து மீண்டு விடுகிறான். முதலாவதாக அகங்காரம், தனித்தன்மை, தனக்கென்று தனியாக ஒரு குணம் என்னும் எண்ணம். இயல்பாகவே எல்லா வகையான போர்களுக்கும் இதுவே மூல காரணம். இரண்டாவதாக ஆணைகளுக்கும், சடங்குகளுக்கும் கட்டுப்பட்டு வாழ்தல். நிறைய மக்கள் மத நம்பிக்கைகளைக் கைக்கொள்பவர்கள்; ஆணைகளுக்கும், சடங்குகளுக்கும் கட்டுப்பட்டு வாழ்கிறார்கள். அவர்களுக்கு மதத்தைப் பற்றி ஒன்றுமே தெரியாது. சடங்குகள் என்பது மதமாகாது. ஆணைகள் என்பவை மதங்களாக முடியாது.

மதம் என்பதே முற்றிலும் வேறுபாடான வாழ்க்கையாகும். பிரக்ஞையுடன் கூடிய வாழ்க்கையாகும். அன்

போடியைந்த வாழ்க்கையாகும். கருணையுடன் கூடிய வாழ்க்கையாகும். ஆனால் உங்களைச் சுற்றிப் பார்த்தீர் களேயானால் லட்சக்கணக்கான மக்கள் மாதா கோயில் களுக்கும், ஆலயங்களுக்கும், மசூதிகளுக்கும், குருத்வாராக் களுக்கும், பிரார்த்தனை செய்வதற்காக, இதைச் செய்வதற்கோ, அல்லது அதைச் செய்வதற்கோ சென்று கொண்டிருப்பதைப் பார்க்கலாம். அவை எல்லாமே சடங்குகள். மதம் என்பது இல்லாததாகும்.

நான் ஒரு பழமையான இந்தியக் கதை ஒன்றைக் கேள்விப்பட்டிருக்கிறேன்.

ஒரு மனிதன் தனது இறந்துபோன தந்தைக்குச் சிரார்த்தம் செய்துகொண்டிருந்தானாம். சிரார்த்தம் என்பது தந்தை இறந்துபோகும்போது அவரது கடைசி யாத்திரைக்காகப் பிரார்த்தனை செய்யும் ஒரு சடங்காகும்.

அந்தச் சடங்கின்போது அவர்களது வளர்ப்பு நாய் அங்குமிங்கும் சுற்றிக்கொண்டிருந்தது. அந்த நாயினால் சடங்கு எங்கே கெட்டுப்போகுமோ என்ற பயத்தில் அசிரத்தையோடு எழுந்து அந்த நாயை வெளியே ஒரு கம்பத்தில் கட்டிப் போட்டுவிட்டான்.

பல வருடங்களுக்குப் பிறகு அந்த மனிதன் இறந்த போது அவனுடைய மகன் சிரார்த்தத்தைச் செய்யும் முறை வந்தது. ஒவ்வொன்றையும் நுணுக்கமாகக் கடைப்பிடிக்க எண்ணிய அந்த மகன், தன்னுடைய அருகிலுள்ள இடத்திலிருந்து ஒரு நாயைப் பிடித்து வர முடிவு செய்தான். ஏனெனில் அவனுக்கு அது மிகவும் முக்கியமானது என்று தெரியும். "என்னுடைய தந்தை தான் செய்யும் சிரார்த்தத்தி னூடே பாதியில் எழுந்து இதைச் செய்தார். அவர் அந்த நாயைக் கம்பத்தில் கட்டிய பின்பு எவ்வளவு மகிழ்ச்சியுடன் தமது பிரார்த்தனையைத் தொடர்ந்தார்'' என்று

எண்ணினான். அவன் எதையும் இழக்க விரும்பவில்லை. சடங்குகள் முழுமையுடன் இருக்க வேண்டும்.

இந்தச் சடங்கு நடைபெறும் இந்த நேரத்தில் வளர்ப்பு நாய் ஏதுமில்லை. எனவே அவன் அண்டைப் பிரதேசத் துக்கு ஓடிப் போய் ஒரு தெரு நாயைப் பிடிக்க வேண்டிய தாயிற்று. அதேபோல ஒன்றைப் பிடித்து வந்து வெளியில் உள்ள ஒரு கம்பத்தில் சிரத்தையோடு கட்டிவிட்டுத் தனது சிரார்த்தத்தை மிகுந்த திருப்தியோடு முடித்தான். அந்தக் குடும்பத்தில் பரம்பரை பரம்பரையாக இந்தச் சடங்கு பின்பற்றப்பட்டு வருகிறது. உண்மையில் அந்தக் குடும்பத் தில் இந்த நாய்ச் சடங்கு மிக முக்கியமான ஒரு சடங்காகிப்போனது.

இது போலத்தான் எல்லாம் நடக்கின்றன. மக்கள் பிரக்ஞையில்லாமல் நடந்துகொள்கின்றனர். உங்களது தந்தை ஏதோ ஒன்றைச் செய்கின்றார். அவரது தந்தை களும், தந்தைகளுக்குத் தந்தைகளும், ஏதோவொன்றைச் செய்கின்றனர். அது எல்லாமே புனிதம் என்ற ஒளி வட்டமாகிப் போயின. நீங்கள் அவற்றை அப்படியே கடைப்பிடிக்கின்றீர்கள். நீங்கள் அவற்றின் அர்த்தங்களைக் கூடப் பார்ப்பது கிடையாது.

“எனது தந்தையே-அப்பா” என்று இயேசு அழைத்தார். நீங்களும் அதே போன்று அழைக்கிறீர்கள். ஆனால் அது அர்த்தமற்றது. உங்களுக்கு அது போன்ற இதயமில்லை. சடங்குகள் எல்லாமே மேலோட்டமானவை. உங்களுக்குக் கடவுளை அப்பா என்று அழைக்கும் அளவுக்கு இதயம் இல்லை. அப்பா என்ற வார்த்தை அர்த்தமுள்ளது என்று சொல்ல முடியாது. ஆனால், உள்ளத்திலிருந்து அன்பு வெளிப்பட வேண்டும். அங்கு அந்த உணர்விருக்குமானால் அந்த வார்த்தையைக்கூட உச்சரிக்கத் தேவையில்லை.

உணர்வு மட்டும் போதுமானது. அந்த உணர்வு அங்கு இல்லையெனில் சடங்கு இறந்ததாகிப்போகிறது.

நான் கேள்விப்பட்டிருக்கிறேன்:

ஒரு நான்கு வயதுக் குழந்தையைப் படுக்கையில் கிடத்தியவுடன் அது தனது கைகளைக் கூப்பிக்கொண்டு பிரார்த்தனை செய்யத் துவங்கியது. தவறுதலாக அது வாய்பாட்டைச் சொல்ல ஆரம்பித்துவிட்டது. அது தான் செய்த தவற்றை உணர்ந்து ஒரு புன்னகையுடன் மேலே பார்த்துவிட்டு, "அதை அழித்துவிடுங்கள்" என்று சொல்லி விட்டு, உறங்கப் போகும் முன் சொல்லும் பிரார்த்தனை யைச் சொல்ல ஆரம்பித்தது.

சடங்குகள் என்பவை அது போன்றவைதாம். அது உங்களுக்குள் வளர்வதில்லை. வெளியிலிருந்து திணிக்கப் படுகின்றன. நீங்கள் அதை மறுபடியும் மறுபடியும் திரும்பச் செய்கிறீர்கள். அவை இயந்திரத்தனமாகிப் போகின்றன.

புத்தர் நீரோட்டத்தை வெல்பவன் கைவிடப்பட வேண்டியதாகச் சிலவற்றைச் சொல்கிறார். அதில் ஒன்றுதான் அகங்காரம். இரண்டாவதாக வெறும் சடங்குகளுக்காக வாழ்வது. மூன்றாவதாகச் சந்தேகமும், குழப்பமும். சந்தேகப்படும் மனம் ஒய்வெடுக்கவே முடியாது. சந்தேகப்படும் மனம் சரணடைய முடியாது. சந்தேகப்படும் மனம் முழுமையாக இருக்கவே முடியாது. அதன் ஒரு பகுதி போர் புரிந்துகொண்டே இருக்கும். ஒரு பகுதி இல்லையென்று சொல்லிக்கொண்டே இருக்கும். சந்தேகப்படும் மனம் ஒரு முழுமையான 'ஆமாம்' என்று சொல்லவே சொல்லாது. அதுவே நீரோட்டத்தை வென்றவ ரின் அடிப்படையாகும்; வாழ்க்கைக்கு ஒப்புக்கொள்வது. எந்த ஒரு நிபந்தனையும் போடாமல் ஒப்புக்கொள்வது. எளிதாக ஒப்புக்கொள்வது. உங்களது மனமொப்பி ஒப்புக்கொள்வது. பிரார்த்தனை ஒன்றே போதும்.

அமைதியாக உட்கார்ந்து வாழ்க்கையை ஒப்புக்கொள்கிறீர்களென்றால் அதுவே போதுமானது. அதற்கு மேல் ஒன்றும் தேவையில்லை. சடங்குகள் தேவையில்லை.

இந்த மூன்றும் நீரோட்டத்தை வெல்ல வேண்டியவர்கள் விட்டுவிட வேண்டும். பின் இரண்டாவதாகத் திரும்ப வருபவர்கள். திரும்ப வருபவர்கள் என்றால் ஒரு முறை இறந்து மீண்டும் திரும்ப வருகிறவர்கள் என்று பொருள். அவர் பொறாமை, சிற்றின்பங்களில் நாட்டம், வீண் பிடிவாதம் ஆகியவற்றைக் கைவிட வேண்டும். ஆனால் அவர் மீண்டும் ஒரு முறை வருவார்.

மூன்றாவது நிலையாகத் திரும்பவே வராதவர். திரும்ப வராத ஒருவர் என்று பொருள். அவர் வாழ்க்கையின் மீதுள்ள இச்சையை, மற்றொரு பிறவியின் மீதுள்ள இச்சையை, ஏதோ ஒன்றாக ஆக வேண்டும் என்ற இச்சையைக் கடக்க வேண்டும். நான்காவது நிலையாக அர்ஹாத் குறிப்பிடப்படுகிறது. இல்லாதவராக, யாரும் இல்லாதவராக, ஒன்றுமற்றவராக இருப்பதே இந்த நிலை. இவர் புத்தராகிவிட்டார் என்று பொருள்.

புத்தர் சுபூதியை இந்த நான்கு நிலைகளைப் பற்றிக் கேட்கிறார். அவர் கேட்கிறார்:

*புத்தர் கேட்டார்: "சுபூதி, நீரோடு போகிறவன் 'நீரோடு போவதன் பலன் என்னால் பெற முடியுமா?' என்று நினைத்துக் கொள்வானா?"*

*சுபூதி சொன்னார்: "இல்லை, குருவே. ஏன் அப்படி? ஏனென்றால், அவன் எந்தத் தர்மத்தையும் வெல்லவில்லை. அதனால்தான் அவனை 'நீரோடு போகிறவன்' என்கிறோம். கட்புலனாகும் எந்தப் பொருளையோ, ஓசையையோ, வாசனையையோ, கவலையையோ, தொடு உணர்வையோ, அல்லது மனத்தில் தோன்றும் பொருளையோ அவன் வெல்லவில்லை.*

“நான் சரணடைந்துவிட்டேன்” என்று நீங்கள் சொன்னால் சரணடையவில்லையென்று பொருள். ஏனெனில் நீங்கள் எப்படிச் சரணடைய முடியும்? நீங்கள் சரணடையும்படியாக ஆகிவிட்டது. அந்த ‘நான்’ என்பதுதான் சரணடைய வேண்டும். நீங்கள் ‘நான் சரணடைந்துவிட்டேன்’ என்று சொல்ல முடியாது. அது உங்களால்தான் நிகழ்ந்ததெனில் அது சரணடைந்ததாக இருக்காது.

மக்கள் என்னிடம் வந்து, “நாங்கள் எப்படி உங்களிடம் சரணடைவது?” என்று கேட்கிறார்கள். நான் அவர்களிடம், “உங்களால் சரணடைய முடியாது” என்றுதான் சொல்கிறேன். சரணடையத் தடையாக இருப்பதே நீங்கள் தாம் என்று சொல்கிறேன். “நீங்கள் அதன் வழியிலிருந்து விலகியிருக்கும்போது சரணடைதல் என்பது நிகழ்ந்து விடும்” என்கிறேன்.

சரணடைவது என்பது செய்யவேண்டிய ஒன்றோ, அல்லது செய்ய முடியும் ஒன்றோ அல்ல. அது ஒரு செய்கையே அல்ல. சரணடைவது என்பது புரிந்து கொள்ளுவதாகும். சரண் என்பது புரிந்துகொள்ளுதல் ஆகும். ‘நான்’ என்பதே எப்போதும் போர் புரியும் மனோபாவம் ஆகும். ‘நான்’ என்பதால் எப்போதுமே போர் புரியாமல் இருக்க இயலாது. அது போரினூடேதான் இருக்கும். அது போரில்தான் வாழ முடியும். அது சண்டையைச் சார்ந்தே இருக்கிறது. ஒன்று நீங்கள் இன்னொருவருடன் சண்டை செய்துகொண்டிருப்பீர்கள். அல்லது ஒரு மாறுதலுக்காக உங்களுடனேயே சண்டை செய்துகொண்டிருப்பீர்கள். அதைத்தான் உங்களது குருமார்கள் மடாலயங்களில் செய்து கொண்டிருக்கின்றனர். அவர்கள் இந்த உலகத்தில் சண்டையிடுவதில்லை. அவர்கள் யாருடனும் சண்டை செய்வதில்லை. அவர்கள் இந்த உலகத்தையே துறந்துவிட்டவர்கள். அதனால்

இப்போது தனக்குள்ளேயே சண்டை செய்துகொண்டிருக் கிறார்கள்.

அவர்களது உடல் சொல்லும், "இப்போது நான் பசியாயிருக்கிறேன்" என்று. ஆனால் அவர்கள் 'இல்லை' என்று சொல்வார்கள். இப்போது இதுதான் சண்டை. இப்போது அகங்காரம் என்பது புதிய வழியில் உருவாகிறது. அகங்காரம் இப்போது சொல்லும், "நான் இப்போது எனது உடலை மிக அழகாகக் கட்டுப்பாட்டில் வைத்திருக்கிறேன். நான்தான் எஜமானன். எனது உடல் இப்போது அடிமை" என்று. உங்கள் கண்கள் சோர்வுடன், "நாங்கள் இப்போது உறங்க வேண்டும்" என்று சொல்லும். "இல்லை, நான் இந்த இரவு முழுவதும் விழித்திருக்க முடிவு செய்து விட்டேன். அதுவே என தியானம். நான் ஒரு குறிப்பிட்ட தியானத்தில் இருக்கிறேன். நான் இப்போது உறங்க முடியாது" என்று நீங்கள் சொல்வீர்கள். நீங்கள் நல்லவித மாகவும் உணர்வீர்கள். இப்போது நீங்கள் சண்டையிடு கிறீர்கள்.

உங்களது உடல் இப்போது கொஞ்சம் வசதியை வேண்டுகிறது. ஆனால் நீங்கள் பாறையின் மீது உறங்கு கிறீர்கள். உங்களது உடல் சிறிது நிழலை விரும்புகிறது. ஆனால், நீங்கள் தகிக்கும் சூரியன் கீழ் நிற்கிறீர்கள். உங்களது உடலுக்கு உடை வேண்டியுள்ளது. ஆனால் நீங்கள் குளிரில் நிர்வாணமாக நிற்கிறீர்கள். இவை சண்டையிடுவதற்கான பல வழிகள். இப்போது உலகத் துடன் நீங்கள் சண்டையிடத் தேவையில்லை. ஆனால் நீங்களே இரண்டாகப் பிரிந்து சண்டையிடத் துவங்கி விட்டீர்கள்.

அகங்காரம் என்பது உராய்வின் மூலமே வாழ்கிறது. எந்த வகையிலாவது உராய்வு வேண்டும். கணவன் மனைவியிடம் சண்டையிடுகிறான். மனைவி கணவனிடம்

சண்டையிடுகிறாள். இவை அகங்காரத்துக்குத் தீனி போடுவதைத் தவிர வேறொன்றுமில்லை. நீங்கள் அதிகமாகச் சண்டையிடுவீர்களேயானால் அகங்காரம் இன்னும் பலமாக ஆகிறது என்று பொருள். அகங்காரத் துக்கு அதிகமாகப் பலம் எப்போது கிடைக்கிறது எனில், உங்களுடனேயே சண்டையிடும் போதுதான். ஏனெனில் அதுவே சண்டையிடுவதிலேயே கடினமாகச் சண்டை யிடும் முறை. யாரையாவது கொல்வது என்பது ஒரு விஷயம் எனில், உங்களையே சிறுகச் சிறுகக் கொல்வது, தொடர்ச்சியாகக் கொல்வது, பல வருடங்களாகக் கொல்வது என்பது கடினமான ஒன்றாகும். அது மெதுவாகத் தற்கொலை செய்து கொள்வதாகும். அங்கு அகங்காரம் மிக நல்லபடியாக உணர்கிறது. அதனாலேயே குருமார்கள் அனைவருக்கும் அதிகமான அளவில் அகங்காரம் இருக்கிறது. அது போன்ற அகங்காரத்தைச் சாதாரணமாகச் சந்தையில் திரியும் மக்களிடம் காண முடியாது. உங்களுக்கு உண்மையிலேயே பெரிய அளவில் அகங்காரம் வேண்டுமெனில், உங்களுக்கு உண்மையி லேயே அது எப்படி இருக்கும் என்று பார்க்க வேண்டு மெனில் இமாலயத்திற்குச் சென்று, அங்குள்ள குகைகளில் பார்த்தால் தெரிந்து கொள்வீர்கள்.

சரணடைந்துவிட்ட மனிதன் என்பவன் 'நான் சரணடைந்துவிட்டேன்' என்று சொல்லவே மாட்டான். அவன் சரணடைதல் என்பது நிகழ்ந்துவிட்டது என்றே சொல்வான்.

ஏனெனில், நீங்கள் 'நான்' என்பதை விட்டுவிட்டீர்கள். அதனால்தான் நீங்கள் சரணடைந்தவர் என்று சொல்லப் படுகிறீர்கள். நீங்கள் 'நான் சரணடைந்து விட்டேன்' என்று சொல்லிக் கொள்ள முடியாது. நீங்கள் அப்படிச் சொன்னால் மொத்தக் குறிக்கோளுமே வீணாகிவிட்ட தென்று பொருள்.

அவன் பொருளைப் போல எதையுமே வெற்றி கொள்ளவில்லை. உண்மையில் வெற்றி பெறுவதைவிட வெற்றி பெறுவது என்ற எண்ணத்தை விட்டுவிட்டார் என்றே பொருள். அதனாலேயே அவர் நீரோட்டத்தை வெற்றி கொண்டவராகிறார். அவர் சண்டை முழுவதையுமே விட்டுவிட்டார். போர் முழுவதையுமே விட்டுவிட்டார். பற்பல ஆயுள்களாகப் புரிந்து வந்த போரை! மொத்தத் திட்டத்தையுமே விட்டுவிட்டார். அவர் இனிமேலும் அவற்றிலெல்லாம் அக்கறை காட்டமாட்டார்.

அவர் இனிமேலும் எதையும் காண்பித்து, “இதை வென்றுவிட்டேன், பாருங்கள். இதுவே என் வெற்றி” என்று சொல்லமாட்டார். அவர் தமது ராஜாங்கம் என்று தாம் வெற்றி கொண்டது எதையும் காட்டமாட்டார். அவர் கண்ணுக்குத் தெரியும் எதையும் வென்றுவிட வில்லை. கண்ணுக்குப் புலப்படும் எதையும் வெல்வதைவிட அவர் அகங்காரத்தை விட்டு விட்டதுதான் உண்மை. அவர் தமது அகங்காரத்தைத் தொலைத்துவிட்டார். ஆனால், அந்த அகங்காரத்தை, தொலைத்தல் என்பதில்தான் பெரிய வெற்றியே இருக்கிறது. ஆனால், அந்த வெற்றியில் அவர் எதையும் தமது என்று சொல்லிக் கொள்ள முடியாது.

*இல்லை, குருவே. ஏன் அப்படி? ஏனென்றால், அவன் எந்தத் தர்மத்தையும் வெல்லவில்லை. அதனால்தான் அவனை 'நீரோடு போகிறவன்' என்கிறோம்.*

“நான் வெற்றி பெற்றுவிட்டேன். நான் சரணாகதி ஆகிவிட்டேன்” என்று எந்தக் கணத்தில் நினைக்கின் றாயோ நீ அந்தக் கணத்திலேயே 'நான்' என்ற புதிய ஒன்றை, தனது என்பதை மறுபடியும் உருவாக்கிவிட்ட தாகவே அர்த்தம். மறுபடியும் நீங்கள் அகங்காரத்தின் வழியே செல்லத் துவங்கிவிட்டதாக அர்த்தம். மறுபடியும்

தான் என்ற உணர்வைக் கொண்டுவிட்டீர்கள் என்பதாக அர்த்தம்.

இந்த ஆங்கில வார்த்தையான 'Perception' என்பது மிகவும் அழகானது. அது Per-cap மற்றும் Capio என்ற வார்த்தைகளிலிருந்து வந்தது. இதற்குப் பொருள் பிடித்துக் கொள்ளுதல், கைப்பற்றுதல், ஆக்கிரமித்தல், முற்றுகையிடு தல் என்பதுதான். எந்தக் கணத்தில் நீங்கள் கைப்பற்றுகிறீர் களோ அப்போதே நீங்கள் அகங்காரத்தைக் கைப்பற்றி விட்டதாக, அகங்காரம் உங்களைக் கைப்பற்றிவிட்டதாகப் பொருள். மறுபடியும் அந்தப் பழைய குப்பைக்கே திரும்பிவிட்டீர்கள். மொத்த விஷயமுமே தொலைந்து போகிறது. நீங்கள் இனிமேலும் நீரோட்டத்தை வென்றவர் களாக இருப்பதில்லை.

இந்த வகையில் புத்தர் மீண்டு வந்தவர்கள், மீண்டே வராதவர்கள் ஆகியோரைப் பற்றியும் கேட்கிறார். அதே காரணத்துக்காக நான் அவற்றை விட்டுவிட்டேன். அவற்றைச் சூத்திரத்தில் எடுத்துக் கொள்ளவில்லை. முடிவாக:

*புத்தர் இவ்வாறு கேட்டார்: "என்னால் அருகதநிலை அடையப்பட்டது' என்று அருகதருக்குத் தோன்றும் என்று நீ நினைக்கிறாயா சுபூதி?"*

*சுபூதி சொன்னார்: "இல்லை பிரபு, அவ்வாறு தோன்றாது? ஏன் அப்படி? ஏனென்றால், எந்தத் தர்மத்திற்கும் 'அருகத்' என்று பெயரில்லை. அதனால்தான் ஒருவர் அருகதர் என்று குறிப்பிடப்படுகிறார்... ஏன் அப்படி? சாந்தி நிலையில் வாழ்பவர்களில் முதன்மையானவன் நான் ஒருவன்தான் என்று ததாகதர் சுட்டிக் காட்டினார், குருவே. பிரபு, நான் பேராசை யிலிருந்து விடுபட்ட அருகதன். அவ்வாறிருந்தும், 'நான் பேராசையிலிருந்து விடுபட்டவன்' என்று எனக்குத் தோன்ற வில்லை."*

*ததாகதர் என்னைப் பற்றி, "சுபூதி, நல்ல குடும்பத்தில் பிறந்தவன். சாந்தி நிலையில் வாழ்பவரில் முதன்மை யானவன். இவன் எங்கும் வாழாதவன். அதனால்தான் இவன் 'சாந்திநிலையில் வாழ்பவன், சாந்தி நிலையில் வாழ்பவன்' என்று அழைக்கப்படுகிறான்" என்று குறிப்பிட்டார்.*

*நான் அருகத நிலையை அடைந்ததை உணர்ந்திருந்தால் அவர் இவ்வாறு குறிப்பிட்டிருக்கமாட்டார்.*

எளிமை, உங்களுக்கு இந்த விஷயம் புரிய வேண்டும். அது என்னவென்றால், நீங்கள் உண்மை எனும் உலகத்துக் குள் நுழைய ஆரம்பித் தால் நீங்கள் பெருமைப்பட்டுக் கொள்பவராக இருக்க மாட்டீர்கள். உங்களது பெருமை என்பதும் பெருமையற்றதாகிவிடும்.

ஒருமுறை ஒரு மனிதன் புத்தரிடம் வந்து, "நீங்கள் அடைந்துவிட்டீர்களா?" என்று கேட்டான். புத்தர் பதிலுக்கு, "நான் அப்படிச் சொல்ல முடியாது. ஏனெனில் நான் அடைந்துவிட்டேன்" என்று சொன்னார்.

அதன் அழகைப் பாருங்கள். அவர் "நான் அப்படிச் சொல்ல முடியாது. ஏனெனில் நான் அடைந்துவிட்டேன். நான் அப்படிச் சொன்னால் நான் அடையவில்லை என்பது உறுதியாகிவிடும்" என்று சொல்கிறார். ஆனாலும் இதில் உள்ள சிரமத்தைப் பாருங்கள். புத்தர் ஒருவேளை 'நான் அடையவில்லை' என்று சொல்வாரேயாகில் அவர் பொய் சொன்னதாகிவிடும். அவர் 'நான் அடைந்து விட்டேன்' என்று சொன்னால் அப்போதும் அது சத்திய மில்லாத ஒன்றாகிப் போகும். ஏனெனில், அதில் 'நான்' என்னும் ஒன்று அந்த அடைதலில் இல்லை. அந்த அடைதல் என்பதே 'நான்' என்ற ஒன்று போகும்போது தான் நிகழ்கிறது. அதில் உள்ள சிரமத்தைப் பாருங்கள். இப்போது மொழி என்பதே மலடாகிப் போய்விடுகிறது.

*புத்தர் கேட்கிறார்:*

*"என்னால் அருகதநிலை அடையப்பட்டது' என்று அருகதருக்குத் தோன்றும் என்று நீ நினைக்கிறாயா சுபூதி?"*

இப்போது அர்ஹாத்ஷிப் என்ற நிலை அல்ல. அது ஓர் பொருளை அடைவது போன்றது அல்ல. அதைக் கைக் கொள்வது என்பது முடியாது. அதை நீங்களே வைத்துக் கொள்ளவும் முடியாது. அதைப் பதுக்கி வைக்க முடியாது. அது விடுதலை என்பதாகும். அது ஒரு பொருளை வைத்துக் கொள்வது போலாகாது. அது ஒரு விடுதலையாகும். நீங்கள் உங்களது சங்கிலியை விடுவித்துக் கொண்டே செல்ல வேண்டும். ஒரு நாள் எல்லாச் சங்கிலிகளுமே மறைந்து போகும். கடைசியாக 'நான்' என்னும் சங்கிலியும் மறைந்து போகும். அதன்பின் அங்கு யாருமில்லை. அந்தப் பிரக்ஞை யையே அர்ஹாத் என்று சொல்கிறோம்.

புத்தர், "அது அர்ஹாத்துக்கு நிகழ்ந்ததா? நான் அர்ஹாத் நிலையை அடைந்துவிட்டேனா?" என்று கேட்கிறார்.

*இல்லை பிரபு, அவ்வாறு தோன்றாது? ஏன் அப்படி? ஏனென்றால், எந்தத் தர்மத்திற்கும் 'அருகத்' என்று பெயரில்லை. அதனால்தான் ஒருவர் அருகதர் என்று குறிப்பிடப்படுகிறார்... ஏன் அப்படி? சாந்தி நிலையில் வாழ்பவர்களில் முதன்மை யானவன் நான் ஒருவன்தான் என்று ததாகதர் சுட்டிக் காட்டினார்.*

இப்போது, சுபூதி தம்மையே ஓர் உதாரணமாக எடுத்துக் கொள்கிறார். அவர், "நீங்கள் நான் அடைந்து விட்டதாகச் சொல்கிறீர்கள். நீங்கள் நான் அர்ஹாத் நிலையை அடைந்துவிட்டேன் என்று சொல்கிறீர்கள். நீங்கள் நான் அமைதியில் உறைந்துவிட்டேன் என்று சொல்கிறீர்கள்" என்று சொல்கிறார். அது புத்தர் சிறப்பான

வகையில் யாருமே உள்ளே இல்லை- அமைதியில் உறைவதற்கு என்று சொல்வதாகப் பொருள்.

அமைதியில் உறைவது என்பதற்கு யாருமே இல்லை என்று பொருள். ஏனெனில் யாராவது இருந்தால் அமைதி என்பது சாத்தியமற்றதாகிவிடும். யாராவது இருந்தால் கொந்தளிப்புத் தொடர்ந்து இருந்துகொண்டே இருக்கும். ஒரு இல்லம் என்பது எப்போது அமைதியாக இருக்குமென்றால் யாருமே இல்லாது போகும்போதுதான் அமைதியாக இருக்கும். யாராவது ஒருவர் இருந்தாலும் கூட அவர் அங்கிருந்தும் இங்கிருந்தும் எதையாவது மாற்றிக் கொண்டேயிருப்பார். அவர் ஆழ்ந்த தூக்கத்தில் இருந் தாலும்கூடக் குறட்டை விட்டுக்கொண்டே இருப்பார். ஏதாவது நிகழ்ந்துதான் ஆகவேண்டும். யாருமே இல்லாது போகும் போது அமைதி என்பது வந்து சேரும்.

புத்தர், பூரணமான அமைதி வரும்போதுதான் அர்ஹாத் ஷிப் என்ற நிலை வரும் என்கிறார். யாரையுமே காண முடியாத போதுதான் அந்த நிலை வரும். "இப்போது சுபூதி நீ அமைதியில் உறைந்து போயிருக்கிறாய்" என்று புத்தர் சொல்லும்போது அவர், "இப்போது சுபூதி நீ இல்லாமல் போகிறாய்" என்று சொல்வதாகப் பொருள். இரண்டுமே ஒன்றுதான்.

சுபூதி, "நீங்கள் சுபூதி அமைதியில் உறைந்து போவதாகச் சொல்கிறீர்கள். சுபூதி இப்போது அர்ஹாத்தாக ஆகிப் போனதாக நீங்கள் சொல்கிறீர்கள். நீங்கள் உண்மையாக இருக்கவேண்டும். பகவானே, நீங்கள் கூறுவது எப்படி பொய்யாக இருக்க முடியும்? ஆனால் என்னால் இதைக் கூற முடியாது. இது 'நான்' என்ற எனக்கு நடக்கவில்லை. "பேராசையிலிருந்து விடுபட்ட அர்ஹதா நானா?" எனக்கு அது நடந்தது என்று சொன்னால் அப்போது நீங்கள் கூறுவது தவறாகிவிடும். ஏனெனில் எனக்கு அது நடந்து,

அதனால் நான் அர்ஹதா ஆகிவிட்டேன் எனும்போது அங்கு ஆணவம் எழுகிறது, அங்கு நான் என்பது இருக்கிறது, அப்போது நான் திரும்பவும் அந்தப் பழைய பொறியிலேயே அகப்பட்டுக் கொண்டவன் ஆகிவிடு கிறேன். அதேபோல நான் அமைதியில் உறைகிறேன் என்று எனக்குத் தோன்றும்பொழுது அந்த அமைதி குலைந்து விடுகிறது. ஏனெனில், இந்த 'நான்' மறுபடியும் வந்து விடுகிறது. உறைபவர் வந்துவிடுகிறார்" எனச் சொல்கிறார். அதன்பின் நீங்கள் அமைதியில் ஆழ்ந்து போக முடியாது. அதன்பின் ஏதாவது நிகழ்ந்தே ஆகவேண்டும். சில துயரங்கள், சில கனவுகள், சில ஆசைகள், இந்த உலகம் எல்லாமே நிகழ்ந்துதான் ஆக வேண்டும்.

இந்த அகங்காரம் என்பதே உலகத்துக்கான விதை. இந்தச் சிறிய விதையில்தான் உலகம் முழுவதும் அடங்கியிருக்கிறது. 'என்னால்' என்று நினைத்துப் பாருங்கள். உடனடியாக இந்த உலகமே அதன் பின்னால் உள்ளே வரும்.

*சுபூதி சொல்கிறார்:*

*பிரபு, நான் பேராசையிலிருந்து விடுபட்ட அருகதன். அவ்வாறிருந்தும், 'நான் பேராசையிலிருந்து விடுபட்டவன்' என்று எனக்குத் தோன்றவில்லை.*

*ததாகதர் என்னைப் பற்றி, "சுபூதி, நல்ல குடும்பத்தில் பிறந்தவன். சாந்தி நிலையில் வாழ்பவரில் முதன்மை யானவன். இவன் எங்கும் வாழாதவன். அதனால்தான் இவன் 'சாந்திநிலையில் வாழ்பவன், சாந்தி நிலையில் வாழ்பவன்' என்று அழைக்கப்படுகிறான்" என்று குறிப்பிட்டார்.*

ஒருவர் மறையும்போது உறைபவர் இல்லாது போகும்போது அமைதி அடையப்படுகிறது.

ஒன்றுமில்லாமலிருப்பது என்பதே புத்தரின் செய்தி. ஒருவர் என்று யாருமே இல்லை என்ற நிலைக்கு ஒருவர் வரும்போது தான் இல்லாமை இருக்கும். அப்படி இல்லாம லிருக்கும் போதுதான் பின்னர் யாருமே அதைச் சொல்லிக் கொள்ள முடியாது. அதைப் பற்றித் தம்பட்டம் அடித்துக் கொள்ள முடியாது.

புத்தரைப் புரிந்துகொள்வதற்கு நீங்கள் இல்லாமல் போவதைப் பற்றி ஒரு சில கண நேரக் அனுபவங்களாவது வேண்டும். மொழியளவில் அவர் சொல்வதைப் புரிந்து கொள்ளலாம். ஆனால் அது உங்களுக்கு எந்த வகையிலும் உதவாது. அது நெடுந்தொலைவுக்கு உதவாது. உங்களுக்கு சில கணநேரத் தரிசனங்கள் வேண்டும். அவை சாத்தியமும் கூட.

ஒரு சில தருணங்களில் அமைதியாக உட்கார்ந்து, எதுவுமே செய்யாமல், உங்களைத் தொந்தரவு செய்ய ஒரு மந்திரத்தைக்கூடச் சொல்லாமல், கடவுளின் பெயர்கூட இல்லாமல், தனியாக ஒரு யோக நிலைகூட இல்லாமல், தியானம்கூட இல்லாமல், வெறுமனே உங்களது அறையில் அமைதியாக அமர்ந்து, ஒரு மரத்தின் அருகில் அல்லது ஒரு நதியின் கரையில், புல்வெளியில் படுத்தவாறு, நட்சத் திரங்களை அண்ணாந்து பார்த்தபடி, அல்லது கண்களை மூடியபடி இருங்கள். வெறுமனே அப்படி இருங்கள். வெறுமனே சக்தி எங்கும் போகாது. ஒரு கண நேரக்காட்சி உங்களை நோக்கி வரத் துவங்கும். ஒரு கண நேரத்துக்கு நீங்கள் இருப்பதைப் போலவும் இல்லாததைப் போலவும் உணருவீர்கள்.

நீங்கள் நீங்களாகவே அதே சமயம் நீங்களில்லாமலும் இருப்பீர்கள். முதல் தடவையாக நீங்களாகவும் நீங்களில்லா மலும் இருப்பீர்கள். பின்னர்ப் புத்தர் முரணாகத் தோற்றமளித்தாலும் உண்மையாக இருக்கிறார் என்று

தெரிந்துகொள்வீர்கள். நீங்கள் நீங்களில்லாத போதுதான் நீங்களாக இருக்கிறீர்கள். எல்லாம் இல்லாமல் போகும் போதுதான் எல்லாம் இருக்கவும் செய்கிறது. அகங்காரம் முற்றிலுமாக மறைந்து போகும்போது நீங்கள் முழுமை யடைகிறீர்கள். நீங்கள்தாம் எல்லாமாகவும் இருக்கிறீர்கள். நீங்கள் ஒரு துளியாக மறைந்து ஒரு கடலாக மாறுகிறீர்கள். ஒரு பக்கத்தில் மறைந்து மறுபக்கத்தில் வருகிறீர்கள். இது முதல் தடவையாக நடக்கிறது.

ஞானம் என்பது ஒரு மரணமும் உயிர்தெழுதலும்கூட. அவை இரண்டுமே ஒரே சமயத்தில் அருகருகே நடக்கின்றன. இங்கு மரணம் நடைபெறும்போது கூடவே உடனே உயிர்தெழுதலும் நடைபெறுகிறது. ஆனால் நீங்கள் இதை ருசி பார்க்க வேண்டும். இதை அனுபவிக்க வேண்டும். இந்த வார்த்தைகள் வெறும் வார்த்தைகளல்ல. இவை வெறும் அறிவுரைகளோ அல்லது தத்துவங்களோ மட்டு மல்ல. அவை நடைமுறையில் இருக்கும் அனுபவங்கள்.

எனக்கு உங்களது இடையூறுகள் புரிகின்றன. உங்களில் அநேகர், “நீங்கள் சூஃபிகளைப் பற்றிப் பேசுகையில் எங்களது இதயங்கள் நடனம் புரிகின்றன. ஆனால் இந்த வைர சூத்திரத்தைப் பற்றிப் பேசுகையில் எங்களது இதயம் நடனம் ஆடமாட்டேன் என்கிறதே” என்று கேள்விகள் கேட்டுள்ளீர்கள். இது மேன்மையானது. இது இன்னும் அபூர்வமானது.

சூஃபிகளை நீங்கள் புரிந்துகொள்ள முடியும். அவர்கள் உங்களுக்கு அருகில் உள்ளார்கள். அவர்கள் காதலைப் பற்றிப் பேசுகிறார்கள். நீங்கள் காதல் என்ற வார்த்தையை கேள்விப்பட்டுள்ளீர்கள். நீங்கள் காதலைப் பற்றிக் கேள்விப் பட்டாவது இருக்கிறீர்கள். உங்களுக்குக் காதல் என்றால் என்ன என்பதைப் பற்றிக் கொஞ்சமாவது, கருத்து புரிந்து வைத்துள்ளீர்கள். உங்களால் சூஃபிக்களின் அன்பைப்

பற்றிப் புரிந்துகொள்ள முடியாது. அவர்கள் குறிப்பிடுவது எதையென்று தெரியாது. ஆனாலும், உங்களுக்கு அன்பைப் பற்றிக் கொஞ்சம் தெரியும். நீங்கள் எதைப் பற்றிக் குறிப்பிடு கிறீர்கள் என்றாவது தெரியும். காதலைப் பற்றிக் கேள்வி யுறும் போதே உங்களது இதயம் உருக ஆரம்பிக்கிறது. ஆனால், புத்தரின் இந்த வார்த்தைகள் இன்னமும் மேன்மையானவை.

ஆனால், எல்லோரையும் பொருத்தவரையில் அப்படி யில்லை. சில கேள்விகள்தாம் சிலிர்த்துப் போனதாக வந்திருக்கின்றன. அது அவர்களைப் பொருத்தது. நீங்கள் பிரசாத்தைக் கேட்கலாம். அவரது இதயம் வைரசூத்திரத் தைக் கேட்டு நடனம் ஆடி இதய அதிர்ச்சியே வருமளவுக்கு ஆடிப் போயிருக்கிறது. நீங்கள் பிரதீபாவைக் கேட்கலாம்.

ஒன்றை நினைவில் வையுங்கள். நான் இங்குப் பல மக்களுக்காகப் பேசுகிறேன். அவர்கள் பல வகையானவர் கள். அவர்களது அணுகுமுறையும் வெவ்வேறானது. சில சமயங்களில் அவை உங்களுடன் ஒத்துப் போகும். சில சமயங்களில் உங்களுடன் ஒத்துப் போகாது. உங்களுடன் ஒத்துப் போகாமல் இருக்கும்போது நீங்கள் பொறுமை யைக் கடைப்பிடிக்க வேண்டும். ஏனெனில், அது உங்களுடன் ஒத்துப் போகும்போது மற்றவர்களுடன் ஒத்துப்போகாமல் இருக்கலாம். அப்போது அவர்கள் பொறுமையாக இருக்க வேண்டும். நான் பல பேருக்காகப் பேசுகிறேன். நான் உங்களுக்காக உங்களுடன் மட்டும் பேசவில்லை. நான் லட்சக்கணக்கான இங்கில்லாதவர் களுக்காகவும் பேசுகிறேன். அவர்களையும் இந்த வார்த்தைகள் அடையும்.

சில சமயங்களில் விஷயங்கள் மிகக் கடினமாக, அணுகவே முடியாத அளவுக்குத் தோன்றுமேயானால் பொறுமையாக இருங்கள். கவனியுங்கள். ஒருவேளை

உங்களது இதயம் நடனமாடாமல் இருக்கலாம். ஒருவேளை அது இதயத்தைவிட இன்னமும் மேன்மையானதாக அல்லது ஆழமாக இருக்கலாம்.

தலைக்குப் பொருத்தமானதாகச் சில விஷயங்களும், இதயத்துக்குப் பொருத்தமானதாகச் சில விஷயங்களும், சில விஷயங்கள் இதற்கெல்லாம் அப்பாற்பட்டதாகவும் இருக்கலாம். இவை அப்பாற்பட்ட வகையைச் சார்ந்தவை. அப்பாற்பட்டது என்பதே கடினமானது. உங்களுக்குத் தலைக்கு உகந்தவை சிலவற்றைத் தெரியும். இதயத்துக்கு உகந்தவை சிலவற்றைத் தெரியும். ஆனால், இதற்கெல்லாம் அப்பாற்பட்டு இருப்பவை தெரியாது.

ஆனால், இந்த வார்த்தைகள் அபூர்வமானவை. வைர சூத்திரம் என்பதே வைரம்தான். உலக இலக்கியங்களிலேயே மிகவும் மதிப்பு வாய்ந்தவை. யாருமே இது போன்று பேசியதில்லை. யாரும் இந்த அளவுக்கு உயரமாகப் போனதில்லை. ஆனால், உங்களால் இந்த அளவுக்கு உயரமாக போக முடியாதென்றாலும் உங்களை மூடிக் கொள்ளாதீர்கள். சிரத்தை கொள்ளுங்கள். முயற்சி செய்யுங்கள். நீங்கள் சிறிது தூரமே செல்ல முடிந்தாலும் கூட அதை இப்போதே செல்லுங்கள். நீங்கள் தெரியாததை நோக்கிச் சில அடிகளே எடுத்து வைக்க முடியும் என்றாலும் கூட அதுவும் உங்களை வளப்படுத்தும்.

இன்றைக்கு இது போதும்.

எனது அன்பான ஓஷோ,
பிரசித்தி பெற்ற குருமார்கள் எல்லாமே
கிழக்கிலிருந்தே வந்திருக்கிறார்களே, ஏன்?

ஏனெனில் மானுடம் இன்னும் முழுமை பெறவில்லை. கிழக்கு உள்முகமாக இருக்கிறது. மேற்கு என்பது தனக்கு வெளியே காணும் குணம் உள்ளதாக (Extrovert) இருக்கின்றது. மனிதன் பிளவுபட்டிருக்கிறான். மனம் நோய் கொண்டதாக இருக்கிறது. அதனால்தான் பிரசித்தி பெற்ற குருமார்கள் எல்லாருமே கிழக்கிலிருந்தும் அறிவியல் விஞ் ஞானிகள் அனைவருமே மேற்கிலிருந்தும் வருகிறார்கள். மேற்கு என்பது அறிவியலில் வளர்ச்சியடைந்து ஆத்மாவை அறவே மறந்ததாக இருக்கிறது. அது ஜடத்தைப் பற்றிக் கவலைப்படுகிறது. உள்ளிருக்கும் குணத்தை மறந்து போனதாக இருக்கிறது. முழுமையுமே இலக்கை நோக்கியே இருக்கிறது. அதனாலேயே பெரிய அறிவியல் வல்லுநர் களெல்லாம் மேற்கிலிருந்தே பிறக்கிறார்கள்.

கிழக்கு என்பது அளவுக்கதிகமாகவே அந்தராத்மாவைப் பற்றிக் கவலைப்பட்டு இலக்கை, பொருளை, உலகை மறந்து விட்டது. மகத்தான குருமார்கள் இதிலிருந்துதான் வளர்ந்தார்கள். ஆனால், இது நல்ல சூழ்நிலையல்ல. இது இப்படி இருக்கவும் கூடாது. மனிதன் ஒருமையுடைய

வனாக வேண்டும். மனிதன் சிறு சிறு கிளைகளாகி விடுவதற்கு இனிமேலும் அனுமதிக்கக் கூடாது. மனிதன் நீரைப்போல இருக்க வேண்டும். உள்ளுக்குள் சுருங்கியோ, வெளியே மட்டும் சிந்திப்பவனாகவோ இருக்கக்கூடாது. மனிதன் இந்த இரண்டாகவும் ஒரே சமயத்தில் இருக்க வேண்டும். உள்ளேயும் வெளியேயும் சமநிலையில் இருக்கும்போது மகத்தான பரவச அனுபவம் கிடைக்கிறது.

ஒரு மனிதன் உள்ளுக்குள்ளேயே அதிகம் சாய்ந்து விடாமல், அதே சமயம் வெளியே மட்டும் சாராதவனாக வும் இருக்கும்போது மட்டுமே சமநிலையில் இருக்க முடியும். அவன் ஓர் அறிவியல் வல்லுநராகவும், அதே சமயம் ஆன்மிகவாதியாகவும் இருக்க முடியும். அதுவே நடக்கும். அதுவே நடக்கப் போகிறது. நாம் அதற்கான நிலைக்களனை உருவாக்குகிறோம். நான் கிழக்கைச் சாராமல் அதே சமயம் மேற்கிலும் சாராமல் இருக்கும் ஒரு மனிதனைத்தான் பார்க்க விரும்புகிறேன். ஏனெனில், கிழக்கை எதிர்க்கும் மேற்கு அசிங்கமாக இருக்கிறது. மேற்கை எதிர்க்கும் கிழக்கும் மறுபடியும் அழகற்றதாக இருக்கிறது. இந்தப் பூமி முழுவதும் நமக்குச் சொந்த மானது. நாம் இந்தப் பூமி முழுவதற்கும் சொந்தமாக இருக் கிறோம். ஒரு மனிதன் மனிதனாக இருக்க வேண்டும். ஒரு மனிதன் மனிதத்துவம் நிறைந்தவனாக இருக்க வேண்டும் முழுமையாக, மொத்தமாக இந்த முழுமையிலிருந்துதான் ஒரு புதிய ஆரோக்கியம் எழும்.

கிழக்கும் அவதிப்பட்டிருக்கிறது. மேற்கும் அவதிப் பட்டிருக்கிறது. கிழக்குச் சிரமப்பட்டுக் கொண்டிருப்பதை உங்களைச் சுற்றிப் பார்த்துக்கொண்டிருக்கிறீர்கள். ஏழ்மையை, வறுமையைப் பார்க்கிறீர்கள். மேற்கும் சிரமப் பட்டிருக்கிறது. நீங்கள் மேற்கின் மனத்தினுள், பதற்றத்தை, மனக்கவலையை, கோபத்தைக் காணலாம். மேற்கு

மனத்தளவில் மிகவும் ஏழ்மையாக இருக்கிறது. கிழக்கு வெளித்தோற்றத்தில் ஏழ்மையாக இருக்கிறது. ஏழ்மை மிகக் கொடுமையானது. உள் அல்லது வெளி என்பதற் கிடையே அதிக வித்தியாசமில்லை. ஏழ்மை என்பதை அனுமதிக்க முடியாது. மனிதன் வளமாக இருக்க வேண்டும். உள்ளேயும் வெளியேயும் இரண்டிலுமே வள மாக இருக்க வேண்டும். மனிதன் எல்லாப் பரிமாணங்களி லுமே வளமாக இருக்க வேண்டும்.

ஒரு மனிதன் ஒரே சமயத்தில் ஆல்பர்ட் ஐன்ஸ்டீனாக வும் கௌதமபுத்தராகவும் இருப்பதாக யோசித்துப் பாருங்கள். அது போன்ற சாத்தியத்தில் தியானம் செய்து பாருங்கள். அது சாத்தியமானதே. ஒரு வேளை ஆல்பர்ட் ஐன்ஸ்டீன் சிறிது காலம் அதிகமாக வாழ்ந்திருந்தாரா னால், அவர் ஆன்மிகவாதியாகத்தான் மாறி இருப்பார். அவர் உள்மனத்தைப் பற்றி யோசிக்க ஆரம்பித்துவிட்டார். அவருக்கு உள்ளே இருக்கும் மர்மத்தைப் பற்றி ஆர்வம் மிகுதியாக ஆரம்பித்துவிட்டது. எத்தனை காலம்தான் வெளி மர்மங்களைப் பற்றியே ஆர்வம் இருக்கும்? நீங்கள் உண்மையிலேயே மர்மத்தைப் பற்றி ஆர்வம் காட்டுபவ ராக இருப்பின், சீக்கிரமாகவோ அல்லது தாமதமாகவோ நீங்கள் உள்மனத்தைக் கண்டு திகைத்து நிற்பீர்கள்.

என்னுடைய கொள்கை என்னவெனில், கிழக்குமற்ற தாக மேற்குமற்றதாக இருப்பதே. உள்ளே மட்டும் பார்ப்ப தாகவோ அல்லது வெளியே மட்டும் பார்ப்பதாகவோ இல்லாமல் இருப்பதே. இதுவே சமமானதாக, முழுமை யானதாக இருக்கும். ஆனால், கடந்த காலத்தைப் பொருத்தவரை இப்படியில்லை. அதனால்தான் உங்களது கேள்வி அர்த்தமுள்ளதாக இருக்கிறது.

"எல்லா மதக் குருமார்களும் கிழக்கிலிருந்து மட்டுமே வந்திருக்கிறார்கள், ஏன்?" என்று நீங்கள் கேட்டிருக்கிறீர்

கள். ஏனெனில் கிழக்கு வெளியேயும் பார்க்கவேண்டும் என்பதற்கு மாறாக உள்ளே மட்டும் பார்ப்பது என்பதிலேயே இருந்திருக்கிறது. இயற்கையாகவே பல நூற்றாண்டுகளாக உள்மனம் மட்டுமே உங்களை ஆக்கிர மித்துக் கொண்டிருக்கிறது. நீங்கள் ஒரு புத்தரை, ஒரு நாகார்ஜுனரை, ஒரு சங்கரரை, கபீரை உருவாக்குவீர்கள். இது இயற்கையானது.

உள்மனம் மட்டும் உங்களை ஆக்ரமித்திருப்பதற்கு மாறாக வெளியேயும் கவனம் செலுத்தியிருப்பீர்களே யானால் ஆல்பர்ட் ஐன்ஸ்டீனை, ஓர் எட்டிங்டனை, ஓர் எடிசனை உருவாக்கியிருப்பீர்கள். அது இயற்கை. ஆனால் அது மனித வர்க்கத்துக்கு முழுமையாக நோக்கும்போது நல்லதல்ல. ஒரு மனிதன் உள்மனத்தளவில் வளர்ந்தும் வெளியே வளரவில்லையெனில், வெளியே அவன் விடலைப் பையனாகவே தோற்றமளிப்பான். வெளியே முட்டாளாகவே காட்சியளிப்பான். அதே போல ஒரு மனிதன் வெளியே நன்றாக வளர்ந்து முதிர்ச்சியடைந்த பின்னரும்கூட, மிகவும் முதிர்ச்சியடைந்த பின்னரும் கூட கணிதவியலில், பௌதிகத்தில், ரசாயனத்தில் விற்பன்ன னாக இருப்பினும், உட்புறம் இன்னும் பிறக்கக் கூட வில்லையெனில், இன்னும் கர்ப்பப்பையிலேயே இருப்பின் இதே போலத்தான் முடியும்.

இதுவே எனது செய்தி. இந்த அரைக்கோளத்தை விட்டு விடுங்கள். கிழக்கையும் மேற்கையும் இந்த உள்வெளி என்ற அரைக்கோளத்தையும் விட்டுவிடுங்கள். நீரைப் போல மாறுங்கள். தேக்கமடையாமல் நகருங்கள். ஓடுங்கள். உங்க ளது வாழ்க்கையாக இருங்கள். உள்ளுக்கும், வெளிக்கும் எல்லாவற்றுக்கும் கிடைக்கும்படியாக இருங்கள்.

அதனால்தான் நான் அன்பையும், தியானத்தையும் கற்றுத் தருகிறேன். அன்பு என்பது வெளியே செல்வதற்கு

உதவும். தியானம் என்பது உள்ளே செல்வதற்கு. அன்பு செலுத்தி அதே சமயம் தியானமும் செய்யும் மனிதன் மனோவியாதிக்கு அப்பாற்பட்டவனாக இருப்பான். எல்லாவிதமான பிளவுகளுக்கும் அப்பாற்பட்டவனாக இருப்பான். அவன் ஒன்றுபட்டவனாக, ஒருங்கிணைக்கப் பட்டவனாக இருப்பான். உண்மையில் அவனுக்கு ஆன்மா இருக்கிறது.

எனது அன்பான ஓஷோ,
நீங்கள் திரும்பத் திரும்ப, ஒரு நாளைப் போல
ஒரே மாதிரி கேள்விகளுக்குப் பதில் சொல்லி,
சலிப்புக்கு மேல் சலிப்படைவதில்லையா?
நாங்கள் ஒரே இடத்தில் அமர்ந்து எங்கள்
காதுகளை மூடிக் கொண்டு, கண்களை மூடி,
வாய் மௌனமாகி, எப்போதுமே செய்தியை
அடைய முடிவதில்லை. அல்லது பதில்களே
இல்லையா? தாங்கள் தொடர்ச்சியாக
அதிகாலைப் பனித்துளி போன்ற புத்தம் புதிய
பதில்களை அளிக்கிறீர்கள். இருந்தும் கூட வெகு
சில கணங்களைத் தவிர, கண்
தெரியாதவனாகவும், காது கேளாத வனாகவும்,
திருப்தியடையாதவனாகவும் நான் இருந்து
வருகிறேன்.

முதல் விஷயம்: நான் இல்லை. அதனால் என்னைச் சலிப்படைய வைக்கவோ அல்லது சோர்வடைய வைக்கவோ முடியாது. சலிப்படைய முதலில் நீங்கள் அங்கு இருக்க வேண்டும். நீங்கள் அதிகமாக நீங்களாக இருக்கும் போது அதிகமாகச் சலிப்படைந்துவிட்டதாக உணர்வீர்கள். நீங்கள் அளவில் குறைவாக நீங்களாக இருக்கும்போது குறைவாகவே சலிப்படைவீர்கள். அதனாலேயே குழந்தைகள் வயதானவர்களைவிடக் குறைவாகவே

சலிப்படைகின்றனர். அதை நீங்கள் கவனித்திருக்கிறீர்களா? குழந்தைகள் பெரும்பாலும் சலிப்படைவதேயில்லை. அவர்கள் அதே பொம்மைகளுடன் திரும்பத் திரும்ப விளையாடிக் கொண்டேயிருக்கிறார்கள். அவர்கள் வண்ணத்துப்பூச்சிகளின் பின்னே தொடர்ந்து ஓடிக் கொண்டேயிருக்கிறார்கள். அதே கிளிஞ்சல்களைத் தேடிச் சேகரித்துக் கொண்டேயிருக்கிறார்கள். அவர்கள் சலிப் படைவதேயில்லை.

நீங்கள் எப்போதாவது குழந்தைகளிடம் கதை சொல்லி யிருக்கிறீர்களா? கவனித்துக் கேட்ட பின்னர் அவர்கள், "மறுபடியும் சொல். அந்தக் கதையை மறுபடியும் சொல். அது எனக்கு மிகவும் பிடிக்கும்" என்று சொல்வார்கள். ஏன்? அந்தக் குழந்தைக்குச் சலிப்பே ஏற்படுவதில்லை! ஏனெனில் அவனாக இருப்பதில்லை. அல்லது அவன் ஆரம்ப நிலையிலேயே அகந்தை உருவாகாத கட்டத்தில் இருக்கிறான். அகந்தை என்பதுதான் சலிப்பு ஏற்படக் காரணமாக உள்ளது.

மிருகங்கள் சலிப்படைவதில்லை. மரங்கள் சலிப்படைவ தில்லை. மரங்களின் வாழ்க்கையில் அல்லது மிருகங்களின் வாழ்க்கையில் என்ன புதுமை இருக்கப்போகிறது? ரோஜாச் செடிகள் வருடாவருடம் அதே போன்ற ரோஜா மலர்களை உற்பத்தி செய்து கொண்டே இருக்கின்றன. பறவைகள் ஒவ்வொரு காலையும் அதே சங்கீதத்தை இசைத்தபடி இருக்கின்றன. குயில்களுக்குப் பலவிதமான சங்கீதக் குறிகள் தெரியும் என்று சொல்ல முடியாது. அவற்றுக்கு ஒரே கீதம்தான் தெரியும். அவை அவற்றையே திரும்பத்திரும்ப ஒரே மாதிரிதான் பாடிக்கொண்டிருக் கின்றன. ஒரு மிருகம்கூடச் சலிப்படைவதில்லை. ஒரு மரம்கூடச் சலிப்படைவதில்லை. இயற்கைக்குச் சலிப்பு என்றாலே என்னவென்று தெரியாது. ஏன்? ஏனெனில் இயற்கைக்கு இன்னும் அகங்காரம் ஏற்படவில்லை.

ஒரு புத்தர் சலிப்படைந்ததில்லை. ஓர் இயேசு சலிப் படைந்ததில்லை. ஏனெனில், அவர்கள் அகங்காரத்தைக் கைவிட்டு விட்டனர். இயற்கையாகவே அவர்களுக்கு அது எழவில்லை. புத்தர் அதை விட்டுவிட்டார். புத்தரும் இயற்கையும் பெரும்பாலாக ஒன்றே. நான் பெரும்பாலும் என்று சொல்கிறேன். ஏனெனில் ஒரே ஒரு வித்தியாசம் இருக்கிறது– மிக முக்கியத்துவம் வாய்ந்தது– ஆனால் ஒரே ஒரு காரணம்தான். வித்தியாசம் பிரக்ஞை. இயற்கை அகங்காரம் என்பது இல்லாமல் இருக்கிறது. ஆனாலும், அதைப் பற்றிய பிரக்ஞையும் அதற்குக் கிடையாது. புத்தருக்கும் அகங்காரம் என்பது கிடையாது. ஆனால், அவருக்கு அதைப்பற்றிய பிரக்ஞை உண்டு.

நீங்கள் ஒரு முறை நீங்களில்லையென்று கண்டு கொண்டால், யார் உங்களைச் சலிப்படையச் செய்ய முடியும். யாரால் உங்களைச் சோர்வடையச் செய்ய இயலும்? அதனால்தான் ஒவ்வொரு காலையும் நான் இங்கு வந்து உங்களது கேள்விகளுக்குப் பதில் சொல்லி விட்டுச் சென்று கொண்டிருக்கிறேன். நான் சலிப்படை வதேயில்லை. என்னைச் சலிப்படைய வைக்கவே முடியாது. பெரும்பாலும் இந்த இருபத்தைந்து வருடங்களாக நான் சலிப்பை ருசித்ததே கிடையாது. நான் அதன் சுவையையே கூட மறந்துவிட்டேன். அது எப்படி இருக்கும்?

இரண்டாவதாக, இவை ஒரே கேள்விகள் அல்ல. அவை ஒன்றாக இருக்க முடியாது. அவை இரண்டு வெவ்வேறு மனிதர்களிடமிருந்து வந்தவை. அவை எப்படி ஒரே கேள்வியாக இருக்க முடியும்? ஆமாம். சில நேரங்களில் வார்த்தைகள் ஒன்று போலத் தோன்றினாலும் கேள்விகள் ஒன்று அல்ல. இரண்டு மனிதர்கள் ஒருவரிலிருந்து மற்றவர் முற்றிலும் வேறு மனிதராக இருக்கும்போது, கேள்விகள் எப்படி ஒன்றாக இருக்க முடியும்? அவை அமைக்கப்பட்ட விதம்கூட ஒன்றாக இருக்கலாம். இருப்பினும் நான், நீங்கள்

நினைவுபடுத்திக்கொள்ள விரும்புகிறேன். அவை ஒரே கேள்விகள் அல்ல.

இப்போது இந்தக் கேள்வி ஆனந்த் ஷைலாவினால் கேட்கப்பட்டது. வேறு எவரும் கேட்க முடியாது. இந்தப் பரந்த பூமியில் இருக்கும் வேறு எவராலும் இந்தக் கேள்வியைக் கேட்க முடியாது. இந்தக் கேள்வியைக் கேட்பதற்கு ஷைலாதான் தேவைப்படுகிறது. ஷைலா என்பது இவர் ஒருவர்தான். பல ஷைலாக்கள் இருக்க முடியாது.

ஆகவே நினைவில் வையுங்கள், ஒவ்வொரு மனிதனுக்கும் அவனுக்கென்று பிரத்தியேகத் தன்மை இருக்கிறது. அவை ஒரே கேள்விகள் என்று சொல்வது அவமானப் படுத்துவதாகும். நான் உங்களது கேள்விகளை மதிக்கிறேன். அவை ஒன்றல்ல. அவற்றுக்கென்று நுண்ணிய அழகுகள் இருக்கின்றன. தனியாக அவற்றுக்கென்று நிறங்கள் இருக் கின்றன. ஆனால், வித்தியாசங்கள் கூர்ந்து பார்ப்பதற் கென்று உங்களுக்குக் கண்கள் வேண்டும். இல்லையெனில் அவற்றை நீங்கள் பார்க்க முடியாது.

நீங்கள் உங்களைச் சுற்றி இருக்கும் மரங்களைப் பார்த்து அவை பச்சை நிறத்தில் இருப்பதாகக் கருதினால், அவை எல்லாமே ஒரு விதமான பச்சை நிறத்திலா இருக்கின்றன? அதன்பின் உங்களுக்கு நிறங்களை எப்படிப் பார்ப்பது என்று தெரியவில்லை என்று பொருள். ஓர் ஓவியனை அழைத்து வந்து அவனிடம் கேளுங்கள். அவன் சொல்லு வான்: "அவை பலவிதப் பச்சைகள். ஆயிரக்கணக்கில் பச்சை நிறங்கள் உள்ளன. பலவித நுண்ணிய அழகுடன். எந்த இரண்டு மரமும் ஒரே விதமான பச்சை நிறத்தில் இருப்பதில்லை.'' உங்களைச் சுற்றிப் பார்த்த பின்பு நீங்களும் சொல்வீர்கள், "ஆமாம். ஒவ்வொரு பச்சையும் ஒவ்வொரு விதமான பச்சைதான்" என்று.

இதே போன்றுதான் கேள்விகளும். ஒரே நபர் ஒரே விதமான கேள்வியைப் பல தடவை கேட்டாலும்கூட அவை ஒரே கேள்விகள் அல்ல. ஏனெனில், நீங்கள் மாறிக்கொண்டே இருக்கிறீர்கள். எதுவுமே ஒரே இடத்தில் இருப்பதில்லை. நீங்கள் அதே நதியில் இரண்டு முறை காலை வைக்க முடியாது. நீங்கள் அதே மனிதனைத் திரும்ப பார்க்க முடியாது. ஷைலாவினால் அந்தக் கேள்வியை நாளைக்குக் கேட்க முடியாது. ஏனெனில் நாளைக்கும் இதே மனிதன் இருக்க முடியாது. கங்கை ஓடிக்கொண்டே இருக்கிறது. நிறைய நீர் கீழே ஓடிவிட்டிருக் கும். இந்தக் கணத்துக்கு இது பொருத்தமாக இருக்கிறது. நாளைக்கு இதுவே பொருத்தமாக இருக்காது. நமது பிரக்ஞையில் வேறு ஏதாவது மேலெழும்.

எந்த இரண்டு மனிதர்களாலும் ஒரே கேள்வியைக் கேட்க முடியாது. ஒரே மனிதனாலும்கூட அதே கேள்வியைக் கேட்க முடியாது. ஏனெனில், அந்த மனிதன் மாறிக்கொண்டே இருக்கிறான். ஒரு மனிதன் தீ ஜுவாலை யைப் போன்றவன். எப்போதும் மாறிக் கொண்டேயிருப் பான். ஆனாலும், நீங்கள் எப்போதுமே உங்களது கேள்வியை நோக்க வேண்டும். நான் ஒரே மாதிரியான கேள்வியைக் கேள்விப்பட்டதில்லை. நான் எப்போதுமே உங்களது கேள்வியைக் கண்டு பிரமிக்கிறேன். நீங்கள் எப்படி இது போன்ற கேள்விகளைக் கேட்க சாத்திய மாகிறது என்று ஆச்சரியப்படுகிறேன்.

"நீங்கள் திரும்பத் திரும்ப, ஒரு நாளைப் போல ஒரே மாதிரி கேள்விகளுக்குப் பதில் சொல்லிச் சலிப்புக்கு மேல் சலிப்படைவதில்லையா? நாங்கள் ஒரே இடத்தில் அமர்ந்து எங்கள் காதுகளை மூடிக்கொண்டு, கண்களை மூடி, வாய் மௌனமாகி, எப்போதுமே செய்தியை அடைய முடிவ தில்லை. அல்லது பதில்களே இல்லையா? தாங்கள் தொடர்ச்சியாக அதிகாலைப் பனித்துளி போன்ற புத்தம்

புதிய பதில்களை அளிக்கிறீர்கள். இருந்தும்கூட வெகு சில கணங்களைத் தவிர நான் கண் தெரியாதவனாகவும், காது கேளாதவனாகவும் திருப்தியடையாதவனாகவும்தான் இருந்து வருகிறேன். ஒருவேளை பதில்களே இல்லையா?"

நீங்கள் "காதுகளைப் பொத்தியபடி, வாய் ஊமையாகி, கண்களை மூடியபடி, எந்தச் செய்தியும் கேட்காது உட்கார்ந்திருக்கிறீர்கள்." இது எனக்கு ஒரு சவாலாக இருக்கிறது. இது ஒரு பெரிய சாகசம். நீங்கள் தொடர்ந்து கொண்டிருக்கிறீர்கள். நானும் தொடர்ந்து கொண்டிருக் கிறேன். இப்போது கேள்வி என்னவெனில், யார் வெற்றி யடையப் போகிறார்கள்? நீங்கள் தொடர்ந்து மூடியபடியே இருக்கப் போகிறீர்களா? அல்லது என் மீது கருணை கொண்டு என்றாவது ஒருநாள் என்னைக் கவனிக்கப் போகிறீர்களா? உங்களது காதுகளையும் மனத்தையும் திறந்து வைத்துக் கொண்டு கொஞ்சமாவது, கவனிக்கப் போகிறீர் களா? அது ஒரு போராட்டம். அது குருவுக்கும் அவரது சீடருக்கும் நடக்கும் மல்யுத்தம்தான். நிரந்தரமான சண்டை.

சீடன் நிச்சயம் வெற்றியடைய முடியாது. இதுவரையில் சீடன் வெற்றியடைந்ததாகக் கேள்விப்பட்டதில்லை. அவன் தள்ளிப் போடலாம். அவன் தாமதப்படுத்தலாம். ஆனால் நிச்சயம் வெற்றியடைய முடியாது. நீங்கள் மேலும் மேலும் தாமதப்படுத்தும்போது உங்களது தோல்வி மேலும் மேலும் நிச்சயமாக்கப்படுகிறது. நான் உங்களைப் பல வழிகளில் ஆக்கிரமிக்கிறேன். நீங்கள் அங்கேயே காதுகளை மூடி, வாய் பொத்தி, இதயத்தை மூடிக்கொண்டு அமர்ந்திருக்கிறீர்கள். அவ்வளவுதான். நீங்கள் அங்கேயே இருங்கள். சீக்கிரமாகவோ அல்லது தாமதமாகவோ ஒருநாள் எனது செய்தியைக் கேட்டுக்கொண்டிருப்பீர்கள்.

நீங்கள் எவ்வளவு காலம் மூடியபடியே இருப்பீர்கள்? சிலர் சொல்கிறார்கள்: ஒரு மனிதன் தன்னுடைய முட்டாள்தனத்திலேயே தொடர்ந்தால் அவன் புத்திசாலியாகிவிடுகிறான் என்று என்றாவது ஒருநாள் நீங்கள் கவனிப்பீர்கள், கேட்பீர்கள். அதனாலேயே வருடக் கணக்காக ஒவ்வொரு நாள் காலையிலும் உங்களுடன் பேசிக் கொண்டேயிருக்கிறேன்.

நீங்கள் சொல்கிறீர்கள்: "எங்களுக்குச் செய்தியே கிடைப்பதில்லை. ஒருவேளை பதில்களே இல்லையோ" என்று. உங்கள் மனத்தில் கேள்விகளே இல்லாதபோதுதான் பதில்கள் கிடைக்கும். அதற்கு முன்பாக அல்ல. உங்களிடம் கேள்விகள் இருக்கும்போதே, பதில்கள் இல்லையென்ற செய்தி எப்படிக் கிடைக்கும்? ஒவ்வொரு பதிலையும் முந்திக் கொண்டு ஒரு கேள்வி எழும். பதில்களைத் தேடுவதே கேள்விகள்தாம். கேள்விகள் எழும்போதே பதில்கள் இருக்கின்றன என்ற நம்பிக்கையில்தான். அப்படி யில்லையெனில் கேள்விகள் எப்படி எழும்? கேள்விகள் தனக்குத்தானே உருவாக முடியாது. அவை பதில்கள் இருக்கும் சாத்தியத்தில்தான் அல்லது பதில்களைச் சார்ந்தே எழுகின்றன.

ஒருநாள் உங்களது மனத்தில் கேள்விகளே எழாத நிலை ஏற்படும்போது, அப்போதுதான் பதில்களே இல்லை என்ற செய்தி உங்களுக்கு வந்து சேரும். அன்றுதான் நீங்கள் கேட்கவும் இல்லை. நான் பதில் சொல்லவுமில்லை என்ற நிலையைக் காணுவீர்கள். அப்போது முழுமையான மௌனம் நிலவும். கேள்விகள் கேட்பதும், பதில்கள் சொன்னதும் எல்லாமே கனவு நிலைபோலத் தோன்றும்.

ஆனாலும் நீங்கள் கேள்விகள் கேட்பதினால் நானும் பதில் சொல்ல வேண்டும். இது ஒன்றுதான் உங்களது கேள்விகளை உங்களிடமிருந்து விடுவிப்பதற்கான முயற்சி

யாக அமையும். நினைவில் வையுங்கள். எனது பதில்கள் எல்லாமே பதில்களல்ல. அவை சாதனங்கள்தாம். எனது பதில்கள் எல்லாமே உங்களது கேள்விகளுக்கான பதில்கள் சொல்லும் முயற்சியல்ல. ஏனெனில், கேள்விகளே இல்லை என்று எனக்குத் தெரியும்.

எல்லாக் கேள்விகளுமே மாயைதான். அவற்றை நீங்கள் கனவு கண்டிருக்கிறீர்கள். நீங்கள் என்னிடம் கேட்கும் போது நான் உங்களை மதிக்கிறேன். நான் பதில் சொல்கிறேன். எனது பதில்கள் நான் உங்களை மதிப்பதற்கான புற அடையாளங்களே. எனது பதில்கள், சாதனங்களே. அவை உங்களது கேள்விகள் கொஞ்சம் கொஞ்சமாக மறைவதற்கு உதவியாக இருக்கும்.

திடீரென்று ஒருநாள் நீங்கள் கேள்விகளே இல்லாமல் விழித்தெழுவீர்கள். அன்று நான் உங்களது ஒரு கேள்விக்குக் கூடப் பதில் சொல்லவில்லை என்று புரிந்து கொண்டிருப்பீர்கள். எந்தக் கேள்விக்கும் பதில் சொல்ல முடியாது. ஏனெனில் ஒரு கேள்விகூட இருந்ததில்லை. கேள்விகளே இல்லாமல்தான் வாழ்க்கை வாழ்ந்து கொண்டிருக்கிறது. அது ஒரு மர்மம். அது ஒரு பிரச்சினையல்ல, தீர்த்து வைக்க முயல்வதற்கு. அது ஒரு மர்மம். அந்த மர்மத்தை நாம் நேசிக்க வேண்டும். அந்த மர்மத்தை வாழ வேண்டும்.

ஷைலா சொல்கிறார்: "தாங்கள் தொடர்ச்சியாக அதிகாலைப் பனித்துளி போன்ற புத்தம் புதிய பதில்களை அளிக்கிறீர்கள். இருந்தும்கூட வெகு சில கணங்களைத் தவிர நான் கண் தெரியாதவளாகவும், காது கேளாதவளாகவும், திருப்தியடையாதவளாகவும்தான் இருந்து வருகிறேன்."

அந்தச் சில கணங்களே போதுமானது. அந்தச் சில கணங்கள்தாம் நம்பிக்கை தருகின்றனவே. அந்தச் சில கணங்கள்தாம் உங்களுக்குள் செல்லும். அந்தச் சில

கணங்கள் மெல்ல மெல்லப் பெரியதாகும். ஒரு நாள் அந்தச் சில கணங்கள் உங்களை வெற்றி கொண்டிருக்கும். ஒரே ஒரு கணம் என்னுடன் தொடர்பு கொண்டிருந்தாலும் கூட அது போதுமானது. அது தேவைக்கு மேல். அந்தச் சிறிய உள்பிரகாசம் உங்களுக்குள் ஒரு நெருப்புப் பொறியை உருவாக்கும். அந்தத் தீப்பொறி உங்களது மனத்தை முழுமையாக எரிக்கும். வேர்வரை பொசுக்கும்.

> எனது அன்பான ஓஷோ,
> நான் இந்தப் புத்த சூத்திரத்தை மகிழ்ச்சியுடன் அனுபவிக்க முடியவில்லை. இவை மிகவும் கடினமாக, குழப்பமாக இருக்கின்றன. உண்மை என்பது மிகவும் எளிமையானது இல்லையா?

உண்மை எளிமையானது. உண்மை கடினமானது. உண்மையில் அது கடினமானது. ஏனெனில் அது மிகவும் எளிமையானது. உங்கள் மனம் குழப்பமானதாக உங்களால் புரிந்துகொள்ள முடியாத அளவுக்கு இருக்கிறது. அதனைத் தொடர்ச்சியாக இழக்கிறீர்கள். அது உங்களுக்கு சவாலாக இருப்பதில்லை. அது மிகவும் எளிமையாக நீங்கள் அதனைக் கடந்து செல்லும்போது, அதனைக் கடந்து செல்கிறோம் என்று கூடத் தெரியாத அளவுக்கு எளிமையாக இருக்கிறது.

உண்மை எளிதானது. ஏனெனில் அது வெளிப்படையானது. ஆனால், எளிதானது என்பதற்காக அது சுலபமானது என்று பொருளல்ல. எளிமையே மிகவும் சிக்கலானதுதான். நீங்கள் அதனுள் நுழைந்தால் நீங்கள் காணாமல் போய்விடுவீர்கள். நீங்கள் மறுபடியும் திரும்புவது என்பதே இயலாமல் போகலாம். அந்த எளிமையே ஆழம் நிறைந்ததாகும். அது மேலெழுந்தவாரியானதல்ல. அந்த எளிமையை அடைய வேண்டுமானால்

நீங்கள் பல விஷயங்களை இழக்க வேண்டியதாக இருக்கும். பல விஷயங்களை இழப்பது என்பது இயலாத காரியம்.

உதாரணமாக, ஏன் இந்தப் புத்த சூத்திரங்கள் உங்களுக்கு மிகவும் கடினமானதாக இருக்கின்றன? ஏனெனில் அவை தர்க்க சாஸ்திரங்களுக்கு உட்படாதவை. நீங்கள் உங்கள் தர்க்க சாஸ்திரத்தை இழப்பீர்களேயானால், அவை மிகவும் எளிமையானதாக இருக்கும். இந்தக் கடினம் என்பதே உங்களது மனத்திலிருந்துதான் எழுகிறது. புத்தரது சூத்திரத்திலிருந்து எழுவதில்லை. அவர் மிகவும் எளிமையான மனிதர். அவர் உண்மையை எளிமையாக உரைக்கிறார். பிரச்சினை உங்களிலிருந்துதான் எழுகிறது. ஏனெனில், உங்களால் அந்த எளிமையான உண்மையை ஏற்றுக்கொள்ள முடிவதில்லை. நீங்கள் கருத்து வைத்துள்ளீர்கள்.. அந்தக் கருத்துகள் குறுக்கிடுகின்றன.

"இது எப்படிச் சாத்தியம்? இந்த மனிதர் சரியென்றிருந்தால் அதன்பின் எனது எல்லாத் தர்க்க நியாயமும் தவறாகிறதே" என்று சொல்வீர்கள். அதனை உங்களால் ஏற்றுக்கொள்ள முடியாது. உங்களது அனைத்துக் கல்வியும், பயிற்சியும், தர்க்க நியாயத்துக்குட்பட்டது. அவர் சொல்லும் எல்லாமே தர்க்க நியாயத்தை தகர்ப்பதாக இருக்கிறது. அவரால் வேறு எதுவும் செய்ய முடியாது. அந்த உயரத்தில், அந்தப் பூரண நிறைவில் தர்க்கம் என்பதே இல்லாது போய்விடுகின்றது. அவர் என்ன செய்வார்? அந்தப் பூரணத்துவத்தில் எல்லாமே முரண்பாடானவை போலிருந்தாலும் உண்மையானவையே. அந்தப் பூரண நிறைவில் எதிர்த் திசைகள் சந்தித்துக் கொள்கின்றன. முரண்பாடுகள் கூடப் பாராட்டுக்களாகி விடுகின்றன. அவர் என்ன செய்ய முடியும்? அவர் எல்லாவற்றையும் உறுதிப்படுத்தியாக வேண்டும். பிரச்சினை உங்களிலிருந்து தான் உருவாகின்றன. ஏனெனில், நீங்கள் அந்த உண்மைகள் எல்லாவற்றையுமே உங்களது தர்க்க நியாயத்துக்கு

ஏற்றபடியாக மொழியாக்கப்பட வேண்டும் என்று நினைக்கிறீர்கள்.

ஓர் உயர்நிலைப்பள்ளி மாணவன் பௌதிகப் பாடங்களைப் படிக்கும்போது, "நான் ஆல்பர்ட் ஐன்ஸ்டீனின் சூத்திரத்தை மறுதலிக்கிறேன்" என்று சொல்கிறான்.

"அதில் என்ன தவறு?" என்று கேட்கிறார் ஆசிரியர்.

"முதலில் அது மிகவும் சலிப்புத் தருவதாக இருக்கிறது. நீங்கள் அதனை எப்போது விளக்கினாலும் எனக்குத் தூக்கம் வரத் துவங்குகிறது. இரண்டாவதாக, அது சமநிலையில் இருப்பதாக இல்லை. அதனைப் பாருங்கள்.

'$E=mc^2$. அவர் எல்லா எண்களையும் சூத்திரத்தின் ஒரு பக்கத்திலேயே வரும்படியாக அமைத்துள்ளார். மூன்று எழுத்துகள் ஒரே பக்கத்தில் வரும்படியாக எழுதியுள்ளார். இது மிகவும் அழகில்லாததாக இருக்கிறது. ஒரே சீராக வரும்படியாக இந்த எண்களில் ஒன்றை இன்னொரு பக்கத்தில் வரும்படியாக ஏன் அமைக்கவில்லை? அதனால்தான் நான் வெறுக்கிறேன்."

இப்போது அவன் மிகவும் அழகான கேள்வி ஒன்றை எழுப்பியிருக்கிறான். சீராக இல்லையென்று. "இது எந்த விதமான சூத்திரம்? இரண்டு பக்கங்களிலும் சமமாக இல்லாமல். இது மிகவும் கலைநயமிக்கதாக இல்லை. ஓர் எழுத்தை இன்னொரு பக்கம் அமைப்பதன் மூலம் இந்த விஷயங்கள் எவ்வளவோ நன்றாக, இன்னும் சீராக இருக்குமே?"

அந்தப் பையன் தான் பேசுவது எதைப் பற்றி என்பதே தெரியாமல் பேசிக்கொண்டிருக்கிறான். ஆனால், அவன் பேசுவது எதுவாக இருப்பினும் அது தர்க்க நியாயத்துக்கு ஒத்ததாக இருக்கிறது. ஆனால் ஆல்பர்ட் ஐன்ஸ்டீனின் இந்தச் சூத்திரம் உங்களை மகிழ்விப்பதற்காக எழுதப்பட்ட

தில்லை. அது உண்மையை உணர்த்துவதற்காக உருவாக்கப் பட்டது. அது உங்களைச் சலிப்படையச் செய்வதாக இருப்பின் நீங்கள் மிகவும் மந்த மூளை உடையவராக, கூர்மையான உள்பிரகாசத்தைப் புரிந்து கொள்ளாதவராக இருக்கிறீர்கள் என்று பொருள். மொத்தம் பன்னிரண்டு பேர் மட்டுமே இந்த உலகத்தில் ஐன்ஸ்டீனின் இந்தச் சூத் திரத்தைப் புரிந்து கொண்டவர்கள் என்று கூறப்படுகிறது. பன்னிரண்டு பேர் மட்டுமே.

உண்மை எளிமையானது. ஆனால், அதனுள், அந்த விவரங்களினுள் புகுந்தால் அந்தக் கூர்மையான உண்மைக்குள் புகும்போதுதான் மிகவும் கடினமானதாகத் தெரிகிறது. எடுத்துக்காட்டாக, "நேரம் என்றால் என்ன வென்று எல்லோருக்கும் தெரிந்திருக்கிறது. எனக்கும் நேரம் என்றால் என்னவென்று தெரியும். ஆனாலும் யாராவது 'நேரம் என்றால் என்ன? எனக்கு விளக்க முயலுங்களேன்?' என்று என்னைக் கேட்டால், அப்போது பதில் சொல்ல முடியாது போவேன்" என்று துறவி அகஸ்டின் சொன்ன தாகச் சொல்வார்கள்.

உங்களுக்கு நேரம் என்றால் என்னவென்று தெரியும். நீங்கள் நேரத்தின்படி நடந்து கொள்வீர்கள். காலை ஆறு மணிக்கு எழுந்திருப்பீர்கள். இரவு பதினொரு மணிக்குப் படுக்கச் செல்வீர்கள். மதியம் ஒரு மணிக்கு உணவு எடுத்துக் கொள்வீர்கள். நீங்கள் அலுவலகத்துக்குச் செல்கிறீர்கள். வீட்டுக்குத் திரும்பி வருகிறீர்கள். நீங்கள் நேரத்தைப் பயன் படுத்துகிறீர்கள். உங்களுக்கு நேரம் என்றால் என்னவென்று தெரியும். ஆனால் அதனை உங்களால் விவரிக்க முடியுமா? அதனை விளக்க ஆரம்பிக்கும் நேரத்தில் உடனே அது முடியாததாகிப் போகிறது. நீங்கள் அதனைப் பார்த்ததே கிடையாது. நீங்கள் அதனை உங்கள் கையில் கண்டதே கிடையாது. அதனைப் புரிந்துகொள்ள முடியாது. அது என்ன?

அகஸ்டின் சரியானவர்தான். அதனை விளக்கத் துவங்கும்போதுதான் பிரச்சினை ஆரம்பிக்கிறது. ஒளி என்பது மிகவும் எளிமையானது. அது நம்மைச் சுற்றிலும் இருக்கிறது. மரங்களின் மீது நடனமாடிக் கொண்டிருக் கிறது. வானம் முழுவதுமே ஒளி வெள்ளம்தான். அதனை ஒரு பார்வையற்ற மனிதனிடம் விளக்க முயன்று பாருங் கள். அவன் உடனே, "நிறுத்துங்கள் இந்த அபத்தத்தை" என்றுதான் சொல்லுவான். முதலாக நீங்கள் அதனை வார்த்தையில் வடிப்பதற்கே சிரமப்படுவீர்கள். அல்லது ஒளியைப் பற்றிய கேள்வியை விடுங்கள். அது ஓர் அறிவியல் கேள்வி. உங்களுக்கு அதில் அக்கறையில்லாமல் இருக்கலாம்.

நீங்கள் காதலித்திருக்கிறீர்கள். உங்களுக்குக் காதல் என்றால் என்னவென்று தெரியும். நீங்கள் நிச்சயம் காதலித் திருப்பீர்கள். குறைந்தபட்சம் உங்களது தாயையாவது காதலித்திருப்பீர்கள். உங்களது தந்தையை, உங்களது சகோதரியை, ஏதாவது ஒரு பெண்ணை, உங்களது மனைவியை, உங்களது கணவரை, உங்களது குழந்தையை. உங்களால் காதல் என்றால் என்னவென்று விளக்க முடியுமா? கேட்டால் நீங்கள் ஊமையாக ஆகிவிடுகிறீர்கள். அதன்பின் திடீரென்று நீங்கள் உங்களது புத்திசாலித் தனத்தையெல்லாம் இழந்துவிடுகிறீர்கள், யாரோ ஒருவர் உங்களை இறக்க வைத்துவிட்டாற்போல, நீங்கள் முடக்கு வாதம் அடைந்தாற்போல. காதல் என்றால் என்ன? அதனை நீங்கள் விளக்க முடியுமா?

காதல் என்பது பெரும்பாலும் எல்லோருடைய அனுபவம். ஆனாலும், யாராலும் அதனை விளக்க முடிய வில்லை. நிர்வாணம் என்பது எல்லோருடைய அனுப வம் அல்ல. ஏதோ ஒரு சமயம் அந்த அனுபவம் ஏற்படு கிறது. ஆனால், புத்தர் நிர்வாணம் என்றால் என்னவென்று உங்களுக்கு விளக்க முற்படுகிறார்.

உண்மை என்பது எளிமையானது. ஆனால் அதனை விளக்க முற்படும் அதே கணத்தில் அது கடினமாகிப் போகிறது. ஆனால் நினைவில் கொள்ளுங்கள். நீங்கள் இங்குக் கேளிக்கைகளை அனுபவிப்பதற்காக மட்டும் வரவில்லை. நான் கேளிக்கைகளுக்கு எதிரானவனுமல்ல. அந்த நேரத்துக்கு என்று பார்க்கும்போது அது நல்லதுதான். ஆனால் கேளிக்கைகளை தாண்டியும் சில விஷயங்கள் தேவைப்படுகின்றன. அதுதான் ஞானம் எனப்படுகிறது. கேளிக்கை என்பது மிகவும் தாழ்ந்த நிலையில் இருக்கும் தேவையாகும். ஞானம் என்பது மிகவும் உயர்ந்த நிலையில் இருக்கும் ஒன்றாகும். நீங்கள் ஒரு கேளிக்கையிலிருந்து மற்றொன்றுக்கு என்று போய்க்கொண்டேயிருப்பீர்களேயானால் நீங்கள் ஒன்றுமே இல்லாதவராகிவிடுவீர்கள். நீங்கள் வளர்ச்சியடையவே மாட்டீர்கள். நீங்கள் முதிர்ச்சியடையாதவராகவே இருப்பீர்கள். சில நேரங்களில் நீங்கள் காதலின் ஆழத்தில், வாழ்க்கையின் ஆழத்தில், ஒளியின், கடவுளின் ஆழத்தில் செல்ல வேண்டியிருக்கும். சில நேரங்களில் எல்லையற்ற பரிபூரணத்தின் சுவையை அறியப் பறந்து செல்ல வேண்டியிருக்கும். அதுவே உங்களை முதிர்ச்சி அடைந்தவராகச் செய்யும்.

எனக்கு உங்களின் சிரமங்கள் புரிகின்றன. நீங்கள், “என்னால் இந்தப் புத்த சூத்திரத்தை மகிழ்ச்சியுடன் அனுபவிக்க முடியவில்லையே” என்கிறீர்கள். நீங்கள் இதை அனுபவிக்கக் கற்றுக்கொள்ளுங்கள். பின்னர் உயர்ந்த விஷயங்களை அனுபவிக்கக் கற்றுக்கொள்ளுங்கள். உயர்ந்த விஷயங்கள் இருக்கின்றன. நீங்கள் இந்திய சாஸ்திரிய சங்கீதத்தை அனுபவிக்க வேண்டுமெனில் அதைக் கற்றுக் கொள்ள வேண்டும். சாதாரணமாகச் சென்று நீங்கள் அதை அனுபவித்துவிட முடியாது. அதற்கென்று சில பிரத்தியேக ஏற்பாடுகள் செய்ய வேண்டியதாக இருக்கும். அதற்கு

ஆபாசமானதல்ல. அதற்கு உங்களுக்குள் சில புரிந்து கொள்ளுதல்கள் தேவைப்படுவதாயிருக்கின்றன. ஒலியைப் பற்றியும் அமைதியைப் பற்றியும் ஆழமான புரிந்து கொள்ளுதல் அவசியம். ஏனெனில், சங்கீதம் என்பதே ஒலியும் மௌனமும் சேர்ந்ததுதான். அது வெறும் ஒலி மட்டுமல்ல. மௌனமும் சேர்ந்ததுதான் அது.

சங்கீதத்தில் மேலும் மேலும் அமைதி நிலவும்போது தான் அது உயர்ந்த சங்கீதமாகிறது. அது உங்களின் அமைதியைத் தூண்டிவிடும்போது, உங்களது இதயத்தைத் துளைத்தெடுக்கும்போது, உங்களது மனம் மறைந்து போகும்போது, உங்களது எண்ணங்கள் நின்று போகும் போது... ஆனால், நீங்கள் அதனைக் கற்றுக்கொள்ள வேண்டும். அதற்கென்று சில கட்டுப்பாடுகளை மேற்கொள்ள வேண்டும். நீங்கள் தியானம் செய்பவராக மாறியாக வேண்டும். ஒரு நாள் உங்களால் இதனை யெல்லாம் அனுபவிக்க முடியும். ஆனால், இதனை இப்போதே அனுபவிக்க வேண்டும் என்று எண்ணுவீர்களே யானால் அதற்கு நீங்கள் தயாராக இல்லை எனில் அதற்கு என்னைக் குற்றம் சொல்லாதீர்கள்.

புத்தரின் சூத்திரங்கள் சலிப்படையச் செய்கின்றன என்று சொல்லாதீர்கள். உங்களால் அதன் நுணுக்கங் களைப் புரிந்துகொள்ளும் அளவுக்குச் சக்தியில்லை என்று சொல்லுங்கள். நீங்கள் அந்த உயரத்துக்குப் பார்க்கும் அளவுக்குச் சக்தியில்லாதவர்கள் என்று புரிந்துகொள்ளுங் கள். பிரக்ஞையின் எவரெஸ்டை ஏறும் அளவுக்குத் தகுதி பெறவில்லை என்று பொருள். புத்தர் அந்த உயரத்திலிருந்து பேசுகிறார். நீங்கள் அந்த அடர்ந்த, இருட்டான துவாரத்தி லிருந்து சற்றே வெளியே வர வேண்டும். நீங்கள் அந்த மலைகளை ஏறியாக வேண்டும். அதன்பின்தான் அந்தச் சூரிய ஒளியில் மின்னும் சூத்திரங்களைப் புரிந்துகொள்ள முடியும்.

இந்தப் புரிந்துகொள்ளுதலுக்கு நாம் தயாராக இல்லை. அது கடினம்தான் ஏனெனில். அதனால் சில நேரங்களில் நீங்கள் சலிப்படைகிறீர்கள். ஆனால் சலிப்புடன் சண்டையிடுங்கள். சலிப்பை அழியுங்கள். நீங்கள் அதற்கு வெளியே வந்து விடுங்கள். நீங்கள் புத்தருடனேயே செல்லுங்கள். நீங்கள் அவர் எதைப் பார்த்தார் என்பதைப் பாருங்கள். அதைப் பார்க்கும்போது நீங்கள் நிறைவடைவீர்கள்.

எனது அன்பான ஓஷோ,
நாம் ஏற்கெனவே வீடு திரும்பியாயிற்று என்பதில்
ஏற்படும் சந்தேகமே நாம் வீடு திரும்பிவிடாமல்
இருப்பதற்குத் தடையாக இருக்கிறதா? இதையே
நம்மைச் சுற்றியுள்ள எல்லோரும் திரும்பத்
திரும்பச் செய்து கொண்டிருக்கிறோமா?

ஆமாம், ஷோபா. இந்தச் சந்தேகம்தான் நம்மைத் தடுக்கிறது. நாம் எப்படி இருக்க வேண்டுமோ, அப்படி இல்லையோ என்ற அந்தச் சந்தேகம்தான். புனிதம் எப்படி நம்முடன் இருக்கமுடியும் என்ற சந்தேகம். இவையே தடுக்கிறது. கடவுள் எப்படி நம்முடன் இருக்க முடியும்? ஏனெனில், நீங்கள் கடவுள் எங்கோ ஏழாவது சொர்க்கத்தில், அவரது தங்கச் சிம்மாசனத்தில் அமர்ந்து கொண்டிருப்பதாக நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள். அவர் பல தேவதைகள் சூழ, தமது புல்லாங்குழலை இசைத்துக் கொண்டிருப்பதாக, சங்கீதம் பாடிக் கொண்டிருப்பதாக நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள்.

அவர் இங்கில்லை. அவர் எங்கோ தூரத்திலிருக்கிறார். அவர் மிகப் பெரியவர். அவர் பெரிய பரிமாணமுள்ளவர். அவர் எல்லையற்றவர். அவர் இப்படியாக இருக்கிறார், அப்படியாக இருக்கிறார் என்றால், அவர் எப்படி உங்களது இதயத்திலிருக்க முடியும்? உங்களது இதயம் அவ்வளவு சிறியது. அவர் எப்படி அதில் இருக்கமுடியும்? நீங்கள்

பயங்கரமானவர்கள். நீங்கள் அசிங்கமானவர்கள் என்று நீங்களே உங்களை ஓராயிரம் வழிகளில் புறக்கணித்துக் கொள்ளுகிறீர்கள். அவர் எப்படி அங்கு இருப்பார்? கடவுள் உங்களுள் இருந்தால் சாத்தான் எப்படி இருக்கும்? சந்தேகம்...

யாராவது கடவுள் உங்களுக்குள் இருக்கிறார் என்று சொன்னால் உங்களால் ஒப்புக்கொள்ள முடிவதில்லை. நீங்கள் அதைப் பல தடவை கேட்டிருக்கிறீர்கள். இயேசு பல தடவை, "கடவுளின் ராஜாங்கம் உங்களுக்குள் இருக்கிறது" என்று சொல்லியிருக்கிறார். ஆனாலும் கிறிஸ்தவர்கள்கூட அதைக் கவனிப்பதில்லை. அவரைப் பின்பற்றுபவர்கள்கூடக் கேட்பதில்லை. அவரை நெருங்கிப் பின்பற்றுபவர்கள்கூட எங்கோ சொர்க்கத்தில் இருக்கும் கடவுளைப் பற்றித்தான் கேட்டுக்கொண்டிருக்கிறார்கள். இயேசு கிறிஸ்து திரும்பத் திரும்ப, "அவர் உங்களுக்குள் இருக்கிறார்" என்று சொல்லிக்கொண்டிருக்கிறார். ஆனால் பதிலுக்குக் கடவுள் எங்கோ சொர்க்கத்தில் இருப்பதாகத் தான் சொல்லிக்கொண்டிருக்கிறார்கள். அவர்கள் திரும்பத் திரும்ப, "நாம் எல்லோரும் இறந்த பின்னர் எப்படிச் சொர்க்கத்தில் இருப்போம்? யார் கடவுளின் கையில் இருப்போம்? அங்கு நமது நிலை என்ன? யார் யாராக இருப்போம்? எந்த வரிசையில் இருப்போம்?" என்று கேட்டுக்கொண்டிருக்கிறார்கள். இயேசு, "அவர் உங்களுக் குள்ளேயேதான் இருக்கிறார்" என்று சொல்லிக் கொண்டே இருக்கிறார். யாரும் அதை நம்புவதில்லை. ஏனெனில், உங்களுக்கு உங்களை நம்புவதற்குக் கற்றுத் தரப்படவில்லை.

உங்களது பிறப்பு முதலே நீங்கள் நீங்களாக இருக்க விடாமல் திசை திருப்பப்பட்டுள்ளீர்கள். எல்லோருமே உங்களை நிந்தனை செய்துள்ளார்கள். உங்களது பெற்றோர் கள், உங்களது ஆசிரியர்கள், உங்களது குருமார்கள், உங்களது அரசியல்வாதிகள் எ.:லோருமேதான். எல்லோ

ருமே உங்களை நிந்தனை செய்துள்ளார்கள். எல்லோருமே, "நீங்கள் எப்படியிருக்கிறீர்களோ அது சரியில்லை. நீங்கள் சரியாக வேண்டும். நீங்கள் பூரணத்துவத்தை அடைய வேண்டும்" என்று சொல்லிக் கொண்டே இருக்கிறார்கள்.

இலக்குகள் உங்களுக்காக நிர்ணயிக்கப்பட்டன. இந்த இலக்குகளினால்தான், முழுமையை விரும்புபவர்களின் காரணமாகத்தான் நீங்கள் புறக்கணிக்கப்பட்டு, நசுக்கப் பட்டுள்ளீர்கள். பின்னர் எப்படி கடவுள் உங்களுள் இருக் கிறார் என்ற செய்தி, நீங்கள் ஏற்கெனவே வீடு வந்து சேர்ந்தாயிற்று என்ற செய்தி, நீங்கள் ஒருபோதும் வீட்டை விட்டு அகன்றதில்லை என்ற செய்தி, நீங்கள் ஏற்கெனவே சரியாகத்தான் இருக்கிறீர்கள் என்ற செய்தி உங்களை வந்தடையும். ஓய்வெடுங்கள். அது உங்களுக்கானது. அதை நீங்கள் தேடியாக வேண்டும் என்பதில்லை. இயல்பாக இருங்கள். அது உங்களுடையதாகும்.

"கடவுள் என்னுள் இருக்கிறாரா?" என்னுடைய அப்பா சொல்கிறார், "நீதான் இந்த நகரத்திலேயே விகாரமான குழந்தை" என்று. என்னுடைய அம்மா, "நீ ஏன் சாகவில்லை. நீ இந்தக் குடும்பத்துக்கு வந்த சாபம். நாங்கள் உன்னைப் பெற்றெடுத்ததற்கு வருத்தப்படுகிறோம்" என்று சொல்கிறாள். என்னுடைய ஆசிரியை, "நீ ஒரு முட்டாள். நீ ஓர் அறிவில்லாதவன். நீ ஒரு மூளையில்லாதவன்" என்று சொல்கிறாள். குரு, "நீ ஒரு பாவி. உனக்கு நரகம்தான் கிடைக்கும்" என்று சொல்கிறார்.

அன்று ஒரு நாள் ஒரு புத்தகம் படித்துக் கொண்டிருந் தேன். அதில் இந்திய ஆன்மிகவாதி ஒருவர் கிறிஸ்துவ மாதாகோயிலுக்கு அழைக்கப்படுகிறார். உரைக்குப் பிறகு, "எல்லாப் பாவிகளும் மண்டியிட்டுக் கடவுளைப் பிரார்த் தனை செய்யுங்கள். எல்லாப் பாவிகளும்" என்று கிறிஸ்துவ மதகுரு உரத்துச் சப்தமிட்டுச் சொல்கிறார்.

அந்த இந்திய ஆன்மிகவாதியைத் தவிர எல்லோரும் மண்டியிட்டுப் பிரார்த்தனை செய்யத் துவங்கினர். மதகுரு அவரைப் பார்த்து, "நீங்கள் எங்களது பிரார்த்தனையில் பங்கு பெறப் போவதில்லையா?" என்று கேட்டார்.

அவர் பதிலுக்கு, "நான் பங்கு பெறப்போகிறேன். ஆனால் நான் பாவியல்ல. மேலும் இங்குள்ள எவரும் பாவிகளைப் போலவும் தெரியவில்லை. நான் பங்கு பெறலாம் என்றுதான் இருந்தேன். ஆனால் இப்போது அது சாத்தியமில்லாமல் போய்விட்டது. நான் இப்போது மண்டியிடவும் மாட்டேன். நான் பாவியல்ல. கடவுள் என்னுள் இருக்கிறார். நான் கடவுளிடம் மரியாதைக் குறைவாக இருக்க முடியாது. நான் கடவுள் என்று இருப்பதனால்தான் பிரார்த்தனை செய்கிறேன். நான் எதற்காகவும் பிரார்த்தனை செய்யவில்லை.

'என்னுடைய பிரார்த்தனையே கடவுளுக்கு நன்றி சொல்வதற்காகத்தான். எனக்குக் கடவுள் அளித்ததற் கெல்லாம் நன்றி சொல்வதற்காகத்தான் பிரார்த்தனை செய்கிறேன். என்னை அவரது வசிப்பிடமாகத் தேர்ந் தெடுத்ததற்கு நான் நன்றி கூறினேன். பிரார்த்தனை செய்கிறேன். அவர் என்னைக் கௌரவித்துள்ளார். நான் அவரது ஒரு பகுதி. அவர் என்னைச் சேர்ந்தவர். நான் பிரார்த்தனைக்குத் தயாராக இருக்கிறேன். நான் மண்டி யிடவும் தயாராக இருக்கிறேன். ஆனால் ஒரு பாவியாக அல்ல. ஏனெனில் அது உண்மையல்ல'' என்று சொன்னார்.

நீங்கள் எல்லோரும் பாவிகள் என்பதாகக் கற்றுத் தரப் பட்டுள்ளது. இயேசு உங்களைக் காப்பாற்றவில்லையெனில் நீங்கள் நரகத்துக்குத்தான் செல்வீர்கள். நீங்கள் எல்லோரும் சபிக்கப்பட்டுள்ளீர்கள். எந்த அளவுக்கு என்றால், கிழக்கத்திய செய்தி உங்களை அடையும்போது அதனைச்

சந்தேகிக்கும் அளவுக்கு. "இது சாத்தியமே அல்ல. நானா? நான் இன்னும் வீட்டை விட்டுக் அகன்றதே இல்லையா? ஒருவேளை அது புத்தரைப் பொருத்தவரை சரியாக இருக்கலாம். அது இயேசுவைப் பொருத்தவரையில் சரியாக இருக்கலாம். ஆனால் நான் ஒரு பாவி." யாருமே பாவியல்ல. நீங்கள் உங்களது வாழ்க்கையின் அடர்ந்த கருமையான குழியிலிருக்கும்போதும்கூட நீங்கள் புனித மானவரே. நீங்கள் உங்களது புனிதத்துவத்தை இழப்பதே யில்லை. அதற்கு வழியேயில்லை. புனிதத்துவம் என்பது உங்களுடனேயே இருக்கிறது. அதனால்தான் நீங்கள் உண்டாக்கப்பட்டிருக்கிறீர்கள்.

ஷோபா, "நாம் ஏற்கெனவே வீடு திரும்பியாயிற்று என்பதில் ஏற்பட்டுள்ள சந்தேகமே நாம் வீடு திரும்பி விடாமல் இருப் பதற்குத் தடையாக இருக்கிறதா? இதையே நம்மைச் சுற்றியுள்ள எல்லோரும் திரும்பத் திரும்பச் செய்து கொண்டிருக்கிறோமா?" என்று கேட்டார்.

ஆமாம், நம்மைச் சுற்றியுள்ள எல்லோரும் அதைத்தான் செய்து கொண்டிருக்கிறோம். அதனாலேயே நான் உங்களைப் புனிதம் என்று யாராவது ஒப்புக்கொண்டால் அதுதான் அன்பு என்று சொல்கிறேன். அவர் நீங்கள் புனிதமானவர்கள் என்பதை மறுபடியும் அழுத்தித் தெரிவிக்கின்றார். யாராவது நீங்கள் புனிதமானவர்கள் அல்ல என்று தெரிவித்தால் அது அன்பு அல்ல. அவர் உங்களது தாயாக இருக்கலாம். அல்லது உங்களது தந்தையாக இருக்கலாம். அது ஒரு பொருட்டல்ல. யாராவது உங்களைக் கண்டனம் செய்யக்கூடிய இது போன்ற வார்த்தைகளைக் கூறினால் அவர்கள் உங்களை விஷமாக்குகிறார்கள் என்று பொருள். யாராவது உங்களை நீங்கள் இப்போது இருப்பது போல ஒப்புக்கொள்ள வில்லையென்றால், கடவுள் நீங்கள் சில விஷயங்களை நிறைவேற்றினால்தான் ஏற்றுக்கொள்வார் என்பது போலச்

சொன்னால், அவர் உங்களை அழிக்கிறார் என்று பொருள். அவர் உங்களது எதிரி. மிகவும் ஜாக்கிரதையாக இருங்கள்.

> எனது அன்பான ஓஷோ,
> அன்றொரு நாள், ஒரு இந்திய சன்னியாசியை நமது வாசல் அருகே காவலாளி ஒரு காரணமுமி ல்லாமல் திருப்பி அனுப்பினான். இது பற்றி லக்ஷ்மியிடம் பேசியபோது எனது வேலையைப் பார்த்துக் கொண்டு போகும்படி சொன்னார். என்னுடைய இயல்பு என்னவெனில் யாராவது நியாயமற்ற முறையில் நடத்தப்பட்டால் உடனே அவர்களது உதவிக்குச் செல்வது என்பதாகிவிட்டது. ஒருவேளை யாருக்காவது இது போன்று நடந்தால் அதைப் பற்றிக் கவனிப்பது என்பது எனது வேலையில்லையோ?

இந்தக் கேள்வி மாதேவ துலிகாவிடமிருந்து...

இங்கிருக்கும் எல்லோருக்குமே இந்தக் கேள்வி மிக முக்கியமானது. என்னிடம் தொடர்பு கொள்ளப்போகும் மற்றவர்களுக்கும்கூட இந்தக் கேள்வி அவசியமானது. இங்கு என்ன நடந்தாலும் எனக்குத் தெரிந்துதான் நடக்கிறது. யார் திருப்பி அனுப்பப்பட்டார்கள் என்பது எனக்குத் தெரியும். திருப்பி அனுப்பப்பட்ட மனிதனுக்கு ஏன் அவர் திருப்பி அனுப்பப்பட்டார் என்பதும் தெரியும். அதைப் பற்றி நீங்கள் கவலைப்படத் தேவையில்லை.

இதை நீங்கள் முழுமையாகப் புரிந்துகொள்ள வேண்டும். இங்கு என்ன நடந்தாலும், நான் எனது அறையை விட்டு வெளியே வருவதில்லை. நான் காலையிலும், மாலையிலும் தவிர வருவதேயில்லை. நமது ஆசிரமத்தைச் சுற்றிக்கூடப் போவதேயில்லை– ஆனாலும் இங்கு என்ன நடந்தாலும்

அது எனக்குப் பூரணமாகத் தெரியும். எனக்குத் தெரிந்துதான் அவை நடக்கின்றன. தயவுசெய்து அதில் குறுக்கிடாதீர்கள்.

துலிகாவைப் போலவே இன்னும் சிலரும் தொடர்ச்சி யாக இது போன்ற வேலைகளில் குறுக்கிடுகிறார்கள். இது தவறு அல்லது இது சரியென்று தீர்மானிப்பதற்கு நீங்கள் யார்? இதை நீங்கள் ஏற்கெனவே உணர்ந்திருந்தால் உங்களுக்கு இந்த இடம் தேவையேயில்லை. நீங்கள் ஏற்கெனவே ஞானம் பெற்றவர். நீங்கள் இந்த இடத்தை விட்டுச் செல்லலாம்.

எது நியாயம், எது நியாயமல்ல என்றெல்லாம் தீர்மானிப்பது உங்கள் வேலை அல்ல. இது ஒரு சாதாரண இடமல்ல. அதனால் சாதாரண விஷயங்கள் இங்குப் பொருந்தாது. சில அசாதாரண பரிசோதனைகள் இங்கு நடந்துகொண் டிருக்கின்றன. எனக்குச் சில பேருடைய தேவைகள் என்னவென்று தெரியும். சில பேர் வாயிலிலிருந்து திருப்பி அனுப்பப்பட வேண்டும் என்பதும் எனக்குத் தெரியும். அவர்கள் திருப்பி அனுப்பப்படத்தான் வேண்டும். அதற்கு எந்தவொரு காரணமும் தரப்பட வேண்டாம். அவருடைய வாழ்க்கைக்கு அவருடைய வேலைக்கு அதுதான் சரி.

இப்போது அதில் நீங்கள் வரக்கூடாது. நீங்கள் அதில் குறுக்கே வந்தால் நீங்கள்தான் உங்களது வளர்ச்சியை இழக்கிறீர்கள். வாயில் காவலர்களுக்கு அவர்களின் கடமை என்னவென்று தெரியும். அவர்கள் அவர்களது வேலையைத்தான் செய்கின்றனர். நானும் அவர்களுடன் தொடர்புகொண்டுதான் இருக்கிறேன். அவர்கள் என்ன செய்கின்றனர் என்றும் நான் கவனித்துக்கொண்டுதான் இருக்கிறேன். நீங்கள் அவற்றைக் கடந்து செல்லுங்கள்.

இது ஒரு சாதாரண இடமல்ல. எல்லாமே கவனிக்கப் படுகின்றன. யாருக்காவது தலையில் ஓர் அடி தேவை

எனில் அது கொடுக்கப்படும். நீங்கள் அதனைத் தடுக்கக் கூடாது. அப்படியில்லையெனில் நீங்கள் அவர்களது வளர்ச்சிக்குக் குறுக்கே வருகிறீர்கள் என்பது அர்த்தம். அவர்களைத் தடுக்கிறீர்கள். நீங்கள் அனாவசியமாக உணர்ச்சிவசப்படுகிறீர்கள்.

சிலர் இருக்கின்றனர். பத்ம சம்பவா, அவர்களில் ஒருவர். இது போல நடந்துவிட்டது. சிலர் இதைச் செய்து விட்டனர். இதுபோல இருக்கக்கூடாது என்று அவர் தொடர்ச்சியாக, எழுதிக்கொண்டு இருப்பார். இங்கு இது இப்படி இருக்க வேண்டும், இது இப்படி இருக்கக்கூடாது என்று தீர்மானம் செய்வதற்கு நீங்கள் சரியானவரல்ல. இங்கு நீங்கள் இந்தக் குழுவில் சேர்ந்த கணமே அவற்றை யெல்லாம் என்னிடம் விட்டுவிடுங்கள். அப்படியில்லை எனில் வேலை செய்வது என்பது சாத்தியமே அல்ல.

எனக்கு இப்போது திருப்பி அனுப்பப்பட்டவர் யாரென்றும் தெரியும். அவர் ஏன் திருப்பி அனுப்பப் பட்டார் என்பதும் தெரியும். அவருக்கும் ஏன் திருப்பி அனுப்பப்பட்டோம் என்பதும் தெரியும். இதற்கு எந்தக் காரணமுமில்லாததால் ஒரு காரணத்தையும் தர முடியாது. எல்லாவற்றுக்கும் காரணங்கள் தருவதுதான் எனது வேலையென்றால், எனது மொத்த வேலையுமே காரணங்கள் தந்துகொண்டேயிருப்பதாகி விடும். இங்கு ஆயிரக்கணக்கானவர்கள் வந்துகொண்டிருக்கிறார்கள். எல்லோருக்கும் காரணங்களும் விளக்கங்களும் தந்து கொண்டிருந்தால் என்ன ஆவது? லக்ஷ்மி சொன்னது சரியானதுதான்.

எப்போதும் நினைவில் வையுங்கள். லக்ஷ்மி அவராக ஒன்றும் செய்வதில்லை. அவர் ஒரு பூரணமான கருவி. அதனால்தான் அவர் அந்த வேலைக்குத் தேர்ந்தெடுக்கப் பட்டுள்ளார். இப்போது துலிகாவை அந்த வேலைக்கு

என்னால் தேர்ந்தெடுக்க முடியாது. ஏனெனில், அவருக்கு எது சரி, எது சரியல்ல என்பதைப் பற்றி அவரது சொந்தக் கருத்துகள் உள்ளன. லக்ஷ்மிக்கு அது போன்று இல்லை. அவர் கவனித்து அதன்படியே நடக்கிறார். எது சொல்லப் பட்டாலும் அதைச் செய்கிறார்.

நீங்களும் இந்த வழிகளைக் கற்றுக்கொள்ள வேண்டும். ஏனெனில், சீக்கிரமாகவே நாம் இன்னும் பெரிய குழுவாகி விடுவோம். ஆயிரக்கணக்கானவர்கள் வருவார்கள். இது போன்றவற்றைத் தீர்த்து வைக்க வேண்டும். அவற்றைத் திரும்பத் திரும்பக் கொண்டு வராதீர்கள். மறுபடியும் மறுபடியும் நீங்கள் தவறான கேள்விகளைக் கேட்காதீர்கள். "சிலர் இதைச் செய்துவிட்டார்கள்..." அதை நான் பார்த்துக் கொள்வேன். அது சரியல்ல என்று நான் நினைத்தால் நான் தடுத்துக்கொள்வேன். அதை எனது கவனத்துக்கு நீங்கள் கொண்டு வர வேண்டாம். நீங்கள் எனது நேரத்தை வீணாக்குகிறீர்கள்.

நீங்கள் அதிகமாக உணர்ச்சிவசப்படுகிறீர்கள். சில முட்டாள் மக்கள்தாம் சில நியாயமற்ற விஷயங்கள் நடப்பதாகப் பார்த்துத் தனது சன்னியாசத்தைத் துறந்து விடுகிறார்கள். அப்போது தங்களுடைய வாய்ப்புகளை இழக்கிறார்கள். அது அவர்களுடைய வேலையல்ல. நீங்கள் இங்கு உங்களுடைய வளர்ச்சிக்காகவே வந்துள்ளீர்கள். இந்த ஒப்புதல் முழுமையாக இருக்க வேண்டும். அப்போது தான் வேலை சாத்தியமாகும். அதன்பின்தான் நான் உங்களுக்கு உதவ முடியும். எனக்கு நீங்கள் யோசனைகள் சொல்ல வேண்டாம். நீங்கள் எனக்கு யோசனைகள் சொல்ல ஆரம்பித்த அந்தக் கணமே என்னை விட்டுத் தொடர்பற்றுப் போகிறீர்கள்.

இது ஜனநாயகமல்ல. நீங்கள் இதைச் செய்ய வேண்டும், இதைச் செய்யக் கூடாது என்றெல்லாம் எனக்குச் சொல்ல

வேண்டாம். இதை நீங்கள் ஆரம்பத்திலிருந்தே நினைவில் கொள்ள வேண்டும். இது ஜனநாயகமாக இருக்கப் போவதில்லை. உங்களது வாக்குகள் கணக்கில் எடுத்துக் கொள்ளப் போவதில்லை. நான் எந்த முடிவை எடுக்கிறேனோ அதில் ஒரு பகுதியாகிப் போகிறீர்கள். நீங்கள் அதைத் தேர்ந்தெடுக்கவில்லையெனில் நீங்கள் இங்கிருந்து செல்லலாம்.

மக்கள் இங்கு வருவதற்குத்தான் தடை விதிக்கப் படுகிறதே தவிர இங்கிருந்து செல்வதற்கல்ல. நீங்களும் இங்கிருந்து செல்லலாம். யாராவது இங்கிருந்து செல்வதற்குத் தடை விதிக்கப்பட்டுப் பார்த்திருக்கிறீர்களா? இங்கிருந்து செல்வது என்பது முற்றிலும் சுதந்திரமான ஒன்று. நீங்களும் செல்லலாம். அது உங்களுடைய விருப்பம். நீங்கள் இங்கிருப்பதற்கு விரும்பினால் பூரணமாக இருங்கள். நீங்கள் இருப்பதற்கான இடம் இதுவல்ல என்று நினைத்தால், உங்களுடைய விருப்பங்கள் பூர்த்தி செய்யப் படவில்லை என்று கருதினால், அதாவது உங்களுக்கேற்ற இடமாக இது இல்லை என்றால் நீங்கள் நிச்சயமாக வெளியேறலாம்.

இந்த இடம் உங்களுக்கேற்றதாக இருக்காது. இந்த இடம் உங்களை மாற்றுவதற்காகத்தான் இருக்கிறது. இவை ஆரம்பம்தான். எது சரி, எது சரியல்ல என்று தீர்மானிப்ப தற்கு நீங்கள் யார்? இதற்குக் காரணங்கள் கேட்பதற்கு நீங்கள் யார்? அதற்குள் நீங்கள் எப்படி வருகிறீர்கள்?

எந்த இந்தியர் தடுத்து நிறுத்தப்பட்டாரோ, அவர் தடுத்து நிறுத்தப்பட்டது தவறென்றால், அவர் வந்து என்னிடம் கேட்பார். அவருக்குத் தெரியும். அதனால் வந்து கேட்கவில்லை. அவர் எதனால் தடுத்து நிறுத்தப்பட்டார் என்று அவருக்குத் தெரிவித்தாகிவிட்டது. அவர் இங்கிருப்பவர்களுக்கெல்லாம் ஒரு தொந்தரவு. ஆனால்

இவற்றை எல்லாம் எல்லோரும் கேட்டுக்கொண்டிருக்க வேண்டாம். இது அவருக்கு அவமதிப்பைத் தருவதாகும். அவர் என்ன செய்துகொண்டிருக்கிறார் என்பதை அவர் புரிந்துகொண்டுள்ளார் என்பதனால் அவருக்கும் சொல்லப்பட்டது.

இப்போது நீங்கள் அந்த விஷயத்துக்குள் திடீரென்று நுழைகிறீர்கள். ஒரு பெரிய வேலையைச் செய்வதாக நீங்கள் நினைக்கிறீர்கள். ஒரு பெரிய சேவையைச் செய்வதாக நினைக்கிறீர்கள். நீங்கள் ஒரு நபரை அநியாயத்திலிருந்து காப்பாற்றுவதாக நினைக்கிறீர்கள். உங்களுக்கு முழுக் கதையும் தெரியாது. நீங்கள் அதைத் தெரிந்துகொள்ள வேண்டும். ஏனெனில், யார் உட்கார்ந்து எல்லோரைப் பற்றியும் எல்லாக் கதைகளையும் சொல்லிக் கொண்டிருக் கிறார்கள்? நீங்கள் உங்களைப் பற்றி மட்டுமே தீர்மானிக் கிறீர்கள். உங்களுக்கேற்றாற்போலப் பல விஷயங்கள் இங்கிருக்கா. இங்கிருக்கும் விஷயங்களுக்கேற்றாற்போல நீங்கள் நடந்து கொள்ள வேண்டும். அது உங்களுக்குச் சாத்தியப்படாது என்று உங்களுக்குத் தோன்றினால் இந்த இடத்தை விட்டு வெளியேறலாம்.

இது கடைசிக் கேள்வியாக இருக்கட்டும். நிறையக் கேள்விகள் என்னிடம் வந்துகொண்டிருக்கின்றன. சிலர் ஒரு குழுவாகச் சேர்ந்து கொண்டு, "எதிர்ப்புக் குழுவில் ஏன் இந்த அளவுக்கு முரட்டுத்தனம்?" என்று எழுதுகிறார் கள். இந்தக் கேள்வி ஒரு குழுவின் தலைவனிடமிருந்து வருகிறது. அதுவும் ஒரு குழுவின் தலைவரான ஒரு பெண்ணிடமிருந்து. அவர் எதிர்க்குழு நடத்திய முகாமில் கலந்துகொண்டு ஓரிரு நாள்களில் வெளியேற்றப்பட்டவர். அவர்தாம் கேட்டவர். நான் அவருக்கு எதிர்க்குழுவினைத் தரப்போவதில்லை. நான் அவருக்கு வேறு குழுவினைத் தரப்போகிறேன். ஆனால், "நான் எதிர்க்குழுவினில்தான்

இருக்கப்போகிறேன்" என்று சொல்கிறார். அதனால் நானும், "சரி" என்று சொன்னேன். நான் என்ன சொல்ல விரும்பினேன் என்று நீங்கள் புரிந்துகொள்ள வேண்டும். நீங்கள்தாம் முடிவெடுக்க வேண்டும் என்பதைத்தான் நான் சொன்னேன்.

அந்தப் பெண் தான் ஒரு குழுவின் தலைவி என்பதால் தனக்குத் தெரியும் என்பதாக நினைத்துக் கொண்டிருக் கிறார். அவர் குழுக்களைத் தலைமை தாங்கி நடத்துவதால் அவருக்குத் தெரியும் என்று நினைத்துக் கொண்டிருக்கிறார். அவருக்கு எந்தக் கணத்தில் ஒத்துப் போக முடியாமல் போகும் என்பது எனக்குத் தெரியும். ஏனெனில், எதிர்க்குழு இந்தக் கணத்தில் உலகத்திலேயே சிறந்த குழு என்று தெரியும். வேறு எங்குமே அது போன்ற சுதந்திரம் வழங்கப்படுவதில்லை.

மேற்கில் எதிர்க்குழுவினருக்குச் சில எல்லைகள் உண்டு. ஏனெனில் எதிர்க்குழுவினரின் தலைவர்களுக்கு என்று சில எல்லைகள் உண்டு. அவர் அது வரைதான் செல்ல முடியும். விஷயங்கள் பிரச்சினைகளாகிப் போகும்போது, இதுபோல் தன்னுடைய கட்டுப்பாட்டில் வைத்துக் கொள்ள முடியாத நிலை வரும்போது, விஷயங்கள் வெகுதூரம் போய்விடும்போது அவரால் அந்தப் பழைய நிலைக்கு வர முடியாது போகும்போது, அதன்பின் அவர் அதைத் தடுக்கிறார்.

இங்கு நாம் எல்லைகளை நம்புவதில்லை.

நான் மக்களை எதிர்க்குழுவுக்கு அனுப்புகிறேன். எப்போதென்றால், அவர்களுக்கு எல்லைகளைக் கடந்து செல்ல வேண்டுமென்ற எண்ணம் ஏற்படும்போதுதான். பாலுணர்வுக்கான எல்லை, முரட்டுத்தனத்துக்கான எல்லை, கோபத்தின், கடுமையான கோபத்தின் எல்லை.

அது தடைகளை உடைத்தல் என்பதாகும். அந்த எல்லை களையெல்லாம் உடைத்தல்.

இப்போது அந்தப் பெண் மிகவும் பயந்து போயிருக் கிறாள். இப்போது அந்தக் குழுவிற்கு எதிரானவள். இப்போது அவள் என்னிடம், "ஏன் இது போன்று முரட்டுத்தனத்தை அனுமதிக்கிறீர்கள்?" என்று கேட்கிறாள். அது உங்களின் வேலையல்ல. நீங்கள் அங்குச் செல்வதற் கான தகுதி பெற்றவரில்லையெனில் நீங்கள் அங்கு செல்லத் தேவையில்லை. ம்ம்ம்... நீங்கள் சில முரட்டுத் தனமான குழுக்களை அமைக்கலாம். சேசன், விபாசனா. நம்மைச் சுற்றி இது போன்ற பொம்மைகள் நிறைய உள்ளன. ம்ம்ம்... நீங்கள்தான் தேர்ந்தெடுக்க வேண்டும்.

ஆனால், எனக்கு எழுதிக்கொண்டேயிருக்காதீர்கள். இங்கு என்ன நடந்தாலும் எனது பார்வைக்குட்பட்டுத் தான் நடக்கின்றன. இங்கு நடக்கும் ஒரு விஷயம்கூட எனக்குத் தெரியாமல் நடப்பதில்லை. அதனால் அவற்றை எனக்குத் தெரியப்படுத்த வேண்டாம். எனக்கு ஏற்கெனவே தெரியும். அது முற்றிலும் நேரத்தை வீணாக்குவதாகும்.

எந்தக் கணத்தில் நீங்கள் சரணடைகின்றீர்களோ, சன்னியாசம் எடுத்துக்கொள்ள வந்தீர்களோ அந்தச் சரண டைதல் என்பது முழுமையானதாக இருக்க வேண்டும். ஐந்து மாதங்கள் முழுமையான சரணடைதலில் இருந்து பாருங்கள், உங்களுக்குத் தெரியும். அது ஒரு ரசவாதம். அது உங்களை முற்றிலுமாக மாற்றிவிடும்.

புதிய மக்கள் இங்கு வந்து இப்படியாக நினைக்கின்ற னர்: "என்ன விஷயம்? வயதான சன்னியாசிகள் குறுக்கிட வில்லையா? யாராவது காவலாளிகளால் தடுக்கப்படும் போது பழைய சன்னியாசிகள் தன் பாட்டுக்குச் செல்கிறார் கள். அவர்களுக்கு என்ன ஆகிவிட்டது? அவர்கள் இதைச் சரி அல்லது சரியல்ல என்று புரிந்து கொள்ளவில்லையா?

அவர்கள் அக்கறையில்லாமல் ஆகிவிட்டார்களா? வித்தியாசமாக இல்லை?"

இல்லை, அவர்கள் கற்றுக்கொண்டார்கள். அவர்கள் உங்களைப் போலவே கற்றுக்கொண்டார்கள். மெதுவாக, மெதுவாக அவர்கள் எது நடந்தாலும் அது ஒரு திட்டத்தின்படியே நடக்கிறது என்பதைப் புரிந்து கொண்டார்கள். அதில் மறைந்து நிற்கும்படியான ஒரு முறை உண்டு. என்னைத் தவிர யாருக்குமே அது எப்படிப்பட்ட முறை என்பது தெரியாது. ஆகவே நீங்கள் லக்ஷ்மியிடம் செல்ல வேண்டாம். அவருக்குத் தெரியாது. அவர் என்னை என்ன செய்ய வேண்டும் என்று கேட்டு அதன்படியே செய்வார். நீங்கள் வாயிலில் நிற்போரையும், "நீ என்ன செய்கிறாய்?" என்று கேட்க வேண்டாம். அவனும் அவன் என்ன செய்ய வேண்டும் என்று சொல்லப்படுகிறானோ அதைத்தான் செய்கிறான்.

நீங்கள் இந்தக் குழுவில் ஒருவராக இருந்தால் அதைப் புரிந்துகொள்ள வேண்டும். நீங்கள் ஓய்வெடுங்கள். நீங்கள் தீர்மானம் செய்வதை விட வேண்டும். சில மாத ஓய்வெடுத்தலுக்குப் பின், ஒப்புதலுக்குப் பின் உங்களால் புரிந்துகொள்ள முடியும். இதுதான் பழைய சன்னியாசி களுக்கும் நடந்தது. இப்போது அவர்கள் புரிந்து கொள்கிறார்கள்.

> எனது அன்பான ஓஷோ,
> நான் ஒரு நாளின் முடிவில் எப்போதுமே சிறிய பலனை எதிர்பார்க்கிறேன். கொஞ்சம் பீர் என்னும் மதுபானம். சிகரெட் அல்லது போதைப்பொருள். இவற்றை எதிர்பார்க்கிறேன். இப்போதெல்லாம் இவை எனக்குத் திருப்தியைத் தருவதில்லை. ஆனால் ஏதோவொன்றின் மீது ஆசை. ஒரு வகையான திருப்தியடையும் முறை.

**அது தொடர்கிறது. இந்த எதிர்பார்ப்பு எதனால், எது என்னைத் திருப்தியடையச் செய்யும்?**

எதுவுமே உங்களைத் திருப்தியடையச் செய்யாது. ஆசை என்பதன் உள் நுணுக்கம் புரிந்துகொள்ளப்பட வேண்டும். ஆசை இந்த வகையில்தான் வேலை செய்கிறது. ஆசை உங்களது சந்தோஷத்தின் மீது ஒரு நிபந்தனை விதிக்கிறது. 'எனக்கு ஒரு கார் கிடைத்தால் நான் மகிழ்ச்சியடைவேன். இந்தப் பெண், இந்த வீடு...' அந்த ஆசை நிறைவேற்றப் பட்டால் உங்களது மகிழ்ச்சியின் மீது விதிக்கப்பட்ட நிபந்தனை பூர்த்தியாகிறது. உங்களது விடுவிப்பில் நீங்கள் நல்லபடியாக உணர்கிறீர்கள். உண்மையில் நீங்கள் செய்ததெல்லாம், உங்களது மகிழ்ச்சிக்கு அனாவசியமாக இருந்த தடைகளைத்தான் விலக்கியுள்ளீர்கள். ஆனால் நீங்கள், 'நான் இந்தத் தடையை மீண்டும் உருவாக்கினால் அதனை மறுபடியும் அகற்றுவேன். இந்தத் தடையை அகற்றுவதில் நான் பெறும் விடுதலை உணர்வு அதற்கு முன்னர் இருப்பது போன்றே நல்ல முறையிலானதாகும்' என்று நினைத்துக் கொள்கிறீர்கள். இது போன்றேதான் ஆசைகளும் கூட. அவற்றை நிறைவேற்ற நிறைவேற்ற அவை நம்மைப் புதிய ஆசைகளுக்கு இட்டுச் சென்று கொண்டே இருக்கும்.

உங்களுக்குப் புரிகிறதா? முதலில் நீங்கள் ஒரு நிபந் தனையை உண்டாக்கினீர்கள். 'நாம் இந்தப் பெண்ணை அடைந்தே தீர வேண்டும். இந்தப் பெண்ணை அடைந்தால் தான் மகிழ்ச்சியோடு இருப்பேன். இந்தப் பெண்ணுடன் மட்டுமே நான் மகிழ்ச்சியோடு இருப்பேன்' என்ற ஆசையை உண்டாக்கினீர்கள். இப்போது அந்தப் பெண்ணை அடைவதற்கு உண்டான முயற்சிகளைச் செய்கிறீர்கள். முயற்சி கடுமையாக இருக்கும்போது உங்களுக்கு இன்னும் உற்சாகம் ஏற்படுகிறது. ஒரு காய்ச்சல்

உணர்வும்கூட ஏற்படுகிறது. இன்னும் கடினமாக இருக்கும்போது கூடவே ஒரு சவாலாகவும் இருக்கிறது. இன்னும் கடினமாக இருக்கும்போது உங்களையே நீங்கள் அதில் ஈடுபடுத்திக் கொள்கிறீர்கள். அதில் ஒரு சூதாட்டம் போலவும்கூட ஈடுபடத் தயாராகிறீர்கள். இன்னும் நம்பிக்கையும் கூடவே மேலும் ஆசையும் உருவாகிறது. அது மிகவும் கடுமையாகவும், கடினமாகவும் இருக்கிறது. அது மிகவும் பெரிய விஷயம்தான். அதனால்தான் கடினமாக இருக்கிறது. அதன் பின்னால் சுற்றிச் சுற்றிக் கடைசியில் ஒருநாள் உங்களுக்கு அந்தப் பெண் கிடைக்கிறாள்.

அந்தப் பெண் கிடைத்த அந்த நாளில் நிபந்தனை அகற்றப்படுகிறது. 'எனக்கு அந்தப் பெண் கிடைத்தால் நான் மகிழ்ச்சியோடு இருப்பேன்' என்ற நிபந்தனை அகற்றப்படுகிறது. ஆரம்பத்தில் அந்த நிபந்தனையை விதித்தது நீங்கள்தான். இப்போது அந்தப் பெண் கிடைத்து விட்டாள். நீங்கள் விடுதலை உணர்வடைகிறீர்கள். இனிமேல் துரத்தல்கள் இல்லை. பலன் உங்கள் கையில் இருக்கிறது. நீங்கள் நிம்மதியாக உணர்கிறீர்கள். நீங்கள் நிம்மதியாக இருப்பதனால் நல்லபடியாக உணர்கிறீர்கள்.

ஒருநாள் நான் முல்லா நஸ்ருதீன் நடந்து கொண்டிருப்பதைப் பார்த்தேன். முகத்தை மிகவும் கவலையும் வலியும் தோன்றும் வண்ணம் வைத்துக் கொண்டு நடந்து கொண்டிருந்தார். "என்ன விஷயம்? உங்களது வயிறு வலிக்கிறதா அல்லது தலைவலி அல்லது இது போன்ற ஏதாவது வலியா? என்ன விஷயம்? நீங்கள் மிகவும் துயரத்தில் இருக்கிறாற்போல இருக்கிறதே?" என்று கேட்டேன்.

அவர் பதிலுக்கு, "வேறொன்றுமில்லை. நான் அணிந் திருக்கும் ஷூக்கள் அளவு சிறியதானவை" என்று பதில் அளித்தார்.

"பின் அவற்றை ஏன் அணிந்திருக்கிறீர்கள்?"

"இது ஒன்றுதான் ஒவ்வொரு நாள் முடிவிலும் நான் அடையும் நிம்மதி. நான் எனது ஷூக்களைக் கால்களி லிருந்து கழற்றியவுடன், கடவுளே நான் அடையும் நிம்மதி மிகவும் மகிழ்ச்சிகரமாக இருக்கும். இது ஒன்றுதான் நான் அடையும் மகிழ்ச்சி. அதனால் நான் இந்த ஷூக்களை விடவே மாட்டேன். அவை ஒரு அளவு சிறியதாக இருந் தாலும்கூட விடமாட்டேன். இது மிகவும் நரகமாகத்தான் இருக்கிறது. இருந்தாலும் மாலை வேளைகளில் இது சொர்க்கத்தைத் தருகிறது. வீடு திரும்பிய பின்னர் எனது ஷூக்களைக் கழற்றிவிட்டுச் சோபாவில் சாயும்போது அப்படியே நான் விடுதலை அடைந்த உணர்வு ஏற்படுகிறது. அது மிகவும் சுகமானது" என்று பதில் அளித்தார்.

இதைத்தான் நீங்களும் செய்கிறீர்கள். ஒரு வலியை உரு வாக்குகிறீர்கள். பெரிய வேதனையை உருவாக்குகிறீர்கள். துரத்துதல், காய்ச்சல், கடைசியில் ஒரு நாள் வீடு திரும்பிக் காலில் அணிந்துள்ள ஷூக்களைக் கழற்றிப் போட்டு விட்டு, "இது சுகமானது. நான் இப்போது அடைந்து விட்டேன்" என்று சொல்கிறீர்கள். ஆனால் இது எத்தனை நாள்களுக்கு நடக்கும்? இந்த நிம்மதி ஒரு சில கணங்களுக்கு மட்டுமே நிலைக்கும். அதன் பின் மறுபடியும் நீங்கள் ஏங்கத் துவங்கிவிடுகிறீர்கள்.

இப்போது இந்தப் பெண் உபயோகமற்றவளாகி விட்டாள். ஏனெனில் நீங்கள் அவளை அடைந்து விட்டீர்கள். மறுபடியும் இது தொடர்பாக நிபந்தனை ஏதும் விதிக்க முடியாது. மறுபடியும் "இவள் கிடைத்தால் நான் நிம்மதியாக இருப்பேன்" என்று சொல்ல முடியாது.

ஏனெனில் அவள் ஏற்கெனவே உங்கள் வசம் இருக்கிறாள். இப்போது மறுபடியும் வேறு யாருடைய பெண்ணையாவது பார்க்கத் தொடங்குகிறீர்கள். "எனக்கு அந்தப் பெண் கிடைத்தால்..." இப்போது உங்களுக்கு ஒரு தந்திரம் தெரியும்-முதலில் நீங்கள் உங்களது மகிழ்ச்சிக்கு ஒரு நிபந்தனை விதிக்க வேண்டும். அதன்பின் அந்த நிபந்தனையை முழு மூச்சோடு பின்பற்ற வேண்டும். ஒரு நாள் நிம்மதி வந்து சேருகிறது. இப்போது இது பயனற்றதாகி விடுகிறது. புரிந்து கொள்ளும் மனிதன் என்பவன் எந்த நிபந்தனையும் விதிக்கத் தேவையில்லை என்பதை பார்ப்பான். நீங்கள் நிபந்தனையற்று சந்தோஷமாக இருக்கலாம். எதற்காக அளவு சரியில்லாத ஷூக்களை அணிந்து கொண்டு நாளின் முடிவில் நிம்மதியடைய வேண்டும்? எப்போதுமே ஏன் மகிழ்ச்சியாக இருக்கக்கூடாது? பின் நீங்கள் இதனை உணரமாட்டீர்கள். அதுவே பிரச்சினை. அதனை உணர் வதற்கு ஒரு மாற்று வேண்டும். நீங்கள் மகிழ்ச்சியோடுதான் இருப்பீர்கள். ஆனாலும் அதனை உணரமாட்டீர்கள்.

அதுதான் உண்மையாகவே மகிழ்ச்சியாக இருக்கும் மனிதன் என்பவனுக்கான இலக்கணம். உண்மையான மனிதன் என்பவனுக்கு மகிழ்ச்சி என்பதைப் பற்றி எதுவுமே தெரியாது. அதைப் பற்றி எதுவும் கேள்விப் பட்டதேயில்லை. அவனே மகிழ்ச்சியாக இருக்கின்றவன். நிபந்தனையற்ற மகிழ்ச்சியான மனிதன். அவனுக்கு, தான் மகிழ்ச்சியாக இருக்கிறோம் என்பது எப்படித் தெரியும்? மகிழ்ச்சியற்ற மனிதர்களே, "நான் மகிழ்ச்சியாக இருக்கிறேன். நேரம் அருமையாகப் போகிறது" என்று சொல்வார்கள். இவர்கள் மகிழ்ச்சியற்ற மனிதர்கள். மகிழ்ச்சியான மனிதனுக்கு மகிழ்ச்சியைப் பற்றி ஒன்றுமே தெரியாது. அது சாதாரணமாக அங்கே இருக்கிறது. அது எப்போதும் அங்கேயேதான் இருக்கிறது. அது சுவாசக் காற்றைப் போன்றது.

நீங்கள் சுவாசிப்பதைப் பற்றிச் சந்தோஷப்படுகிறீர்களா? பின்னர் நீங்கள் ஒன்று செய்யுங்கள்: மூக்கை மூடிக் கொள்ளுங்கள். ஏதாவது ஒரு யோகா பயிற்சியைச் செய்து உங்களது மூச்சை உள்ளடக்கி வையுங்கள். இது போன்று மூச்சை அடக்கியபடியே இருங்கள். உண்மையான யோகப் பயிற்சி செய்யும் மாணவனாகிவிடுங்கள். இப்போது மூச்சு முட்டி சங்கடப்படுகிறீர்கள். பின்னர் உங்களது மூச்சு ஒரேயடியாக பெருமூச்சாக வெளிவந்து உங்களுக்குப் பெருமகிழ்ச்சி உண்டாகிறது. இது முட்டாள்தனமானது. ஆனால் இதுதான் எல்லோரும் செய்வது. அதனால்தான் நீங்கள் மாலை வரும் வரை காத்திருக்கிறீர்கள்.

மகிழ்ச்சி இங்கேயே இருக்கிறது. அதற்கு நிபந்தனைகளே தேவையில்லை. மகிழ்ச்சி என்பது இயற்கையானது. அதில் உள்ள ஒரு விஷயத்தைப் பாருங்கள். உங்கள் மகிழ்ச்சியின் மேல் எந்த நிபந்தனையும் விதிக்காதீர்கள். எந்தக் காரணமுமே இல்லாமல் மகிழ்ச்சியோடு இருங்கள். மகிழ்ச்சியாக இருப்பதற்குக் காரணமாக எந்தக் காரணத் தையுமே சொல்ல முடியாது. இயல்பாக மகிழ்ச்சியோடு இருங்கள்.

மரங்கள் சந்தோஷமாக இருக்கின்றன. அவை மாலை நேரங்களில் குடிப்பதற்கு மது வகைகளையோ அல்லது சிகரெட்டையோ கேட்பதில்லை. அவை பூரணமாகச் சந்தோஷத்துடன் இருக்கின்றன. பாருங்கள். காற்று மகிழ்ச்சியோடு வீசிக்கொண்டிருக்கிறது. சூரியன் சந்தோ ஷத்துடன் இருக்கிறது. மணல் சந்தோஷமாக இருக்கிறது. கடல்கள் மகிழ்ச்சியாக இருக்கின்றன. எல்லாமே சந்தோஷமாக இருக்கின்றன, மனிதனைத் தவிர. ஏனெனில் யாருமே மகிழ்ச்சியாக இருப்பதற்கு நிபந்தனைகள் விதிப்பதில்லை. இயல்பாகச் சந்தோஷமாக இருக்கின்றன.

உங்களால் சந்தோஷமாக இருக்க முடியவில்லையெனில், சாத்தியமில்லாத நிபந்தனைகளை உருவாக்கிக் கொள்ளாதீர்கள். அது மிகவும் கடினமானது. முல்லா சரியானவர்தாம். ஒரு சிறிய விஷயம் என்னால் புரிந்துகொள்ள முடிகிறது. அவர் நீங்கள் நினைப்பதைவிடப் புத்திசாலியானவர். சிறிய விஷயம். சுற்றளவு சிறியதான ஷூக்களை அணிந்து கொள்வது. யாருமே உங்களை அதிலிருந்து தடுக்க முடியாது. மாலை வேளைகளில் நீங்கள் சந்தோஷமாக இருப்பீர்கள். சிறிய விஷயம். இது போன்ற சிறு விஷயங்களை உருவாக்கி நீங்கள் எப்படி வேண்டுமோ அப்படிச் சந்தோஷமாக இருப்பீர்கள்.

ஆனால் நீங்கள், "எனக்கு இந்தப் பெரிய வீடு என்னுடையதானால் நான் மகிழ்ச்சியாக இருப்பேன்" என்று சொல்கிறீர்கள். இப்போது பெரிய நிபந்தனைகளை விதிக்கிறீர்கள். அதற்குப் பல வருடங்களாகும். அப்போது நீங்கள் சோர்வடைந்துபோய்ச் செயலிழந்து விட்டிருப்பீர்கள். நீங்கள் ஆசைப்பட்ட அந்த இடத்தை அடையும்போது உங்களது சாவுக்கு மிக நெருக்கமாகிவிட்டிருப்பீர்கள். அதுதான் நிகழ்கிறது. நீங்கள் வாழ்நாள் முழுவதும் வீணாக்கிய பின்னர் உங்களது பெரிய வீடு உங்களது கல்லறையாகி விட்டிருக்கும். நீங்கள், "எனக்கு லட்சம் டாலர்கள் இருந்தாலொழிய நான் மகிழ்ச்சியோடிருக்க முடியாது" என்று சொல்கிறீர்கள். நீங்கள் மறுபடியும் வேலை செய்ய வேண்டும். உங்களது வாழ்க்கையை வீணாக்க வேண்டும். முல்லா நஸ்ருதீன் இன்னும் புத்திசாலியானவர். சிறிய நிபந்தனைகள் விதித்து நீங்கள் பெற விரும்பும் மகிழ்ச்சியைப் பெற்றுவிடுவார்.

இதனைப் புரிந்துகொண்டால் நிபந்தனைகள் எதுவும் விதிக்க வேண்டியிருக்காது. அதில் உள்ள முக்கியமான விஷயத்தைப் பாருங்கள். நிபந்தனைகள் மகிழ்ச்சியினை உருவாக்காது. அவை உங்களுக்கு ஒரு விடுவிப்பைத்

தருகிறது. ஆனால் அந்த நிம்மதியும் நிரந்தரமானதல்ல. எந்த ஒரு நிம்மதியுமே நிரந்தரமானதல்ல. அவை ஒரு சில கணங்களுக்கே நிலைக்கும். அவற்றைத் திரும்பத் திரும்பக் கவனித்திருக்கிறீர்களா? நீங்கள் ஒரு காரை வாங்க விரும்புகிறீர்கள். அந்தக் கார் உங்கள் வீட்டு வாசலில் நிற்கிறது. நீங்கள் மிக மிக மகிழ்ச்சியாக இருக்கிறீர்கள். இது எத்தனை நாள் தொடரும்?

நாளைக்கு இது. பழைய காராகிவிடும். ஒரு நாள் பழைய கார்! இரண்டு நாள்களுக்குப் பின் இரண்டு நாள் பழைய கார். உங்களுடைய அண்டை வீட்டுக்காரர்கள் அனை வரும் அதனைப் பார்த்துப் பாராட்டிவிட்டனர். இப்போது அது முடிந்துவிட்டது. இப்போது யாரும் அதனைப்பற்றிப் பேசுவது கிடையாது. இதனால்தான் கார் நிறுவனங்கள் எல்லாமே புதிய புதிய கார்களை ஒவ்வொரு வருடமும் அறிமுகப்படுத்திக்கொண்டே இருக்கின்றன. அதனால் நீங்கள் புதிய நிபந்தனைகளை விதித்துக் கொள்ளலாம்.

பிச்சைக்காரன் ஒருவன் ஒரு மரத்தின் கீழே அமர்ந்திருந்தான். அந்த வழியே வந்த பணக்காரர் ஒருவருடைய கார் பழுதடைந்துவிட்டது. டிரைவர் இறங்கிக் காரைப் பழுது பார்க்கத் தொடங்கினான். பணக் காரர் இறங்கி நிம்மதியாக ஓய்வெடுத்துக் கொண்டிருந்த பிச்சைக்காரனின் அருகில் வந்து அமர்ந்தார். மிதமான வெயிலும், குளிர்ந்த தென்றலும், அழகான சூழ்நிலையுமாக அந்த இடம் அமைந்திருந்தது.

அந்தப் பணக்காரர், “நீ ஏன் வேலை செய்யமாட்டே னென்கிறாய்?” என்று கேட்டார்.

பிச்சைக்காரன் பதிலுக்கு, “எதற்காக?” என்று கேட்டான்.

“நீ வேலை செய்தால் பணம் சம்பாதிக்கலாம்!” என்று சொன்னார்.

“எதற்காக?” என்று பிச்சைக்காரன் கேட்டான்.

பணக்காரர் கொஞ்சம் கோபமுற்றார். “நீ பணம் சம்பாதித்தால் வங்கியில் உன் கணக்கில் பெரிய தொகையை இருப்பாகப் போட்டு வைக்கலாம்!” என்று சொன்னார்.

ஆனால் மறுபடியும் பிச்சைக்காரன் பதிலுக்கு, “எதற்காக?” என்று கேட்டான்.

பணக்காரர் இப்போது அதிகமாகவே கோபமுற்றார். “எதற்காகவா? உனது வயதான காலத்தில் நிம்மதியாக ஓய்வெடுக்கலாம் அதற்காகத்தான்!” என்று பதிலளித்தார்.

பிச்சைக்காரன் பதிலுக்கு, “நான் இப்போதே ஓய்வுதான் எடுக்கிறேன். எதற்காக வயதாகும் வரை காத்திருந்து இந்த மாதிரி அபத்தமான செயல்களையெல்லாம் செய்து கொண்டிருக்க வேண்டும்? பணத்தைச் சம்பாதித்து வங்கிக் கணக்கில் போட்டுக் கடைசியில் ஓய்வெடுப்பது இதெல்லாம் எதற்காக? இப்போதே நீங்கள் பார்க்கவில்லையா, நான் நிம்மதியாக ஓய்வெடுத்துக் கொண்டிருப்பதை? எதற்காகக் காத்துக்கொண்டிருக்க வேண்டும்?” என்று சொன்னான்.

எதற்காக மாலை வரை காத்திருக்க வேண்டும்? எதற்காகப் பீர் அருந்துவதற்காகக் காத்திருக்க வேண்டும்? நீங்கள் நீர் அருந்தும்போதே ஏன் மகிழ்ச்சியாக இருக்கக் கூடாது?

இயேசு கிறிஸ்து நீரையே மதுவாக மாற்றினார் என்ற கதையை நீங்கள் கேள்விப்பட்டதில்லையா? கிறிஸ்தவர்கள் இதில் ஒன்றைத் தவற விட்டிருப்பார்கள். அவர்கள் உண்மையிலேயே இயேசு மதுவை நீராக மாற்றினார்

என்பதாக எண்ணிக் கொண்டிருக்கிறார்கள். அது உண்மை யல்ல. நான் சீடர்களாகிய உங்களுக்கு இப்போது கற்றுக் கொடுத்துக்கொண்டிருக்கும் பாடத்தை அவர் கற்றுக் கொடுத்திருப்பார். அவர், "இதனைச் சந்தோஷமாக அருந்துங்கள். இதுவே மதுவாக மாறிவிடும்" என்று சொல்லியிருப்பார்.

நீங்கள் மகிழ்ச்சியுடன் நீரை அருந்தும்போது அதுவே பெரும்பாலும் போதையைத் தரும், முயற்சி செய்து பாருங்கள். வெறும் நீர் உங்களுக்குப் போதையை அளிக்கும். அது உங்களைப் பொருத்தது, அது பீரையோ அல்லது மதுவையோ பொருத்தது அல்ல. அதனைப் புரிந்துகொள்ள முடியவில்லை எனில், யாராவது மனோ வசியம் செய்பவரைக் கேளுங்கள். நமது சந்தோஷைக் கேளுங்கள். அவருக்குத் தெரியும். ஒருவரை மனோவசியம் செய்துவிட்டு அவர் வசியத்தில் இருக்கும்போது வெறும் நீரைத் தந்து பருகச் செய்துவிட்டு அதனை மது என்று சொன்னால் அவர் போதையில் ஆழ்ந்து விடுவார். இப்போது டாக்டர்களுக்கு 'Placbos' என்ற மருந்தற்ற முறை பற்றித் தெரிந்திருக்கும். அதன் விளைவுகள் ஆச்சரியத்தில் ஆழ்த்தும் வகையில் இருக்கிறது. ஒரு மருத்துவமனையில் சில பரிசோதனைகள் செய்தனர். ஒரு குழுவில் இருபது நோயாளிகளுக்கு ஒரு வகையான நோய்க்குண்டான மருந்தையும் மற்றொரு குழுவில் அதே வகையான நோயால் பீடித்திருக்கும் இருபது நோயாளிகளுக்கு வெறும் நீரையும் அருந்தச் செய்தனர். இது, வெறும் நீர் அவர்களுக்குப் பலனளிக்கிறதா என்று பார்ப்பதற்கான ஒரு பரிசோதனை. மருத்துவர்களுக்கோ அல்லது நோயாளி களுக்கோ இருவருக்குமே எது நீர் அல்லது எது மருந்து என்பது தெரியாது. கர்ரணம் என்னவெனில், மருத்துவர் களுக்குத் தெரிந்ததென்றால்கூட அவர்களது மனோநிலை மாறிவிடும் என்பதால்தான். ஒரு வேளை தாம் அளிப்பது

வெறும் நீர்தான் என்று தெரிந்துகொண்டால் அதனைச் சிரத்தையோடு தரமாட்டார்களே, அதேபோல, நோயாளிகளும் அதனை அக்கறையோடு அருந்தமாட்டார்களே அதனால்தான். அதனால் இருவருக்குமே தெரியாது. அதைப் பற்றிய உண்மை ஒரு பாதுகாப்புப் பெட்டகத்தில் வைக்கப்பட்டிருந்தது.

அதிசயம் என்னவெனில், மருந்து எத்தனை பேரைக் குணப்படுத்தியதோ அதே எண்ணிக்கையிலான நபர்களை வெறும் நீரும் குணப்படுத்தியது என்பதுதான். இருபது பேர்களில் இரண்டு வார முடிவில் இரண்டு குழுக்களிலிருந்தும் ஏழு நோயாளிகள் குணமானார்கள். இதைவிட அதிசயம் என்னவென்றால் வெறும் நீர் அருந்திய நோயாளிகள் மருந்து உண்ட மற்ற நோயாளிகளைவிட அதிக ஆரோக்கியமாக இருந்தார்கள். உண்மையிலேயே மருந்தை உண்ட மற்ற நோயாளிகள் வெகு சீக்கிரமே சில வாரங்களுக்குப் பிறகு திரும்பி வரத் துவங்கினார்கள்.

என்ன ஆயிற்று? வெறும் நீர் எப்படி அவ்வளவு உதவியளித்தது? இதன் பின்னணி என்னவெனில், மருந்துதான் சிகிச்சையளித்தது. அதே சமயம் மருந்து குணமாக்கவில்லை. தூய்மையான நீர் நிச்சயம் கெடுதல் செய்யாது. ஆனால் மருந்து கெடுதல் செய்யும். அதனால்தான் உண்மையான மருந்து எடுத்துக் கொண்டவர்கள் வெகு சீக்கிரமாகவே திரும்பி வந்தனர். சில புதிய நோய்களாலும் கூட அவர்கள் பீடிக்கப்பட்டார்கள். சில புதிய பிரச்சினைகளுடன் திரும்பி வந்தார்கள். ஏனெனில் எந்த ஒரு மருந்தும் உங்களது உடலை ஏதோ ஒரு வழியில் வேறு விதமாகப் பாதிக்காமல் இருப்பதில்லை. அதன் பாதிப்பு நிச்சயமாக இருக்கும். ஆனால் தூய்மையான நீர் அது போலப் பாதிக்காது. இது ஒரு தூய்மையான மனோ வசியம்.

நீங்கள் நீரை இது போன்ற ஆர்வத்துடனும், பிரார்த்தனையுடனும் அருந்துவீர்களேயானால் அதுவே நிச்சயம் மதுவைப் போலாகும். நீங்கள் ஜென் துறவிகள் தேநீரை இது போன்று உற்சாகத்துடனும், பிரக்ஞையுடனும், அருந்துவதைப் பார்த்திருக்கலாம். அப்போது வெறும் தேநீரும்கூட மகத்தானதாகிவிடும். சாதாரண தேநீரும்கூட மாறிவிடும். சாதாரணச் செய்கைகளும்கூட மாற்றம் கண்டுவிடும். காலையில் பயிற்சி செய்யும் நடையும்கூட போதை தருவதாகிவிடும். காலை நடை உங்களுக்குப் போதை தருவதாக இல்லையெனில் உங்களிடம் ஏதோ தவறு இருப்பதாகப் பொருள். ஓர் அழகான ரோஜா உங்களைப் போதையில் ஆழ்த்த வேண்டும். அப்படியில்லை யெனில் நிச்சயம் வேறு எதுவுமே உங்களைப் போதையில் ஆழ்த்தாது. ஒரு சிறிய குழந்தையின் கண்கள் உங்களைப் போதையில் ஆழ்த்த வேண்டும்.

எப்படி அந்தக் கணத்தைச் சந்தோஷமாக வாழ்வது என்று கற்றுக்கொள்ளுங்கள். எல்லாவற்றுக்கும் பலனை எதிர்பார்க்காதீர்கள். அப்படி எதுவுமில்லை. வாழ்க்கை என்பது எங்கும் போவதில்லை. அதற்கு முடிவே இல்லை. முழுமையாக வாழுங்கள். அதனைப் பிரக்ஞையோடு வாழுங்கள். மகிழ்ச்சியோடு வாழுங்கள். நீங்கள் பூரண மாவீர்கள்.

பூரணமடைவது என்பது தள்ளிப் போகக்கூடாது. அப்படி இல்லையெனில் நீங்கள் நிச்சயம் பூரணமடைய முடியாது. பூரணமடைதல் என்பது இப்போது நிகழ வேண்டும். இப்போதே! அப்படி இல்லையெனில் எப்போதுமில்லை!

**எனது அன்பான ஓஷோ,**
**மக்கள் நான் இழிவானவன் என்று**
**கருதுகின்றனர். ஆனால் உண்மையில் நான்**

கருமியானவன் மட்டுமே. இதைப் பற்றி என்ன சொல்கிறீர்கள் ஓஷோ?

நான் உங்களுக்கு ஓர் எடுத்துக்காட்டைச் சொல்கிறேன்.

ஓர் இளைஞன் ஒருநாள் காலை கால்பந்து விளையாட்டில் ஐம்பதாயிரம் பவுண்டுகள் வென்றிருப்பதாகக் கேள்வியுற்றான். அவன் தனது வயதான தாய் தந்தையருடன் வசித்துவந்தான். அவர்களும் மிகவும் ஏழ்மை நிலையிலிருப்பவர்கள்தாம். எனவே, அவர்கள் இதைப் பற்றிக் கேள்வியுற்றவுடன் மிகுந்த மகிழ்ச்சியடைந்தனர்.

அவன், "நீங்கள் மகிழ்ச்சியடைவது இயல்பானதே. எனது செல்வத்தில் நீங்கள் பங்கு பெற வேண்டும் என்று விரும்புகிறேன். எனவே, உங்கள் இருவருக்கும் தலா பத்துப் பவுண்டுகள் பரிசாக அளிக்கப்போகிறேன்'' என்று சொன்னானாம்.

ஒரு சிறிய மௌனம் நிலவியது. அதன் பின் அந்த வயதான தந்தை பேசத் துவங்கினான்: "நல்லது மகனே, நாங்கள் உனக்கு எவ்வளவோ செய்திருக்கிறோம். நீ இத்தனை வருடங்களாக எதுவும் இல்லாமல் கஷ்டப்பட வில்லை. ஆனால் இப்போது உனது இரண்டு கால்களி லேயே நிற்பதற்குத் தயாராகிவிட்டாய். இப்போது ஒன்றை நீ புரிந்துகொள்ள வேண்டும். நானும் உனது அம்மாவும் சட்டப்படி மணம் புரிந்து கொண்டவர்களில்லை."

என்ன என்று திடுக்கிட்ட இளைஞன், "அப்போது நான் ஒரு... என்று சொல்கிறீர்களா?'' என்று கேட்டான்.

"ஆமாம், நீ அதேதான்." வயதான மனிதன் மேலும் சொன்னான், "அதனால்தான் நீ இப்படி இருக்கிறாய்!''

இன்றைக்கு இது போதும்.

புத்தர் கேட்டார்: "சுபூதி, ததாகதர், தீபங்கரரிடமிருந்து கற்றுக்கொண்ட தர்மம் ஏதாவது உண்டென்று நீ நினைக்கிறாயா?"

... சுபூதி சொன்னார்: "இல்லை பிரபு, எதுவும் இல்லை."

புத்தர் கூறினார்: "ஒரு போதிசத்துவர், 'நான் இணக்கமான புத்தப் பிரதேசத்தைப் படைத்துவிட்டேன்' என்று கூறினால், அவர் தவறாகப் பேசுவதாகப் பொருள். ஏன் அப்படி? சுபூதி, இணக்கமான புத்தப் பிரதேசம், இணக்கமானதன்று என்று ததாகதர் கற்றுத் தந்துள்ளார். அதனால்தான் அவர், 'இணக்கமான புத்தப் பிரதேசம்' பற்றிப் பேசுகிறார்."

புத்தர் கூறினார்: "சுபூதி, மீண்டும் சொல்கிறேன் கேள்: ஒரு ஆணோ, பெண்ணோ, காக்கைக் கரை மணலினும் மிகப் பலவான உடைமைகளைத் துறந்து விடலாம். இன்னொருவர் தர்மத்தின் பேருரையிலிருந்து நான்கு வரி எடுத்து மற்றவர்களுக்கு விளக்கிக் காட்டலாம். இந்த இரண்டாவது நபர், நிரம்பிய வலிமை பெறுவார். இவர் பெறக்கூடிய சிறப்புக்கள் கணக்கிட முடியாதவை; அளவிட முடியாதவை."

அதன் பிறகு, தர்மத்தின் பாதிப்பினால், சுபூதியின் விழிகளிலிருந்து கண்ணீர் பெருகத் தொடங்கியது.

கண்ணீர் வடித்த பின், அவர், புத்தரை நோக்கி இவ்வாறு கூறினார்: "பிரபுவே, அது அற்புதம்! மகா அற்புதம்! எல்லாம் கடந்தவரே, இந்தத் தர்மப் பேருரையை எவ்வளவு நன்றாகத் ததாகதர் போதித்துவிட்டார்... அதன் மூலம் புலப்படும் தன்மை எனக்குள் உருவாகிவிட்டாலும் கூட... அதற்கு, புலன்களால் அறியப்படும் பண்பு கிடையாது. ஏன் அப்படி? ஏனென்றால், புத்தர்கள், மகான்கள், எல்லா புலனறிவுப் பண்புகளையும் கைக்கழுவி விட்டவர்களாவர்."

புத்தர் கூறினார்: "அது அப்படித்தான் சுபூதி. அவர்கள் மிக அற்புதமாக ஆசீர்வதிக்கப்பட்டவர்கள் ஆவர். இந்தச் சூத்திரங்களைக் கேட்டவர்கள், நடுங்குதல் இல்லை; அஞ்சுதல் இல்லை; அஞ்சி அலறுதல் இல்லை... சுபூதி, மேலும், ததாகதர் குறிப்பிடும் பொறுமையின் பூரணத்துவம், உண்மையில் பூரணத்துவமுடையதே அன்று.

'ஏன் அப்படி? ஏனென்றால், கலிங்க மன்னன், எனது கை, கால்களிலிருந்து தசையை வெட்டி எடுத்தபோது, எனக்கு என் சுயம் பற்றிய உணர்வோ, என் இருப்பு பற்றிய உணர்வோ, உயிர், உடல் பற்றிய உணர்வோ ஏற்படவே இல்லை.

'ஏன் அப்படி? சுபூதி, எனக்கு அப்போது அத்தகைய சுய உணர்வு ஏற்பட்டிருந்தால், அந்தச் சமயத்தில், எனக்கு அன்பின்மை பற்றிய உணர்வும் ஏற்பட்டிருக்கும்.



“மேலும் சுபூதி, சகலரின் மகிழ்ச்சிக்காகவே ஒரு போதிசத்துவர், இவ்வகையில் பரிசுகள் வழங்குகிறார்.

“ஏன் அப்படி? சுபூதி, இந்த இருப்பின் உணர்வு வெறும் உணர முடியா நிலையாகும். ததாகதர் பேசிய ‘இருப்பவர்கள்’ பற்றிய எல்லாமும், இல்லாதவையே ஆகும்.

“ஏன் அப்படி? ஏனென்றால், ததாகதர் பேசுவதெல்லாம் எதார்த்தத்திற்கு இசைவாகவே. அவர் பேசுவதெல்லாம் உண்மையே. எது உள்ளதோ அதையே அவர் பேசுகிறார். அவர் பேச்சு வேறு எந்த விதமாகவும் இல்லை.

“ஒரு ததாகதர் தவறாகப் பேசமாட்டார்...”

“சுபூதி, ‘ததாகதர்’ என்ற சொல், ‘உள்ளபடியுள்ள உண்மை’ என்பதற்குச் சமமானது.”



பகவான் கேட்கிறார்: "நீ என்ன நினைக்கிறாய் சுபூதி? தீபங்கராவிடமிருந்து தத்தகதா கற்றுக்கொண்ட தர்மம் என்பதாக ஏதாவது இருக்கிறதா?" சுபூதி பதிலளித்தார்: "இல்லை, பகவானே, அப்படி ஏதுமில்லை."

தீபங்கரர் பழங்காலத்திய புத்தர். கௌதமபுத்தர் தமது முற்பிறவியில் ஞானம் அடைவதற்கு முன்பு தீபங்கரரிடம் சென்றிருக்கிறார். அவருக்குத் தீபங்கரரின் சீடராக வேண்டும் என்ற எண்ணம் இருந்தது. தீபங்கரர் சிரித்து விட்டுச் சொன்னார் "கற்றுக் கொள்வதற்கு எதுவுமே இல்லை."

உண்மை என்பதைக் கற்றுக்கொள்ள முடியாது. ஆமாம், அதைப் புரிந்துகொள்ளத்தான் வேண்டும். ஆனால் எதுவுமே கற்றுக்கொள்ளப்பட வேண்டாம். உண்மை கண்டுகொள்ளப்பட வேண்டும். அது ஏற்கெனவே உங்களிடம் இருக்கின்றது. அதன் மேல் உள்ள உறையை நீக்க வேண்டும். ஆனால், கற்றுக்கொள்வதற்கு எதுவு மில்லை.

உண்மை என்பது புதியதல்ல. உண்மை என்பதே நீங்கள் தான். நீங்கள் அதைப் பற்றி விழிப்புணர்ச்சியோடு இருக்க வேண்டும். நீங்கள் இன்னும் நிறைய அறிந்துகொள்ள வேண்டும் என்பதும் தேவையற்றது. உண்மையில் நிறையத்

தெரிந்துகொள்ளும் போது உங்களைப் பற்றிய விழிப்புணர்வு குறைந்த அளவே இருக்கிறது. உங்களுக்கு அதிகம் தெரியும் என்று நீங்கள் நினைப்பதே உங்களை மூடி விடுகிறது.

அறிவு என்பதே அறிவீனம்தான். அறிவாளி என்பவனே நினைவு, தகவல்கள், புனிதப் புத்தகங்கள், தத்துவம் என்ற கருமேகங்களால், சூழப்பட்டவன்தான்.

கௌதமரிடம் தீபங்கரர் சொன்னார்: "நீ கற்றுக் கொள்ள வேண்டும் என்ற கோணத்தில் நினைக்காதே. உண்மை என்பது உன்னில் ஏற்கெனவே உள்ளது. உண்மை என்பதை இடம் மாற்றவும் முடியாது." இது மட்டும் இல்லை. தீபங்கரரின் பாதங்களைக் கௌதமர் தொட்ட போது, தீபங்கரர் குனிந்து கௌதமரின் பாதங்களைத் தொட்டார். கௌதமர் அப்போதெல்லாம் ஞானம் அடையப்பெற்றிருக்கவில்லை. அவர் அதனை மிகவும் புதிராக உணர்ந்தார். தர்மசங்கடமாக உணர்ந்தார்.

அது துறவிகள் பங்குபெறும் ஒரு மகத்தான கூட்டம். அங்கு என்ன நிகழ்கின்றது என்று யாருக்குமே தெரியாது. என்ன நடக்கின்றது என்றும் யாருக்கும் தெரியாது. தீபங்கரர் அது போன்று யாருக்கும் செய்தது கிடையாது. கௌதமர் சொன்னார்: "நீங்கள் என்ன செய்திருக்கிறீர் கள்? நீங்கள் ஏன் எனது கால்களைத் தொட்டீர்கள்? நான் ஒரு பாவி. ஓர் அறிவிலி. நான் உங்களது பாதத்தைத் தொடுவது சரியானது. ஆனால் எனது பாதத்தைத் தொடு வது அபத்தமானது. நீங்கள் பைத்தியமாகிவிட்டீர்களா?"

தீபங்கரர் சிரித்துவிட்டுச் சொன்னார்: "இல்லை கௌதமா, நீ உனது எதிர்காலத்தைப் பற்றித் தெரியாததால் திகைப்படைந்துவிட்டாய். நான் பைத்தியம் இல்லை. நான் நிகழப்போவதைப் பார்க்க முடிகிறது. நீ கூடிய சீக்கிரமே ஒரு புத்தராகப் போகிறாய். அந்த உண்மையைக்

கௌரவிப்பதற்காகவே நான் உனது பாதங்களைத் தொட்டேன். அதைவிட எவர் ஒருவர் ஞானம் அடைந்தவரோ அவருக்கு எல்லாருமே ஞானமடைந்தவராகத் தோற்றமளிப்பார். இது வெறும் நேரம் தொடர்பான கேள்விதான். அது பெரிய விஷயமல்ல. நான் இன்று ஞானமடைந்திருக்கிறேன். நீ நாளை ஞானமடைவாய். மற்றவர் இன்னொரு நாள் ஞானமடைவார். அது ஒரு பொருட்டல்ல. எல்லோருக்கும் என்றோ ஒருநாள் ஞானம் என்பது கிடைக்கப் போகின்றது. நீங்கள் வேண்டுமானால் அதைத் தாமப்படுத்தலாம். அது உங்களைப் பொருத்தது. நீங்கள் எந்தக் கணத்தில் தாமதப்படுத்துவதை நிறுத்துகிறீர்களோ, நீங்கள் எந்தக் கணத்தில் தள்ளிப் போடுவதை நிறுத்துகிறீர்களோ அந்தக் கணமே ஞானம் வந்து சேருகிறது. அது உங்களுடைய அங்கீகாரத்துக்காகக் காத்து நின்றுகொண்டிருக்கிறது."

அது மிக அழகான கதைகளில் ஒன்று. கௌதமரின் பாதங்களைத் தீபங்கரர் தொட்டது. கௌதமர் ஒரு பெயர் தெரியாத நபர். பல நூற்றாண்டுகளுக்குப் பின்னர், மூவாயிரம் ஆண்டுகளுக்குப் பின்னரே கௌதமர் ஞானமடைந்தார். முதல் முதலாக அவர் செய்தது தீபங்கரரிடம் தலை வணங்கியது. இப்போது தீபங்கரரே இல்லை. ஆனாலும் அவர் தலை வணங்கினார். சிரித்துவிட்டுச் சொன்னார்: "இப்போது நீங்கள் எனது கால்களைத் தொட்டதன் காரணம் புரிந்தது. இப்போது எல்லோருடைய பாதங்களையும் நான் தொடுகிறேன். இப்போது வாழ்க்கை முழுவதுமே ஞானம் அடையப் போகிறது என்பது தெரிந்துவிட்டது."

ஞானமடைவது என்பது இயற்கையாக நிகழக்கூடியது. நாம் அதைத் தடை செய்யவில்லை எனில், அது நிகழ்ந்தே ஆக வேண்டும். அதை நீங்கள் அடைந்து ஆக வேண்டும் என்ற அவசியமில்லை. நீங்கள் செய்யக் கூடியதெல்லாம்

அதைத் தடை செய்யாமலிருக்க வேண்டியது தான். நீங்கள் அதனை ஓராயிரம் வழிகளில் தடை செய்கிறீர்கள். அதனை நிகழவிடாமல் தடுக்கிறீர்கள். அது நிகழத் துவங்கும்போது நீங்கள் அச்சப்படத் துவங்குகிறீர்கள். அது உங்களை ஆளுமை செய்யும்போது அந்த ஆளுமைக்கு அனுமதிப்பது கிடையாது. நீங்கள் சுருங்கிக் கொள்ளுகிறீர்கள். நீங்கள் பின்வாங்கிவிடுகிறீர்கள். நீங்கள் உங்களது அகங்காரம் என்னும் சிறிய கூட்டுக்குள் வருகிறீர்கள். அங்கே நீங்கள் பாதுகாக்கப்பட்டதாக நினைக்கிறீர்கள். உத்தரவாதத்துடன் இருப்பதாக நினைக்கிறீர்கள்.

ஞானமடைதல் என்பது பாதுகாப்பற்ற ஒரு வானம் போன்றது. அது பரந்துபட்டது. அது பரந்த கடலைப் போன்றது. இந்தப் பயணம் என்பதே தெரியாத ஒன்றிலிருந்து மற்றொரு தெரியாத ஒன்றிற்குத்தான். தெரியக் கூடியது என்பதாக ஒன்றுமில்லை. புலமை என்பதே, தெரிதல் என்பதைப் பற்றிய எண்ணமே மனிதனின் அபத்தமான ஒன்றாகும். வாழ்க்கை என்பதே அப்படிப்பட்ட ஒரு மர்மம்தான். அதனைத் தெரிந்து கொள்ளவும் இயலாது. தெரிந்துகொள்ள முடியாத ஒன்றை எப்படிக் கற்பிக்க முடியும்? கற்பிக்க முடியாத ஒன்றின் தொடர்பாகக் குரு என்றும், சீடன் என்பதும் எப்படிச் சாத்தியமாகும்?

சில நாள்களுக்கு முன் ஒரு கேள்வி எழுந்தது: "நீங்கள் ஏன் உங்களை ஓஷோ என்று பிரகடனப்படுத்திக் கொண்டீர்கள்?" என்று. அது ஒரு நாடகம். ஓஷோ என்ற பாத்திரத்தை நான் ஏற்கவும் சீடர்கள் என்ற பாத்திரத்தை நீங்கள் ஏற்றுக்கொள்ளவும் முடிவு செய்யப்பட்டது. ஆனாலும் இது ஒரு நாடகமே. உங்களுக்கு ஒரு நாள் இதைப் பற்றியெல்லாம் பிரக்ஞை ஏற்படும். அந்த நாளில் குரு-சிஷ்யன் என்ற பாவமே இல்லாது போய்விடும். எந்த நாளில் உங்களுக்கு இதெல்லாம் தெரிந்து போகிறதோ

அந்த நாளில் இது ஒரு கனவே என்று தெரிந்துபோய் விடும். ஆனால், அந்தக் கனவு உங்களது மற்றக் கனவுகளிலிருந்து வெளிவருவதற்கு உதவியாக இருக்கும். அந்த முள் உங்களது சதையினுள் செருகிக் கனவுகளி லிருந்து வெளிவருவதற்கு உதவியாக இருக்கும். அந்த முள் உங்களது சதையினுள் செருகியிருக்கும். மற்ற முள்களை யெல்லாம் வெளியே எடுப்பதற்கு உதவும். அது ஒரு கருவி. அதே சமயம் முள்ளும்கூட. அந்த விஷம் உங்களது மற்ற விஷங்களையெல்லாம் வெளிக்கொண்டு வர உதவும். ஆனாலும் அதுவும் விஷமே. அதனை ஒரு தெப்பமாகப் பயன்படுத்துங்கள். அதனால்தான் நான் அதை ஒரு நாடகம் என்றேன்.

நீங்கள் சீடனாக இருப்பதும் நான் குருவாக இருப்பதும் நாடகமே. அதனை எவ்வளவு முடியுமோ அவ்வளவு அழகாக நிறைவேற்றுங்கள். அது நிஜம்தான். எனக்குத் தெரியும், அது ஒரு நாடகமென்று. உங்கள் பக்கமிருந்து அது ஒரு மகத்தான நிஜம். என் பக்கமிருந்து அது ஒரு விளையாட்டு. ஒரு நாள் அது நாடகமென்று உங்களுக்கும் தெரியவரும். அந்த நாள் நீங்கள் ஞானமடைந்த நாளாக இருக்கும்.

கௌதமர் தமது கால்களைத் தொட்டவுடன் இதுவும் ஒரு விளையாட்டே என்று அவரிடம் தீபங்கரர் சொன்னார். நீ எனது கால்களைத் தொட்டாய். நான் உனது கால்களைத் தொட்டேன். இதில் ஒன்றும் வேறுபாடு இல்லை. நாம் எல்லாருமே ஞானமடைந்தவர்கள். நாம் எல்லாரும் கடவுள்கள். நான் மட்டும்தான் கடவுள், நீ கடவுள் இல்லை என்பதெல்லாம் கிடையாது. எல்லாருமே புனிதமானவர்கள். மரங்கள், கடவுள்கள், விலங்குகளும் அப்படியே. அதேபோல் எல்லாமே கடவுள்கள்தாம்; கற்களும் கூட.

பாறைகளில் கடவுள் ஆழ்ந்து உறங்கிக் கொண்டிருக்கின்றார். அவர் மரங்களில் சிறிதே தெளிந்த நிலையிலிருக்கிறார். விலங்குகளில் சற்றே அதிகமாக உறக்கத்திலிருந்து தெளிந்து காணப்படுகிறார். உன்னில் இன்னும் அதிகமாக உறக்கத்திலிருந்து எழுந்துவிட்டிருக்கிறார். ஒரு புத்தரில் கடவுள் உறக்கத்தினின்றும் பூரணமாக விழித்தெழுந்த நிலையிலிருக்கிறார். வித்தியாசம் என்பது தன்மையில்லை. அளவில்தான் இருக்கிறது. உன்னால் இந்த அளவுக்கு விழிப்போடு இருக்க முடிகிறதெனில், அந்த அளவுக்கும் விழிப்போடு இருக்க முடியும்.

*புத்தர் கேட்டார்: "சுபூதி, ததாகதர், தீபங்கரரிடமிருந்து கற்றுக் கொண்ட தர்மம் ஏதாவது உண்டென்று நீ நினைக்கிறாயா?"*

அவர் கேட்கிறார்: "நான் தீபங்கரரிடமிருந்து ஏதாவது கற்றுக் கொண்டேனா?" கற்றுக்கொள்வதற்கென்று ஏதும் இல்லை. உண்மை என்பது ஏற்கனவே உள்ள ஒன்று. நீங்கள் கற்றுக்கொண்டதெல்லாமே பொய்கள் தாம். உண்மையைக் கற்றுக்கொள்ளவே தேவையில்லை. உண்மையைக் கண்டுபிடிக்கத் தேவையில்லை. அதனை வெளிப்படுத்தத் தான் வேண்டும். இன்னும் உண்மையாகச் சொல்ல வேண்டுமெனில் அதனை மீண்டும் வெளிப்படுத்தத்தான் வேண்டும்.

'கற்றுக் கொள்ளுதல்' என்ற வார்த்தையே அபாயகரமானது. கற்றுக்கொள்ளுதல் என்றால் தகவல்களைச் சேர்த்து வைத்தல் என்று பொருள். தகவல்களை மேலும் மேலும் சேகரித்து வைக்கும்போது உண்மை என்பது பிரக்ஞையை இழந்த நிலைக்குப் போய் விடுகிறது. உங்களுக்குப் பாரமாகப் போய்விடுகிறது. தலை பாரமாகிப் போய்விடுகிறது. உங்கள் தலை அறிவினால் சத்தமிட ஆரம்பித்து விடுகிறது. மிகவும் இரைச்சலாகி விடுகிறது.

அதன்பின்னர் உங்களது இதயத்திலிருந்து எழும் நுண்ணிய ஒலியினைக் கேட்க முடியாமல் போய் விடுகிறது. அந்த மௌனம் என்பது அறிவிலிருந்து எழும் சத்தத்தில் அமுழ்ந்திப் போகிறது.

அதனாலேயே பாவிகள்கூட இதனை அடைந்து விடுகின்றனர். அறிவாளிகள் தப்பவிட்டு விடுகிறார்கள். ஏனெனில், பாவிகள் மிகவும் அடக்கத்துடன் இருக்கின்றனர். ஆனால் அது போன்று அடக்கத்துடன் அறிவாளிகளால் இருக்க முடிவதில்லை. பாவிகள் உரத்துச் சத்தமிட்டு அழலாம். ஆனால் அறிவாளிகளுக்குத் தெரியும். அவர்களுக்குத் தங்களது அறிவின் பேரில் ஒரு பிடிவாத குணம் உண்டு. அவர்கள் அகங்காரம் மிக்கவர்கள். கடினமானவர்கள். அவாகளை உருகவைக்க முடியாது. அவர்கள் வெளிப்படையானவர்களில்லை. அவர்களது கதவுகளும் சன்னல்களும் அறிவு என்னும் கதவு கொண்டு மூடப்பட்டுள்ளது. அவர்கள் படித்த புனிதப் புத்தகங்களினால் மூடப்பட்டுள்ளது.

உண்மைக்கு வருவதென்றால் கற்றுக்கொள்வதைவிடக் கற்றுக் கொள்ளாமல் இருக்க வேண்டும். நீங்கள் கற்றுக் கொண்டதை மறக்க வேண்டும். அடைதல் என்பதல்ல. அடையாமலிருக்க வேண்டும். கற்றுக் கொள்ளுதல் என்பதல்ல. கற்றுக் கொள்ளாமலிருக்க வேண்டும். கற்றுக் கொள்ளாமலிருப்பதுதான் ஒரு வழி. அடைவதென்பது எப்படி உங்களுக்கு முடிகிறதோ, அதேபோல அடையாமலிருக்கவும் முடியும். நீங்கள் அடைந்த அறிவையெல்லாம் எந்த நிபந்தனையுமின்றி முழுமையாக, பற்றுதலின்றி விட்டுவிட முடியும். நீங்கள் கல்மிஷமில்லாமல் ஆக முடியும். அந்தக் களங்கமற்ற தன்மை உங்களை வீடு சேர்க்கும்.

...சுபூதி சொன்னார்: "இல்லை பிரபு, எதுவும் இல்லை."

ஒரு குருவுக்கும் சீடனுக்கும் இடையே எது பரிமாறப் பட்டிருக்கும். உண்மையில்லை. அறிவுமில்லை. பின்னர் எது மாற்றம் கண்டிருக்கும்? உண்மையில் எதுவுமே மாற்றம் கண்டிருக்காது. ஒரு குருவுக்கு முன்னால் சீடனுக்கும் ஆழத்தில் ஏதோ ஒன்று நிகழுகின்றது. எதுவும் மாற்றம் காணுவதில்லை. எதுவும் குருவிடமிருந்து சீடனுக்குப் பயணிப்பதில்லை. எதுவுமேமில்லை. ஆனால் அந்தக் குருவின் முன்னிலையில் ஏதோவொன்று ஆழத்திலிருந்து மேல் நிலைக்கு வரத் துவங்குகின்றது. குருவின் முன்னிலை என்பது சீடனுக்கு அவனது இருப்பை அர்த்தமுள்ள தாக்குகிறது. எதுவும் கொடுக்கப்படுவதோ அல்லது பெறப்படுவதோ இல்லை. குருவின் இருப்பே சீடனுக்குத் தூண்டுதலாக அமைந்து அவன் மாற்றம் காண உதவியாக அமைகிறது.

ஆனால், ஒரு சீடன் தனது குருவினால்தான் தன்னால் எல்லாமே அடைய முடிந்தது என்று எண்ணுகிறான். எதுவுமே குரு செய்யவில்லை. உண்மையான குரு என்பவர் எதையும் செய்வதே கிடையாது. அவர் செய்வதெல்லாம் உண்மையில் உங்களுடன் இருப்பது மட்டுமே. உங்களுக்குக் கிடைக்கும்படியாக இருக்கிறார். அவருடைய வேலை யெல்லாம் எளிமையானது. அவர் அங்கிருப்பதுதான் அது. ஒரு சூரியனைப் போல.

சூரியன் காலையில் எழுகிறான். பகலெல்லாம் மலர்கள் இதழ் விரித்தபடி கிடக்கின்றன. சூரியன் எதையும் தருவதில்லை. சூரியன் வந்து இதழ் விரிப்பதில்லை. சூரியனால், எதுவுமே செய்யப்படுவதில்லை. சூரியனின் அந்த ஒளியின் காரணமாக இதழ்கள் விரியத் துவங்கு கின்றன. இதழ்கள் விரிதல் என்பதே அதனுள்ளிருந்துதான் வருகிறது. மலர்தல் என்பதும் வாசம் வீசுவதென்பதும் மலர்களிலிருந்துதான் வருகின்றது. சூரியன் என்பது அதற்கு எதையும் சேர்ப்பதேயில்லை. அதன் பிரசன்னம் என்பது

ஒரு தூண்டுதலையே தருகின்றது. சூரியனின் தோற்ற மில்லாமல் மலர்கள் இதழ் விரிப்பதென்பது நிச்சயம் நிகழக்கூடிய ஒன்றல்ல. மலர்தல் என்பதே தன்னால் முடியாது என்றுகூட அதற்குத் தெரியாது. அதற்குத் தன்னால் எவையெல்லாம் முடியும் அல்லது தன்னால் எவையெல்லாம் சாத்தியப்படக்கூடும் என்பதெல்லாம் கூடத் தெரியாது.

ஒரு குரு என்பவர் உங்களால் எவையெல்லாம் சாத்தியமாகக்கூடும் என்பதை உணரவைக்கிறார். அவரால் அடைய முடியுமென்றால் உங்களாலும் முடியும். அவர் உங்களைப் போன்றவர்தான். எலும்புகளினாலும் ரத்தத்தாலும் ஆனவர்தாம். அவர் உங்களைப் போன்றவரே தான். அவரால் ஒன்று முடிகிறதென்றால், அவரது மொட்டு மலர முடியுமென்றால் நீங்களும் ஏன் ஆக முடியாது? இந்த ஓர் எண்ணமே உங்களது ஆழ்மனத்தில் பொதிந்து உங்களை ஸ்தம்பிக்கச் செய்யும். உங்களது சக்தி யெல்லாம் மேலெழுந்து வரச் செய்யும். உங்களது மொட்டு மெல்ல மலர ஆரம்பிக்கும்.

இதைத் தான் கிழக்கில் 'சத்சங்கம்' என்று சொல்வார்கள். குருவின் சன்னிதானத்தில் இருப்பது. ஓர் உண்மை யான சீடன் என்பவன் தனது குருவுக்கு முன்னால் எப்படி இருப்பது என்பதை உணர்ந்து வைத்திருப்பான். குரு இருக்கிறார். ஆனால், அவருக்கு முன்னால் எப்படி இருப்பது?

நீங்கள் சூரியகாந்தி மலரைப் பார்த்திருக்கிறீர்களா? அதுவே சீடனுக்கான இலச்சினை. சூரியன் எங்கெங் கெல்லாம் நகருகிறதோ அங்கெல்லாம் சூரியகாந்தியும் நகரும். அது எப்போதுமே சூரியனைப் பார்த்தபடியே இருக்கும். காலையில் கிழக்கு நோக்கி இருக்கும். மாலையில் மேற்கு முகம் பார்த்து இருக்கும். சூரியகாந்தி

தான் இலச்சினை, உதாரணம். சீடனுக்கும் அதுவே உதாரணம்.

புத்தர் கேட்கிறார்: "சுபூதி, நீ என்ன நினைக்கிறாய்? நான் தீபங்கரரிடமிருந்து ஏதாவது கற்றுக் கொண்டிருக் கிறேனா?" சுபூதி பதில் சொல்கிறார், "இல்லை பகவானே" -ஏனெனில் கற்றுக் கொள்வதற்கென்று ஏதுமில்லை. இதனால் புத்தர் தீபங்கரரிடம் நன்றியில்லாதவர் என்று பொருளா? இல்லை. அவர் ஞானமடைந்த பின்பு அவர் முதலில் நன்றி தெரிவித்தது தீபங்கரருக்குத் தான். தீபங்கரர் வெகு காலத்துக்கு முன்பே வெளியில் முடிவற்ற வெளியில் மறைந்து போனார். அவர் இருந்த சுவடு கூடத் தெரிய வில்லை. அவர் புத்தர் நினைவில் மட்டுமே இருந்தார். வேறு எங்குமே இல்லை.

தீபங்கரரைப் பற்றி எந்த ஒரு புத்தகமும் இப்போது இல்லை. ஒரு வேளை அந்தக் காலத்திலெல்லாம் புத்தகங் கள் எழுதப்படாமலிருக்கலாம். அவரைப் பற்றி எந்த ஒரு குறிப்புமில்லை. புத்தர் ஒருவர்தாம் அவரைப் பற்றிக் குறிப் பிட்டிருக்கிறார். மூவாயிரம் ஆண்டுகள் கழிந்துவிட்டன. தீபங்கரரைப் பற்றி யாருக்குமே எதுவுமே தெரியவில்லை. ஆனால் புத்தர் ஞானமடைந்ததும் அவரது முதல் நன்றியறிதல், முதலில் நன்றி தெரிவித்தது தீபங்கரருக்குத் தான். ஏன்? ஏனெனில் அவரது முன்னிலையில்தான் காத்திருத்தல் என்பது உணர்ச்சி மிகுந்த செயலாயிற்று. ஒரு புத்தராக முடிந்தது. அவரது முன்னிலையில்தான் புத்தராக வேண்டும் என்று எண்ணம் ஏற்பட்டது. அவரது முன்னிலையில்தான் அவரது கனவு விரியத் துவங்கியது. மூவாயிரம் ஆண்டுகளுக்குப் பின்னரே தமக்கு இருந்த தடைகளையும், இடையூறுகளையும் விட முடிந்தது. ஆனால் காலம் என்ற முடிவற்ற தன்மையில் மூவாயிரம் வருடங்கள் என்பது எவ்வளவு? ஒன்றுமில்லை... வெறும் சில கணங்கள்தாம்.

ஏன் சுபூதியைப் பற்றிப் புத்தர் கேட்கிறார்? ஏனெனில் சுபூதி புத்தரிடமிருந்து கற்றுக்கொள்வதற்கு ஏதுமில்லை என்று புரிந்துகொள்ள வேண்டுமே என்பதை உணர வைப்பதற்காகத்தான். புத்தரும்கூடத் தீபங்கரரிடமிருந்து ஒன்றுமே கற்றுக் கொள்ளவில்லை. அதனால்தான், "ஒன்றுமில்லை சுபூதி. என்னிடமிருந்து கற்றுக் கொள்வதற்கு ஒன்றுமில்லை. நீ என் கூடவே இரு. கற்றுக்கொள்ள வேண்டும் என்ற நோக்கில் பார்க்காதே. கற்றுக்கொள்ள வேண்டும் என்று எப்போது பார்கிறாயோ அந்தக் கணமே நீ என்னுடன் இல்லாதவனாகிப் போய்விடுவாய்" என்று சொல்கிறார்.

இங்கும்கூட இரண்டு வகையான மனிதர்கள் இருக்கிறார்கள். சீடர்கள், மற்றும் மாணவர்கள் மாணவர்கள் என்பவர்கள் எப்போதும் எதையோ தேடிக்கொண்டிருப்பவர்கள். எதையோ கற்றுக் கொள்வதற்காகத் தேடிக் கொண்டிருப்பார்கள். அவர்கள் இங்கு எதையோ சேகரித்துக்கொண்டு பின்னர்த் தமக்கு இது தெரியும் என்று பெருமை பேசிக்கொள்கிறார்கள். அவர்கள் வைரங்கள் இருக்கையில் வெறும் வண்ணக் கற்களைச் சேகரிப்பவர்கள்.

சீடன் என்பவன் அறிவை வளர்த்துக்கொள்ளுவதில் விருப்பமில்லாதவன், அவனுக்குத் தன்னை வளர்த்துக் கொள்வதில்தான், வெறுமனே என்னோடு இருப்பதில் தான், வேறு எந்தக் காரணத்துக்காகவும் இல்லாமல், எந்தக் குறிக்கோளும் இல்லாமல் என்னோடு இருப்பதில்தான் ஆர்வமதிகம். அவனுடைய இதயம் தொடப்பட்டுவிட்டது. அவனது ஆசை அவனுள் எழத்துவங்கிவிட்டது.

அன்றொரு நாள் இரவு சரோஜ் இங்கிருக்கும்போது அவளுக்கு இறப்பை நினைக்கும்போதே மிகவும் பயம் வந்து விடுவதாகச் சொன்னாள். "நீ ஏன் அவ்வளவு பயப்பட

வேண்டும்?" என்று நான் கேட்டேன். அவளுடைய பதில் மிக அழகாக இருந்தது. "இறப்பைப் பார்த்துப் பயப்பட வில்லை ஓஷோ, நான் இன்னும் எதைப் பற்றியுமே அறியவில்லையே, எதையுமே அடையவில்லையே, நான் இன்னும் எதையுமே உணரவில்லையே. நான் உண்மையைப் பற்றி அறியாமலேயே இறந்துவிடுவேனோ என்று பயமாக இருக்கிறது. அதுவே எனது பயம்."

ஒரு சீடன் என்பவன் இருப்பில் அளவற்ற தாகமுடைய வனாக இருத்தல் வேண்டும். உண்மையை உணர உண்மை யைப் பற்றி அறிய அல்ல! உண்மையிலேயே தாகமுடைய வராக. அவளுக்கு இறப்பைப் பற்றிப் பயமில்லை. அவ ளுக்கு இறப்பு என்று ஒன்று வந்து எனக்கும் அவளுக்கும் இடையே உள்ள அன்பைப் பிரித்துவிடப் போகின்றதே என்ற பயம். இறப்பு என்பது வந்து அவள் குடிப்பதை, உண்மையை அறிவதை, அவளுடைய ஆன்மாவில் ஏற்படும் ஆயிரத்தொரு விஷயங்களை மாற்றிவிடப் போகின்றதே என்பதில்தான் அவளுடைய பயம். அதுவே அவளுடைய பயம்.

ஒரு சீடன் என்பவன் தன்னைப் பற்றி (Being) அறிவதில் அல்ல... தன்னைப் பற்றியே ஆர்வமுடையவனாக இருத்தல் வேண்டும். அவனுக்குக் கடவுளைப் பற்றி அறிவதில் அல்ல. கடவுளை ருசிக்க விருப்பம் இருக்க வேண்டும். அந்தச் சாற்றை அருந்த விருப்பம் இருக்க வேண்டும். அந்தக் கடல் என்னும் எல்லையற்ற சக்தியுடன் ஒன்றாக விருப்பம் இருக்க வேண்டும்.

நினைவில் வையுங்கள், நீங்கள் ஒரு மாணவன் எனும்போது அவ்வளவாகப் புத்திசாலியாக இருக்கிறீர்கள் என்று சொல்ல முடியாது. ஒரு மாணவனாக இருப்பது என்பது இங்குப் புத்திசாலித்தனமான செயலல்ல. இது ஒரு பள்ளிக்கூடமல்ல. வாழ்க்கை இங்குக் கிடைக்கிறது.

ஆனால், நீங்கள் ஒரு சீடனாக இருக்க வேண்டும். சீடன் என்றால் அவன் தைரியமாக, குருவின் அருகில் வர வேண்டும். அதன் விலை எவ்வளவு ஆனாலும் பரவா யில்லை. சீடன் எனும்போது அவன் தனது குருவின் அருகில் இருக்கக்கூடிய அளவுக்கு அபாயத்தை ஏற்றுக்கொள்ளும் துணிவு இருக்க வேண்டும். அபாயத்தை ஏற்றுக்கொள்ளும் துணிவு! ஏனெனில், நீங்கள் இறந்து போவீர்கள். மொட்டு மடிந்து போகும். அதன் பின்னர் தான் மலர் வரும். விதை இறந்து போனால்தான் மரம் வளரும். நீங்கள் இறந்துதான் போக வேண்டும். அதன் பின்னர்தான் புனிதம் உங்களிடம் மலரும்.

புத்தர் கேட்டார்: "சுபூதி, ததாகதர், தீபங்கரரரிடமிருந்து கற்றுக் கொண்ட தர்மம் ஏதாவது உண்டென்று நீ நினைக்கிறாயா?"

ஒரு மகத்தான விஷயத்தைத் தேடிக் கொண்டிருப்பவர் எழுதினார்: "நான் புத்திசாலிகளிடம் பதிலுக்காகச் சென்றேன். பல புத்திசாலிகள் இருந்தார்கள். ஒவ்வொரு வரும் ஒரு பதிலை வைத்துக்கொண்டிருந்தனர். இதன் மூலம்தான் அவர்கள் எல்லோரும் தங்களுக்கே துரோகம் செய்துவிட்டார்கள் என்பதைக் கண்டுபிடித்தேன். ஆனால் சில பேர் வேறு மாதிரியாகவும் இருந்தனர். ஒன்றோ அல்லது இரண்டு பேர். அவர்கள் களங்கமற்ற தேவைகளுக் காக அமர்ந்திருந்தனர். அவர்கள் எனது கேள்வியைக் கேட்டுச் சிரித்துவிட்டனர். எனது முகத்துக்காக, பதில் சொல்லியே ஆக வேண்டும் என்று நான் வற்புறுத்தியதன் பேரில் தாராளமாக இன்னும் கேள்விகள் எழுப்பினர்.

'அவர்களுடன் இருந்த கணங்களில் நான் ஞானத்தைக் கூட மறந்து அவர்களுடன் சேர்ந்து ஒரு முட்டாளைப் போல, குழந்தையைப் போலச் சிரித்துக் கொண்டே இருந்தேன். எனக்கு உண்மையிலேயே புத்திசாலிகளிட

மிருந்து பதிலே வரவில்லை. புத்திசாலிகளை என்னிடம் அனுப்பியதும்கூடப் புத்திசாலித்தனமற்ற செயல்தான். அதன் பின்னர் நான் எப்படிப் புத்திசாலித்தனத்தைப் புரிந்துகொள்ள முடியும்? அதனைச் சொல்ல முடியும் என்றாலும்கூட. அதைச் சொன்னாலும்கூட எப்படிப் புரிந்துகொள்ள முடியும்? உண்மையிலேயே புத்திசாலிக ளெல்லாம் உண்மையிலேயே புத்திசாலித்தனமான பதில்களைச் சொல்வதில்லை."

உண்மையிலேயே புத்திசாலிகளெல்லாம் தனது எல்லாவற்றையும், தன்னையேகூடத் தந்து விடுகின்றனர். உண்மையிலேயே புத்திசாலிகளெல்லாம் தன்னையே உங்களுக்குக் கிடைக்கும்படியாக இருப்பார்கள். நீங்கள் தைரியசாலியாக இருந்தால் அவர்களைச் சாப்பிடலாம். அவர்களைக் குடிக்கலாம். அதைத்தான் இயேசு கிறிஸ்து அவரது சீடர்களிடம் சொன்னார்: "என்னை உண்ணுங் கள்; என்னைப் பருகுங்கள்" என்று. குரு உண்ணப்படல் வேண்டும். குருவை அப்படியே உள்வாங்கிக் கொள்ள வேண்டும். ஜீரணிக்கப்படல் வேண்டும். அதன் பின்னரே நீங்கள் உங்களது சொந்த உண்மையின் மேல் தள்ளாடி விழுவீர்கள். கற்றுக்கொள்வதற்கு எதுவுமில்லை. எந்தத் தர்மமும் எந்தக் கொள்கையும் கற்றுக் கொள்வதென்று இல்லை. எந்தத் தத்துவமும் கற்றுக் கொள்வதில்லை.

*புத்தர் கூறினார்: "ஒரு போதிசத்துவர், 'நான் இணக்கமான புத்தப் பிரதேசத்தைப் படைத்துவிட்டேன்' என்று கூறினால், அவர் தவறாகப் பேசுவதாகப் பொருள். ஏன் அப்படி? சுபூதி, இணக்கமான புத்தப் பிரதேசம், இணக்கமானதன்று என்று ததாகதர் கற்றுத் தந்துள்ளார். அதனால்தான் அவர், 'இணக்க மான புத்தப் பிரதேசம்' பற்றிப் பேசுகிறார்..."*

இந்தப் புத்தபூமி மிக முக்கியத்துவம் வாய்ந்தது. நீங்கள் அதனைப் புரிந்துகொள்ள வேண்டும். ஏனெனில் அதைத்

தான் நான் செய்து கொண்டிருக்கிறேன். புத்தபூமியை உருவாக்குகிறேன். புத்தபூமியை உருவாக்குவதற்காகவே இந்த உலகத்திலிருந்து விலகிச்செல்கிறேன். மிகமிக விலகிச்செல்கிறேன். அதனால் முற்றிலும் புதிய வித்தியாச மான சக்தி உங்களுக்குக் கிடைக்கக்கூடும்.

புத்தபூமி என்பதான ஒன்றில் நீங்கள் உறங்கிக் கொண் டிருக்கும்போது புத்தர் விழித்துக் கொண்டிருக்கிறார். புத்தபூமி என்பது நீங்கள் வளருவதற்கான, முதிர்ச்சி யடையத் தேவையான, உங்களது உறக்கத்தை விழித்தெழச் செய்வதற்கான, நீங்கள் பிரக்ஞையைப் பார்த்து அதிர்ச்சி யடையும்படியான ஒரு மின்சாரக்களம். நீங்கள் அங்கு ஆழ்ந்து உறங்கவே முடியாது. நீங்கள் அங்கே விழித்துக் கொண்டுதான் இருக்க வேண்டும். ஏனெனில், அங்கு அதிர்ச்சிகள் எப்போது வேண்டுமானாலும் நிகழும்.

புத்தபூமி என்பது ஒரு சக்தி தளம். அது ஒரு தூய்மையான பூமி. உலகமற்ற உலகம். பூலோகத்தில் ஒரு சொர்க்கம். இங்குத்தான் புத்தர் முதிர்ச்சியடைகிறார். அந்த இடத்தில் ஆன்மிக வளர்ச்சி என்பது வெகு விரைவாக நிகழும். புத்தபூமி என்பதே ஒரு கருப்பை போன்றது.

கருப்பை (Matrix) என்ற வார்த்தையே இலத்தீன் மொழியி லிருந்து வந்தது. அதன் பொருள் கர்ப்பப்பை என்பதாகும். அந்த வார்த்தையிலிருந்துதான் Matter, Mother போன்ற வார்த்தைகளெல்லாம் வந்தன.

கர்ப்பப்பை என்பது புதியதாக உருவாக்கப்பட்ட உயிருக்கு மூன்று விஷயங்களை அளிக்கின்றன. சாத்தியக் கூறுகளுக்கான உற்பத்திஸ்தானம், சாத்தியக் கூறுகளைக் கண்டுபிடிப்பதற்கான உற்பத்திஸ்தானம். இவை நடைபெறு வதற்கான ஒரு பாதுகாப்பான இடம். அதைத்தான் நாமும் இப்போது செய்யப் போகிறோம். புத்தபிராயத்தைப் பற்றி ஒரு புதுக் குழு பரிசோதனை செய்யப்போகின்றது. சக்தி

உங்களுக்குக் கிடைக்கும்படியாகச் செய்யப் போகிறேன். சாத்தியக் கூறுகளையும் உங்களுக்கு விளக்கமாகப் புரியும்படியாகச் சொல்லப்போகிறேன். நீங்கள் உங்களால் என்ன செய்ய முடியும் என்பதைப் புரிந்துகொள்ளுங்கள். நீங்கள் உங்களுக்கு ஒரு பாதுகாப்பான இடத்தை அமைத்துக்கொண்டு அங்கிருந்து பணிபுரியலாம். உலக இடையூறுகள் உங்களைத் தொந்தரவு செய்யாதவாறு, அங்கு இருக்கும் கூட்டத்தினர் உங்களைத் தொந்தரவு செய்யாமல் இருக்கும்படியாக! சாதாரண விஷயங்கள், ஒதுக்கப்பட வேண்டிய விஷயங்கள், கூச்சங்கள் இவை எல்லாமே தொந்தரவு செய்யாமல் இருக்கும் இடம், இங்குப் புத்தராக ஆவது எப்படி என்ற விஷயம் மட்டுமே பிரதானமாக இருக்கும்படியான இடம், இங்கு மற்றவையெல்லாமே உங்களது மனத்திலிருந்து மறைந்துவிடும். பணம், பதவி, கௌரவம் இவை எல்லாமே முக்கியத்துவம் இழந்து போய், இவை எல்லாமே அவற்றுக்குரிய உண்மையான இடத்தை மட்டுமே தரப்பெறும் இடம், ஒரு நிழல் உலகம். நீங்கள் வெளிப்படையாகவே இழக்கப்படாமல் இருக்கும் இடம்.

வெளிப்படையாகவே மாயா என்பது அகப்பட்டுவிடும். அதுவே உலகின் மிகப் பெரிய மாயை. வெளிப்படை என்பது நமது மனத்தில் அத்தனை தாக்கத்தை உண்டு பண்ணியுள்ளது. புத்தபூமி என்பதே வெளிப்படையிலிருந்து நம்மை விடுவிக்கப்படுவதற்காகத்தான். அந்தக் குழுவின் அமைதியில, எந்தவித அடக்குமுறையுமின்றி, ஒதுக்கப்பட வேண்டிய விஷயங்கள் ஏதுமின்றிக் குருவும் சீடனும் மட்டுமே முழுமையாக அந்த நாடகத்தில் ஈடுபட முடியும் ஒரு இடம். குரு சீடனின் கால்களைத் தொடும் அந்த ஒரு செயலே இங்கு எல்லை. குருவும் சீடனும் உண்மையில் மூழ்கிப்போகும் இடம்.

*புத்தர் கூறினார்:* "ஒரு போதிசத்துவர், 'நான் இணக்கமான புத்தப் பிரதேசத்தைப் படைத்துவிட்டேன்' என்று கூறினால்,

*அவர் தவறாகப் பேசுவதாகப் பொருள். ஏன் அப்படி? சுபூதி, இணக்கமான புத்தப் பிரதேசம், இணக்கமானதன்று என்று ததாகதர் கற்றுத் தந்துள்ளார். அதனால்தான் அவர், 'இணக்க மான புத்தப் பிரதேசம்' பற்றிப் பேசுகிறார்..."*

இப்போது புரிந்துகொள்ளுங்கள். யாராவது, "நான் புத்தபூமியை உருவாக்குவேன்" என்று சொன்னால் அவர் 'நான்' என்பதற்கு அழுத்தம் தருவாரேயானால் அது பொய். ஏனெனில், எவர் ஒருவரிடம் 'நான்' இன்னும் அழியாமல் இருக்கிறதோ அவரால் புத்தபூமியை உருவாக் கவே முடியாது. எவர் ஒருவரிடம் 'நான்' இல்லையோ அவரால் மட்டுமே புத்தபூமியை உருவாக்க முடியும். உண்மையில் அவர் உருவாக்குகிறார் என்று கூறுவதுகூடத் தவறாகும். மொழி இதனைத் தெரிவிக்கப் போதுமானதாக இல்லை.

சம்ஸ்கிருத வார்த்தைகள் சிறிதே போதுமானதாக இருக்கின்றன. சம்ஸ்கிருதத்தில், 'நிஸ்பாதயதி' என்பார்கள். இதற்குப் பல அர்த்தங்கள் உள்ளன. அதற்கு உண்டாக்குதல் என்று ஒரு பொருள் உண்டு. அதற்கு அடைதல் என்று ஒரு பொருளும் உண்டு. பழுத்தல் என்று ஒரு பொருள் உண்டு. முதிர்ச்சி அடைதல் என்றும் பொருள் உண்டு. வாழ்க்கையை வாழ்தல் என்ற பொருளும் உண்டு. அதுதான் உண்மையான பொருள்.

ஒரு புத்தர் எதையும் உருவாக்குவதில்லை. அவர் ஊக்குவிக்கிறார். அவர் ஊக்குவிக்கிறார் என்பதுகூடச் சரியல்ல. அவரது முன்னிலையில் நிகழ்ச்சிகள் நடக்கின் றன. அவரது முன்னிலையில் ஊக்குவிக்கப்படுகின்றன. விஷயங்கள் ஆரம்பிக்கின்றன. அவரது முன்னிலை என்பதே நெருப்பு, பொறி, விஷயங்கள் நகர ஆரம்பிக் கின்றன. ஒரு விஷயம் இன்னொன்றுக்கு இட்டுச் செல்கிறது. ஒரு சங்கிலியே உருவாக்கப்படுகிறது.

இப்படித்தான் நாங்கள் செய்துகொண்டிருக்கிறோம். நான் எனது அறையில் அமர்ந்து ஒன்றும் செய்வதில்லை. உலகெங்கும் இருக்கும் தேடுபவர்கள் எனது அறைக்கு வந்து சேருகிறார்கள். நான் ஒரு கடிதம்கூட எழுதுவதில்லை. வெறும் முன்னிலைதான். ஒருவர் வருகிறார்... இன்னொருவர் வருகிறார். இப்போது புத்தபூமிக்கு அவசியமான நேரம் வந்துவிட்டது. ஒரு கர்ப்பப்பை தேவைப்படுகிறது. ஏனெனில் உங்களுக்குத் தெரியாது. ஆயிரக்காணக்கானவர்கள் வழியில் வந்து கொண்டிருக்கிறார்கள். அவர்கள் ஏற்கெனவே நகரத் தொடங்கிவிட்டனர். அவர்கள் ஏற்கெனவே வரலாமா என்று யோசிக்கத் துவங்கி விட்டனர்.

இன்னும் நிறைய மக்கள் அங்கே இருக்கின்றனர். பெரிய புத்தபூமி இருக்கும்போது அதன் மகத்துவமும் அதிகமாகும். இப்போது சாத்தியமாகும் என்பது என்னவெனில் இதுவரை உலகிலேயே உருவாக்கப்பட்ட புத்தபூமிகளிலேயே பெரிய மகத்தான புத்தபூமியை இங்கு உருவாக்க முடியும் என்பதே. ஏனெனில், இதுவரை இதுபோன்ற தேடல்கள் நிகழவில்லை. காரணம் இதுவரையில் இதுபோன்ற பிரச்சினைகள் யாருக்கும் ஏற்பட்டதில்லை.

நாம் இப்போது மனித சமுதாயத்துக்குப் புதிய ஏதோவொன்று நிகழப்போகிறது என்ற ஒரு பயத்தில் இருக்கிறோம். மனித சமுதாயம் என்பது அழிந்து போகும். அல்லது காணாமல் போகும். அல்லது நாம் ஒரே தாவாக தாவுவோம். அல்லது ஒரு பெரிய அடி எடுத்து வைப்போம். ஒரு புதிய உயிர் உருவாகும். நாம் இப்போது சரியாகச் சொல்ல வேண்டுமென்றால் பல லட்சக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்னால் குரங்குகள் மரத்திலிருந்து இறங்கி வந்தபோது மனித சமுதாயம் ஆரம்பித்து ஒரு புதிய உயிர் தோன்ற ஆரம்பித்ததே, அதுபோல. மறுபடியும் அந்தக் கணம் நெருங்கி வந்துகொண்டிருக்கிறது. இது ஒரு

அபாயகரமான களம். ஏனெனில் இப்போது எல்லாச் சாத்தியக்கூறுகளும்...

குரங்குகள் இறங்கிவந்து பூமியில் வாழமுடியாமல் போயிருக்கலாம். அவை பூமியில் இறந்தும் போயிருக்க லாம். ஒரு சில குரங்குகள் இந்த அபாயத்தை ஒரு சவாலாக ஏற்றிருக்கலாம். அவற்றை மற்றக் குரங்குகள் முட்டாள்கள் என்பது போலப் பார்த்திருக்கலாம். ம்ம்ம்? அந்தக் குரங்குகள் மரத்தின்மேல் அழகாக அமர்ந்து மகிழ்ச்சியாகப் பழங்களை சாப்பிட்டுக்கொண்டிருந்தவை. அவை ஒருவேளை "இவை அசட்டுத்தனமாக இருக்கின்றனவே" என்று நினைத்திருக்கலாம். நீங்கள் முதலில் எதற்காகப் பூமியில் வாழ வேண்டும் என்று நினைக்க வேண்டும்? எதற்காக உங்களுக்கே நீங்கள் பிரச்சினை களைக் கொடுத்துக்கொள்ள வேண்டும்? எங்களுடைய தந்தைகளும் அவர்களுடைய தந்தையர்களும் மரங்களில் தானே வாழ்ந்தார்கள்?"

மறுபடியும் அதேபோன்று ஒரு சந்தர்ப்பம் வரப் போகிறது. மனிதன் பலகாலமாக, தான் வாழ்ந்தது போலவே வாழ்ந்துவிட்டான். இந்த நூற்றாண்டின் இறுதியில் ஒரு பெரிய தாண்டுதல் மனித சமுதாயத்தில் நிகழ வாய்ப்பிருக்கிறது. மனிதன் புதிய மனிதனாகச் சாத்தியமிருக்கிறது. அந்தப் பூமியில் புதிய எதிர்காலத்தை உருவாக்கலாம்.

ஆனாலும், ஒரு போதிசத்துவர், "நான் ஒரு சுருதிபேத மற்ற சங்கீதத்தை ஒத்த (harmonious) புத்தபூமியை உருவாக்கு வேன்" என்று சொல்லக்கூடாது. இங்கு அழுத்தம் 'நான்' என்பதற்கு இருக்குமேயானால் அதன்பின் அதனைச் சொன்னவர் போதிசத்துவர் இல்லை. புத்தர்கள் கூட 'நான்' என்ற வார்த்தையைப் பயன்படுத்துகின்றனர். ஆனால் அவர்கள் உண்மைக்குத் தொடர்பானவற்றைக் குறிக்க

அதே அர்த்தத்தில் பயன்படுத்துவதில்லை. அது வெறும் மொழி வழக்குதான். அது பயன்பாடுதான்.

புத்தர் சொல்கிறார்: "அந்தச் சங்கீதத்தை ஒத்த சுருதியுடன் கூடிய புத்தபூமியும்கூட அப்படிப்பட்டதல்ல" என்கிறார். எதற்காக? ஏனெனில் சுருதியுடன் கூடிய எனும்போது சுருதியற்றதாகவும் இருக்கிறது என்பதாகப் பொருள். சுருதியுடன் கூடிய என்றால் சுருதியற்றதான விஷயங்களும் உள்ளன. ஆனால், அவை முரண்பாடோடு இப்போது இல்லை என்பதாக அர்த்தம் வருகிறது. புத்தர் சொல்வது என்னவெனில், சுருதியற்ற விஷயங்கள் எல்லாமே ஒன்றிப்போய்க் கரைந்து போதல் என்பதாகப் பொருள். ஆனால் அதனைச் சுருதியுடன் கூடிய என்று சொல்லமுடியாது. ஏனெனில், சுருதி என்றால் பல விஷயங்கள் தேவை. சுருதி என்றால் துகள்கள் எல்லாம் ஒன்றி இருத்தல், புத்தர் சொல்கிறார்: "உண்மையான சங்கீதத்தையொத்த சுருதியுடன் கூடிய என்றால் நிறைய என்பதே இல்லாமல் போய்விடவேண்டும். எல்லாம் ஒன்று சேர்ந்து ஒன்றாகிவிட வேண்டும்."

ஆனால், சங்கீதத்தனமான, (Harmony) உண்மையிலேயே சுருதியுடன் கூடிய என்பதை அப்படி அழைப்பது தவறு. உண்மையிலேயே சுருதியுடன் கூடியது என்பதானதை எளிமையாகச் சொல்ல வேண்டுமெனில் ஒற்றுமை. முரண்பாடுகள் இல்லாத, உராய்வுகள் இல்லாத- ஏனெனில், சிறியதாக இருக்கும் எல்லாமே மறைந்து போய், கரைந்து போயிருக்கும்.

ஏன் அப்படி? சுபூதி, இணக்கமான புத்தப் பிரதேசம், இணக்கமானதன்று என்று ததாகதர் கற்றுத் தந்துள்ளார். அதனால்தான் அவர், 'இணக்கமான புத்தப் பிரதேசம்' பற்றிப் பேசுகிறார்...

மறுபடியும் நினைவுகொள்ளுங்கள். இது மொழியில் சரியாக விளக்கமுடியாத கேள்வி. அதனாலேயே புத்தர் திரும்பத் திரும்ப நீங்கள் போதுமான அளவு விளக்கமுடியாத மொழியின் கைதியாக அகப்பட்டுக் கொண்டு விடக்கூடாதே என்றுதான் மறுபடியும் இதனைச் சொல்கிறார்.

புத்தர் கூறினார்: "சுபூதி, மீண்டும் சொல்கிறேன் கேள்: ஓர் ஆணோ, பெணணோ, கங்கைக் கரை மணலிலும் மிகப் பலவான உடைமைகளைத் துறந்துவிடலாம். இன்னொருவர் தர்மத்தின் பேருரையிலிருந்து நான்கு வரி எடுத்து மற்றவர்களுக்கு விளக்கிக் காட்டலாம். இந்த இரண்டாவது நபர், நிரம்பிய வலிமை பெறுவார். இவர் பெறக்கூடிய சிறப்புகள் கணக்கிட முடியாதவை; அளவிட முடியாதவை."

ஜென் குருக்களில் மகத்தானவரான ஹியூ நெங் என்பவர், ஜென் மதத்தில் ஆறாம் வம்சத்தவரான அவர், வைர சூத்திரத்தில் நான்கு வரிகளை மாத்திரமே கேட்டு ஞானமடைந்ததாகச் சொல்லப்படுகிறது. அவர் கடைத் தெரு வழியாகச் சென்றுகொண்டிருந்தார். அவர் எதையோ வாங்குவதற்காக ஞானத்தைப் பற்றி யோசிக்காமல் சென்று கொண்டிருந்தார். சாலையோரத்தில் அமர்ந்திருந்த யாரோ ஒருவர் வைர சூத்திரத்தைப் படித்துக்கொண்டிருந் தார். அந்த மனிதனும் வைர சூத்திரத்தைத் தனது வாழ்நாள் முழுவதும் படித்துக் கொண்டிருப்பவர். அவர் ஓர் அறிவாளி அல்லது ஒரு கிளியைப் போலத் திருப்பிச் சொல்பவர். அவரது வழக்கமான செயலது. அவரது கடன் அது. ஒவ்வொரு நாளும் காலையும் மாலையும் இது போலச் சொல்வார்.

அது மாலை வேளை. எல்லோரும் கடையை மூடிவிட்டு வீடு திரும்பும் நேரம். ஹியூ நெங் அந்தப் பக்கமாகச் சென்று

கொண்டிருந்தார். அவர் நான்கு வரிகள்தான் கேட்டார். அவர் ஊமையாகிப் போனார். அங்கேயே நின்றார். அந்த இரவு முழுவதும் அங்கேயே நின்றதாகச் சொல்லப் படுகிறது. வைர விதிகள் முடிந்தது. கடைத்தெரு மூடப்பட்டு விட்டது. அதனை ஜெபித்துக் கொண்டிருந்தவர், சென்று விட்டார். ஹியூ நெங் நின்றுகொண்டிருந்தார். நின்று கொண்டிருந்தார், நின்று கொண்டேயிருந்தார். அடுத்த நாள் காலை அவர் முற்றிலும் வேறு மனிதராக மாறியிருந்தார். அவர் வீடு திரும்பவேயில்லை. அவர் மலைகளிடம் சென்றார். இந்த உலகம் தொடர்பற்றுப் போனது. கேட்பது மட்டுமே செய்தாரா? ஆமாம். அது சாத்தியமானதே. ஹியூநெங் களங்கமற்ற மனிதராக இருந்திருக்க வேண்டும். அவர் மிகவும் அதிசயமான மனிதர்.

புத்தர் சொன்னது என்னவென்றால், வைர சூத்திரத்தி லிருந்து ஒரு பத்தியை விவரித்தாலும்கூட, நான்கு வரிகளைச் சொன்னாலும்கூட அவரது மதிப்பு அளவற்ற தாக ஆகிவிடும். கங்கைக் கரையிலுள்ள மணல் துகளின் அளவு இருக்கும் தனது உடைமைகளையெல்லாம் துறந்த ஆண் அல்லது பெண்ணைவிட மதிப்பு உயர்ந்ததாகிவிடும் என்பதாகச் சொன்னார்.

துறந்துவிடுதல் என்பது எந்த விதத்திலும் உதவியளிக் காது. புரிந்துகொள்ளுதல் என்பது பயனளிக்கும். உலகைத் துறந்துவிடுதல் என்பது எந்த இடத்துக்கும் உங்களை இட்டுச் செல்லாது. இதனை நீங்கள் புரிந்துகொள்ள வேண்டும். துறவு என்பதே முட்டாள்தனமான முயற்சி. முட்டாள்கள் தான் துறந்து விடுவார்கள். புத்திசாலிகள் விஷயம் என்னவென்று புரிந்து கொள்வார்கள். புத்திசாலிகள் எப்போதும் தப்பிக்க முயல்வதேயில்லை. முட்டாள்கள் தான் தப்பிக்க முயல்வார்கள். ஏனெனில், அவர்களால் வாழ்க்கையை எதிர்நோக்க முடியாது. அவர்கள்

வாழ்க்கையை எதிர்க்க முடியாது. அதனைச் சவாலாக ஏற்றுக் கொள்ள முடியாது. அந்த அளவுக்கு அவர்களுக்குத் தைரியம் இல்லை. அவர்கள் இமாலயத்துக்குச் செல்கின்றனர். பேத்திய மடாலயங்களுக்குத் தப்பிச் செல்கின்றனர். அல்லது வேறெங்காவது செல்கின்றனர். உலகத்தை விட்டு ஓடுகின்றனர். அவர்கள் கோழைகள். மதம் என்பது உங்களுக்குத் தைரியம் இருக்கும்போது மட்டும் சாத்தியமானது. அளவற்ற தைரியம் அதற்குத் தேவை.

புத்தர் சொல்கிறார்: "இந்தச் சூத்திரங்களையெல்லாம் முழுமையாகக் கேட்கும் போது உங்களுக்கு மிகவும் மதிப்பு வாய்ந்ததாக அமையும்."

பரந்த மனத்தோடு கேட்கவேண்டும். சில சமயங்களில் ஒரே ஒரு வார்த்தையும் கூட உங்களை மாற்றக் கூடிய சக்தி வாய்ந்ததென்கிறார்.

நான் ஒரு மனிதரைப் பற்றிக் கேள்வியுற்றேன். அவர் ஹியூநெங் போன்றவராக இருக்க வேண்டும். அவர் மிகவும் வயதாகி அறுபத்தைந்து அல்லது எழுபது வயதாகியிருக்க வேண்டும். அவர் தமது காலை நடைப் பயிற்சிக்காகச் சென்றிருந்தார். ஏதோ ஒரு குடிசையில் தனது மகனையோ வேறு யாரையோ ஒரு பெண் எழுப்பிக் கொண்டிருந்தாள். சாலையில் சென்று கொண்டிருக்கிறாரே வயதான மனிதர். அவருக்கு, "எழுந்திருக்க வேண்டிய நேரம் வந்துவிட்டது. காலை ஆகிவிட்டது இன்னும்கூட இரவு இல்லை" என்று அவள் சொன்னது காதில் விழுந்தது.

வயதான மனிதருக்கு இந்த வார்த்தைகள் கேட்டன. ம்ம்ம்? அது வைர சூத்திரம்கூட இல்லை. அது யாரோ ஒரு பெண் தன்னைச் சேர்ந்த யாருக்கோ சொல்லிக் கொண்டிருந்தது. "எழுந்திரு. போதும். நீ வெகு நேரம் தூங்கிவிட்டாய். இனிமேலும் இரவு இல்லை. சூரியன்

உதித்துவிட்டான். காலை ஆகிவிட்டது" என்று சொன்னது கேட்டது. அவர் இவற்றைக் கேட்கும் மனோபாவத்தில் இருந்திருக்க வேண்டும். அதிகாலை, பறவைகள் பாடு கின்றன. சூரியனும், குளிர் தென்றலும் வந்துகொண்டிருந்த நேரத்தில் இந்த வார்த்தைகள் அவரை உலுக்கின. இதயத்தைத் துளைக்கும் ஒரு அம்பு போல, "இது காலை நேரம். நீ மிகுந்த நேரம் உறங்கிவிட்டாய்." இந்த வார்த்தைகள் அவரை எழுப்பிவிட்டன. அவர் வீடு திரும்பவேயில்லை. நகரத்துக்கு வெளியே சென்றார். ஒரு கோயிலில் அமர்ந்து தியானம் செய்ய ஆரம்பித்து விட்டார்.

மக்கள் அவரைப் பற்றிக் கேள்வியுற்று அங்கே வந்தார்கள். அவருடைய குடும்பமும் அங்கே வந்திருந்தது. "நீ என்ன செய்து கொண்டிருக்கிறாய்?" என்று அவர்கள் கேட்டார்கள்.

அவர் சொன்னார்: "இது காலை நேரம், இனிமேலும் இரவு இல்லை. நான் ஏற்கெனவே போதுமான அளவு தூங்கிவிட்டேன். போதும். போதும். என்னை மன்னித்து விடுங்கள். என்னைத் தனியே விடுங்கள். நான் விழித்துக் கொள்ள வேண்டும். மரணம் வருகின்றது. நான் விழித்துக் கொள்ள வேண்டும்."

எப்போது அவர் அந்தப் பக்கம் செல்ல நேர்ந்தாலும் அவர் அந்த வீட்டின் அருகில் சென்று– அவர் அந்தப் பெண்ணைக் கண்டதேயில்லை– அங்கு வணங்கி விட்டுத் தான் மேலே செல்வார். அந்த வீடுதான் அவரது கோயில். அந்தப் பெண்தான் அவரது குரு. அவர் அந்தப் பெண்ணைப் பார்த்ததேயில்லை. அந்தப் பெண் வெகு சாதாரணமான பெண்தான்.

சில சமயங்களில் சில வார்த்தைகளேகூட, மிகச் சாதாரண மனிதர்கள் சொல்லும்போது கூட நல்ல இதயம்

என்னும் நிலத்தில் விழும்போது அவை ஒரு பெரிய மாற்றததை உண்டுபண்ணக் கூடும். அப்படியிருக்கையில் புத்தரின் வார்த்தைகளைப் பற்றி என்ன சொல்வது?...

*அதன் பிறகு, தர்மத்தின் பாதிப்பினால், சுபூதியின் விழிகளிலிருந்து கண்ணீர் பெருகத் தொடங்கியது.*

*கண்ணீர் வடித்த பின், அவர், புத்தரை நோக்கி இவ்வாறு கூறினார்: "பிரபுவே, அது அற்புதம்! மகா அற்புதம்! எல்லாம் கடந்தவரே, இந்தத் தர்மப் பேருரையை எவ்வளவு நன்றாகத் ததாகதர் போதித்துவிட்டார்... அதன் மூலம் புலப்படும் தன்மை எனக்குள் உருவாகிவிட்டாலும்கூட... அதற்குப் புலன்களால் அறியப்படும் பண்பு கிடையாது. ஏன் அப்படி? ஏனென்றால், புத்தர்கள், மகான்கள், எல்லாப் புலனறிவுப் பண்புகளையும் கைக்கழுவி விட்டவர்களாவர்."*

மிகுந்த நல்ல குணங்கள் கொண்டவரான சுபூதியைப் போன்றவர்கள் அழுவதும், அவர்களது கண்களில் நீர் வருவதும், மிக அபூர்வமானவை. ஆனால், அது போன்ற உணர்ச்சி மிகுந்த, புத்தரிடமிருந்து அவ்வளவு அன்பு அவர் மீது பொழியும்போது, இது போன்ற வைர வரிகள் அவர் மீது மழைபோல விழும்போது, அவர் அளவுக்கதிகமாகச் சந்தோஷப்பட்டார்.

*அதன் பிறகு, தர்மத்தின் பாதிப்பினால், சுபூதியின் விழிகளிலிருந்து கண்ணீர் பெருகத் தொடங்கியது.*

நினைவில் கொள்ளுங்கள். உங்களின் நன்றியைத் தெரிவிக்க கண்ணீரைவிடச் சிறந்த ஆழமான வழியில்லை. கண்ணீரைவிட உயர்ந்த பிரார்த்தனை எதுவுமே இல்லை. சில நாள்களுக்கு முன்னர்க் கீத்கோவிந்த் எசேலனிலிருந்து வந்திருந்தார். அவரால் ஒரு வார்த்தைகூடப் பேச முடியவில்லை. கண்ணீர், கண்ணீர். அவர் ஒரு தர்ம சங்கடமான

நிலையை உணர ஆரம்பித்தார். அவர் ஏதோ சொல்ல முயன்றார். ஆனால் ஒன்றுமே வரவில்லை.

அந்தக் கண்ணீர் மிக அழகானது. அப்போதிலிருந்து அவர் அழுதுகொண்டுதான் இருக்கிறார். இந்த இரண்டு அல்லது மூன்று வாரங்களாக அவர் இங்கு அழுதபடியே இருக்கிறார். அவர் எனக்கு எழுதிக்கொண்டே இருக்கிறார்: "ஓஷோ, என்ன செய்வது? இந்தக் கண்ணீரை எப்படி நிறுத்துவது? அது வந்துகொண்டே இருக்கிறதே." அந்தத் தாக்கம். அவர் என்னுடன் தொடர்பு வைத்துக் கொண்டார். அதனால்தான் கண்ணீர். அவர் என்னைக் கண்டுகொண்டார். அதனால்தான் கண்ணீர். அவரது கண்கள் நன்றியைக் காட்டுகின்றன. அதனால்தான் கண்ணீர். அவரது கண்கள் முழுமையடைந்துவிட்டன. அதனால்தான் கண்ணீர்.

கண்ணீரைக் கண்டு பயந்துவிடாதீர்கள். இப்போதைய நாகரிகம் உங்களைக் கண்ணீரைக் கண்டு பயப்படும் அளவுக்கு வைத்திருக்கிறது. அது உங்களிடையே ஒரு குற்ற உணர்வை உருவாக்கியுள்ளது. கண்ணீர் வரும்போது நீங்கள் ஒரு தர்மசங்கட நிலையை உணர்கிறீர்கள். நீங்கள், "மற்றவர்கள் என்ன நினைப்பார்கள்? நான் ஆண். இருந்தும் நான் அழுகிறேன். இது ஒரு பெண்மைத்தன மான, குழந்தைத்தனமான செய்கையாக இருக்கிறதே? இது இப்படி இருக்கக் கூடாது'' என்று நினைக்கிறீர்கள். உங்களது கண்ணீரை நிறுத்திக்கொண்டு உங்களுக்குள் வளரும் ஏதோ ஒன்றைக் கொலை செய்கிறீர்கள்.

கண்ணீர் என்பது உங்களிடம் உள்ள மற்ற எல்லா வற்றையும்விட அழகானது. ஏனெனில், கண்ணீர் என்பது உங்களிடம் இருப்பவற்றில் ததும்பி வழிபவற்றில் இருந்து உருவாவது. கண்ணீர் என்பது சோகத்தினால்தான் வரவேண்டும் என்பதல்ல. சில நேரங்களில் அளவுக்கதிக

மான மகிழ்ச்சியினால்கூட அது ஏற்படும். சில நேரங்களில் அதிகமான அமைதியின் காரணமாக, சில சமயங்களில் பரவசத்தினால், காதலினாலும்கூடக் கண்ணீர் வரும். உண்மையில் கண்ணீர் சோகத்துக்கோ அல்லது மகிழ்ச்சி யான சமயத்திலோ செய்வதற்கு ஒன்றுமே இல்லை. உங்களது இதயத்தை ஸ்தம்பிக்கச் செய்யும் எதுவும், அதீதமாகச் சந்தோஷப்படச் செய்யும் எதுவும், எதுவுமே அதிகமாகும்போது, நீங்கள் கட்டுப்படுத்த முடியாமல் போகும்போது, ததும்பி வழியும்போது, அது கண்ணீரை வரவழைத்துவிடுகிறது.

அவற்றை மகிழ்ச்சியோடு ஏற்றுக்கொள்ளுங்கள், அனுபவியுங்கள், பாதுகாத்து வையுங்கள், வரவேற்பளியுங்கள். உங்களது கண்ணீரின் வழியே எப்படிப் பிரார்த்தனை செய்வது என்று தெரிந்துகொள்வீர்கள். உங்களது கண்ணீரின் வழியே எப்படிப் பார்ப்பது என்று தெரிந்து கொள்வீர்கள். கண்ணீர் நிறைந்த விழிகள் உண்மையை அறியும் சக்தி படைத்தவை. கண்ணீர் நிறைந்த விழிகள் வாழ்க்கையின் அழகைப் பார்க்கும் சக்தி படைத்தவை.

*அதன் பிறகு, தர்மத்தின் பாதிப்பினால், சுபூதியின் விழிகளிலிருந்து கண்ணீர் பெருகத் தொடங்கியது.*

*கண்ணீர் வடித்த பின், அவர், புத்தரை நோக்கி இவ்வாறு கூறினார்: "பிரபுவே, அது அற்புதம்! மகா அற்புதம்! எல்லாம் கடந்தவரே, இந்தத் தர்மப் பேருரையை எவ்வளவு நன்றாகத் ததாகதர் போதித்துவிட்டார்... அதன் மூலம் புலப்படும் தன்மை எனக்குள் உருவாகிவிட்டாலும் கூட... அதற்குப் புலன்களால் அறியப்படும் பண்பு கிடையாது. ஏன் அப்படி? ஏனென்றால், புத்தர்கள், மகான்கள், எல்லாப் புலனறிவுப் பண்புகளையும் கைக்கழுவி விட்டவர்களாவர்.*

அவர் சொல்கிறார்: "உங்களுடைய பிரசன்னம், உங்களுடைய ஆறுதல் அளிக்கும் வார்த்தைகள், உங்களது

அன்பு, உங்களது கருணை எல்லாம் ஒன்று சேர்ந்து என்னுள் அறியும் சக்தியை உருவாக்குகிறது. அது என்னுள் ஆழ்ந்த ஒரு பார்வையை உண்டு பண்ணியுள்ளது. உண்மை என்றால் என்னவென்று அறியும் சக்தியை உருவாக்கி யுள்ளது... இது ஓர் அறியும் சக்தியே அல்ல. 'சுபூதி சொல் கிறார்' ஆனால் நான் நினைவூட்டுகிறேன். இது ஒரு அறி யும் சக்தியல்ல. ஏனெனில் அறிவதற்கு யாருமேயில்லை. அது முற்றிலுமாக ஆழ்ந்த பார்வை (Congnition) மட்டுமே."

தெரிந்துகொள்வது என்பது துவங்கிவிட்டது. ஆனால் தெரிந்தவர்கள் என்று யாருமில்லை. தெரிந்தது என்பதும் எதுவுமில்லை. தெரிந்துகொள்வது என்பது மட்டும் துவங்கிவிட்டது. அது வெறும் தெரிந்துகொள்ளுதல் மட்டுமே.

கண்ணீர் வடித்த பின், அவர், புத்தரை நோக்கி இவ்வாறு கூறினார்: "பிரபுவே, அது அற்புதம்! மகா அற்புதம்! எல்லாம் கடந்தவரே, இந்தத் தர்மப் பேருரையை எவ்வளவு நன்றாகத் ததாகதர் போதித்துவிட்டார்... அதன் மூலம் புலப்படும் தன்மை எனக்குள் உருவாகிவிட்டாலும்கூட... அதற்குப் புலன்களால் அறியப்படும் பண்பு கிடையாது. ஏன் அப்படி? ஏனென்றால், புத்தர்கள், மகான்கள், எல்லாப் புலனறிவுப் பண்புகளையும் கைக்கழுவி விட்ட வர்களாவர்."

"இப்போது, எனக்கு இது சொல்லப்பட்டது எதனால் என்று தெரியும். புத்தர்கள் பார்க்கும் சக்தியையெல்லாம் விட்டு வந்துவிட்டார்கள் என்று ஏன் சொல்லப்பட்டது என்று எனக்குத் தெரியும். காரணம் கிரகித்துக் கொள்வது என்ற ஒரு செயலுக்குக் கிரகிப்பவர் என்றும், கிரகிக்க வேண்டியது என்றும் இரண்டு பொருள்கள் தேவை. பார்ப்பது என்ற ஒரு செயலுக்குப் பார்ப்பவர் என்றும் பார்க்கும் பொருள் என்றும் இரண்டு பொருள்கள் தேவை.

இது போன்ற இரட்டை விஷயங்கள் தவிர்க்கப்பட்டு விட்டன. ஒன்றாகிவிட்டன.

இதைக் கூறுவது மிகக் கடினமானது.

மைக்கேல் ஆதமின் வார்த்தைகள் நமக்குத் துணை புரியும்.

"எல்லா வார்த்தைகளையும், பிரயோகப்படுத்தியாகி விட்டது. இருந்தும் சொல்வதற்கு என்ன இருக்கிறது? இங்கேயே, இப்போதே, என்ன இருக்கிறது? மரங்களிலிருந்து வீசும் காற்று. அது வீசுகிறது. மரம் வளைகின்றது. இதைப் பல வார்த்தைகளில் சொல்லியாயிற்று. நாம் புன்னகைப்ப தற்குக் காரணமாக இது அமைந்துவிட்டது. உண்மைக்கு ஒரே வார்த்தைதான். வாழ்க்கைதான் அந்த வார்த்தை. இறத்தல் அந்த வார்த்தை. அன்பு அந்த வார்த்தை. மகிழ்ச்சி அந்த வார்த்தை. காற்று, மரங்கள், குயில்கள், மீன்கள், குழந்தைகள், சூரியன் எல்லாமே நிஜங்கள். யற்றவை எல்லாமே வெறும் வார்த்தைகள்.

"சூரியனைப் பற்றிய வார்த்தைகள் நிழலைப் பற்றியதான உண்மையைக்கூடச் சொல்ல முடிவதில்லை. அவை மிகவும் குளிர்ந்தவை. சூரியன் என்றால் என்னவென்று உரத்துச் சத்தமிடும் மனத்துக்கோ அல்லது தேடிக் கொண்டிருக்கும் இதயத்துக்கோ தெரிந்திருக்க முடியாது. ஏனெனில் சூரியன் என்பதே வேறு வகையானது. அது சத்தமிடுவதில்லை. சிரமப்படுவதில்லை. ஆனால், இந்த அமைதியான பூமி யானது இதைப் புரிந்துகொண்டாற்போலவே தெரிகிறது. எந்தவிதச் சிரமமும்படாமல் சூரியன் என்றால் என்ன வென்று புரிந்துகொண்டதுபோலத் தெரிகிறது. இந்த இறப்பு என்ற வெளித்தோற்றத்துக்குள், இந்தப் பனித்திரைக்குப் பின்னே மத்தியிலும் இந்தக் குளிர் காலத்துக்கு கூடப் பூமிக்குச் சூரியன் என்றால் என்னவென்று தெரிந்திருக் கிறது."

ஒரு சீடன் என்பவன் தாகமெடுத்துக் கொண்டிருக்கும் பூமியைப் போல இருக்க வேண்டும். தாகமெடுக்கும் பூமிக்கு மேகம் என்றால் என்னவென்று தெரியும். சீடன் என்பவன் திறந்திருக்கும் பூமியைப் போல, மென்மையான பூமியைப் போல இருக்க வேண்டும். மென்மையான பூமிக்குச் சூரியன் என்றால் என்னவென்று தெரியும். இந்த உணர்வை வெளிக்காட்டத் தெரியாது. ஆனால் அதற்குத் தெரியும்.

இதைத்தான், "பார்வை என்பதாக எனக்குள் உருவாகி விட்டது. நான் அதைச் சொல்ல முடியாது. நான் அதனைப் பிடிப்பதற்காக இல்லை. நான் அதைக் கைப்பற்றுவதற்காக இல்லை. நான் வெறும் 'ஒன்றுமில்லாத தன்மை' படைத்தவன்தான். ஆனால் பார்க்கும் சக்தி என்பது என்னுள் வந்துவிட்டது. தரிசனம் என்பது கிடைத்துவிட்டது. நான் பார்த்துவிட்டேன். ஆனால் பார்ப்பவன் என்பது இல்லாமல் போய்விட்டது" என்று சுபூதி சொல்கிறார்.

புத்தர் கூறினார்: "அது அப்படித்தான் சுபூதி. அவர்கள் மிக அற்புதமாக ஆசீர்வதிக்கப்பட்டவர்கள் ஆவர். இந்தச் சூத்திரங்களைக் கேட்டவர்கள், நடுங்குதல் இல்லை; அஞ்சுதல் இல்லை; அஞ்சி அலறுதலும் இல்லை..."

இந்தச் சூத்திரங்கள் இறப்பு என்பதற்கொப்பானவை. சிலுவையில் அறையப்படுவதற்கொப்பானவை. நீங்கள் இறக்க வேண்டும். இறப்பின் வழியே மட்டுமே வாழ்க்கை என்றால் என்னவென்று தெரியும். மீட்சி பெறுதல் என்பதும் சாத்தியம். அதனால்தான், புத்தரும்கூட இந்தச் சூத்திரங்கள் மிக அபாயகரமானவை என்று சொல்கிறார்.

சுபூதி, மேலும், ததாகதர் குறிப்பிடும் பொறுமையின் பூரணத்துவம், உண்மையில் பூரணத்துவமுடையதே அன்று.

*ஏன் அப்படி? ஏனென்றால், கலிங்க மன்னன், எனது கை, கால்களிலிருந்து தசையை வெட்டி எடுத்தபோது, எனக்கு என் சுயம் பற்றிய உணர்வோ, என் இருப்புப் பற்றிய உணர்வோ, உயிர், உடல் பற்றிய உணர்வோ ஏற்படவே இல்லை.*

*ஏன் அப்படி? சுபூதி, எனக்கு அப்போது அத்தகைய சுய உணர்வு ஏற்பட்டிருந்தால், அந்தச் சமயத்தில் எனக்கு அன்பின்மை பற்றிய உணர்வும் ஏற்பட்டிருக்கும்.*

சுபூதியைத் தனது முந்தைய பிறவியின் கடந்த கால அனுபவங்களை நினைவுக்குக் கொண்டு வர வைக்கிறார். கலிங்கத்து மன்னன் தனது அவயவங்களைத் துண்டித்துக் கொண்டபோது ஏற்பட்ட அனுபவங்களைச் சொல்கிறார். கைகளை அறுத்தபோது, எனது கால்களை அறுத்தபோது, எனது நாக்கைத் துண்டித்தபோது, எனது கண்களைத் தோண்டியபோது என்னால் அவற்றைப் பார்த்துக் கொண்டுதான் இருக்க முடிந்ததே தவிர, எனக்குள் 'நான்' என்று ஒன்று எழுவதைப் பார்க்கவே முடியவில்லை. பார்ப்பவர் என்று யாருமே இல்லை. அவதிப்படுபவர் என்று யாருமே இல்லை. எனக்குள் 'நான்' என்ற ஓர் உணர்வு உண்டாகியிருக்குமேயானால் எனக்கு மன்னனின் மீது கோபம் வந்து கேடுகளாக எண்ணங்கள் தோன்றியிருக்கக் கூடும். என்னைக் கொல்லும் மன்னனிடம் கோபம் கொண்டிருப்பேன். எனக்குக் கோபமே வரவில்லை. என்னால் கோபப்பட முடியவில்லை."

அகங்காரமே கோபத்தைக் கொண்டு வருகின்றது. கோபம் என்பது அகங்கரத்தின் நிழல். அகங்காரம் ஆக்கிரமிக்க வேண்டும் என்ற எண்ணத்தைக் கொண்டு வருகிறது. வன்முறையைக் கொண்டுவருகிறது. அகங்காரம் மறையும்போது வன்முறையும் மறைந்துவிடுகிறது. ஒரு மனிதன் அகங்காரத்தை விட்டொழிக்கும் போதுதான் அன்போடு இருக்க முடிகிறது. ஒரு மனிதன் அன்பு

செலுத்த முடிவது எப்போதென்றால் அகங்காரம் அடியோடு மறையும் போதுதான்.

*மேலும் சுபூதி, சகலரின் மகிழ்ச்சிக்காகவே ஒரு போதி சத்துவர், இவ்வகையில் பரிசுகள் வழங்குகிறார்.*

*ஏன் அப்படி? சுபூதி, இந்த இருப்பின் உணர்வு, வெறும் உணர முடியா நிலையாகும். ததாகதர் பேசிய 'இருப்ப வர்கள்' பற்றிய எல்லாமும், இல்லாதவையே ஆகும்.*

*ஏன் அப்படி? ஏனென்றால், ததாகதர் பேசுவதெல்லாம் எதார்த்தத்திற்கு இசைவாகவே. அவர் பேசுவதெல்லாம் உண்மையே. எது உள்ளதோ அதையே அவர் பேசுகிறார். அவர் பேச்சு வேறு எவ்விதமாகவும் இல்லை.*

ஒரு ததாகதர் தவறாகப் பேசமாட்டார்...

சுபூதி, 'ததாகதர்' என்ற சொல், 'உள்ளபடியுள்ள உண்மை' என்பதற்குச் சமமானது.

புத்தர் சொல்கிறார்: "நான் 'யதாபூதம்' என்பதைப் பற்றி மாத்திரமே சொல்லியிருக்கிறேன். வேறெதையும் சொல்ல வில்லை. அதனால்தான் நான் சொன்னவையெல்லாமே குழப்பத்தை உண்டுபண்ணக் கூடியவையாக, அபத்தமான வையாக -ஏனெனில் உண்மை என்பதே அபத்தமானவை தான்- இருக்கின்றன. இதனைப் புரிந்துகொள்ள வேண்டுமெனில் நியாய தர்க்க வாதங்களை விட்டுவிட வேண்டும்."

இன்றைக்கு இது போதும்.

எனது அன்பான ஓஷோ,
உங்களுடன் எனக்கிருக்கும் உறவிலும் கூட
வார்த்தைகள் சில சமயங்களில்
முக்கியத்துவத்தை இழந்து போகின்றன.
புத்தரும் போதிசத்துவரும் பேசுவது எதற்காக?

நீங்கள் எதைப்பற்றிப் பேசுகிறீர்கள்? எந்த பேச்சு? அது நிகழவேயில்லை. யாருமே எதுவுமே சொல்லவில்லை. யாருமே எதையும் கேட்கவும் இல்லை. வைர சூத்திரம் என்பதில் சூத்திரம் என்று எதுவும் இல்லை, மகாசத்துவா, அதனால்தான் இது வைர சூத்திரம் என்று அழைக்கப் படுகிறது. இது முற்றிலும் வெற்றாக இருப்பது. நீங்கள் இந்த வார்த்தைகளில் சிக்கிக் கொண்டீர்களேயானால் செய்தியை இழந்துவிடுவீர்கள். வைர சூத்திரம் என்பது முற்றிலும் வெறுமையானதாகும். அதில் செய்தியே இல்லை. அதில் படிப்பதற்கோ அல்லது கேட்பதற்கோ எதுவும் இல்லை. முற்றிலும் மௌனமானது.

நீங்கள் வைர சூத்திரத்தில் ஏதாவது படித்தீர்களே யானால் நீங்கள் எதையோ இழக்கிறீர்கள். நீங்கள் ஏதாவது கொள்கைகளை, ஏதாவது தத்துவத்தைப் பார்த்தீர்களே யானால் நீங்களே கற்பனை செய்து கொண்டிருக்கிறீர்கள் என்று பொருள். அது உங்களின் கனவு. புத்தர் எதுவும் சொல்லவேயில்லை. சுபூதியும் எதையும் கேட்டதில்லை.

அந்தப் பேசாமல் இருக்கும் செய்கையில், கேட்காமல் இருக்கும் செய்கையில் ஏதோ ஒன்று நிகழ்ந்திருக்கிறது. வார்த்தைகளுக்கப்பால் ஏதோவொன்று. ஆனந்தர் அவற்றை வார்த்தைகளாகத் கிரகித்துக் கொண்டிருக் கின்றார். ஆனால், அவற்றை வார்த்தைகளாக வெளிப் படுத்தவில்லை. அது இரண்டு வெறுமையாக இருப்பவர் களிடையே நடந்த பரிமாற்றம்.

நீங்கள் காலையில் கடற்கரைக்குச் செல்கிறீர்கள். தூய்மையான காற்று உங்களின் மீது வீசுகிறது. கடலலைகள், சூரிய கிரணங்கள் எல்லாமே உங்களின் மீது படுகின்றன. நீங்கள் வீடு திரும்பிய பின்பு கண்டதை விவரிக்கிறீர்கள். நீங்கள் வார்த்தைகளில் தான் விவரிக்கிறீர்கள். 'கடல்' என்ற வார்த்தை தூய்மையாகி விடாது. 'சூரியன்' என்ற வார்த்தை சூரியனாகி விடாது. 'தூய்மையான' என்ற வார்த்தை கடலாகிவிடாது. நீங்கள் எப்படித் தெரிவிப்பீர்கள்? நீங்கள் கடற்கரையினின்றும் திரும்பியபின்பு உங்களது அன்பார்ந்தவர்கள் கேட்கிறார் கள்: "என்ன நிகழ்ந்தது?" எனக் கேட்டால் எவையெல்லாம் நடந்ததோ அவற்றையெல்லாம் வார்த்தைகளில் கொண்டு வர வேண்டும். எல்லாவற்றையும் வார்த்தைகளில் கொண்டுவர முடியாது என்று தெரிந்திருந்தாலும் கூட சொல்கிறாள். அவற்றை வார்த்தைகளில் சொல்ல முடியாது என்று தெரிகிறது. வார்த்தைகள் மிகவும் பலவீன மானவை.

புத்தருக்கும் சுபூதிக்கும் இடையே ஏதோவொன்று நிகழ்ந்திருக்கிறது. ஏதோ ஓர் ஆழ்ந்த பரிமாற்றம். ஒரு வேளை அவர்கள் ஒருவருக்கொருவர் கண்களைப் பார்த்திருக்கலாம். ஏதோ ஒன்று சுபூதியின் ஆழ்ந்த மனத்தில் தூண்டப்பட்டிருக்கலாம். இது புத்தரின் பிரசன்னத்தினால் நிகழ்ந்திருக்கலாம். ஆனந்தர் இதனை உங்களுக்காக விவரிக்கிறார். நீங்கள் கண்பார்வையற்றவர்

கள். உங்களால் ஒளியைப் பார்க்க முடியாது. நீங்கள் ஒளியைப் பார்க்க முடியாது. உங்களால் 'ஒளி' என்ற வார்த்தையைத்தான் கேட்க முடியும்.

ஆகவே நினைவில் கொள்ளுங்கள். வைர சூத்திரம் என்பது ஒரு சூத்திரமே இல்லை. அதனால்தான் இதனை வைர சூத்திரம் என்று அழைக்கின்றனர். மிகவும் மதிப்பு வாய்ந்தது. ஏனெனில் இதில் எந்தத் தத்துவமும் அடங்க வில்லை. எந்த முறைகளும் இல்லை. எந்த ஒரு கொள்கை களும் இல்லை. இதில் வார்த்தைகளே இல்லை. இது ஒரு வெற்றுப் புத்தகம்.

நீங்கள் வார்த்தைகளை மறந்துவிட்டால் இதில் வார்த்தைகளின் இடையே உள்ள இடைவெளிகளின் ஆழத்தில் செல்லலாம். உங்களால் இதில் உள்ள வாக்கியங்களை மறந்துவிட முடியுமேயானால், அந்த வார்த்தைகளின் இடையே ஆழத்துக்குச் செல்ல முடியும். அந்த இடைவேளையில்... சிறிய மௌனங்களில் இடையே செல்ல முடியும். அதன்பின் என்ன நடந்தது என்று அறிய முடியும். இது வார்த்தைகளினால் ஆன கருத்துப் பரிமாற்றம் அல்ல.

நானும் உங்களிடம் உரையாடிக்கொண்டிருக்கின்றேன். ஆனாலும் நான் உங்களுக்கு ஒன்றை நினைவுபடுத்து கிறேன். எனது செய்தி இந்த வார்த்தைகளில் இல்லை. நீங்கள் இந்த வார்த்தைகள் எனும் படிகளில் ஏறி எனது செய்தியை அடைய வேண்டும். வார்த்தைகளை படிக்கட்டாக உபயோகியுங்கள். நினைவில் கொள்ளுங்கள், படிக்கட்டுகளை உபயோகிக்கத் தெரியவில்லையென்றால் அதுவே இடையூறாக மாறிவிடக் கூடும்.

நீங்கள் மௌனமாக மௌனத்தைக் கவனியுங்கள்.

மகாசத்துவா, புத்தர் ஒரு வார்த்தைகூட உச்சரிக்க வில்லை. சுபூதியும் ஒரு வார்த்தைகூடக் கேட்கவில்லை.

இவையெல்லாமே ஆனந்தர் உங்களுக்காக உருவாக்கிய உணர்ச்சியிலான வார்த்தை வரைபடங்கள். இந்த வரைபடங்கள் தேசங்களைக் குறிப்பிடவில்லை. நீங்கள் இந்தியாவின் வரைபடத்தை வைத்திருந்தால் அது இந்தியா ஆகி விடாது. அது அப்படி ஆகவே முடியாது. அது எப்படி ஆக முடியும்? ஆனாலும் அது ஓரளவுக்கு உங்களுக்கு உதவ முடியும். அது உங்களை உண்மையான இந்தியா வுக்கு இட்டுச் செல்லும். அது சாலையோரமிருக்கும் மைல் கல்லுக்கு மேலே இருக்கும் அம்புக் குறியைப் போன்ற தாகும். அந்த அம்புக்குறி எதையோ சுட்டிக் காட்டுகிறது.

இந்த வைர சூத்திரங்கள் முற்றிலுமே மௌனத்தையே குறித்தபடி இருக்கின்றன. ஆகவேதான் முரண்பாடுகள். ஏனெனில் முரண்பாடுகள் வழியேதான் அமைதியை உருவாக்க முடியும். ஒவ்வொரு வார்த்தையும் அதனுடைய முரணான வார்த்தையின் வழியே உடனடியாக உச்சரிக்கப் பட்டு ஒன்றுக்கொன்று அழித்துக் கொள்ளப்படும்போது, அந்தச் சந்தர்ப்பத்தில் மௌனம் என்பது உணரப்படுகிறது.

எனது அன்பான ஓஷோ,
நான் என்னுள் ஆழ்ந்து போகும் போது நான் தனியனாக உணர்கிறேன். வெறுமைதான் மிஞ்சுகிறது. சில நேரங்களில் உங்களின் கண்களைப் பார்க்கும் போதும் எனக்கு அதே போன்று பெரிய வெறுமை தோன்றுகிறது. அதுவே இயற்கையெனில்- நான் முக்கியமாக தனியாக இருக்கும் சமயங்களில், அடிப்படையில் தனிமையாக இருக்கும்போது - ஒன்றிப்போதல் என்பதை, வேறு யாருடனாவது எல்லையற்ற அன்புடன் இருப்பதை முதன்மை ஸ்தானத்தில் எப்படி வைப்பது? அது ஒரு மாயை என்ற பிரக்ஞையுடன் இருப்பது மிகவும் சிரமமானதா? என்னுடைய சந்தேகத்தைத் தீர்த்து வையுங்கள்.

நீங்கள்தான் சந்தேகிப்பவர். நீங்கள்தான் சந்தேகமும். இதைத் தவிர வேறு சந்தேகமில்லை. முதலாவதாக 'நான் என்னுள் ஆழ்ந்து போகும்போது நான் தனியனாக உணர்கிறேன்' என்று சொல்கிறீர்கள். நீங்கள் ஏற்கெனவே உண்மையில் ஆழ்ந்திருந்தீர்களேயானால் நீங்கள் ஒருமையை உணர்வீர்கள். ஆனால் 'நான் தனியனாக உணர்கிறேன்' என்பதை உணரமாட்டீர்கள், ஏனெனில் அப்போது இரண்டு விஷயங்கள் உள்ளன. நான் என்பதும் தனியனாக இருப்பதுமாக இரண்டு விஷயங்கள். அப்போது நீங்கள் தனியாக இல்லை. அப்போது அனுபவிக்கின்றவர் மற்றும் அனுபவிக்கப்படுவது. கவனிப்பவர் மற்றும் கவனிக்கப்படுவது. அதன்பின் நீங்கள் தனியாக இல்லை. வேறு ஒருவரும் இருக்கிறார். அனுபவம் என்பதுதான் இன்னொருவர்.

நீங்கள் உண்மையிலேயே உங்களுக்குள் ஆழ்ந்து போகும்போது நீங்கள் உங்களை உணரவே மாட்டீர்கள். இதைத்தான் முழுமையாக புரிந்துகொள்ள வேண்டும். மேல்நிலையில் மட்டுமே அலைகள் இருந்து கொண்டிருக்கும். கடலின் ஆழத்தில் அலைகளைக் காணவே முடியாது. உங்களால் காண முடியுமா? கடலின் ஆழத்தில் அலைகளை எப்படிக் காண முடியும்? அலைகடலின் மேற்பரப்பில் மட்டுமே இருக்கும். காற்று இருந்தால்தான் அலை அடிக்க முடியும்.

'நான்' என்பது இருக்க வேண்டுமாயின் மேல்பரப்பில் 'நீ' என்பது இருந்தேயாக வேண்டும். 'நீ' என்ற காற்றுத் தேவை. உங்களுக்குள் ஆழ்ந்து போகும்போது நீ என்ற காற்று அங்கே இல்லாமல் போகின்றது. அப்போது நான் என்பது எப்படி இருக்கும்? நான் என்பதும் நீ என்பதும் இரட்டைகள். அவை ஒன்றுக்கொன்று ரத்து செய்து கொள்வதேயில்லை. ஆமாம். நீங்கள் தனிமையை உணருவீர்கள். ஆனால் நான் என்ற ஒருமையை உணரமாட்டீர்கள். 'நான்'

என்பது எப்படி இருக்க முடியும்? ஒருமை என்பது அழகானது. நான் மறுபடியும் ஒன்றை நினைவூட்டுகிறேன். ஒருமை என்ற வார்த்தை எல்லாம் ஒன்றானது. அப்படித் தான் அந்த வார்த்தை அமைக்கப்பட்டுள்ளது. மேல்பரப் பில் நீங்கள் எல்லாவற்றினும் தனியாக இருக்கிறீர்கள். உண்மையில் நீங்கள் தனிமையாக இருப்பதற்குக் காரணம் நீங்கள் எல்லாவற்றினும் தனித்து இருக்கிறீர்கள். ஆழத்தில் நீங்கள் மறைந்து போகும்போது, உங்களுக்கும் எல்லோருக் கும் வித்தியாசமில்லாமல் போய்விடுகிறது. எல்லோருமே ஒன்றுதான். 'நீங்கள்' இனிமேலும் இல்லாமல் போகிறீர்கள். ஒருமையிருக்கிறது.

'நான் என்னுள் ஆழ்ந்து போகும்போது, இன்னும் தனிமையாக இருக்கிறேன்' என்பதாகக் கூறுகிறீர்கள். நீங்கள் உங்களுள் ஆழ்ந்து போவதாகக் கற்பனை செய்து கொள்கிறீர்கள் என்று அர்த்தம். மனம் விளையாட்டுகளை விளையாடிக்கொண்டே இருக்கும். அது தனிமை என்ற விளையாட்டையும் விளையாடும். அது பிரார்த்தனை என்ற விளையாட்டையும் விளையாடும். தியானிப்பது போன்ற விளையாட்டையும்கூட விளையாடும். ஆனாலும் இன்னும் 'நான்' என்பது இருக்குமேயானால், நீங்கள் அது விளையாட்டுத்தான் என்று நிச்சயம் உணரலாம். உண்மையாக எதுவும் நிகழவில்லை என்று பொருள். அதனாலேயே மற்றவற்றின் மீது மறுபடியும் ஆசைகள் எழுகின்றன.

'நான்' என்பது தனியாக இருக்க முடியாது. அதற்கு வேறொன்றின் துணை வேண்டும். அதற்கு உணவிட, அதை வளர்க்க, மற்றொன்று தேவை. அது மற்றொன்றிற்கு உங்களை இட்டுச் செல்லும். அதனாலேயே நீங்கள் தனிமை யில் இருக்கும்போது நீங்கள் உங்களது அன்பானவர்களைப் பற்றி, உங்களது நண்பர்களைப் பற்றி, உங்களது தாயைப் பற்றி, உங்களது தந்தையைப் பற்றி, இதைப் பற்றி, அதைப்

பற்றி நினைக்கத் துவங்குகின்றீர்கள். ஓராயிரம் விஷயங்களைப் பற்றி எண்ணுகிறீர்கள். நீங்கள் கற்பனையில்கூட நிறைய 'நீ'க்களை உருவாக்குகிறீர்கள். ஒரு மனிதனைத் தனிமைச் சிறையில் மூன்று வாரங்களுக்கு மேல் அடைத்தால் தனக்குத் தானே பேசத் துவங்குவான். அவன் மொத்த உரையாடல்களையும் உருவாக்குவான். அவனே இரண்டாகப் பிரிந்துவிடுவான். நான் மற்றும் நீ. அவன் இரண்டாகிப் போன பின்பு விளையாட்டை விளையாடத் துவங்கலாம். 'நான்' என்பது 'நீ' என்பதில்லாமல் தனியே உருவாகாது.

"என்னுள் மேலும் மூழ்கும்போது மேலும் தனியாக இருக்கிறேன்."

இல்லை. நீங்கள் தனிமையாக உணர்கிறீர்கள். இந்த இரண்டு வார்த்தைகளை ஒரே அர்த்தத்தில் பயன்படுத்தாதீர்கள். தனிமையாக (Loneliness) உணர்வது என்பது எதிர்மறையான வார்த்தை. ஒருமை (Aloneness) என்பது நேர்மறையான வார்த்தை. தனிமையாக உணர்வது என்பதில் நீங்கள் மற்றொன்றை இழக்கிறீர்கள் என்று பொருள். மற்றொன்று இல்லாமல் போய்விடுகிறது. உங்களிடம் இடைவெளி வருகிறது. ஒருமையாக இருப்பது என்பதில் நீங்கள் முழுமையாக உங்களது இருப்பை உணர்கிறீர்கள். முழுமையாக இருக்கிறீர்கள். தனிமையாக உணர்வது என்பதில் மற்றொன்றின் இழப்பை உணர்கிறீர்கள். ஒருமையாக இருத்தல் என்பதில் உங்களது எல்லையற்ற தன்மையை உணருகிறீர்கள்.

நீங்கள் 'வெறுமை மட்டுமே இருக்கிறது' என்று கூறுகிறீர்கள். இல்லை. வெறுமை மட்டுமே இருந்தால் அப்போது வேறு பிரச்சினைகளில்லை. வெறுமை மட்டுமே இருந்து அதனை யாருமே உணரவில்லையெனில், யாருமே அறியவில்லையெனில் அதன்பின் பிரச்சினையே இல்லை. அதன்பின் சந்தேகம் என்பது எங்கிருந்து வருகிறது?

சந்தேகிப்பவர் எங்கிருந்து உருவாவார்? இல்லை. நீங்கள் அங்கிருக்கிறீர்கள். அப்போது வெறுமை என்பது எங்கிருந்து வரும்? அது உங்களது எண்ணம் மட்டுமே.

நான் குழந்தையாக இருக்கும்போது எங்கள் வீட்டிலும் நிகழ்ந்துள்ளது. நான் மிகவும் சோம்பேறித்தனமாக இருப்பேன். இன்னமும்கூட அப்படித்தான். நான் மிக மிகச் சோம்பேறித்தனமானவன். எனது குடும்பத்தினர் என் மீது நம்பிக்கை வைத்ததெல்லாம் போய்விட்டது. அதன் பின் என்னைப் பற்றி மறந்தே போனார்கள். ஏனெனில் நான் எதையும் செய்வதேயில்லை. நான் ஒரு மூலையில் அமர்ந்து, வெறுமனே அமர்ந்து கண்களை மூடியபடியோ அல்லது கண்களைத் திறந்தபடியோ இருப்பேன். நான் அவர்களிடமிருந்து காணாமலே போனதன் காரணமாக முற்றிலுமாக என்னை மறந்து போனார்கள்.

சில நேரங்களில் எனது தாய்க்கும் கடைத் தெருவிலிருந்து காய்கறிகளோ அல்லது வேறெதுவோ தேவையாக இருக்கும். நான் எனது தாயின் முன்னர் அமர்ந்திருக்கும் போது அவர் என்னிடம், “யாருமே இங்கிருக்கிறாற்போலத் தெரியவில்லையே. எனக்குக் கடைக்குப்போய் யாராவது காய்கறி வாங்கி வரவேண்டும்” என்று கூறுவார். நான் அவர் எதிரிலேயே அமர்ந்திருந்தும் கூட, “யாருமே இல்லையா?” என்பார்.

யாருமே இல்லாதவனாக நான் கருதப்பட்டேன். ஒரு சொறிநாய் வீட்டுக்குள் நுழைந்தாலும்கூட அதனை நுழைய விட்டுவிடுவேன். நான் உட்கார்ந்து கொண்டிருக்கும்போது அந்தச் சொறி நாய் உள்ளே நுழையும். அதனைப் பார்த்துக்கொண்டிருப்பேன். என்னுடைய தாயார் அவசரமாக அதனை வெளியே துரத்திவிட்டு, “இந்த நாயைத் துரத்துவதற்கு யாருமே இல்லை” என்று

சொல்வார்கள். ஆனால் நான் அங்கேதான் அமர்ந்து கொண்டிருப்பேன்.

நான் இருந்தும் இல்லாதவனாகக் கருத அவர்கள் பழகி விட்டனர். அது முற்றிலும் வித்தியாசமாக இல்லை. நான் அங்கேயே இருக்கிறேன். நான் அந்த நாய் உள்ளே நுழைவதையும் பார்க்கிறேன். நான் அவர்களின் வார்த்தை களையும் கேட்கிறேன். என்னால் கடைத்தெருவுக்குச் சென்று புதிய காய்கறிகள் வாங்கி வர முடியும் என்று தெரியும். நான் அந்த மொத்த எண்ணத்தையுமே பார்த்துச் சிரிப்பேன். எனது தாய் இங்கு யாருமே இல்லையா? என்று கேட்பதைப் பார்த்துச் சிரிப்புத்தான் வரும்.

அதுதான் உங்களுக்கும் நிகழ்கிறது. நீங்கள் அங்கிருக்கிறீர் கள். நீங்கள் அங்கு வெறுமையாக இருக்கிறது என்கிறீர்கள். நீங்கள் உங்களை மறக்கிறீர்கள். உங்களை நீங்கள் பொருட் படுத்தவில்லை. அப்படியில்லையெனில் நீங்கள் அங்கேயே இருக்கிறீர்கள். நீங்கள் அங்கில்லையெனில் வெறுமை அங் கிருக்கிறது என்று சொல்வது யார்? நீங்கள் அங்கில்லாத போது வெறுமை இருக்கிறது. அது தூய்மையான வெறுமை நிலை. அந்தத் தூய்மையே நிர்வாணம் என்பதாகும். ஞானம்! அதுவே விலை மதிப்பற்ற நிலை. பரந்துபட்ட நிலையானதும் அதுவே. அந்த நிலையைத்தான் எல்லோரும் தேடிக் கொண்டிருக்கின்றனர். ஏனெனில் அது எல்லையற்றது. முடிவற்றது. அதன் தூய்மை பூரணமானது. அது எந்த ஒன்றாலும் மாசுபடுத்தப்படாதது. நீங்கள்கூட அங்கிருப்பதில்லை. அங்கு ஒளி இருக்கும். அங்குப் பிரக்ஞை இருக்கும். ஆனால் அங்கு 'நான்' இருக்காது. 'நான்' என்ற பனிக்கட்டி இறுகிப்போன பிரக்ஞை. பிரக்ஞை என்பது உருகிப்போன பனிக்கட்டி. நீர்த்த நிலையில் இருக்கும். இதற்கும் மேலானது. நீர் கூட ஆவியாகிப் போன நிலை. கண்களால் காண முடியாது.

நீங்கள் சொல்கிறீர்கள்: "அது மாயை என்று தெரிந்திருக் கிறது." உங்களுக்கு 'நான்' என்பது விடுபடும்போது கிடைக்கும் அழகைப் பற்றித் தெரியாது.

நீங்கள் கேட்கிறீர்கள்: "தனியாக இருப்பது அடிப்படை யெனில், அது இயல்பானதேயெனில், 'நான்' இருப்பதே அதன் சாரம்தான் எனில் ஒன்றிப்போவது என்ற எண்ணமும், யாரிடமாவது எல்லையற்ற அன்பு செலுத்துவது என்ற எண்ணமும், எப்படி முதல் இடத்தை வகிக்கும்?"

அது வந்ததே இதன் காரணமாகத்தான். ஏனெனில் ஒருமையில் இருப்பது என்பது அடிப்படையில் முக்கியத் துவம் வாய்ந்தது. இந்து மதப் புனித நூல்களெல்லாம் கடவுள் ஒருமையாக இருந்ததாகவே கூறுகின்றன. சற்றே எண்ணிப் பாருங்கள். கடவுளைத் தனியாக உருவகப்படுத் திப் பாருங்கள். எல்லையற்ற தன்மைக்குச் செல்கையில் தனியாக அவரை எண்ணிப் பாருங்கள். அவருக்குத் தமது தனிமை சோர்வைத் தந்திருக்க வேண்டும். அது ஒரே மாதிரியாக இருந்திருக்கும். அவருக்குச் சிறிது விளை யாட்டுத் தேவையாக இருந்திருக்கும். அவர் வேறொருவரை யும் சிருஷ்டித்து, மறைத்து- கண்டுபிடிக்கும் விளையாட்டு விளையாடியிருக்க வேண்டும்.

நீங்களும் விளையாட்டில் சோர்வடைந்த போது, நீங்கள் விளையாட்டில் மனச்சோர்வடைந்து மறுபடியும் ஒரு புத்தராக மாறுவீர்கள். நீங்கள் மறுபடியும் உங்களது பொம்மைகளைக் கீழே விட்டுவிடுவீர்கள். அவை உங்களால்தான் உண்டாக்கப்பட்டன. அதன் மதிப்பும் நீங்கள் கற்பனையில் உருவாக்கியதுதான். நீங்கள்தாம் அவற்றுக்கு மதிப்பைத் தந்திருக்கிறீர்கள். நீங்கள் அதன் மதிப்பைத் திரும்பப் பெற்றுக்கொண்டால் அவை மறைந்து போகும். மறுபடியும் நீங்கள் தனியாக ஆகிவிடுகிறீர்கள்.

இந்து தத்துவம் மிகவும் மதிப்பு வாய்ந்தது. முக்கியத் துவம் வாய்ந்தது. கடவுள் ஒருமையாய் இருக்கிறார் என்று சொல்கிறார்கள். இது ஒரே விதமான சலிப்புத் தட்டும் விதமாய் இருக்கிறது. அவர் இந்த உலகத்தைச் சிருஷ்டி செய்தார். இன்னொருவரைக் கொஞ்சம் உரையாடுவதற் காக, சிறிது பேசுவதற்காக உண்டு பண்ணினார். மறுபடியும் மறுபடியும் ஒருவர் சோர்வாக, சலிப்பாக மற்றவருடன் உணரும்போது, தமக்குள் மறைந்து போய் மறுபடியும் வெறுமை நிலையை அடைந்து கடவுளாக மாறிவிடுகிறார்.

நீங்களெல்லாம் கடவுளர்கள்தாம். ஆனால் உங்களையே ஏமாற்றிக் கொண்டிருக்கிறீர்கள். இது உங்களுக்கு இருக்கும் மாற்று ஏற்பாடு. என்றைக்கு இந்த முறை வேண்டாமென்று தீர்மானிக்கிறீர்களோ, நீங்கள் அன்றே விடுதலை பெற்ற வராவீர்கள். ஒருமையின் காரணமாக, ஒருமை என்பதே உங்களது அடிப்படைக் குணம் என்பதனால் மற்றொன்றும் சிருஷ்டிக்கப்பட்டுள்ளது.

நீங்கள் இதனை முயற்சி செய்து பாருங்கள். நீங்கள் மலைப்பாங்கான பகுதிக்கு ஒரு வாரம் சென்று பாருங்கள். அங்குத் தனியாக அமர்ந்தீர்களேயானால் மிக நன்றாக இருக்கும். எல்லோருமே உறவு முறை பற்றி மிகவும் சலிப்படைந்துவிட்டார்கள். மிகவும் சோர்வடைந்து விட்டார்கள். மலைக்குச் சென்று அமைதியாக அமர்ந்து பார்க்கும்போது உங்களுக்கே மிகவும் அழகாக இருக்கும். ஆனால் மூன்று நான்கு நாள்களுக்குப் பிறகு, ஐந்து ஏழு நாள்களுக்குப் பிறகு, மூன்று வாரங்களுக்குப் பிறகு, நீங்கள் மற்றொன்றை நினைக்கத் துவங்குவீர்கள். உங்களது மனைவி மறுபடியும் கவர்ச்சிகரமாகத் தோற்றமளிக்கத் துவங்குவாள். நீங்கள் மறுபடியும் எல்லா அசிங்கங்களையும் மறந்துவிடுவீர்கள். நீங்கள் மறுபடியும் அவள் உங்களுக்குச் செய்ததையெல்லாம் மறந்துவிடுவீர்கள். நீங்கள் அவற்றை முற்றிலும் மறந்துவிடுவீர்கள். அவள் மறுபடியும் பிரேமை

யுடன், சௌந்தர்யத்துடன், ம்ம்ம்..." அதற்கு மறுபடியும் மதிப்பளிக்கத் துவங்குவீர்கள்.

மறுபடியும் மலையிலிருந்து சமவெளிக்கு வந்து விடுவீர்கள். அந்த இரண்டு மூன்று நாள்கள் அந்தப் பெண்ணுடன் சந்தோஷமாகக் கழியும். ஒரு புதிய தேனிலவு. இரண்டு மூன்று நாள்களுக்குப் பிறகு மறுபடியும் விஷயங்கள் கடினமாக ஆரம்பிக்கும். மறுபடியும் நீங்கள் எப்படித் தியானம் செய்வது, எப்படி மௌனமாக இருப்பது என்பது பற்றி யோசிக்க ஆரம்பிப்பீர்கள். இப்படித்தான் நீங்கள் செல்கிறீர்கள். உங்களது பிரக்ஞை யைக் கவனித்தீர்களேயானால், அதன் ஏற்ற இறக்கங் களைக் கவனித்தீர்களேயானால், அதன் வழியே மொத்த வாழ்வைப் பற்றியும் அறிந்துகொள்ளலாம். ஏனெனில், அது ஒரு மொத்த வாழ்க்கையின் ஒரு சிறிய மாதிரிதான்.

பிரக்ஞை என்னும் கடிகார ஊசல் தியானத்துக்கும் அன்புக்கும் இடையே, தனியாக இருப்பதற்கும் சேர்ந்து இருப்பதற்கும் இடையே ஊசலாட ஆரம்பித்துவிடுகிறது. இதுவரையில் உலகில் தோன்றிய மதங்களெல்லாம் அன்பையும் தியானத்தையும் மட்டுமே அடிப்படையாகக் கொண்டு வளர்ந்துள்ளன என்பதே இதற்குக் காரணம். அவை தனித்தனியாக உள்ளன. அவை முழுமையாக இல்லை. நான் உங்களுக்கு ஒரு முழுமையான மதத்தை அளிக்கிறேன். நான் தேர்ந்தெடுக்கவில்லை.

உதாரணத்துக்கு, புத்தர் தியானத்தைத் தேர்ந்தெடுத்தார். அவர் அன்பிற்காக, தியானத்துக்காகத் தேர்ந்தெடுத்தார். வேறு எந்த அன்பும் அல்ல. அவர் உங்களுக்குத் ஒருமையில் இருப்பதற்குக் கற்றுத் தருகிறார். முற்றிலும் தனியாக, வேறெதுவும் இல்லாமல் அது நல்லது. அது உலகத்தில் சலிப்பேற்பட்டவர்களுக்கும், சோர்வடைந்தவர் களுக்கும் மிகவும் நல்லது. அவர் ஒரு ராஜா. அவர் ஒரு பிச்சைக்காரன் அல்ல. அவர் பெண்களைப் பற்றிச்

சலிப்படைந்திருந்தார். அவருடைய தந்தை அவருக்காகப் பல தேசங்களிடமிருந்து மிக அழகான பெண்களைத் தேர்ந்தெடுத்துக்கொண்டிருந்தார். அவருக்காக அழகான அந்தபுரப் பெண்கள் இருந்தனர். உலகத்தின் எல்லா அழகிய பெண்களிலும் பல பேர் இருந்தனர். உங்களுடைய வீட்டில் உலகத்தின் எல்லா அழகிய பெண்களும் இருந்தால், எவ்வளவு நாள்களுக்கு அவர்களுடன் இருக்கத் தோன்றும்? அதைக் கொஞ்சம் நினைத்துப் பாருங்கள். ஒருவரே தேவைக்கு அதிகமானவர். இப்போது உலகின் அழகிய பெண்களில் பலபேர் அங்கேதான் இருந்தனர். அளவுக்கு மீறிப் பைத்தியம் பிடிக்கிறாற்போல ஆகிவிட்டது. அவர் அதிலிருந்து தப்பித்ததில் ஒன்றும் அதிசயமில்லை. எல்லா இன்பங்களும் அவருக்காக ஏற்பாடு செய்யப்பட்டு இருந்தன. அவருக்குச் சலிப்பேற்பட்டதில் ஒன்றும் வியப் பில்லை. அவர் மற்றொரு துருவத்துக்கு நகர்ந்து விட்டார். மற்றொன்று முற்றிலும் அதீதமானது. அவர் கானகத்துக்குத் தப்பிச் சென்று தனிமையில் இருக்கலானார்.

சில மதங்கள் தியானத்தை அடிப்படையாகக் கொண்டுள்ளன. அவை புத்த மதம், சமண மதம். சில மதங்களே அன்பே அடிப்படை என்கின்றன. கிறிஸ்துவம் முஸ்லீம் மதங்கள் இதைப் புரிந்துகொள்ள வேண்டும். இயேசு ஓர் ஏழை. முகம்மதுவும் அப்படியே. இது ஏதோ தற்செயலாக நேர்ந்துவிட்டது என்று நினைக்கலாகாது. மஹாவீரர் ஓர் அரசர். அப்படியே புத்தரும். இரண்டு அரசர்களும் தியானத்தை அடிப்படையாகக் கொண்ட மதங்களை உலகத்துக்கு அளித்துள்ளனர். இரண்டு ஏழை மனிதர்கள் அன்பை அடிப்படையாகக் கொண்ட மதங்களை உலகுக்கு அளித்துள்ளனர்.

ஏழைகள் ஒன்றில் சலிப்படைய முடியாது. ஏழைகள் மற்றொன்றின் மீது ஆசைப்படுவார்கள். மற்றொன்று பெண், பணம், பதவி, கௌரவம் அல்லது கடவுள். இப்படி

ஏதாவதாக இருக்கும். அதில் ஒன்றும் வித்தியாசமில்லை. மற்றொன்று தேவை.

கிறிஸ்துவ மதமும், இஸ்லாம் மதமும் பிரார்த்தனையையும், அன்பையும் அடிப்படையாகக் கொண்டவை. கடவுளின் மீது அன்பு, கடவுளை நோக்கிப் பிரார்த்தனை. புத்த மதத்திலும், சமண மதத்திலும் கடவுளுக்கு இடமேயில்லை. எனவே மற்றொன்றிற்கும் அங்கு இடமேயில்லை. ஒருமையாக இருப்பதே போதுமானது. ஆகவே சமண மதத்திலும் புத்த மதத்திலும் பிரார்த்தனை போன்றவை இடம்பெறவில்லை. வார்த்தை அங்குக் கேட்கப்படவில்லை. அவர்களுக்குத் தியானம் மட்டுமே தெரியும். கிறிஸ்துவ மதத்தினருக்குத் தியானத்தைப் பற்றி எதுவும் தெரியாது. இவை எதேச்சையாக நிகழ்ந்தவை அல்ல. அவை அவற்றை நிறுவியவர்களைப் பற்றித் தெரிவிக்கிறது.

நான் உங்களுக்கு முழுமையான மதத்தை அளிக்கிறேன். எல்லாவற்றையும் அளிக்கும் ஒரு மதம். உங்களுக்கு ஒன்றில் சலிப்பேற்படும்போது மற்றொன்றில் தியானத்துக்கு நகர்ந்து விடுங்கள். உங்களுக்குத் தனியாக இருப்பது சோர்வைத் தந்தால் அன்புக்குச் செல்லுங்கள். எல்லாம் நல்லவையே. இரண்டுமே முரணானவை. ஆனால் முரணானவற்றில் தான் பெரிய மகிழ்ச்சிகள் உருவாகின்றன. உங்களிடம் ஒன்றுதான் இருக்கிறது என்றால் அது அவ்வளவு விமரிசையாக இருக்காது. அந்த ஒன்று உங்களுக்கு அமைதியைத் தரும். அல்லது உங்களுக்குப் பெரிய சந்தோஷத்தை அளிக்கும். ஆனால் இரண்டு எனும்போது உங்களுக்கு எல்லையற்ற, ஒப்பிட்டுப் பார்க்க இயலாத அளவுக்கு மகிழ்ச்சியை அளிக்கும். இரண்டும் சேரும்போது அவை உங்களுக்கு ஓர் அமைதியான பரவச நிலையை, ஒரு நிம்மதியான மகிழ்ச்சியை அளிக்கும். உங்களுக்குள் அவை முற்றிலும் அமைதியாக இருக்கும். ஆனால் வெளித் தோற்றத்துக்கு அவை நடனமிட்டுக் கொண்டிருக்கும்.

அமைதி நடனமாடும்போது, அமைதி பாடும்போது அதுவே செழிப்பாக இருக்கும். அதுவே சிகரத்துக்கெல்லாம் சிகரமாக இருக்கும். ஆகவே நான் இரண்டுக்கும் முக்கியத்துவம் அளிக்கிறேன்.

ஒருமுறை ஜார்ஜ் பெர்னார்ட் ஷா ஒரு விருந்தில் அறையின் மூலையில் அமர்ந்திருந்தார். அங்குப் பணிப் பெண் அவரிடம் வந்து, "உங்களை நீங்கள் அனுபவிக்கவில்லையா?" என்று மெல்லக் கேட்டாள்.

பதிலுக்கு அவர், "அதைத்தான் செய்து கொண்டிருக்கிறேன்" என்று சொன்னார்.

அவர் ஒரு பெரிய உண்மையை வெளிப்படுத்தினார். அதில் ஒரு மகத்தான உள்ளொளி உள்ளது. ஒருவர் தமக்குள்ளாகவேதான் அனுபவிக்கிறார். மௌனத்தின் குணத்தைப் பொருத்தே வாழ்க்கை ஆரம்பிக்கிறது. ஆனால் உங்களை மட்டுமே அனுபவிப்பீர்களேயானால், மற்றொன்றை அனுபவிக்கவில்லையானால் நீங்கள் மற்றொரு பரிமாணத்தை இழக்கிறீர்கள் என்று பொருள். ஒருவர் ஒன்றையும் அதே சமயத்தில் மற்றொன்றையும் அனுபவிக்கும் தகுதி படைத்திருக்க வேண்டும். அவரைத்தான் நான் முழு மனிதன் என்பேன். அவரே புனிதமான மனிதன்.

> எனது அன்பான ஓஷோ,
> நான் உங்களது உரைகளைக் கேட்கும் போதும்
> மற்றச் சமயங்களிலும் ஞானம் அடைவதற்கான
> எல்லாவற்றையும் தெரிந்து கொண்டதாக
> உணர்கிறேன். அந்தச் சமயங்களில் நான்
> ஞானம் அடைந்துள்ளேனா? இந்த
> மேம்போக்கான 'தெரிந்துகொள்ளுதல்' என்னுள்
> ஊடுருவி அதேபோல ஆக முடியுமா என்பது
> பற்றி விளக்குங்களேன். இந்தத்

> **தெரிந்துகொள்ளுதல் என்னுள் இருக்கும் களங்கமற்ற தன்மையைப் பறித்து விடுகிறது. இது முற்றிலும் முழுமையான உணர்ந்து கொள்ளுதல் என்பதையும் தள்ளிப் போட்டுவிடுகிறது. அந்த அறிவு நான் வளருவதைக்கூடத் தடுத்து விடுகிறது. இருந்தும்கூட நான் என்று ஒன்றுமி ல்லை என்று தெரிந்தும் ஊக்குவிக்கப்படவில்லை என்பதாகவே உணர்கிறேன். இது ஏன்?**

முதலாவதாக: 'நான் உங்களது உரைகளைக் கேட்கும் போதும் மற்றச் சமயங்களிலும் ஞானம் அடைவதற்கான எல்லாவற்றையும் தெரிந்துகொண்டதாக உணர்கிறேன்.' ஞானம் அடைவதற்கு எதுவுமே தேவைப்படுவதில்லை. ஆகவே ஞானம் அடைவதற்குத் தேவையான எல்லா வற்றையும் தெரிந்து வைத்துள்ளதாக எப்படிச் சொல்கிறீர் கள்? ஞானம் அடைவதற்கு எதுவுமே தேவைப்படுவ தில்லை. ஞானம் அடைவது என்பது உங்களது இயல்பான நிலை. அதை எங்கும் உற்பத்தி செய்யும் அவசியமோ அல்லது உண்டாக்குவதோ அல்லது உருவாக்குவதோ இயலாத காரியம். நீங்கள் எதையாவது ஒன்றைப் புதியதாக உற்பத்தி செய்தீர்களேயானால் அதற்கு நிறைய விஷயங்கள் தேவையாக இருக்கும். ஆனால் நீங்கள் எதையும் உற்பத்தி செய்யப் போவதில்லை. அப்போது என்ன வேண்டும்? நீங்கள் ஞானமடைந்துவிட்டீர்கள். உங்களுக்கு ஏதேனும் தேவையா? ஒன்றுமே தேவையில்லை.

ஆகவே 'ஞானம் அடைவதற்குத் தேவையானவை யெல்லாம் எனக்குத் தெரியும்' என்று சொல்வது தவறு. அது உங்களுடைய வழியை அடைக்கிறது. ஞானம் அடைவதற்கு எதுவுமே தேவையில்லை. ஞானம் என்பது ஏற்கெனவே அங்கிருக்கிறது. அது எதையும் அடைதல் என்பதல்ல. அது ஓர் அங்கீகாரம் மட்டுமே. அதை அடைவதற்கு எதுவும் பிரத்தியேக முயற்சிகள் செய்ய

வேண்டியதில்லை. நீங்கள் செய்ய வேண்டியதெல்லாம் எந்த முயற்சியும் எடுக்காமலிருப்பதே. உங்களுடைய முயற்சிகளையெல்லாம் கைவிடுங்கள். திடீரென்று அது அங்கே இருக்கும். அதைப் பார்ப்பதற்கு எடுக்கும் தொடர்ந்த முயற்சிகளால் உன்னால் பார்க்க முடியாமல் போகிறது. அதை அடைவதற்கென்று எடுக்கும் பிரத்தியேக முயற்சிகளே உங்களுக்குத் தடையாக அமையும்.

நீங்கள், 'அந்தச் சமயங்களில் ஞானமடைந்துவிட்டேன்' என்று சொல்கிறீர்கள். நீங்கள் எப்போதுமே ஞானம் அடைந்துதான் இருக்கிறீர்கள். நான் பேசுவதைக் கேட்கும்போது மட்டுமல்ல, எப்போதுமேதான். வைர சூத்திரத்தில் இருந்து ஏதோவொன்றைப் படிக்கும்போது மட்டுமல்ல, எப்போதுமேதான். நீங்கள் எப்போதுமே ஞானமடைந்துதான் இருக்கிறீர்கள். ஆரம்பத்திலிருந்து கடைசிவரை நீங்கள் ஞானமடைந்துதான் இருக்கிறீர்கள். நீங்கள் உங்களுக்கு வேண்டும் என்று நினைக்கும் வரை உங்களை ஞானமடையாமலிருப்பதாக ஏமாற்றிக் கொண்டிருக்கலாம். ஆனால், எல்லாச் சமயங்களிலும் ஞானம் அடைந்துதானிருக்கிறீர்கள்.

அது, ஓர் ஆண், நாடகம் நடிக்கும்போது பெண் வேடமணிவது போன்றதாகும். அவர் எப்போதுமே ஆண் தான். அவர் நடித்துக்கொண்டேயிருக்கிறார். சில நேரங்களில் அவரே இதை மறந்துவிடுகிறார். அவர் நல்ல நடிகராக இருந்தால், உண்மையிலே நல்ல நடிகராக இருந்தால், அவர் இந்த எண்ணத்துக்குள் நுழைந்து இதனை மறந்துவிடுவார். ஒரு சில கணங்களுக்கு அவர் தாம் பெண்ணே என்று நினைத்துக் கொள்வார். ஆனால் மறுபடியும் தாம் ஒரு ஆண்தான் என்பதை நினைவு கொள்வார்.

நீங்கள் ஞானமடையவில்லை என்று நினைப்பது ஆச்சரியகரமாக இருக்கிறது. நீங்கள் தொடர்ச்சியாக மறந்து

கொண்டேயிருக்கிறீர்கள். ஆனால் நீங்கள் ஞானமடைந் தவர்தான். நினைவில் கொள்ளுங்கள். ஞானம் அடைவது என்பது எதிர்காலத்தில் உங்களுக்கு ஏற்படப்போகும் ஒரு தன்மையல்ல. அதனை நீங்கள் உங்களுடைய ஆரம்பத்தி லிருந்தே கொண்டு வந்துள்ளீர்கள். அதுவே உங்களது சுவாசக்காற்று. அதுவே உங்களது சுவாசத்துடிப்பு. நீங்கள் ஆக்கப்பட்டிருப்பதே அந்த ஒன்றினால்தான்.

'அந்த நேரங்களில் நான் ஞானம் அடைந்திருக் கிறேனா?' இல்லை. நீங்கள் சில நேரங்களில் ஞானமடைந் திருப்பதாகவும், சில நேரங்களில் ஞானமடையாமலிருப்ப தாகவும் நினைத்தால் அப்போது நீங்கள் ஞானமே அடைய வில்லை என்று பொருள். எந்தநாளில், எந்தக் கணத்தில் நீங்கள் எப்போது ஞானமடைந்திருப்பதாகக் கருதுகிறீர் களோ, அல்லது உணர்கிறீர்களோ அன்றுதான் ஞான மடைந்ததாக அர்த்தம். ஒரு முறை நீங்கள் ஞானமடைந்து விட்டதாக உணர்ந்துவிட்டீர்களேயானால், அதன்பின் அது உங்களைச் சுற்றி எப்போதுமே ஒரு மணம் போல வீசிக்கொண்டிருக்கும்.

இருந்தும் கூட நீங்கள் ஆயிரத்தொரு விளையாட்டுகளை விளையாடியபடி இருக்கலாம். நான் விளையாடுகிறேன். புத்தர் விளையாடுகிறார். அதனால் ஒரு வித்தியாசமு மில்லை. அதன்பின் முழுப் பிரக்ஞையுடன் எல்லா விளை யாட்டுகளும் விளையாடப்படுகின்றன. அவை உங்களுக் குத் தளை போடுவதில்லை. சிறைப்பிடிப்பதில்லை.

ஒருமுறை நீங்கள் அதனை விளையாட்டு என்று தெரிந்து கொண்டு விளையாடி விட்டீர்களேயானால், அதன்பின் ஒரு பிரச்சினையும் இல்லை. அதன்பின் நீங்கள் இந்த உலகத்திலேயே இருக்கலாம். நீங்கள் யாராக இருந்தாலும் எப்படி இருந்தாலும் அப்படியே இருக்கலாம். ஆனாலும் நீங்கள் அப்படி இல்லையென்று உங்களுக்கே தெரியும். ஆழத்தில், நீங்கள் மிகத் தொலைவில் இருப்பீர்கள்.

நீங்கள் ஒரு தாமரைப் பூவைப் போல இருப்பீர்கள். தண்ணீரிலேயே மிதந்துகொண்டிருந்தாலும் தண்ணீர் உங்களுக்குள் வராது.

'அந்தச் சமயங்களில் நான் ஞானமடைகிறேனா?' என்று நீங்கள் கேட்கிறீர்கள். 'இந்த மேம்போக்கான அறிதல் எப்படி என்னுள் ஊடுருவி நான் அப்படியே ஆவதற்குத் துணைபுரியும்?' என்று கேட்டுள்ளீர்கள்.

மேம்போக்கான அறிவு என்பது எப்போதுமே அதேபோல் ஆளுவதற்குத் துணைபுரியாது. இன்னும் சொல்லப் போனால் ஆழ்ந்த அறிவும்கூட அதேபோல ஆவதற்குத் துணைபுரியாது. அறிவு என்பதே தடைதான். அறிதல் என்பது அதேபோல ஆவதற்கு ஒப்பாகாது. மேம்போக்கான அறிவோ ஆழ்ந்த அறிவோ எதுவாக இருந்தாலும், இதைப் போன்று வித்தியாசப்படுத்தாதீர்கள். இது உங்களது மனம் செய்யும் தந்திரம்தான். அறிவார்ந்த மனம்! அறிவார்ந்த மனம் உங்களிடம் 'அது சரி, மேம்போக்கான அறிவு உங்களுக்கு ஞானத்தைத் தராது. ஆனால் ஆழ்ந்த அறிவைப் பற்றி என்ன?' என்று சொல்லும்.

இது மறுபடியும் உங்கள் மீது செயல்படும் தந்திரம்தான். பின்னர் நிச்சயமாக நீங்கள் அதே வலையில் அகப்பட்டுக் கொள்கிறீர்கள். ஆழ்ந்த அல்லது ஆழமில்லாத எதுவாக இருப்பினும் அறிவு என்பதே மேம்போக்கானதுதான். மிக ஆழமான என்பதும் மேம்போக்கானதே. அறிதல் என்பதே, மேம்போக்கானது தான். அறிதல் என்பதே நீங்கள் கூறும் ஆழ்ந்து அறிதல் என்பதுதான்.

நீங்கள் மிகவும் ஜாக்கிரதையாக இருக்க வேண்டிய விஷயம் இது. மனம் (Mind) என்பதே மிகவும் தந்திரம் வாய்ந்தது. அது பல விஷயங்களை ஒப்புக்கொண்டு மீண்டும் பின்வாசல் வழியே திரும்பக் கொண்டு வந்து

விடும். அது, 'சரி, நான் முற்றிலும் ஒப்புக்கொள்கிறேன். எப்படி மேம்போக்கான அறிவு ஞானத்தைக் கொண்டு வரும்? அது சாத்தியமேயில்லை. ஆழ்ந்த அறிவைப் பெறுவதற்கான வழிகளை நான் உங்களுக்குக் கற்றுத் தருகிறேன்' என்று சொல்லும்.

நீங்கள் ஆழ்ந்த அறிவைப் பெறுவதற்கு என்ன செய்வீர்கள்? அது மீண்டும் மேம்போக்கான அறிவாகத்தான் இருக்கும். அறிவு அல்லது புலமை என்பதே மேம்போக்கானது. இன்னும் சொல்வதென்றால் உங்களுக்கு மேம்போக்கான அறிவுதான் இருக்கும் அளவில் வளரும். அளவு வளருவதன் மூலம் நீங்கள் ஆழ்ந்த அறிவைப் பெறுவதாக ஒரு மாயை தோன்றும்.

நீங்கள் விரிவான விவரங்களுக்குச் செல்வீர்கள். ஆனால் விவரங்கள் உங்களை ஆழ்ந்த புலமைக்கு இட்டுச் செல்லாது. நீங்கள் ஒரு விஷயத்தைப் பற்றி அறிந்து கொள்ளலாம். அல்லது ஒரு விஷயத்தைப் பற்றி ஆயிரம் விஷயங்கள் அறியலாம். ஆனால் எல்லாம் ஒன்றுதான். அறிவு என்பதே எதைப்பற்றியாவது அறிந்து கொள்ளுதல் மட்டுமே. அது எந்த ஒன்றையும் குறிவைக்காது. எந்தக் குறிக்கோளையும் அடையாது. குறிக்கோளை அடைவது என்பது புலமையை விட்டுவிட்டால் மட்டும் சாத்தியமாகும். அதனையும் முழுமையாக, முற்றிலுமாக, எந்தவித நிபந்தனையுமின்றி, எந்த ஒரு மாற்றுமின்றி, 'இது நல்லது. வைத்துக்கொள். அது கெட்டது, அதை விட்டுவிடு. இது அழகானது, வைத்துக்கொள். அது அழகானதன்று விட்டுவிடு' அது போன்று இருக்கலாகாது. நீங்கள் புலமை என்று எதையாவது வைத்துக் கொள்வீர்களேயானால், நீங்கள் ஞானமடையவே முடியாது. அதிசயத்திலும் அதிசயம் என்னவெனில் நீங்கள் ஞானமடைந்துவிட்ட போதும் ஞானமடையாமலும் இருக்கிறீர்கள்.

சிப்பர் ராத்திடமிருந்து இந்தக் கேள்வி வந்துள்ளது. அவர் இந்த இடத்திற்குப் புதியதாக வந்துள்ளார் போலும், அவர் வெளியிலிருந்து வந்துள்ளார். இங்கேயே இருங்கள். உங்களது அறிவை, புலமையை, கொஞ்சம் கொஞ்சமாக வெளியே எடுத்து விடுவோம். என்னுடைய மொத்த வேலையே மக்களை அறியாதவர்களாக்குவதுதான். அறியாமை என்பதில் ஆழமிருக்கிறது. அறியாமையில் களங்கமற்ற தன்மையிருக்கிறது. அறியாமை ஆழ்ந்த தன்மை கொண்டது. அறியாமல் இருப்பது என்பதற்கு எல்லையே இல்லை. தெரிந்துகொள்ளுதல் என்பதற்கு எல்லை உண்டு. அது எப்படி ஆழ்ந்த தன்மை கொண்டது, உங்களது அறிவு எவ்வளவுதான் இருந்தாலும் அதற்கு ஓர் எல்லை உண்டு. அறியாமை மட்டுமே எல்லைகள் இல்லாதது.

சின்ன விஷயங்களைப் பற்றி மேலும் மேலும் அறிவை அதிகரித்துக் கொண்டு போகும் முயற்சியே விஞ்ஞானம் என்று கூறுகிறார்கள். இப்படியே தொடர்ந்து மேலும் மேலும் சிறியதை நோக்கி அறிந்து கொண்டே போகும் இந்த அணுகுமுறையில் நீ சென்று கொண்டே இருந்தால், அதன் முடிவு என்னவாக இருக்கும்? அதன் முடிவு வெறுமையைப் பற்றி நீ அதிகம் தெரிந்துகொள்வாய். இதுதான் தர்க்கரீதியான முடிவாக இருக்க முடியும்.

ஆனால் மதம் இதற்கு நேர் எதிரான அணுகுமுறையைக் கொண்டது என்று கூறிக்கொள்ள நான் விரும்புகிறேன். அது பெரிய பெரிய விஷயங்களைப் பற்றி இன்னும் இன்னும் அறிவைக் குறைத்துக் கொண்டே போவது. இதன் முடிவு என்னவாக இருக்கும்? பெரிய பெரிய விஷயங்களைப் பற்றிய அறிவு உனக்குக் குறைந்து கொண்டே வரும், ஒருநாள் உனக்கு எதைப் பற்றியும் எதுவும் தெரியாது. இதுதான் இந்த அனுபவம்-எல்லாவற்றைப் பற்றியும் எதுவும் தெரியாமல் இருப்பது. இதையே நான் அறியாமை என்று அழைக்கிறேன்.

ரோத், தயவுசெய்து இன்னும் சிறிதுகாலம் இங்கேயே சுற்றிக் கொண்டிரு.

> எனது அன்பான ஓஷோ, இப்போதிருக்கும் நாள்களில் இந்த விளையாட்டை மிகவும் அனுபவிக்கிறேன். இன்று காலையில் ஓர் அருமையான அனுபவம். ஒவ்வொரு காலையும் நான் இன்று திரை அகன்றவுடன் என்ன வரப்போகிறது என்ற ஆர்வத்துடன் காத்திருப்பேன். நான் உங்களுடன் இருக்கும்போது அந்தத் தருணங்கள் சிரிப்பைத்தான் கொண்டு வருகின்றனவே தவிர, கண்ணீரை அல்ல. அந்தக் கண்ணீர் எங்கே?

சுசேதா அவை உனது சிரிப்பில் உள்ளன. சிரிப்பும் அழுகையும் வேறல்ல. இரண்டு வகையான மனிதர்கள் இருக்கிறார்கள். சிரிப்பு மனிதர்கள். அழுகை மனிதர்கள். எங்கேயும் இரண்டு வகையான மனிதர்களே உள்ளனர். வாழ்க்கையே இரண்டு வகையாகப் பிரிக்கப்பட்டுள்ளன. ஆண், பெண் Yin மற்றும் Yang நேர்மறை பகல், இரவு; வாழ்க்கை, மரணம் இப்படிப் பிரிவுகள். அதேபோல கண்ணீர் மனிதர்கள், சிரிப்பு மனிதர்கள்.

அழுகை மனிதர்கள் தனக்குள் சுருங்கிக்கொள்பவர்கள் (Introvert). அவர்கள் மிகச் சுலபமாகத் தனக்குள் சென்று விடுவார்கள். நீங்கள் மிகமிக ஆழ்ந்து போகும்போது உங்கள் கண்கள் கண்ணீரால் நிறைந்துபோகும். சுசேதா ஒரு வெளிப்புறத்தில் வாழ்பவள் (extrovert). அவள் ஒரு சிரிக்கும் புத்தர். கீத் கோவிந்த் ஓர் அழும் புத்தர். அவள் ஒரு வெளிப் படை மனிதர். வெளியில் வாழும் மனிதர். ஓர் உண்மை யான அமெரிக்கர். ஏதாவது அவளை மிகவும் மகிழ்ச்சிப் படுத்தினால் அவள் சிரிப்பாள்.

யாரையும் பிரதியெடுத்து, பின்பற்றாதீர்கள் (imitate). இதை நினைவில் கொள்ளுங்கள். கீத்கோவிந்த் சுசேதாவைப் பார்த்து அதே போலத் தோற்றமளிக்க விரும்பினால் அது மிகவும் கடினமானது. அவருடைய சிரிப்பு போலித்தன மானதாகி விடும். சுசேதா கீத் கோவிந்தைப் பார்த்துப் பின்பற்ற விரும்பினால் அவள் ஒருவேளை போலித் தனமாகச் சமாளிக்கலாம். அது உண்மையாக இருக்காது. போலித்தனமாகத்தான் இருக்கும்.

வெளிப்படை மனிதர்கள் தங்களுடைய வழியையே பின்பற்ற வேண்டும். அவர்களுடைய வாழ்க்கையில், சிரிப்பில் சக்தி (energy) நிரம்பி வழியும். அன்பு செலுத்துதல் என்பது அவர்களுக்குச் சுலபமாக இருக்கும். தியானம் கடினமானதாக இருக்கும். உள்ளுக்குள் வாழ்பவர்களுக்குத் தியானம் சுலபமாக இருக்கும், அன்பு செலுத்துதல் கடினமானதாக இருக்கும். கண்ணீர் உகுத்தல் சுலபமாக இருக்கும், சிரிப்பது என்பது கடினமாக இருக்கும்.

யாரையும் பின்பற்றாதீர்கள். உங்களுடைய வழியில் நீங்கள் சென்றபடியே இருங்கள் அப்படிச் செல்லும்போது நீங்களே ஒரு ஒட்டுமொத்த மாற்றத்தைக் காண்பீர்கள். இது ஓர் எல்லையைக் அடையும்போது நிகழும். உதாரணத் துக்கு, நீங்கள் சிரித்துக்கொண்டே இருக்கும்போது... உதாரணத்துக்கு, சுசேதா சிரித்துக்கொண்டு இருக்கும் போது, அதன் முடிவில் அது மிதமிஞ்சிப் போகும்போது கண்ணீர் வரும். சிரிப்பில்கூட ஒரு கணத்தில் சிரிப்பு மறையத் துவங்கி அங்கே கண்ணீர் வரத் துவங்கும். கீத் கோவிந்த் அழுதுகொண்டே இருந்தால் கண்ணீரின் முடிவில் ஒரு மாற்றம் நிகழ்வதை அவர் காண்பார்: சிரிப்பு எழும். எல்லையில்தான் புரட்சி என்பது துவங்கும்.

ஒரு முறை புத்த மதக் குழுவினரிடம் பேசிக் கொண்டிருந்தேன். இப்போது புத்தமதத்தினரிடம் புரட்சி என்பதே எல்லையில்தான் துவங்கும் அல்லது உண்மை

என்பது எல்லையில் துவங்கும் என்று சொல்வது சங்கடமாக இருந்தது. ஏனெனில், அவர்கள் மத்திம (middle) வழியாக நம்புபவர்கள். தங்கத்துக்கு ஒப்பானது. புத்தரின் வழி 'மஜ்ஜிம் நிக்யா' என்று அழைக்கப்படும் மத்திம வழி.

அவர்கள் புத்தமதத்தினர் என்பதே எனக்கு மறந்து விட்டது. நான் அவர்களிடம் அதீதத்தைப் பற்றி, புரட்சி என்பதே எல்லையில்தான் நிகழும் என்பதைப் பற்றிப் பேச ஆரம்பித்து விட்டேன். நீங்கள் முற்றிலுமாக இறுதியை அடைந்தாலொழிய உண்மையைக் காண முடியாது. உண்மை என்பதே கடைசியில்தான் இருக்கிறது. அந்த எல்லையில்தான் அன்பு அல்லது தியானம் ஆரம்பிக்கிறது.

அவர்கள் பொறுமைசாலிகள். புத்தமதத்தினரே பொறுமைசாலிகள், அவர்கள் முகம்மதியர்களைப் போலக் கிடையாது. அவர்கள் சண்டைபோடமாட்டார்கள். ஆனாலும் பொறுமைக்கும் ஓர் எல்லை உண்டு. ஒரு புத்தத் துறவியால் பொறுக்க முடியவில்லை. புத்தர் பொறுத்துப் போகும்படி சொல்லியிருக்கிறார். என்றாலும்கூட அவ ரால் பொறுக்க முடியவில்லை. அவர் எழுந்து நின்றார். "இது மிகவும் அதிகமானது. நீங்கள் புத்தரின் வழியே மத்தியமானதுதான் என்பதை மறந்துவிட்டீர்களா?" என்று கேட்டார்.

அதன்பின் நான் நினைவுகூர்ந்து அவரிடம் சொன் னேன்: "உண்மை. எனக்குத் தெரியும். இருப்பினும், நீங்கள் மத்திமபாகத்தின் இறுதிவரையில் போனாலொழிய உங்களால் உண்மையைக் காண முடியாது" என்று. நான் எல்லையைப் பற்றிப் பேசிக்கொண்டிருக்கிறேன். அதில் மத்திமத்துக்கு இடமே கிடையாது. "நீங்கள் மத்திமத்தின் இறுதியில் இருக்கும்போது, சரியான மத்திமத்தில்தான் உங்களுக்கு உண்மை கிடைக்கும். உண்மை என்பது கடைசியில்தான் நிகழும்."

இந்த எல்லையிலிருந்து ஊசல் அந்த எல்லை வரை ஆடும். அதனால் சுசேதா, சிரியுங்கள். இறுதிவரை சிரியுங் கள். ஒரு நாள் உங்களது சிரிப்பே அழகான கண்ணீரைக் கொண்டு வருவதைக் காண்பீர்கள்.

எனது அன்பான ஓஷோ,
ஒருவர் தாம் கடவுளை அனுபவித்ததாகப்
பிரகடனம் செய்யக் கூடாதா?

நீங்கள் கடவுளை அனுபவித்திருந்தால் உங்களது வாழ்க்கையே ஒரு பிரகடனமாகிவிடும். அதனைப் பிரத்தியேகமாக அறிவிக்கத் தேவையில்லை. அல்லது நீங்கள் கேட்காமலாவது இருக்கலாம். ஒருவேளை அறிவிப்பு வருமேயானால் அறிவிப்பு வருகிறது. அதற்கு நீங்கள் என்ன செய்வது? ஒருவர் கடவுளைப் பார்த்திருப் பாரேயானால் அவர் எதையும் தீர்மானிக்கமாட்டார். இதைக்கூடத் தீர்மானம் செய்யமாட்டார். அவர் அறிவிப்பதா, அல்லது அறிவிக்காமல் இருப்பதா? ஒருவர் கடவுள் எனும் அனுபவம் பெற்றிருந்தால் அவர் மனத்தையே தன்வயமிழந்திருப்பார். எது நடந்தாலும் அதிலேயே இருந்து விடுவார். அவர் முற்றிலுமாக அதில் இருப்பார். அறிவிப்பு வருமென்றால் அது வரும்.

அந்த அனுபவம் மன்சூருக்கு வந்தது. அவர், 'அனா'ல் ஹக், நானே கடவுள்" என்று அறிவித்தார். அவருடைய குரு ஜுனைத், 'மன்சூர், இது சரியல்ல. நீ பிரச்சினையில் அகப்பட்டுக்கொள்ளப் போகிறாய். எனக்கும் தெரியும். ஆனால் நான் இதனை அறிவிக்கவில்லை. காரணம் நம்மைச் சுற்றி இருக்கும் முகம்மதியர்களைப் பற்றித் தெரியும். அவர்கள் உன்னைக் கொன்றுவிடுவார்கள்" என்று சொன்னார்.

ஆனால் மன்சூர் பதிலுக்கு, "நான் என்ன செய்வது? அவர் அறிவிக்கும்போது நான் என்ன செய்வது?

திடீரென்று என்னைத் தேர்ந்தெடுத்து என் வழியாக அறிவிப்புச் செய்கிறார்" என்று சொன்னார்.

ஜுனைத் மிகவும் பயந்து போய் அவரைத் தனது பள்ளியினின்றும் வெளியேற்றிவிட்டார். அவர், "நீ வெளியே சென்றுவிடு. எங்காவது போய்விடு. நீ பிரச்சினையில் அகப்பட்டுக்கொள்ளப் போகிறாய். என்னையும் பிரச்சினையில் அகப்பட வைத்துவிடுவாய்'' என்று சொல்லிவிட்டார்.

ஆனால் மன்சூரோ, "நான் என்ன செய்வது? அவர் தனக்குத் தானே பிரச்சினையில் அகப்பட்டுக்கொள்ள வேண்டுமென்று நினைத்தால், நான் என்ன செய்வது?" என்று பதிலளித்தார். அவர் துன்பத்திலும் அகப்பட்டுக் கொண்டார். அவர் எதுவும் செய்ய இயலாமல் போனதும் உண்மைதான். அவர் தனது கடைசி நேரத்திலும் சிலுவையில் இருந்து " 'அனா'ல் ஹக். நான்தான் கடவுள்" என்று சொல்லிச் சிரித்தார்.

கூட்டத்திலிருந்து யாரோ கேட்டார்கள்: "நீ இன்னமும் கூட மறுக்கலாம். இப்போதும் கூட நீ தவறு செய்து விட்டதாக மறுக்கலாம். நீ கடவுள் என்று தவறாகச் சொல்லிவிட்டதாக மறுத்தால் உனக்கு மன்னிப்பு வழங்கப்படும்" என்று சொன்னார்கள்.

அவர் பதிலுக்குச் சிரித்துக்கொண்டே, "நான் கடவுள் தான். என்ன செய்வது? அவர்தானே அறிவிக்கிறார்" என்று சொன்னார்.

ஆனால் நீ என்னிடம், "ஒருவர் தான் கடவுள் எனும் அனுபவத்தை அடைந்துவிட்டதாக அறிவிப்புச் செய்யக் கூடாதா? என்று கேட்கிறாய்." அவரே அறிவித்தால் நல்லது. அவர் அறிவிக்கவில்லையெனில் நீ மௌனமாக இரு. அதை அவரிடமே விட்டுவிடு.

ஜே.டோனால்ட் வால்டர்ஸ் எழுகிறார்:

சில வருடங்களுக்கு முன்னர் நான் ஒரு மனிதரை, குடிபோதையில் தள்ளாடிக் கொண்டிருப்பதைப் போன்று தோற்றத்திலிருந்த மனிதரைச் சந்தித்தேன். அவர் இந்தப் பிரபஞ்சம் எப்படி இயங்க வேண்டுமென்பதிலெல்லாம் ஒரு கருத்துக் கொண்டிருந்தார். எனக்கு எப்படி இது நிகழ்ந்தது என்று தெரியவில்லை. ஆனால், எனது வாழ்க்கையில் இதுவரை கடவுளைக் கண்ட ஆறு மனிதர்களை நேரில் சந்தித்துள்ளேன் என்று அவரிடம் சொன்னேன். உடனே தமது கைகளை நீட்டி, 'இதோ ஏழாவது மனிதன்' என்று கைகுலுக்க ஆரம்பித்தார்.

டோனால்ட் வால்டர்ஸ் எழுதுகிறார்: என்னால் நம்பவே முடியவில்லை. இவர் கடவுள் என்னும் அனுபவம் பெற்றிருக்கிறாரா? அப்படியானால் அது போன்றவர் எப்படிக் கைகளை நீட்டித் தம்மைத் தாமே 'அது' என்று சொல்லி அறிமுகப்படுத்திக் கொள்வார்?

ஆனால், அது என்னுடைய அபிப்ராயம் அல்ல. அது சாத்தியமாகலாம். ஏனெனில் கடவுள் சில நேரங்களில் முரட்டுத்தனமாகத் தெரிவார். சில நேரங்களில் கருணையோடு தெரிவார். கடவுள் எல்லா அளவுகளிலும், உருவங்களிலும் வருவார். சில நேரங்களில் அவருடைய கைகள் மென்மையாக இருக்கும். சில நேரங்களில் ரோமங்கள் படர்ந்ததாக இருக்கும். அவர் எல்லா வழிகளிலும் வருவார். அவருடைய வழிகள் எதிர்பார்க்க முடியாதவை.

அவர் உங்கள் வழியே தெரிவிக்க விரும்பினால் வீட்டின் மேலேறித் தெரிவிப்பார். அவர் தெரிவிக்க விரும்பாமல் இதனை நீங்களாகத் தெரிவித்தால் நீங்கள் பிரச்சினைகளில் அகப்பட்டுக் கொள்வீர்கள். அவர் பிரச்சினையில் அகப்பட்டுக்கொள்ள விரும்பினால் அது அவர் பிரச்சினை. ஆனால், நீங்களாக முடிவெடுக்காதீர்கள். அப்படி இல்லை

யெனில் இது ஓர் அகங்காரத்தின் பயணமாகத்தான் முடியும்.

டோனால்ட் வால்டர்ஸின் இந்தக் கதையைப் படித்தபின்பு, "எனது கையைக் குலுக்குங்கள். நான்தான் அந்த ஏழாவது மனிதன்" என்று சொன்ன மனிதனுக்காக மிக வருந்தினேன்.

வால்டர்ஸ் எழுதுகிறார்: இது வழியல்ல என்று அவர் கருதுகிறார். எது வழியென்று யார் தீர்மானிப்பது? யாரும் தீர்மானிக்கக் கூடாது, யாரும் அறிவிக்கக் கூடாது என்று நான் எப்படித் தீர்மானிப்பது? அவர் அறிவிக்க வேண்டும் என்று தீர்மானிக்கிறார். நான் யார் இதை உங்களுக்குச் சொல்வதற்கு? அவர் விருப்பப்படியே நடக்கட்டும்.

ஆனால் நினைவில் கொள்ளுங்கள். அது உங்களுடைய தீர்மானமாக இருக்கக் கூடாது. நீங்கள் அறிவிப்பதெனத் தீர்மானித்தால் உங்களுக்குத் தெரியவில்லை என்று பொருள். அப்போது மனம் தன்னை ஒரு பெரிய மனிதனாகக் காட்டிக் கொள்ளத் தந்திரம் செய்கிறது என்று பொருள். அப்போது மனம் பைத்தியம் போல ஆகி விடுகிறது என்று பொருள்.

எனது அன்பான ஓஷோ,
என்னுடைய நெருங்கிய சினேகிதி ஒருத்தி ஒரு கடிதத்தின் மூலம் உங்களுக்கு எழுதி தனக்கு ஒரு சன்னியாசப் பெயர் சூட்டும்படி கேட்டிருந்தாள். ஆனால் அவள் அக்கடிதத்தைப் பெறும் முன்னரே இங்குத் தங்களிடம் நேரில் வந்து பெயர் சூட்டிக் கொண்டு சென்றுவிட்டாள். பதில் கடிதத்தின் மூலம் அவள் பெற்ற பெயரும் நேரில் அவள் பெற்ற பெயரும் வெவ்வேறாக இருக்கின்றன. இதனை அறிந்ததிலிருந்து நான் மிகவும் மனக் கிலேசத்துக்கு உள்ளானேன்.

காரணம், தாங்கள் எனக்கிட்ட பெயரை எனது வழியெனக் கொண்டுள்ளேன். எனது பாதையைத் தேர்ந்தெடுக்க எனது பெயரையே அடிப்படையாகக் கொண்டிருந்ததால் நான் சிறிது மனக் குழப்பத்துக்கு ஆளாகியிருக்கிறேன். நீங்கள் எங்களுக்கிடும் பெயர்களெல்லாம் எந்த அளவுக்கு முக்கியத்துவம் வாய்ந்தவை?

வீரா, எல்லாமே புனிதமான பசுவின் கழிவுகள்! பெயர்களைப் பார்த்து ஏமாந்து போகாதீர்கள். நீங்கள் எப்போதுமே ஏதாவது ஒன்றைப் பிடித்துக் கொள்வதற்குக் காத்துக்கொண்டிருக்கிறீர்கள். ஒன்றுமில்லாமல் இருக்கும் ஏதாவது ஒன்றைப் பெரிய விஷயமாக்குவதற்குக் காத்துக் கொண்டிருக்கிறீர்கள். நான் உங்களுக்கிடும் பெயர்களெல் லாம் காதலர்களுக்கிடையே நிகழும் 'இனிப்பான ஒன்று மில்லாதவை.' அவற்றைப் பற்றி மிகவும் மதிப்புக் கொடுக்க வேண்டாம்.

ஏனெனில், ஒரு முறை நான் உங்களுக்கு ஒரு பெயரை வைத்துவிட்டேனென்றால் மறுபடியும் அதைப் பற்றித் திரும்ப வந்து, அந்தப் பெயர்களின் பொருள் பற்றி யெல்லாம் கேட்காதீர்கள். ஏனெனில், அவற்றை நான் மறந்துவிடுகிறேன். அந்தக் கணத்தில் அந்தப் பெயர் பற்றிய ஒரு பொருளை நான் உருவாக்குகிறேன். அதைப்பற்றிப் பின்னால் நான் எப்படி நினைவில் வைத்துக்கொள்ள முடியும்? இதுவரை முப்பதாயிரம் பெயர்களுக்கு மேல் வைத்திருக்கிறேன்.

பெயர் என்பது ஒரு பெயர். அவ்வளவுதான். நீங்கள் பெயரில்லாதவர்கள். ஒரு பெயர் என்பது உங்களைச் சிறைப்படுத்த முடியாது. எந்தப் பெயருமே உங்களைச் சிறைப்படுத்த முடியாது. அவை பயன்படுத்துவதற்காக இருக்கும் பெயர் சீட்டுகள். அவற்றுக்கு எந்தவிதப் புனித

மும் கிடையாது. நான் உங்களது பெயருக்கு அதிகமான முக்கியத்துவம் அளித்து அவற்றை விளக்கவே அதனைப் பற்றி இவ்வளவு கேட்கிறீர்கள். அது நான் உங்களுக்கு எனது கவனத்தைக் காட்டும் ஒரு வழி. வேறு ஒன்று மில்லை. எனது அன்பை உங்களுக்குப் பொழியும் எனது வழி. வேறு ஒன்றுமில்லை.

> எனது அன்பான ஓஷோ,
> சொற்பொழிவு நிகழ்ந்து கொண்டிருக்கையில்
> நான் ஏன் தூக்கத்தில் ஆழ்ந்துவிடுகிறேன்? வேறு
> சிலர் மிகவும் அசையாமல்
> அமர்ந்திருக்கின்றார்களே! அவர்களுடன்
> என்னை ஒப்பிட்டுப் பார்க்காமல் இருக்க
> இயலவில்லை. அதன் பின்னர் நான் இன்னும்
> நெடுந்தூரம் செல்ல வேண்டும் என்று
> தோன்றுகிறது. அதுவும் சொற்பொழிவு முடிந்த
> பின்னர், "இன்று ஆச்சரியகரமாக இல்லை?"
> என்று கேட்கும்போது இப்படி நிச்சயம்
> தோன்றுகிறது. சொற்பொழிவு துவங்குவதற்கு
> ஒரு நல்ல இடம் இல்லை என்று நான்
> நினைத்தேனானால் ஒருவேளை எனக்குள்
> இன்னும் நிறைய விஷயங்கள் வரும்
> போலிருக்கிறதே?

அது சரியான இடம்தான். உங்களிடம் வந்து சொல்பவர்களைப் பற்றிக் கவலைப்படாதீர்கள். அவர்கள் வெறும் சிரிப்புக்காகத்தான் சொல்கிறார்கள். நன்றாகத் தூங்கவும். அவர்கள் உங்களைத் தொந்தரவு செய்ய முயல் கிறார்கள். அவர்கள் உங்கள் மீது பொறாமை கொண்டிருக் கிறார்கள். உங்களால் நன்றாகக் குறட்டை விட்டபடி உறங்க முடிகிறதே என்று பொறாமை அவர்களுக்கு! அவர்கள் வெறுமனே உட்கார்ந்து கொண்டிருக்கிறார்கள். அவர்கள் உங்களைத் தொந்தரவு செய்ய முயல்கிறார்கள்.

நீங்கள் கவலைப்பட வேண்டாம். நீங்கள் தூங்கிக் கொண்டேயிருங்கள். நீங்கள் இன்னும் வெகு தூரம் செல்ல வேண்டும். ஆனால் தூக்கத்தில்தான், வேறெங்கும் இல்லை.

ஒரு கூட்டத்தில் சலிப்பேற்படும் வகையில் செல்லும் போது திடீரென்று ஒரு மனிதன் எழுந்திருந்து கை தட்ட ஆரம்பித்துவிட்டான். அவனுக்கு அடுத்து அமர்ந்திருந்த மனிதன், "நீ ஏன் அப்படிச் செய்தாய்?" என்று கேட்டான்.

"மன்னிக்கவும். நான் விழித்திருப்பதற்கான முயற்சியில் ஈடுபட்டேன்" என்ற பதில் வந்தது.

மனிதர்கள் விழித்துக்கொண்டிருப்பதற்கு எவ்வளவு சிரமப்படுகிறார்கள் என்று உங்களுக்குத் தெரியாது. நீ உன்னுடைய தூக்கத்தில் ஆழ்ந்துவிடு. ஓய்வெடுத்துக் கொள். அதை உன்னால் முழுமையாக ஏற்றுக்கொள்ள முடிந்தால் அது ஒரு மகத்தான அனுபவம்.

மனம் என்பது எப்போதுமே முரண்பாடுகளை விளை வித்துக் கொண்டிருக்கும். நீங்கள் உறங்கவில்லையானால் அது 'நான் இப்போது உறங்கினால் நன்றாக இருக்கும்' என்பதாகச் சொல்லும். நீங்கள் உறங்கினால் 'நீ ஏதோ வொன்றை இழந்துவிட்டாய். இப்படிச் செய்திருக்கக் கூடாது' என்று சொல்லும். மனம் எப்போதுமே முரண் பாடுகளை உருவாக்கிக் கொண்டேயிருக்கும். உராய்வு களை விளைவிக்கும். அது எதைக் கொண்டும் மகிழ்ச்சி யோடு இருக்காது. அந்த மனத்தை விட்டுவிடுங்கள். உறக்கம் என்பது இயல்பாக வருமேயானால் அதை அனுமதியுங்கள். அப்படி ஒப்புக்கொள்கையிலும் மனம் என்பதே மறைந்து போகும் நிலையிலும் நீங்கள் வைர சூத்திரத்தைக் கேட்பீர்கள்.

பதஞ்சலி, சமாதிக்கு அடுத்த நிலை உறக்கம்தான் என்கிறார். ஆழ்ந்த உறக்கம், நல்ல உறக்கம் என்பது சமாதி யிலிருந்து ஒரே விஷயத்தில்தான் வேறுபட்டிருக்கிறது. அது

என்னவெனில், சமாதி நிலையில் பிரக்ஞை என்பது இருக்கும். ஆனால் உறக்க நிலையில் அது இருக்காது. ஆனால் உறக்க நிலையிலும் பிரக்ஞை ஏற்படும். உங்களுக்கே நீங்கள் சிரமத்தை உண்டு பண்ணிக் கொள்ளாதீர்கள். உங்களை இரண்டாகப் பிரித்துக் கொள்ளாதீர்கள். உறக்கம் வரவில்லையெனில் நல்லது, விழித்துக் கொண்டிருங்கள். அதை முயற்சி செய்து வந்தது என்று எடுத்துக் கொள்ள முடியாது. உறக்கம் வந்ததெனில் உறக்கத்தில் ஆழ்ந்துபோங்கள். அப்போது உங்களை நீங்கள் விழித்துக் கொண்டிருக்கும்படியாகச் செய்யாதீர்கள். உறக்கம் வரவில்லையென்றாலும் உறங்கச் செல்லுங்கள் என்று நான் கூறவில்லை. எது நிகழ்கிறதோ அதை ஒப்புக்கொள்ளுங்கள். உண்மையை அது சில கணங்களில் நிகழும் விதத்திலேயே அதனை ஒப்புக்கொள்ளுங்கள். அந்தக் கணத்தில் முழுமையாக இருங்கள்.

அதுவே எனது முழுமையான செய்தி! அந்தக் கணத்தில் முழுமையாக இருப்பது என்பதுதான் எனது செய்தி. அதுவே ஆசை என்பதும். "நான் உறங்கக் கூடாது" ஏன்? அது தெய்விக சம்பந்தப்பட்டதல்ல. 'ஒரு ஆன்மிகப் பேருரையின் நடுவே அமர்ந்து உறங்கிக்கொண்டிருப்பது எப்படிச் சரியாகும்?' உறக்கம் என்பது முழுமையான தெய்விகமான காரியம். அது அங்கே அமர்ந்து யோசித்துக் கொண்டிருப்பது, கனவு கண்டு கொண்டிருப்பதற்கு ஒப்பான காரியமாகும். கனவு காண்பது என்பது யோசிப்பதற்கு முந்தைய செயலாகும். இன்னும் வண்ணம் கொண்ட ஒன்றாகும். மற்றவர்கள் யோசித்துக் கொண்டிருக்கின்றனர். நீங்கள் கனவு கண்டு கொண்டிருக்கிறீர்கள். அதில் என்ன வித்தியாசம் இருக்கிறது? நன்றாகக் கனவு காணுங்கள். நன்றாக உறங்குங்கள். ஓய்வெடுங்கள்.

ஒருநாள், இந்த ஓய்வெடுத்தலின் வழியே நீங்கள் பிரக்ஞையோடு, ஜாக்கிரதை உணர்ச்சியோடு விழித்

தெழுவீர்கள். ஆனால், அந்த ஜாக்கிரதை உணர்ச்சி ஒரு தனியான சிறப்புத் தன்மை கொண்டதாக அமைந்திருக்கும். அது நிர்ப்பந்தப்படுத்தப்பட்டதாக இருக்காது. அது உங்களின் மீது திணிக்கப்பட்டதாக இருக்காது. அது வரும். ஒரு நாள் உரையின் நடுவே உங்களது கண்களைத் திறப்பீர்கள். இளமையாக, புத்துணர்ச்சியோடு ஆழ்ந்த உறக்கத்திலிருந்து எழுவீர்கள். ஒரு சில வார்த்தைகள் உங்களினுள் சென்று உங்களை மாற்றிவிடும்.

வைர சூத்திரம் முழுமையும் தேவையில்லை. ஹியூ நெங்கிற்கு நான்கு வரிகள் போதுமானதாக இருந்தன. சில நேரங்களில் ஒரே ஒரு வார்த்தை புத்தரிடமிருந்து வந்தால் கூடப் போதுமானதாக இருக்கும். அது ஒரு அம்பைப் போல வந்து உங்களது இதயத்தைத் துளைத்து, நீங்கள் இன்னும் கூடப் பழைய மனிதர் இல்லை என்பது போல ஆக்கிவிடும்.

அதனால் நீங்கள் கவலைப்பட வேண்டாம். நன்றாக ஓய்வெடுங்கள். நீங்கள் நன்றாக ஓய்வெடுத்த பின்னர்க் கண்களைத் திறந்து பார்க்கும்போது சில நேரங்களில் இது சாத்தியமாகும். அப்போது உங்களுக்கும் எனக்கும் ஒரு சந்திப்பு நிகழும். நீங்கள் அப்போது ஒரு புத்துணர்ச்சி பெற்றவராக, உறக்கத்திலிருந்து விழித்தவராக, எண்ண முடியாத அளவு நீங்கள் யாரென்றே தெரியாத அளவுக்கு-

உங்களுக்குத் தெரியாது? சில நேரங்களில் காலையில் விழித்தெழும்போது நீங்கள் யாரென்று புரிந்துகொள்ளவே சில கணங்கள் ஆகும். உங்களது மனம் சில கணங்கள் எடுத்துக்கொண்ட பிறகுதான் திரும்பி வரும். சில நேரங்களில் நீங்கள் எங்கிருக்கிறீர்கள் என்றே உங்களுக்கே தெரியாது. நடுராத்திரியில் விழித்துக்கொண்ட பிறகு எல்லோரும் தான் யார் என்று விழிப்பார்கள். எங்கே இருக்கிறோம் என்றும் யோசிப்பார்கள். தன்னை ஒருங் கிணைத்துக் கொள்ளவே சில நேரம் பிடிக்கும்.

அதனால் இதுவும் சாத்தியமே. உறங்கும்போது இடையே ஒரு கூச்சலைக் கேட்பீர்கள். நீங்கள் விழித்தெழுந்து நீங்கள் யாரென்றே தெரியாத நிலையில் இருப்பீர்கள். அந்தச் சரியான கணத்தில்தான் நான் உள்ளே நுழைவேன்.

அதனால் நீங்கள் கவலைப்பட வேண்டாம். எது நடந்திருந்தாலும் அது நல்லதற்குத்தான். எல்லாமே இங்கு ஒப்புக்கொள்ளப்படுகிறது. நான் உங்களையும் இப்போதிருப்பது போலவே ஏற்றுக்கொள்கிறேன். நீங்கள் இப்படித்தான் இருக்க வேண்டும் என்பதாகவெல்லாம் எனக்கு எண்ணமே இல்லை.

> எனது அன்பான ஓஷோ,
> மக்கள் ஒருவருக்கொருவர் மற்றவர்களது
> மதங்களை ஏன் புரிந்துகொள்ளமாட்டேன்
> என்கிறார்கள்? ஏன் அவற்றில் இவ்வளவு
> முரண்பாடுகள்?

அகங்காரம். மதங்களுக்கும் இதற்கும் ஒரு தொடர்பும் இல்லை. வெறும் அகங்காரம் மட்டுமே காரணம். உங்களுடையது எதுவாக இருந்தாலும் அது மட்டுமே உலகிலேயே நல்லது என்ற எண்ணமும் மற்றவர்களுடையது எதுவாக இருப்பினும் அது நல்லதல்ல என்ற எண்ணமும் உள்ளது. அதை நல்லதாக எண்ணிவிடக்கூடாது என்ற எண்ணம்.

உங்களுடைய மனைவி உலகிலேயே அழகானவள். உங்களுடைய கணவர் உலகிலேயே அழகான மனிதர். நீங்கள்தான் உலகிலேயே மகத்தான மனிதர். நீங்கள் அதை வெளியிலே சொல்லமாட்டீர்கள். ஆனால் அதை ஆயிரத்தொரு வழிகளில் சொல்லிக்கொண்டிருக்கிறீர்கள். உங்களுடைய எதுவாக இருந்தாலும் அதுவே உலகில் சிறந்ததாக இருக்கிறது என்ற எண்ணம். மக்கள் சிறு

குழந்தைகளைப் போலவே இருக்கிறார்கள். சிறு குழந்தைகள் சண்டை போட்டுக்கொண்டே இருப்பார்கள். "எனது தந்தை உனது தந்தையை எப்போது வேண்டு மானாலும் ஜெயித்து விடுவார்" என்பதைப் போல!

ஒரு சிறுவன் இன்னொரு சிறுவனிடம், "எனது தாய் ஒரு சிறந்த பேச்சாளி. அவள் எதைப் பற்றி வேண்டு மானாலும் மணிக்கணக்காகப் பேசிக் கொண்டிருப்பாள்" என்று சொன்னான்.

பதிலுக்கு மற்றொரு சிறுவன், "அது ஒன்றுமில்லை. எனது தாய் அதைவிடச் சிறந்த பேச்சாளி. அவள் எந்தத் தலைப்புமே இல்லாமல் மணிக்கணக்கில் பேசுவாள். யாருக்குமே அவள் என்ன பேசுகிறாள் என்று தெரியாது" என்று பதிலளித்தான்.

மக்கள் தங்களுடைய விஷயங்களைப் பற்றிச் சொல்லிக் கொண்டே போகின்றனர். எல்லாவற்றைப் பற்றியும், மதங்களைப் பற்றியும் கூட!

முல்லா நஸ்ருதீனின் மகன், "ஒரு முகம்மதியன் தனது மதத்தை விட்டு மாறி ஓர் இந்துவாகவோ அல்லது ஒரு கிறிஸ்துவனாகவோ ஆனார் என்றால், அவரை என்ன வென்று அழைப்பது?" என்று கேட்டான்.

முல்லா கோபமுற்று, "அவன் ஒரு நம்பிக்கைத் துரோகி. அவனைக் கொலை செய்ய வேண்டும். அதுதான் உலகிலேயே மிகப் பாவகரமான செயல். உனது மதத்தை மாற்றிக் கொள்வது உனது மதத்துக்குத் துரோகம் செய்வ தாகும். அவன் நம்பிக்கைத் துரோகி – அவன் உப்பைத் தின்ற வீட்டுக்குத் துரோகம் செய்பவன்" என்றார்.

அந்த மகன் உடனே பதிலுக்கு, "அப்புறம் அப்பா, ஓர் இந்துவோ கிறிஸ்துவனோ முகம்மதியனாக மாறினால்?" என்று கேட்டான்.

முல்லா சிரித்தார். அவர் சொன்னார்: "அது மகத்தான ஒன்றாகும். அந்த மனிதன் புத்திசாலி. அவரை வரவேற்று அவரைக் கௌரவப்படுத்த வேண்டும். அவருக்கு உண்மை யென்றால் என்னவென்று தெரிந்துள்ளது. அவர் மிகவும் தைரியமானவர். அவர் மதம் மாறியவர். எனது மகனே புரிந்ததா?" என்றாராம்.

இப்போது விஷயங்கள் மாறிவிட்டன. ஒரு முகம்மதியன் ஓர் இந்துவாகவோ, கிறிஸ்துவனாகவோ மாறினால், அவன் நம்பிக்கைத் துரோகி. ஒரு இந்துவோ, கிறிஸ்துவனோ முகம்மதியனாக மதம் மாறினால் அவர் மகத்தான மனிதர். அவர் வரவேற்கப்பட்டுக் கௌரப்படுத்தப்பட வேண்டும். அவர் புத்திமான். ஏனெனில், அவர் உண்மை யான மதம் என்னவென்று புரிந்து கொண்டு அதைக் கண்டுகொண்டார்.

இப்படித்தான் நமது அகங்காரம் செயல்படுகின்றது. அதுவே நமது மதங்களும். சமாதானத்தைக் கொண்டு வருவதற்குப் பதிலாக இரத்த ஆறு ஓடும் போர்களைக் கொண்டு வருகின்றன. மதத்தின் பெயரால் பல மக்கள் கொலை செய்யப்பட்டுள்ளனர். அரசியல்வாதிகளாலும் கூட மதத்தின் பெயரால் கொலைகள் நடப்பதைத் தவிர்க்க முடிவதில்லை. பெரிய கொலைகாரர்களுக்கெல்லாம் புகலிடமாக மாதா கோயில்களும், மசூதிகளும், கோயில் களுமே இருக்கின்றன.

எதிர்காலத்திலாவது இந்த அசிங்கங்கள் தவிர்க்கப்பட வேண்டும். இது உடனடியாக நிறுத்தப்பட வேண்டும். மதம் என்பது ஒரு தனிப்பட்ட மனிதனின் விஷயமாக இருத்தல் வேண்டும். ஒரு மனிதனுக்கு ரோஜாப்பூ பிடிக்கவில்லை யெனில் உடனே அவனை கொன்றுவிடுவதில்லை. அவன் அவலட்சணமாக இருந்தான். அவன் தவறானவன் என்று சொல்லாதீர்கள். நீங்கள் அது அவனுடைய தனிப்பட்ட விஷயம் என்று சொல்லுங்கள். அவனுக்கு ரோஜாப்

பூவைப் பிடிக்காது என்று சொன்னீர்களேயானால் அத்தோடு முடிந்தது. எனக்கு ரோஜாப்பூ பிடிக்கிறது. அது ஒவ்வொருவரின் சுவையைப் பொருத்தது. அதில் எந்தவொரு உண்மையும் இல்லை. அதில் வாதம் செய்யத் தேவையான எதுவும் இல்லை. அதில் நிரூபிக்க எதுவும் இல்லை. எனக்கு ரோஜாப்பூவை ஏன் பிடிக்காது என்று விளக்கத் தேவையில்லை. எனக்குப் பிடிக்காது என்றால் பிடிக்காது. உனக்குப் பிடிக்கும் என்றால் பிடிக்கும். அதில் முரணுக்கு ஏதுமில்லை. மதமும் அப்படித்தானிருக்க வேண்டும்.

யாருக்காவது இயேசு கிறிஸ்துவைப் பிடிக்கும். மிகவும் அழகானது. வேறு யாருக்காவது புத்தரைப் பிடிக்கும். யாருக்காவது கிருஷ்ணரைப் பிடிக்கும். எல்லாமே விருப்பங்கள்தாம். மதம் என்பது பிறப்பை ஒட்டியதாக இருத்தல் கூடாது. அது ஒரு மனிதனின் சுய விருப்பத்தைப் பொருத்ததாகவே இருக்க வேண்டும். அதன்பின் அதில் முரண்பாடே வராது. அதன்பின் பல நூற்றாண்டுகளாகத் தொடர்ந்துகொண்டிருக்க தேவையற்ற வாதங்கள் எழாது. பிரார்த்தனை செய்வதை விட்டுவிட்டு மக்கள் வாதங்களில் ஈடுபட்டுக்கொண்டிருக்கிறார்கள். வாதங்களில் செலவழிக்கும் அத்தனை சக்தியையும் பிரார்த்தனையில் செலவிட்டிருந்தால், அது எவ்வளவு புனிதமானது என்று கண்டு கொண்டிருப்பார்கள். ஆனால் அவர்கள் வாதத்திலேயே ஈடுபட்டுக்கொண்டிருக்கின்றனர். பெரிய வாதங்கள் தொடர்கின்றன. இதுவரையில் எதுவுமே நிரூபிக்கப்பட வில்லை. ஏனெனில் எதையும் நிரூபிக்கவே முடியாது.

உங்களுக்கு இயேசுவைப் பிடித்திருந்தால் அது ஒரு பெண்ணின் மீது காதல் கொள்வதற்கு ஒப்பானதுதான். நீங்கள் எதையுமே நிரூபிக்க முடியாது. ஏன்? நீங்கள் எதை நிரூபித்தாலும் அது மற்றவர்களுக்கு முட்டாள் தனமாகத்தான் இருக்கும். நீங்கள், "அவளது மூக்கைப்

பாருங்கள். அது எவ்வளவு அழகாக இருக்கிறது?" என்பீர்கள். மக்கள் உடனே, "அது மிகவும் அவலட்சணமாக இருக்கிறது. அது சரியான வடிவத்தில் இல்லை. அது மிகவும் பெரியதாக இருக்கிறது. அவளது முகம் சரியான வடிவத்தோடு இல்லை" என்பார்கள். நீங்கள், "அவளது கண்களைப் பாருங்கள். அது மிகவும் பெரியதாக அழகாக இருக்கிறது" என்றால் யாராவது, "அது பயமுறுத்துவதாக இருக்கிறது. என்னால் அது போன்ற பெண்ணோடு ராத்திரி வேளைகளில் தங்கவே முடியாது. அந்தப் பெரிய இரண்டு கண்கள்... எனக்குப் பயமாக இருக்கிறது. அவை மிகப் பெரியதாக இருக்கின்றன" என்பார்கள்.

விருப்பங்களை எப்படியும் நிரூபிக்கவே முடியாது. ஒருவருக்கு இயேசு கிறிஸ்து பிடிக்கும். மற்றொருவருக்கு புத்தரைப் பிடிக்கும். அது அன்பில் மூழ்குவதைப் போன்றது. அதை நீங்கள் நிரூபிக்க வேண்டிய அவசியம் இல்லை. நீங்கள் அதனை நிரூபித்தால் அது மற்றவர்களுக்கு மூடத்தனமாக இருக்கும். அது அப்படித்தான் தோற்றமளிக்கும். இந்து மக்கள், இயேசு கிறிஸ்துவை நம்புகிறவர்கள் முட்டாள்தனமானவர்கள் என்று நினைக்கிறார்கள். ஒரு மனிதனில் என்ன இருக்கிறது? நீங்கள் இந்துக்களைக் கேட்டுப் பாருங்கள். அவர்களிடம் 'கர்மவிதி' என்று ஓர் அருமையான விதி இருக்கிறது. உங்களது முந்தைய பிறப்பில் செய்த தீவினைகளுக்கு இந்தப் பிறப்பில் அவதிப் படுகிறீர்கள் என்பார்கள். இயேசு கிறிஸ்து ஏன் சிலுவை யில் அறையப்பட்டார்? அவர் பாவங்கள் செய்திருக்க வேண்டும். அப்படியில்லையெனில் ஏன்? கிருஷ்ணன் ஏன் சிலுவையில் அறையப்படவில்லை. ராமர் ஏன் சிலுவை யில் அறையப்படவில்லை? இயேசு கிறிஸ்து ஏன் அறையப் பட்டார்? அவர் ஒரு பாவி, அதனால்தான் என்பார்கள்.

இப்போது எல்லாக் கோணங்களுமே மாறிவிட்டன. இப்போது ஒரு கிறிஸ்துவனிடம், "கிருஷ்ணர் புல்லாங்குழல்

வாசித்துக் கொண்டிருக்கிறார். அது மிகவும் அழகாக இருக்கிறது. இயேசு சிலுவையில் அறையப்பட்டுள்ளார். அது மிகவும் வருத்தமாக இருக்கிறது" என்று சொன்னால், உடனே அவன், "நீ என்ன பேசுகிறாய்? இந்த உலகம் மிகவும் துயரப்பட்டுக்கொண்டிருக்கிறது. கிருஷ்ணர் கல்நெஞ்சம் படைத்தவராக இருக்க வேண்டும். அதனால் தான் அவர் புல்லாங்குழல் வாசித்துக் கொண்டிருக்கிறார். மக்கள் நோயினாலும் துயரத்தாலும் வாடி இறந்து கொண்டிருக்கின்றனர். ஆனாலும், அந்த மனிதர் புல்லாங்குழல் வாசித்துக்கொண்டிருக்கிறார். அவருக்கு இதயமே இல்லை. அவருக்கு அப்படி இதயமிருந்திருந்தால் தம்மையே தாழ்த்தப்பட்ட மக்களுக்காகத் தியாகம் செய்திருப்பார். நசுக்கப்பட்ட மக்களுக்காக, துயரத்தில் வாடும் மக்களுக்காகத் தியாகம் செய்திருப்பார். இயேசு வைப் பாருங்கள். அவரே ரட்சிப்பவர். அவர் எங்களுக்காக இறந்தார். அதனால்தான் நாங்கள் புதுக்கப்பட்டுள்ளோம். கிருஷ்ணரோ வெற்றிடமாக இருப்பவர்'' என்று சொல்வான்.

ஆனால் ஓர் இந்துவைக் கேட்டால் அவன், "நீ என்ன பேசிக்கொண்டிருக்கிறாய்? இங்குத் துயரமே இல்லை. எல்லாத் துயரங்களுமே மாயை. மக்கள் துயரப்பட்டுக் கொண்டிருந்தால் எல்லாமே அவர்களது பாவங்களினால் தான். யாருமே அவர்களைக் கடைத்தேற்ற முடியாது. அவர்களைக் கரை சேர்ப்பவர் ஒருவர் மட்டுமே. அவர் இந்த உலகத்துக்கு மகிழ்ச்சியை அளிப்பவர். அந்தக் கடைத்தேற்றும் சக்தி ஒன்றால்தான் எல்லாம் முடியும். நீ எப்படி அவர்களைக் கடைத்தேற்ற முடியும்?" என்பான்.

இந்துக்கள் சொல்வது என்னவெனில், யாராவது அழும்போது அவர்களுக்கருகே அமர்ந்து நீங்களும் அழுது கொண்டிருந்தால் நீங்கள் அவர்களைக் கடைத் தேற்ற முடியுமா? அழுவதுதான் இரட்டிப்பாகிறது. ஒருவர்

உடல்நிலை சரியில்லாது போகிறார். நீங்கள் அவரருகே அமர்ந்து துக்கப்பட்டுக் கொண்டிருந்தால் நீங்கள் எந்த வகையில் அவருக்கு உதவி புரிகிறீர்கள்? அவருக்கு உதவி புரிவதற்கு நீங்கள் பலசாலியாக இருக்க வேண்டும். நீங்கள் உடல்நிலை சரியில்லாமல் போய்விடக் கூடாது. கிருஷ்ணர் பலசாலி. கிருஷ்ணர் சந்தோஷமானவர். இந்த உலகம் துயரமாக இருக்கிறது. ஆகவேதான் அவர் புல்லாங்குழலை எடுத்து வந்தார். ஏற்கெனவே எல்லோரும் சிலுவையைச் சுமந்துகொண்டிருக்கின்றனர்.

இப்போது தேவையானது புல்லாங்குழல்தான். இப்படி இரண்டு வழிகளில் வாதம் புரிந்துகொண்டே இருக்கலாம். நேர்மறையாகவும் அல்லது எதிர்மறையாகவும் வாதம் புரியலாம்.

என்னைப் பொருத்த அளவில் மதம் என்பது காதலுக் கொப்பான விஷயமாகும். அதற்கும் அறிவுக் கூர்மைக்கும் எந்த ஒரு தொடர்புமில்லை. அதற்கும் காரணம் கற்பிக்கும் முறைக்கும் ஒரு தொடர்புமில்லை. அது காதலிப்பதற்குச் சமமானதாகும். நீங்கள் யாரிடம் காதல் வயப்பட்டாலும் அது உங்கள் வழியாகும். அந்த வழியிலேயே செல்லுங்கள். அது உங்களது வழியாகும்.

காதல் என்பது வழியாகும். அதற்கு நீங்கள் யாரிடம் வயப்பட்டிருக்கிறீர்கள் என்றெல்லாம் பொருட்டல்ல. காதல் புதுப்பிக்கிறது. இயேசுவோ கிருஷ்ணரோ அல்ல. காதல்தான் புதுப்பிக்கிறது. காதல் வயப்படுங்கள், காதல் ஒன்றே புதுப்பிக்கும் ஒரு சக்தி. காதலே ரட்சிப்பு. ஆனால் உங்களது அகங்காரம்...

**இப்போது இந்த அழகான கதையில் ஆழ்ந்து தியானம் செய்யுங்கள்.**

**வாடிகனில் ஒரு நாள் ஐரிஷ் தந்தையான முதல் பேட்ரிக் தம்முடைய அலுவலகத்தில் அமர்ந்து கதோலிக்**

ஹெரால்டைப் படித்துக்கொண்டிருந்தார். அப்போது பிறப்பு விவரங்கள் என்னும் பகுதி அவரது கவனத்தைக் கவர்ந்தது.

தமது காரியதரிசி கார்டினல் பிட்ஜ் மைக்கேலை அழைத்து, "புனித மேரியே! நீ இதனைப் பார்த்தாயா?" என்று கேட்டார்.

அவர் தமது வேலையை விட்டு வந்து, "அதில் என்ன இருக்கிறது தந்தையே?" என்று கேட்டார்.

பதிலுக்குப் போப், "டப்ளினில் இருக்கும் பேடி ஓ'ப்ளின் என்பவருடைய மனைவி ஐம்பத்தாறாவது குழந்தையைப் பெற்றிருக்கிறார்" என்று பதிலளித்தார்.

பதிலுக்கு மைக்கேல், "அந்தப் புனிதமானவர்களை வாழ்த்துங்கள். சில நேரங்களில் அதிசயங்கள் நிகழ்கின்றன. இல்லையா?" என்று சொன்னார்.

போப் உடனே, "கடவுளின் செயல். இதனை எப்படியாவது பாராட்டியாக வேண்டும். கத்தோலிக்க மாதா கோயிலுடைய ஒற்றுமைக்காக, உலக நம்பிக்கையைப் பொதுவாக வைத்து எமரால்டை முக்கியமாகப் பாராட்டியே தீர வேண்டும்" என்று உரக்கச் சப்தமிட்டுக் கூறினார்.

"நிச்சயமாக. நீங்கள் உங்களது மனத்தில் என்ன நினைத்திருக்கிறீர்கள் என்று சொல்லுங்களேன்."

"மனத்தில் நினைப்பதே இல்லை, மைக்கேல். உடனே செயல்பட வேண்டும். உடனே பட்டறைக்குச் சென்று ஒரு தங்கத்தாலான கன்னிமேரியின் சிலையைச் செய்து கொண்டு வாருங்கள். அதற்கு முக்கியத்துவம் அளியுங்கள். டப்ளினுக்கு உடனே ஒரு முதல் வகுப்புக்கான டிக்கெட்டை ஒரு பிரயாண ஏற்பாட்டு நிறுவனத்தினரிடம் சொல்லி ஏற்பாடு செய்யுங்கள். நானே சென்று சிறிய

பரிசாகக் கன்னி மாதா சிலையை ஓபிளினிடம் பரிசளிக்கப் போகிறேன். நான் சிறிது விடுமுறை எடுத்துக் கொண்டு இதைச் செய்தே தீரவேண்டும்!" என்றார்.

அடுத்த நாள் சரியாகப் போப் கன்னி மேரி சிலையைக் கையில் எடுத்துக்கொண்டு ஒரு பாட்டில் ஐரிஷ் விஸ்கியை யும் எடுத்துக்கொண்டு விமானத்தைப் பிடித்து டப்ளினில் போய் இறங்கினார். இறங்கியவுடன் நேராக ஓப்ளினின் வீட்டுக்குச் செல்ல ஆரம்பித்தபோது உள்ளூர் குடும்பத் தினர் இவரை நேராக விழா நடக்கும் இடத்துக்கு அழைத்துச் சென்றனர்.

அந்த அறை முழுவதும் குடிகாரர்கள் நிறைந்திருந்தனர். "யாரோ உங்களைப் பார்க்க வந்திருக்கிறார்கள், அப்பா" என்று சிறுவன் சொன்னான்.

உள்ளே நுழைந்த போப் சில நேர முயற்சிகளுக்குப் பின்னர்ப் பேடியை அடைந்து, கன்னி மேரி சிலையை அவரிடம் தந்து, "எனது உண்மையான பாராட்டுதல் களைத் தெரிவித்துக் கொள்கிறேன்" என்று சொன்னார்.

உடனே பேடி, "நீங்கள் யாரைக் கௌரவப்படுத்துகிறீர் கள் என்று தெரியுமா?" என்று சிலையைக் கையில் வைத்தபடி கேட்டான்.

"நல்லது பேடி, உனக்கு என்னைத் தெரியாது. ஆனால் நான்தான் போப்."

"போப், நீங்கள் அபாயகரமான இடத்தில் இருக்கிறீர் கள், தெரியுமா?" என்று பதிலளித்தான்.

"ஆமாம். அப்படித்தான். ஆனால், நீ எனக்கு ஒரு சத்தியம் செய்து தர வேண்டும்."

பேடி பதிலுக்கு, "ஒரு குடிகாரனால் இதை மறுப்பது மிகவும் சிரமமான விஷயம்" என்று சொன்னான்.

"இந்தக் கன்னி மேரியின் சிலையை எனது பரிசாக வாங்கிக் கொண்டு அதனை உள்ளூர் மாதா கோயிலில் வைத்துவிட வேண்டும்" என்றார் போப்.

"நிச்சயமாக, இதை வாங்கிக்கொள்கிறேன். ஆனால், அதனை உள்ளூர் மாதா கோயிலில் வைப்பது என்பது முடியாத காரியம்" என்றான்.

"ஏன், ஏன் முடியாது? இதனை மாதா கோயிலுக்குப் பரிசாக அளிக்க ஏன் முடியாது?" என்றார் போப்.

"உண்மையில் நான் கத்தோலிக்கனில்லை. நான் ஒரு ப்ராடஸ்டண்ட்."

"என்ன, நான் இத்தனை தூரம் வந்தது ஒரு பாலுணர்வு பைத்தியம் பிடித்தவனைப் பார்த்து, ஓர் அழகான தங்கத்தாலான கன்னி மேரியின் சிலையைப் பரிசளிப்பதற்கு என்றா சொல்கிறாய்?" என்று உரத்த குரலில் கோபமாகக் கத்தினார்.

இன்றைக்கு இது போதும்.

புத்தர் கேட்டார்: "என்னால் தர்மம் நிகழ்த்திக் காட்டப்பட்டது' என்று ததாகதருக்குத் தோன்றும் என்று நினைக்கிறாயா, சுபூதி? 'ததாகதன் தர்மத்தை நிரூபித்துக் காட்டிவிட்டான்' என்று அவர் சொல்வாரானால், அவர் சொல்வது தவறாகும். இல்லாத ஒன்றைப் பற்றிக் கொண்டு, என்னைத் தவறாகப் பிரதிநிதித்துவப்படுத்தியதாக ஆகிவிடும் சுபூதி.

'ஏன் அப்படி?... ஏனென்றால், அங்கே மிகக் குறைந்த அளவு தர்மத்தைக்கூடக் காண முடியாது; அணுகவும் முடியாது. அதனால்தான், அது, 'மிக உயர்வான, மிகச் சரியான, மிக முழுமையான ஞானம்' என்று சொல்லப்படுகிறது.

'சுபூதி, மேலும்- தன்னை அடையாளம் கண்டுகொள்ளுதலே அந்தத் தர்மம். இதில் கருத்து வேறுபாட்டிற்கே இடமில்லை. அதனால்தான், அது, 'மிக உயர்வான, மிகச் சரியான, மிக முழுமையான ஞானம்' என்று குறிப்பிடப்படுகிறது.

'சுயம் என்பது இல்லாமல் தன்னை அடையாளம் கண்டுகொள்ளுதல், அதாவது, தனது இருப்பு, தான் ஓர் உயிர், ஒரு மனிதன் என்ற உணர்வில்லாமல் சுய அடையாளம் கண்டுகொள்ளுதல்தான், மிக உயர்வான, மிகச் சரியான, மிக முழுமையான ஞானம். இதுவே எல்லா தர்மங்களின் ஒட்டுமொத்த முழுமைக்கும் சமமாகும். ஒட்டுமொத்தத் தர்மமே இதுதான்."

"சுபூதி, 'என்னால், இருத்தல் விடுதலை அடைந்துவிட்டது' என்பது, ததாகதருக்குத் தோன்றும் என்று நினைக்கிறாயா? உன்னால் அதை உன் விதத்தில் பார்க்க முடியாது, சுபூதி! ஏன் அப்படி?

'விடுதலை செய்து விடுவதற்குத் ததாகதரிடம் யாருமே இல்லை..."



அன்று புத்தர், மேலும், கீழ்க்காணும் கருத்துகளைக் கூறினார்:

"என்னை ஒரு வடிவத்தில் பார்க்கிறவன், என் குரலைப் பின்பற்றிச் செல்கிறவன் தவறான முயற்சி மேற்கொள்கிறவன் ஆவான். அப்படிப்பட்டவர்களால் என்னைக் காண முடியாது.

'தர்மத்தின் மூலமாகவே புத்தனைக் காண முடியும். தர்மத்தின் உடல்கள் அவர்களுக்கு வழிகாட்டும். இருப்பினும் தர்மத்தின் உண்மை இயல்பை உணர முடியாது. அதை ஒரு பொருளாக எவராலும் உணர முடியாது...

"ததாகதர் போகிறார், வருகிறார், நிற்கிறார், அமர்கிறார், படுத்துக் கொள்கிறார்' என்று சொல்கிறவன் யாராயிருந்தாலும், அவன், என் போதனையைப் புரிந்து கொள்ளவில்லை என்று அர்த்தம்.

'ஏன் அப்படி?

' 'ததாகதா' என்றால் எங்கும் செல்லாதவன், எங்கிருந்தும் வராதவன் என்று பொருள். அதனால்தான் அவன் ததாகதன் என்றும், அருகதன் என்றும், பூரண ஞானி என்றும் குறிப்பிடப்படுகிறான்."

*புத்தர் கேட்டார்: "'என்னால் தர்மம் நிகழ்த்திக் காட்டப்பட்டது' என்று ததாகதருக்குத் தோன்றும் என்று நினைக்கிறாயா, சுபூதி? ததாகதன் தர்மத்தை நிரூபித்துக் காட்டிவிட்டான்' என்று அவர் சொல்வாரானால், அவர் சொல்வது தவறாகும். இல்லாத ஒன்றைப் பற்றிக்கொண்டு, என்னைத் தவறாகப் பிரதிநித்துவப்படுத்தியதாக ஆகிவிடும் சுபூதி."*

'அப்படியே' (Suchness) என்ற வார்த்தை மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தது. உண்மையைப் புத்தர் அணுகும் முறைகளில் இது மிக முக்கியத்துவம் வாய்ந்தது. புத்தமதத்தில் இந்த 'suchness' என்ற வார்த்தை மற்ற மதங்களில் கடவுள் என்ற வார்த்தைக்கு ஒப்பானதாகும்.

புத்தமதத்தில் இந்த suchness என்ற வார்த்தைக்கு tathata என்று பொருள். "பொருள்களை எப்படி உள்ளதோ அப்படியே பார்க்க வேண்டும். எந்தச் செய்கையும் செய்யாமல், எந்த அபிப்பிராயமும் கொள்ளாமல், தீர்ப்பு ஏதும் வைத்துக் கொள்ளாமல், கண்டனம் ஏதும் செய்யாமல்" என்பதாகப் பொருள். புத்தரின் தியான முறைகளில் இந்த 'அப்படியே' என்பதுதான் முக்கிய அங்கம் வகிக்கிறது. இந்த முறை மிகவும் நடைமுறைக் கொப்பானதாக மிகவும் ஆழமானதாக இருக்கிறது. புத்தர் தனது சீடர்களிடம், "நீங்கள் எல்லாவற்றையும் நடப்பது

போலவே கவனித்துக்கொண்டிருங்கள். அவற்றை மாற்றாதீர்கள்'' என்று சொன்னார். உதாரணத்துக்கு உங்களுக்குத் தலைவலி இருக்கிறது. அதை அறிந்த அந்தக் கணத்தில் அது நல்லதல்ல என்பதாக ஓர் எண்ணம் புகுகிறது. "எனக்கு ஏன் தலைவலி இருக்க வேண்டும்? அது வராமல் இருப்பதற்கு நான் என்ன செய்ய வேண்டும்?" என்று நினைக்கிறீர்கள். நீங்கள் உடனடியாகக் கவலைப்பட ஆரம்பிக்கிறீர்கள். நீங்கள் ஓர் அபிப்பிரா யத்தை வளர்த்துக்கொள்கிறீர்கள். நீங்கள் அதற்கு எதிர்மறையாக நினைக்கத் துவங்குகிறீர்கள். அதனைத் தடுக்க முயலுகிறீர்கள். அதனை ரசாயனத்தின் மூலமாக ஓர் ஆஸ்ப்ரோ அல்லது நோவால்ஜின் மாத்திரையை உட்கொண்டு, அல்லது அதனை நினைவிலேயே அழுத்தப் பார்க்கிறீர்கள். நீங்கள் அதனை அனுபவிப்பது கிடையாது. அதனைத் தள்ளி வைத்து விடுகிறீர்கள். நீங்கள் ஏதோவொன்றில் ஆழ்ந்துவிடப் பார்க்கிறீர்கள். ஏதோ வொன்றில் ஈடுபட்டு அதை தள்ளி வைக்கப் பார்க்கிறீர்கள். அதனால் அதனை மறந்துவிட முடியாது. ஆனால், இரண்டு வழிகளிலுமே நீங்கள் இந்த 'suchness' என்பதை இழக்கிறீர்கள்.

புத்தர் என்ன ஆலோசனை வழங்குவார்? புத்தர் இதனை இருமுறை காணச் சொல்கிறார். "தலைவலி, தலைவலி." அதைப் பகையாகக் காணாதே என்கிறார். "நட்பு முறையாகவோ அல்லது பகையுணர்ச்சியுடனோ பார்க்காதீர்கள்'' என்கிறார். அதனை அப்படியே உள்வாங்கிக் கொள்ளுங்கள். அது உங்களிடம் செய்வதற்கு ஒன்றுமில்லை என்பதுபோலப் பாருங்கள். "தலைவலி, தலைவலி" இதனால் தொந்தரவாகாமல் இருங்கள். கவனம் சிதறாமல், கவரப்படாமல், எந்த ஓர் அபிப்பிராயமும் கொள்ளாமல் இருக்க வேண்டும் என்பார்.

இதில் உள்ள முக்கியத்தைக் காணுங்கள். உடனே, தொண்ணூறு சதவீதம் தலைவலி போய்விட்டிருக்கும். ஏனெனில் தலைவலி உண்மையான தலைவலி அல்ல. தொண்ணூறு சதவீதம் எதிர்மறையான அபிப்பிராயங்களி னால் உருவாகியிருக்கும் தலைவலி. உடனடியாகப் பெரும்பான்மையான பகுதி அங்கு இல்லாது போய்விட்டி ருக்கும். இன்னொன்றையும் நீங்கள் பார்க்க வேண்டும். சீக்கிரமாகவோ அல்லது தாமதமாகவோ உங்களது தலைவலி இன்னொன்றில் மறைய ஆரம்பித்திருக்கும். அது கோபமாக இருக்கலாம். இப்போது கோபப்படத் துவங்கி யிருக்கலாம். என்ன நடந்தது? நீங்கள் தலைவலியை அகற்ற விரும்பினால் உண்மையான செய்தி என்னவென்று உணராமலே போய்விடுகிறீர்கள். உங்களுக்குக் கோபம் இருக்கிறது என்பதை வெளிக்காட்டும் ஓர் அடையாள மாகவே தலைவலி இருந்திருக்கிறது. அந்தக் கோபம் உங்களிடம் ஒரு பதற்றத்தை உண்டு பண்ணியிருக்கும். அதனால்தான் தலைவலி. இப்போது நீங்கள் அதைக் கவனித்திருப்பீர்கள். அதனைக் குறித்துக் கொண்டிருப்பீர் கள். "தலைவலி, தலைவலி" -நீங்கள் பாதிக்கப்படாமல், அப்படியே இருங்கள்.

அப்போது தலைவலி மறைந்து போகிறது. அந்தத் தலைவலி உங்களுக்களித்த செய்தி என்ன? "நான் தலைவலியல்ல. நான் கோபம்தான்" என்பதுதான் அது. இப்போது புத்தர் சொல்கிறார்: அதனைக் கவனியுங்கள். 'கோபம், கோபம்.' தொண்ணூறு சதவீதம் கோபம் இப்போது அகன்றுவிட்டிருக்கும். இப்போது கோபத்தின் மீது கோபம் கொள்ளாதீர்கள். அப்படியில்லையெனில் நீங்கள் அகப்பட்டுக்கொள்வீர்கள். அந்த 'அப்படியே'யை இழந்து விடுவீர்கள். நீங்கள் 'கோபம், கோபம்' என்று சொல்லும்போதே தொண்ணூறு சதவீதம் கோபம் உடனடி யாக மறைந்து போகும். இது மிகவும் நடைமுறைக்கு ஒத்த முறை. அங்கு இருக்கும் பத்துச் சதவீதக் கோபம் ஏதோ

ஒரு செய்தியை உங்களுக்குச் சொல்கிறது. நீங்கள் அது கோபம் இல்லை என்பதைப் புரிந்து கொண்டிருப்பீர்கள். அது அகங்காரம்தான். அதனை மறுபடியும் குறித்துக் கொள்ளுங்கள். 'அகங்காரம், அகங்காரம்.' இப்படியே போய்க்கொண்டிருக்கலாம். ஒன்று மற்றொன்றுடன் பிணைக்கப்பட்டுள்ளது. ஆழமாகப் பார்க்கும்போது அந்த மூலகாரணம் எது என்பதை நோக்கிச் சென்று கண்டடைய லாம். ஒரு முறை மூலகாரணத்தைக் கண்டறிந்தவுடன் சங்கிலி அறுந்து போகின்றது. அதற்கப்பால் எதுவுமில்லை.

ஒரு சமயத்தில் இந்தச் சங்கிலியின் கடைசித் தொடர் பைக் காணத் துவங்கியிருப்பீர்கள். அதன் பிறகு ஒன்று மில்லாது போய்விடுகிறது. அதன்பின் நீங்கள் அந்த மொத்தச் சங்கிலியிலிருந்துமே விடுவிக்கப்பட்டிருப்பீர்கள். அப்போது மகத்தான தூய்மை ஆரம்பிக்கும். ஒரு அமைதி ஆரம்பிக்கும். அந்த அமைதியே 'அப்படியே' என்றழைக்கப் படுகிறது.

இதனைத் தொடர்ச்சியாகக் கடைப்பிடிக்க வேண்டும். சில சமயங்களில் இது நிகழும்போது நீங்கள் மறந்து விட்டிருப்பீர்கள். நீங்கள் அதைப் பற்றிய ஒரு அபிப்பி ராயத்தைத் தானாகவே உருவாக்கிக் கொண்டிருப்பீர்கள். இயந்திரத்தனமாக உருவாக்கி விட்டிருப்பீர்கள். இப்போது புத்தர் சொல்வதை நினைவில் வையுங்கள். 'அபிப்பிராயம், அபிப்பிராயம்.' இப்போது நீங்கள் திசை திருப்பி விட வேண்டாம். நீங்கள் ஓர் அபிப்பிராயத்தை உருவாக்கிக் கொண்டதற்காகக் கவலைப்படத் தேவையில்லை. நீங்கள் சந்தர்ப்பத்தைத் தவற விட்டுவிட்டதற்காகச் சோர்வடைய வேண்டாம். அதனைக் கவனியுங்கள். 'அபிப்பிராயம், அபிப்பிராயம்.' உடனடியாக நீங்கள் இதனைக் காணத் துவங்குவீர்கள். தொண்ணூறு சதவீத அபிப்பிராயம் காணாமல் போயிருக்கும். பத்துச் சதவீதம் மீதமிருக்கும். அது உங்களுக்கு ஒரு செய்தியைத் தரும். அது என்ன செய்தி? அந்தச் செய்தி என்னவெனில் ஏதோ ஒரு தடை,

ஒரு தயக்கம் இருக்கிறது என்பதே அது. அந்தத் தடையிலிருந்துதான் அபிப்பிராயம் எழுந்திருக்கிறது.

பாலுணர்வுடன் கூடிய ஆசை உங்களது மனத்தில் எழுந்திருக்கிறது என்றால், உடனே நீங்கள் 'இது கெட்டது' என்று சொல்கிறீர்கள். இந்த அபிப்பிராயம் ஏன் கெட்டது? ஏனெனில் அது கெட்டது என்று உங்களுக்குச் சொல்லித் தரப்பட்டுள்ளது. அதுதான் தடை. அதனைக் கவனியுங்கள். 'தடை, தடை.' -மேலே செல்லுங்கள்.

சில நேரங்களில் நீங்களாகத் தீர்மானம் செய்யும்போது கூட இது நிகழ்கிறது. தீர்மானிக்கும்போது மட்டுமல்ல. ஓர் அபிப்பிராயத்தைக் கொள்ளும்போதும்கூட நிகழ்கிறது. அபிப்பிராயத்தை உருவாக்கிக் கொள்ளும்போது மட்டுமல்ல. நீங்கள் எதையோ இழந்துவிட்டதாக மன இறுக்கம் கொள்ளும்போதும் இது நிகழ்கிறது. உடனே "மன இறுக்கம், மன இறுக்கம்'' என்று சொல்லி மேலே செல்லுங்கள்.

நீங்கள் எப்போதெல்லாம் பிரக்ஞையோடு இருக்கிறீர்களோ, எந்த இடத்தில் இருந்தாலும் சரி, அந்த இடத்திலிருந்து கவனிக்கத் தொடங்குங்கள். சாதாரணமாகக் கவனியுங்கள். அதன்பின்னர் முழுவதையும் அப்படியே விட்டுவிடுங்கள். உங்களது அகப்பட்டுக் கொண்ட மனம் இப்போது அகப்பட்டுக் கொண்டதாக இல்லாது போய்விடும். விஷயங்கள் மறையத் தொடங்கும். அப்போது 'அப்படியே' என்பதான கணங்கள் நிகழும். நீங்கள் அங்கேயே இருப்பீர்கள். வாழ்க்கையும் (existence) அங்கேயே இருக்கும். உங்களுக்கும் வாழ்க்கைக்கும் இடையே அபிப்பிராயம் மட்டும் இருக்காது. எல்லாமே எண்ணத்தினால் இடையூறு செய்யப்படாதிருக்கும். எண்ணத்தினால் மாசுபடுத்தப்படாமலிருக்கும். மனம்

என்பது மறைந்துவிட்டிருக்கும். அந்த மனமற்ற நிலையே 'அப்படியே' எனப்படும்.

புத்தர் சொல்கிறார்: தத்தகதா என்பதே அப்படியே என்பதற்கான பெயர்தான். வேறு பெயர் அவ்வளவுதான். அவருக்கு 'அப்படியே' என்பதன் தன்மையிருக்கிறது என்று அர்த்தமல்ல. அவரே 'அப்படித்தான்.'

புத்தர் மேலும் சொல்கிறார்: உண்மைக்கு உடன்பாடானவற்றையே ஒரு தத்தகதா சொல்கிறார். அவர் வேறுமாதிரி செய்வதில்லை. அவர் உண்மைக்கு உடன்பாடானவற்றைத் தேர்ந்தெடுத்துப் பேசுவதில்லை. அவருக்கு மாற்று (choice) என்பதே கிடையாது. உண்மை என்பது எதுவோ அதுவே அவரால் பேசப்படுகிறது. அவர் எதையும் தேர்ந்தெடுப்பதில்லை. "இது உண்மையானது. இதை நான் பேச வேண்டும். இது பொய்யானது. இதை நான் பேசக்கூடாது" என்பதெல்லாம் கிடையாது. அப்படி ஒரு மாற்று உண்டு என்ற நிலை எழுமேயானால், அப்போது நீங்கள் இன்னும் புத்தராகவில்லை என்று பொருள்.

ஒரு தத்தகதா என்பவர் மாற்று எதுவுமில்லாத நிலையில்தான் (choicelessness) பேசுகிறார். ஆகவே தத்தகதா உண்மையைப் பேசுகிறார் என்று சொல்ல முடியாது. உண்மையில் இப்படித்தான் சொல்ல வேண்டும். தத்தகதா எதைப் பேசினாலும் அது உண்மையாக அமைகிறது. அவர் உண்மைக்கு உகந்ததாகவே சொல்கிறார். உண்மையில் உண்மைதான் அவர் வழியே பேசுகிறது. அவர் ஓர் ஊடகம் மட்டுமே. அவர் ஒரு வெற்றிடமுள்ள மூங்கில் குழாய். உண்மை தனது சங்கீதத்தை அவர் வழியே இசைக்கிறது. அவருக்கென்று பாடல் எதுவுமில்லை. அவரது அபிப்பிராயங்கள் எல்லாமே மறைந்துவிட்டன. அவரே மறைந்துவிட்டார். அவர் தூய்மையான வெளி.

உண்மை அவர் வழியாக உலகைச் சென்றடையும். அவர் உண்மையே பேசுகிறார். அவர் எது இருக்கிறதோ அதைப் பேசுகிறார்.

யதாபூதம்- நிலைமை எப்படியிருப்பினும் அவர் பேசுகிறார். அவருக்கென்று மனம் ஏதுமில்லை. அவர் எதிலும் குறுக்கிடுவது கிடையாது. அவர் எதையும் விடுவதுமில்லை. அவர் எதையும் சேர்ப்பதுமில்லை. அவர் ஒரு கண்ணாடி மாதிரி. அவரின் முன் எது வந்து நின்றாலும் அதனைப் பிரதிபலிப்பார். அந்தப் பிரதிபலிப்பு என்பதுதான் 'அப்படியே.'

*ததாகதன் தர்மத்தை நிரூபித்துக் காட்டிவிட்டான்' என்று அவர் சொல்வாரானால், அவர் சொல்வது தவறாகும். இல்லாத ஒன்றைப் பற்றிக்கொண்டு, என்னைத் தவறாகப் பிரதிநித்துவப்படுத்தியதாக ஆகிவிடும் சுபூதி.*

அவர் எதற்காக 'உண்மையான அப்படியே' என்றார்? உண்மையற்ற அப்படியே என்று ஏதேனும் இருக்கிறதா? ஆமாம்.

நீங்கள் பயிற்சியில் பார்க்கலாம். நீங்கள் 'அப்படியே' எனும் தன்மையைக்கூடப் பயிற்சி செய்யலாம். ஆனால் அது உண்மையாக இருக்காது. உண்மையான 'அப்படியே' என்பதைப் பயிற்சியின் மூலம் வரவழைக்க முடியாது. அது தானே வரும்.

உதாரணத்துக்கு, பழக்கப்படுத்திக் கொள்ளலாம் எனும்போது நீங்கள் எதைக் கூற முயலுகிறீர்கள்? நீங்கள், "நான் இனிமேல் உண்மையே பேசுவேன். அதனால் ஏற்படும் விளைவுகள் என்னவானாலும் நான் உண்மையே பேசுவேன். எனது உயிரே போனாலும் நான் உண்மையே பேசுவேன்" என்று தீர்மானிக்கலாம். நீங்கள் உண்மையைப் பேசவும் செய்வீர்கள். ஆனால், இது உண்மையான

'அப்படியே' என்று சொல்ல முடியாது. அது உங்களது தீர்மானம். உண்மையற்ற தன்மை உங்களில் உருவாகி விட்டது. நீங்கள் உண்மையற்ற தன்மையை அழுத்திக் கொண்டே இருக்கிறீர்கள். "நான் எனது உயிருக்கே பங்கம் வந்தாலும் உண்மையையே பேசுவேன்" என்று நீங்கள் சொல்கிறீர்கள். அது முயற்சி. உண்மை என்பது உங்களது கௌரவமாகிவிட்டது. நீங்கள் உங்களது மனத்தின் ஆழத்தில் ஒரு தியாகியாக முடிவெடுத்து விட்டீர்கள் என்று அர்த்தம். உங்களது ஆழ்மனத்தில் இந்த உலகம் முழுவதும் நீங்கள் உண்மையைக் கடைப்பிடிக்கும் மனிதர் என்பதைத் தெரிந்துகொள்ள வேண்டும் என்று விரும்பி விட்டதாகப் பொருள். உங்களது உயிரைக்கூட அதற்காகத் தியாகம் செய்யத் தயாராக இருக்கிறீர்கள் என்று புரிந்து கொள்ள வேண்டும் என்று நீங்கள் நினைத்து விட்டதாக அர்த்தம். நீங்கள் மகத்தான மனிதர். மகாத்மா. நீங்கள் உங்களது உயிரையும் அதற்காகத் தியாகம் செய்வீர்கள். ஆனால், அது உண்மையான 'அப்படியே' என்பதாகச் சொல்ல முடியாது.

உண்மையான 'அப்படியே'வுக்கு மாற்று ஒன்றிருப்ப தாகக்கூடத் தெரியாது. நீங்கள் உண்மையின் வெறும் கருவிதான். நீங்கள் அதனுள்ளே வருவது கிடையாது. அதற்கிடையேகூட வருவது கிடையாது. நீங்கள் உங்களை அங்கிருந்து வெளியேற்றி விடுகிறீர்கள். கண்ணாடி எதையும் தீர்மானம் செய்வது கிடையாது. "இந்த மனிதர் என் முன் நின்றுகொண்டிருக்கிறார். நான் அவரது உண்மையான முகத்தைக் காண்பிக்கப் போகிறேன். அதன் விளைவு என்னவாக இருந்தாலும் பரவாயில்லை. அவர் என் மீது கல்லெறிந்தாலும்கூடப் பரவாயில்லை. ஏனெனில் அவர் அழகற்றவராக இருப்பதனால் கல்லெறியலாம். அவர் கோபமுறலாம். ஆனாலும் நான் அவரது உண்மை

யான முகத்தையே பிரதிபலிப்பேன்'' என்றெல்லாம் சொல்லிக் கொள்வதில்லை.

அப்படி அந்தக் கண்ணாடி நினைக்க ஆரம்பித்தால், அது, அதற்கு மேலும் கண்ணாடியல்ல. அதற்கென்று மனம் வந்துவிட்டது என்று அர்த்தம். அது பிரதிபலித்தலல்ல. அது அவரது தீர்மானம். தூய்மை என்பது போய்விட்டது. ஆனால், ஒரு கண்ணாடி என்பது அப்படியே காட்டும். அதற்கு மனமெல்லாம் கிடையாது. புத்தரும் அப்படிப் பட்டவர்தாம். அதனால்தான் புத்தர் 'உண்மையான அப்படியே' true suchness என்ற வார்த்தையைப் பயன் படுத்தியிருக்கிறார்.

புத்தரின் இந்த முறையை, அப்படியே கவனிக்கும் முறையைப் பயன்படுத்திப் பாருங்கள். அதனைப் பயிற்சி செய்து பாருங்கள் என்று நான் சொல்லமாட்டேன். அதனை வைத்து விளையாடுங்கள் என்றுதான் சொல்லுவேன். அமர்ந்துகொண்டு, நடந்துகொண்டு, அந்த முறையை விளையாடுங்கள். நீங்கள் ஆச்சரியப்பட்டுப் போவீர்கள். புத்தர் உலகுக்கு மனத்தின் மையப் பகுதிக்குச் சென்றடையும் ஒரு மகத்தான நுணுக்கத்தை அளித்திருப்ப தாகத் தெரிந்தால் ஆச்சரியப்படுவீர்கள்.

மனோநிலை பரிசோதனைகூட அவ்வளவு ஆழத்திற் குச் செல்வது கிடையாது. அதுவும்கூடச் சிலவற்றைச் சார்ந்தே இருக்கிறது. அதுவும் மேம்போக்காகவே இருக்கிறது. ஏனெனில், மற்றவற்றின் இருப்பு இதற்குக் குறுக்கீடாக அமைகிறது. மனோநிலையைப் பரிசோதனை செய்பவர் அங்கே அமர்ந்திருக்கிறார். அவர் ஒரு திரைக்குப் பின்னால் அமர்ந்திருந்தாலும்கூட உங்களுக்கு அவர் அங்கிருக்கிறார் என்று தெரியும். அவர் இருக்கிறார் என்ற நினைப்பே உங்களுக்குத் தடையாக அமையும். நீங்கள் உண்மையான கண்ணாடியாக இருக்க முடியாது.

ஏனெனில், மற்றவற்றின் இருப்பு உங்களைத் திறந்த தன்மையோடு இயங்க விடாமல் செய்துவிடுகிறது. நீங்கள் முழுமையாகத் திறந்தபடி இருப்பது என்பது உங்களிடம் மட்டுமே இயலும்.

புத்தரின் முறை மிகவும் ஆழமாகச் செல்லும் தன்மை படைத்தது. அதனை எவரிடமும் சொல்லக் கூடாது. உங்களது மனத்தில் மட்டுமே குறித்துக்கொள்ள வேண்டும். அது ஒன்றை மட்டும் குறிக்கும் அதே நேரத்தில் பொதுவாகவும் குறிக்கும்.

அதனைக் கவனத்தில் பதியுங்கள். அது உங்ளுடையதே அல்ல என நினைத்துக்கொண்டு, வெறுமனே மனத்தில் மட்டும் பதியுங்கள். நீங்கள் இதற்காக நியமிக்கப்பட்டுள்ளீர்கள் என்பதாக நீங்கள் உங்களது வேலையை மட்டும் செய்யுங்கள். "தெரு முனையில் நின்று கொண்டு அங்குப் போவோர் வருவோர் எல்லோரையும் பதிந்துகொள்ளுங்கள். ஒரு பெண், ஒரு பெண், ஒரு நாய், ஒரு நாய், ஒரு கார், ஒரு கார்," இது போல. நீங்கள் இதில் செய்ய வேண்டியது எதுவுமே இல்லை. நீங்கள் இதில் எல்லாம் தொடர்புற்றிருக்கவில்லை. நீங்கள் தனியானவர். இதிலிருந்து விலகியிருப்பவர்.

அது உங்களை ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்கு எடுத்துச் செல்லும். ஒரு கணம் வரும். அப்போது அந்தச் சங்கிலியின் மூல காரணத்துக்கான இடத்துக்குச் சென்று விடும். பல முடிச்சுகள் இருக்கும். இது போன்ற பல சங்கிலிகள் இருக்கின்றன. எல்லாம் சேர்ந்து குழப்பமாக இருக்கின்றன. நீங்கள் எல்லாவற்றையும் கவனித்திருப்பீர்கள். உங்களது மனம் விளையாடும் விளையாட்டுக்களையெல்லாம் பார்த்திருப்பீர்கள். எல்லாத் தந்திரங்களையும், எல்லா நுணுக்கங்களையும், எல்லாத் தவறுகளையும், எல்லாத் திசை திருப்பங்களையும், –முழு மனமும் மறைந்து

போகும். எதுவுமே நிகழாதது போல ஒரு சூழ்நிலை உருவாகும்.

மனத்தைப் பற்றிய ஒரு புகழ்பெற்ற சூத்திரத்தைப் புத்தர் சொல்லியிருக்கிறார். வாழ்க்கைக்கும் இது பொருந்தும். இந்தச் சூத்திரம் முக்கியத்துவம் வாய்ந்தது. அது தங்கத்துக்கு ஒப்பானதாகும். அவர் சொல்கிறார்:

*மனத்தைப் பற்றி யோசியுங்கள்: நட்சத்திரங்களைப் போல, பார்வையில் ஏற்படும் ஒரு தவற்றைப் போல, ஒரு விளக்கைப் போல, ஒரு விளையாட்டுக் காட்சியைப் போல, பனித்துளியைப் போல, ஒரு குமிழியைப் போல, ஒரு கனவைப் போல, ஒரு மின்னல் கீற்றைப் போல, ஒரு மேகத்தைப் போல அதே போல நிகழ்பவற்றையும் காண வேண்டும்.*

மனம் என்பதே கட்டுப்படுத்தப்பட்ட ஒன்றுதான். அது சில காரணங்களின் விளைவுதான். நீங்கள் அந்தக் காரணங்களை நேரடியாக அழிக்க முடியாது. ஒரு மரத்தை அதன் கிளைகளையும், இலைகளையும், அழிப்பதன் வழியே அழிக்க முடியாது. நீங்கள் அதன் வேரைத் தேடிப் போக வேண்டும். வேர்கள் மண்ணுக்கடியில் மறைந்திருக்கும். அதே போலத்தான் உங்களின் வேர்களும். இவற்றைப் புரிந்து கொள்ள வேண்டும். புத்தர் சொல்கிறார்: "உங்களது மனத்தை நட்சத்திரங்களைப் போல யோசியுங்கள்" என்கிறார். ஏன்? நட்சத்திரங்கள் இருளில்தான் தெரிகின்றன. காலை விடிந்தவுடன் சூரியன் உதித்தவுடன் அவை மறைந்துவிடுகின்றன.

அதே போலத்தான் உங்களது மனமும். அது நீங்கள் பிரக்ஞையில்லாமல் இருக்கும்போதுதான் தெரிகின்றது. பிரக்ஞை என்னும் சூரியன் உதிக்கும்போது அது மறைந்து விடுகின்றது. நட்சத்திரங்களைப் போலவேதான் அவையும். நட்சத்திரங்களுடன் சண்டை போடாதீர்கள். உங்களால்

அவற்றை அழிக்க முடியாது. அவை லட்சக்கணக்கில் இருக்கின்றன. அவற்றைப் பற்றிப் பிரக்ஞையோடு இருக்கும்போது அவை தாமாகவே மறைந்து போகின்றன.

பார்வையில் தவறு. உங்களது கண்கள் சரியாக இல்லை. அவற்றில் கோளாறு இருக்கின்றன. அதனால் நீங்கள் இல்லாதவற்றையும் இருப்பதைப் போலக் காண முடிகிறது. உதாரணத்துக்கு, நீங்கள் இரண்டிரண்டாகப் பார்க்கிறீர் கள். அல்லது சில வடிவங்களைக் காண்கிறீர்கள். ஏனெனில் உங்களது கண்கள் எப்படியிருக்க வேண்டுமோ அப்படி யில்லை. உங்களது கல்லீரல் சரியில்லையெனில் உங்களது கண்கள் இல்லாதனவற்றையெல்லாம் பார்க்கத் துவங்கும். பலவீனமான கல்லீரல் உள்ளவனுக்கு வடிவங்களும், காற்றில் குமிழிகளும் தோற்றமளிக்கும். அவை உண்மையில் அங்கில்லை. அவை உங்களது கண்களால் காணப்படு கின்றன. அவற்றுடன் சண்டையிட முடியாது. அவற்றை அழிக்கவும் முடியாது. ஏனெனில், அவை உண்மையில் இல்லை. உங்களுக்குத் தேவையானதெல்லாம் நீங்கள் ஒரு மருத்துவரிடம் சொல்ல வேண்டும் என்பதுதான். உங்களது கண்களுக்குச் சிகிச்சை தேவை. அவை சரியாக்கப்படல் வேண்டும்.

புத்தர் சொல்கிறார்: "நான் ஒரு தத்துவவாதி அல்ல. நான் ஒரு மருத்துவன். நான் எந்தத் தத்துவத்தையும் தருவதில்லை. நான் உங்களுக்கு மருந்தைத்தான் கொடுக் கிறேன். நான் ஒளி என்றால் என்னவென்று சொல்லுவ தில்லை. உங்களது கண்களைத் திறக்கச் செய்து அதன் மூலம் உங்களையே காண வைக்கிறேன்."

கண் தெரியாதவனுக்கு ஒளி, வண்ணம், வானவில் இவை எப்படி இருக்குமென்று விளக்கங்கள் அளித்துக் கொண்டிருந்தால் மட்டும் போதாது. அவனது இழந்த பார்வையைத் திரும்பப் பெற வைக்க வேண்டும். காது

கேளாத ஒருவனுக்குச் சங்கீதம் என்றால் என்னவென்று விளக்கங்கள் அளித்துக்கொண்டிருந்தால் எந்தப் பயனும் இல்லை. அவன் கேட்கும்போதுதான் அவன் புரிந்து கொள்வான். அனுபவம் என்பதே விளக்கமாகும்.

மூன்றாவதாக, புத்தர் மனத்தை ஒரு விளக்குப்போல காண வேண்டும் என்கிறார். ஏன் விளக்கைப் போல? விளக்கு எண்ணெய் இருக்கும் வரைதான் எரியும். எண்ணெய் தீர்ந்து விட்டதெனில் ஜுவாலை அணைந்து விடும். அதே போலத்தான் மனமும். ஆசை என்பதே எண்ணெய். மனத்தில் ஆசைகள் இருக்கும் வரையில்தான் செயல்படும். ஜுவாலையுடன் சண்டையிடாதீர்கள். எண்ணெய்யை ஊற்றிக்கொண்டே இருக்காதீர்கள். ஆசைதான் எரிசக்தி.

ஆசை என்பது என்ன? இருக்கும் ஒன்றில் திருப்தியடை யாமல் வேறு ஏதோவொன்று தேவை என்பதான எண்ணம். நீங்கள் 'அப்படியே' என்ற நிலையில் வாழவில்லை. அதுவே ஆசை என்பதன் பொருள். ஆசை என்பது என்னவெனில், பொருள்கள் இப்போது இருப்பது போல இல்லாமல் வேறு மாதிரி வேண்டும் என்ற எண்ணம். அவை இருக்கும்படியே இருக்கக்கூடாது என்கிறீர்கள். உங்களுக்கென்று தனியான அபிப்பிராயம் இருக்கின்றன. உங்களுக்கென்று பிரத்தியேகக் கனவுகள். அவற்றை நடைமுறையிலும் கொண்டு வர ஆசை. உங்களது மனம் விரும்பும்படியாக அவற்றை மாற்றிவிட விருப்பம். உண்மையில் இருக்கும்படியாக போதும் என்ற மனத்துடன் இருக்க இயலாமை. மனம் அப்படியே இருப்பதன் காரணம் நீங்கள் உண்மையுடன் திருப்தியாக இருக்க விரும்பவில்லை.

ஆகவே நிறைய மக்கள் என்னிடம் வந்து, "அந்த எண்ணங்களை எப்படித் தடுப்பது?" என்று கேட்கிறார்கள். அவர்கள் நேரடியாக எண்ணங்களைத் தடுத்து நிறுத்த முயலுகிறார்கள். அவை தடுக்கப்பட முடியாதவை. எண்ணங்கள் இருப்பதற்குக் காரணம், ஆசைகள் இருப்பதனால்தான். நீங்கள் ஆசைகளைப் புரிந்துகொண்டு அவற்றை விட்டால் ஒழிய, எண்ணங்களை விட முடியாது. ஏனெனில், எண்ணங்கள் என்பவை துணை பொருட்கள் தான்.

முதலில் ஆசை வருகிறது. நீங்கள் ஓர் அழகிய காரைப் பார்க்கிறீர்கள். உடனே ஆசை எழுகிறது. புத்தர் சொல்லுவார், "கார், கார்" உடனே முடிந்தது. ஆசை. எழுந்ததெனில் உடனே மறுபடியும் சொல்லுங்கள். "ஆசை, ஆசை." அதுவும் முடிந்தது. நீங்கள் காரைப் பார்த்தவுடனே ஒரு கனவு எழுந்து ஆசையாக மாறி அது உங்களை ஆட்கொண்டது.

இப்போது பலவித ஆசைகள் எழும். "நான் இந்தக் காரை எப்படி வாங்குவது? எனது வீட்டை விற்பதா? கடனுக்கு வங்கிக்குச் செல்வதா? இன்னும் அதிகம் சம்பாதிக்க வேண்டுமா? சட்டப்படியா அல்லது சட்டத்துக்குப் புறம் பாகவா? இந்தக் காரைச் சொந்தமாக்கிக் கொள்வதற்கு நான் என்ன செய்ய வேண்டும்?" இப்போது நான் எப்படி எனது எண்ண ஓட்டத்தை நிறுத்துவது?

அரசியல்வாதி ஒருவர் என்னிடம் வருவார். அவர் தனது எண்ணங்களை நிறுத்த வேண்டும் என்று விரும் பினார். அவர் தியானம் செய்ய விரும்பினார். நான் அவரிடம், "முதலில் உங்கள் அரசியலை விட்டுவிடுங்கள். அப்படியில்லையெனில், எண்ணங்களை எப்படி

நிறுத்துவது? நீங்கள் மிகவும் ஆசைகள் கொண்டவராக இருக்கிறீர்களே" என்றேன்.

முதலில் அவர் ஒரு எம்.எல்.ஏ. அவர் மிகவும் ஆசைப்பட்டதனால் துணை அமைச்சரானார். மறுபடியும் ஆசை பிடித்தது. அவர் ஓர் அமைச்சரானார். இப்போது அவர் ஒரு மாநிலத்துக்கு முதலமைச்சராவதற்கு முயன்று வருகிறார். அவர் சொன்னார்: "நான் இதற்காக மாத்திரம் தான் இங்கு வந்தேன். நீங்கள் என்னை ஓய்வாக இருக்க வைக்க முடியும் என்றால், தியானம் செய்ய வைக்க முடியும் என்றால் சரி. நான் சண்டை போடுவதில் வல்லவன். எனது போட்டியாளர்களுடன் நல்ல சண்டை போட முடியும். நீங்கள் என்னவென்றால் அரசியலை விட்டுவிடச் சொல்கிறீர்களே. அது என்னால் முடியாது" என்றார்.

ஆனால் நீங்கள் உங்களது ஆசைகளை விட மறுத்தால், நீங்கள் எப்படி எண்ணத்தை விட முடியும்? எண்ணுவது என்பது உதவியாக வருவதுதான். நீங்கள் முதல் அமைச்சராக விரும்புகிறீர்கள். மனம் உடனே எண்ண வலைகளைப் பின்னத் துவங்கி விடுகிறது. மனம் உடனே, "நான் இப்போது விஷயங்களைப் பார்க்கத் துவங்க வேண்டும். அவற்றை எப்படிச் சரி செய்வது என்று யோசிக்க வேண்டும்" என்று எண்ணமிடத் தொடங்குகிறது. இப்போது ஆயிரத்தொரு பிரச்சினைகளைச் சமாளிக்க வேண்டியிருக்கிறது. அதன் பின்னர்தான் உங்களது ஆசைகளைப் பூர்த்தி செய்ய முடியும். எண்ணம் என்பதே ஆசைப்படுவதின் கருவிதான். நீங்கள் நேரடியாக எண்ணுவதை நிறுத்த முடியாது.

புத்தர் சொல்கிறார்: "ஆசை என்பதே ஓர் எண்ணெய் விளக்கைப் போன்றது. அதில் எண்ணெய் தீர்ந்து விட்டதென்றால் ஜுவாலை தானே அணைந்துவிடும்."

மனத்தை ஒரு விளக்காக உருவகப்படுத்திப் பாருங்கள். மனத்தை ஒரு விளையாட்டுக் காட்சியைப் போல நினைத்துப் பாருங்கள். ஒரு தந்திரக் காட்சியைப் போல நினையுங்கள். இங்கு எதுவுமே போதுமான நிரூபணங் களுடன் இல்லை. “அதோ பாருங்கள். ஒரு ஒட்டகம் வருகிறது” என்று சொன்னவுடன் ஒட்டகம் போலவே மனத்தில் ஓர் உருவம் வருகின்றது. உடனே ஒட்டகத்தைக் காணத் துவங்குகிறீர்கள். அங்கே ஒட்டகமும் இருக்கிறது– ஆனால் உங்களுக்கு மட்டும். எல்லோரும் சிரிக்கிறார்கள். ஏனெனில் யாருமே ஒட்டகத்தைக் காணவில்லை. ஆனால் நீங்கள் பார்க்கிறீர்கள்.

உங்களது மனமே ஒரு மந்திரப்பெட்டி. அதைத்தான் புத்தர் மறுபடியும் சொல்கிறார். அது அழகான உருவகங்களை எந்த வித ஆதாரமுமே இன்றி உருவாக்கிக் கொண்டே போகின்றது என்று அவர் சொல்கிறார். ஆனால், நீங்கள் அவற்றை நம்ப விரும்பினால் அவை உண்மையாக மாறிவிடும். உங்களது மனம் ஒரு விளை யாட்டுக் காட்சிக்கொப்பானது. உண்மையில் ஆங்கில வார்த்தையான ‘மேஜிக்’ என்பதே இந்திய வார்த்தையான ‘மாயா’ என்பதிலிருந்து வந்ததுதான். ‘மாயா’ என்றால் மாயை. இல்லாது போனாலும் இருப்பது போன்ற தோற்றம் கொள்வது என்பதாகப் பொருள்.

மாயையை உருவாக்கலாம். நீங்கள் எல்லோருமே மாயையை உருவாக்குகிறீர்கள். நீங்கள் ஒரு பெண்ணைப் பார்க்கிறீர்கள். ஆனால், நீங்கள் ‘யதா பூதம்’ என்பதனைப் பார்க்கவில்லை. அதாவது, அவளை அப்படியே பார்ப்ப தில்லை. அதனால்தான் பின்னர் அவ்வளவு ஏமாற்றங்கள். நீங்கள் அங்கில்லாதவற்றைப் பார்க்கத் துவங்குகிறீர்கள். அவை உங்களது மனத்தில் உருவாக்கப்பட்டவைதாம். நீங்கள் அழகை உருவகப்படுத்துகிறீர்கள். அந்த அழகற்ற

பெண்ணைப் பற்றி ஆயிரத்தோரு வகையில் நீங்களாக அழகை உருவகப்படுத்துகிறீர்கள். நீங்கள் நெருங்கி வருகிறீர்கள். அந்தப் பெண்ணுடன் வாழ்க்கை நடத்த நேரும்போது அந்த அழகான கற்பனைகள் கலைந்து போக ஆரம்பிக்கின்றன. அந்தக் கற்பனைகள் உண்மையான வாழ்க்கைக்கு முன்னால் நீண்ட காலம் இருக்க முடியாமல் போய்விடுகின்றன. அந்தப் பெண்ணின் நிஜமான தோற்றம் உங்களது கனவைக் கலைத்துவிடுகிறது. நீங்கள் ஏமாற்றப் பட்டதாக உணர்கிறீர்கள். அவள்தான் உங்களை ஏமாற்றி விட்டதாக நினைக்கத் துவங்குகிறீர்கள்.

அவள் எதுவுமே செய்யவில்லை. அவளும் உண்மையில் தான் ஏமாற்றப்பட்டதாக நினைக்கிறாள். ஏனெனில் அவளும் உங்களைப் பற்றி ஏதேதோ கற்பனைப்படுத்தி வைத்திருந்தாள். நீங்கள் ஒரு ஹீரோ என்பதாகவும், ஒரு அலெக்ஸாண்டர் அல்லது இது போல ஏதாவது ஒன்றாக கற்பனைப்படுத்தி வைத்திருந்தாள். நீங்கள் இப்போது அவளுக்கு ஓர் எலியைப் போலல்லாது வேறு எது போலவும் காட்சியளிக்க மறுக்கிறீர்கள். நீங்கள் ஒரு மலையைப் போன்றவர் என்று அவள் நினைத்திருந்தாள். ஆனால் நீங்கள் ஒரு சிறிய குன்றுகூட அல்ல. அவளும் ஏமாற்றப்பட்டதாக நினைக்க ஆரம்பிக்கிறாள். நீங்கள் இருவருமே ஏமாற்றப்பட்டதாக உணர்கிறீர்கள். இருவருமே மன வருத்தத்துக்கு உள்ளாகிறீர்கள்.

நான் இந்தக் கதையைக் கேட்டேன்:

ஒரு பெண் காணாமல் போனவர்களைத் தேடும் நிறுவனத்துக்குச் சென்று, "என் கணவரை நேற்றிரவி லிருந்து காணவில்லை" என்று புகார் கொடுத்தாள்.

உடனே அவர்கள், "எங்களால் முடிந்ததை நாங்கள் செய்கிறோம். அவரைப் பற்றிய விவரங்களைக் கொடுங்கள்" என்று கேட்டனர்.

சிறிது நேரம் யோசித்த பின்பு அவள் சொன்னாள், "அவர் ஐந்தடி உயரமிருப்பார். தடிமனமாகக் கண்ணாடி அணிந்திருப்பார். தலை வழுக்கையாக இருக்கும். நிறையக் குடிப்பார். அவரது மூக்கு சிகப்பாக இருக்கும். உரத்த குரலில் பேசுவார்..." சில கணங்களுக்கு நிறுத்தினாள். பின்னர் மறுபடியும் சொன்னாள், "ஓ! எல்லாவற்றையும் மறந்துவிடுங்கள்" என்றாள்.

உண்மையைப் பார்த்தால் இப்படித்தான் இருக்கிறது. "ஓ! எல்லாவற்றையும் மறந்துவிடுங்கள்" என்றுதான் நீங்களும் சொல்வீர்கள். ஆனால், நீங்கள் ஏதையும் அப்படியே பார்ப்பதில்லை. எல்லாவற்றையுமே கற்பனைப் படுத்தித்தான் பார்க்கிறீர்கள்.

ஒரு நாள் முல்லா நஸ்ருதீன் என்னிடம் சொன்னார்: "எனது மாமா இத்தாலியில் பல வருடங்களாக வசித்து வந்தார். அவர் மது, மங்கை, கவிதை இவற்றால் இறந்து போனார்."

நான் அவரிடம் சொன்னேன்: "நஸ்ருதீன் உங்களது மாமா இப்படி ஓமர்கய்யாமாக இருப்பார் என்று நான் நினைக்கவில்லை. உங்களது மாமாவைப்பற்றிச் சொல்லுங் களேன். ஆவலாக இருக்கிறது."

முல்லா நஸ்ருதீன் பதிலுக்குச் சொன்னார்: "நீங்கள் நினைப்பது போல இது காதல் விவகாரம் எல்லாம் இல்லை. நான் உங்களிடமிருந்து உண்மையை மறைக்க விரும்பவில்லை. உங்களிடம் உண்மையைச் சொல்லி விடுகிறேன், ஓஷோ. அவர் கர்ணகொடூரமான குரலில்

ஓர் அபத்தமான பாடலைப் புதிதாகத் திருமணமான தம்பதிகள் வசிக்கும் வீட்டு ஜன்னலருகே நின்று பாடினார். உடனே உள்ளேயிருந்து வந்த அவளது கணவன் கோபமுற்று ஒரு மது பாட்டிலை எடுத்து அவரது தலையில் அடித்தான். அவர் இறந்து போனார். அதனால்தான் மது, மங்கை, கவிதை இவற்றால் இறந்து போனார் என்று சொன்னேன்."

நாம் இப்படித்தான் போய்க்கொண்டேயிருக்கிறோம்.

உண்மை என்பது எப்போதும் சலிப்பைத் தருவதே யில்லை. உண்மை என்பது முழுமையானதுதான். சலிப்பு என்பது நாம் மாயையை உண்மையின் மீது திணிப் பதனால்தான் வருகிறது.

இது ஒரு போலி விளையாட்டுக் காட்சி என்று புத்தர் சொல்கிறார். ஜாக்கிரதையாக இருங்கள். உங்களது மனம் ஒரு மந்திரவாதி. அது இல்லாதவற்றை எல்லாம் இருப்பதாகக் காட்டும். எப்போதுமே இல்லாதவற்றைக் கூட இருப்பதாகக் காட்டும். அது உங்களை ஏமாற்றும். அது ஒரு பொய்யான உலகத்தை உங்களைச் சுற்றி உருவாக்கி விடும். நீங்கள் அந்தப் பொய்யான உலகத்தில் வாழ்வீர்கள். மரங்களும், பறவைகளும், மிருகங்களும் இருக்கும் இந்த உலகம், பொய்யான உலகம் இல்லை. ஆனால், மனம் உருவகிக்கும் அந்த உலகம் பொய்யான உலகம்.

புத்தரைப் போன்ற மனிதர்கள் பொய்யான உலகைப் பற்றிப் பேசினால் அதனைத் தவறாகப் புரிந்து கொள்ளா தீர்கள். அவர்கள் மரங்களெல்லாம் பொய்யானவை என்று கூறவில்லை. அவர்கள் நீங்கள் உண்மையைப் பற்றி இது வரையில் நினைத்து வைத்திருந்ததெல்லாம் பொய்யா னவை என்று கூறுகிறார்கள். உங்களது மனம் பொய்

யானது. மனம் என்பது ஒருமுறை விடுபடுமேயானால், எல்லாம் உண்மையானதாகும். அதன் பிறகு நீங்கள் 'அப்படியே' எனும் நிலையில் வாழ்வீர்கள். அதன் பிறகு நீங்கள் tathata என்றழைக்கப்படுவீர்கள். நீங்கள்தான் 'அப்படியே' (suchness).

பேராசிரியர் காலை எட்டு மணி வகுப்பில் சொல்லிக் கொண்டிருந்தார்: "ஒரு நாளை நல்ல விதமாக எப்படி ஆரம்பிப்பது என்று நான் கண்டுபிடித்திருக்கிறேன். சிறந்த வழியென்னவெனில் காலையில் ஐந்து நிமிடங்கள் ஆழ்ந்து மூச்சு விட்டு, தூய்மையான காற்றை உள்ளிழுத்து, பின்னர் குளிர்ந்த நீரில் ஒரு குளியல் போட்டால் அந்த நாள் முழுவதும் 'ரோஸை'ப் (ரோஜா) போலப் புத்துணர்ச்சியுடன் இருக்கலாம்."

கடைசிப் பெஞ்சில் அமர்ந்திருந்த பையன் அரைகுறையாகத் தூக்கக் கலக்கத்தில் கேட்டு விட்டு, "அந்த ரோஸியைப் பற்றி இன்னும் சொல்லுங்கள் சார்" என்று சொன்னான்.

மனம் என்பது எதன் மீது வேண்டுமானாலும் தாவுவதற்குத் தயாராக இருக்கிறது. கற்பனை செய்து நீட்டிப்பதற்குத் திட்டம் தயாராக இருக்கிறது. மனத்தின் மேல் மிகவும் ஜாக்கிரதையாக இருங்கள். அதுவே தியானம் என்பதும். மிகவும் ஜாக்கிரதையாக இருப்பது. மனம் உங்களை ஏமாற்றாமல் இருக்க வேண்டும்.

ஐந்தாவது விஷயம்: மனத்தைப் பனித்துளியைப் போலப் பாருங்கள். சீக்கிரமே உடைந்து போகக் கூடியது பனித்துளி. சில கண நேரங்களுக்கே அது இருக்கும். காலைச் சூரியன் உதித்ததுமே அது மறைந்துவிடும். சிறிதே காற்று அடித்தாலும்கூட அது உடைந்து போகும். அது போலவே தான் மனமும். அதற்கு உண்மையைப் பற்றி ஒன்றுமே

தெரியாது. முடிவுற்றதைப் பற்றி அதற்கு ஒன்றுமே தெரியாது. அதனை ஒரு பனித்துளியைப் போலப் பாருங்கள். ஆனால் நீங்களோ அதை ஒரு முத்தைப் போலவும், வைரத்தைப் போலவும் அது நிரந்தரமாக இருக்கப்போவதைப் போலப் பார்க்கிறீர்கள்.

நீங்கள் புத்தரை நம்ப வேண்டாம். உங்களது மனத்தைக் கவனித்துப் பாருங்கள். அது தொடர்ச்சியாக இரண்டு கணங்களுக்குக்கூட ஒரே மாதிரியாக இருப்பதில்லை. அது மாறிக்கொண்டேயிருக்கிறது. அது பெருக்கெடுத்து ஓடக் கூடியது. ஒரு கணத்தில் இந்த மாதிரி இருக்கும். இன்னொரு கணத்தில் வேறொரு மாதிரி இருக்கும். ஒரு கணத்தில் நீங்கள் ஆழ்ந்த காதலில் இருப்பீர்கள். மற்றொரு கணத்தில் நீங்களே அந்த வெறுப்பில் இருப்பீர்கள். ஒரு கணத்தில் நீங்கள் சந்தோஷமாக இருப்பீர்கள். வேறொரு கணத்தில் நீங்கள் மிகவும் துயரமாக இருப்பீர்கள். உங்களது மனத்தைக் கவனியுங்கள்.

நீங்கள் மனத்துடன் பிணைந்திருந்தால் எப்போதும் கொந்தளிப்புடன்தான் இருக்க நேரிடும். ஏனெனில், உங்களால் மௌனமாக இருப்பது என்பது முடியவே முடியாது. ஏதோவொன்று நிகழ்ந்துகொண்டேயிருக்கும். உங்களால் எல்லையற்றதன் சுவையை உணரவே முடியாமல் போய்விடும். அந்தச் சுவைதான் முழுமை தரும். நேரம் என்பது மாறிக்கொண்டேயிருப்பது.

ஆறாவதாக: உங்களது மனத்தை ஒரு குமிழியைப் போல எண்ணுங்கள். ஒரு குமிழியைப் போலவே மனத்தின் அனுபவங்கள் எல்லாம் சீக்கிரமாகவோ தாமதமாகவோ உடைந்து போகும். அதன்பின் வெறுமை தான் உங்கள் கையில் தங்கும். நீங்கள் மனத்தின் பின்னே செல்லுங்கள் - அது ஒரு குமிழி. சில நேரங்களில் குமிழ் என்பது மிகவும் அழகாக இருக்கும். சூரிய ஒளியில் அது ஒரு

வானவில்லைப் போலக் காட்சியளிக்கும். வானவில்லின் அத்தனை வண்ணங்களும் அதில் காட்சி தரும். உண்மையிலேயே பார்க்கப் பரவசமாயிருக்கும். கம்பீரமாக இருக்கும். அதனை விரைவாகச் சென்று பிடித்தால் அப்படிப் பிடித்த கணத்திலேயே அங்கில்லாமல் போய்விடும்.

அதேபோலத்தான் உங்களது வாழ்க்கையிலும் தினமும் நடக்கிறது. நீங்கள் எல்லாவற்றின் பின்னும் அலைந்து கொண்டிருக்கிறீர்கள். அதைக் கைப்பற்றிய மறு கணமே அது அதேபோல இருப்பதில்லை. அப்போது அதன் அழகெல்லாம் அகன்று விடுகிறது. அந்த அழகே உங்களது கற்பனையில்தான் இருந்திருக்கிறது. அந்தச் சந்தோஷம் எல்லாம் மறைந்து போகிறது. அந்தச் சந்தோஷமே உங்களது எதிர்பார்ப்பில்தான் இருந்திருக்கிறது. நீங்கள் எதிர்பார்த்த பரவசக் கணங்கள் எல்லாம் நிகழாமலேயே போய்விடு கின்றன. அவை உங்களது கற்பனையில்தான் இருந்திருக் கின்றன. அவை உங்களது காத்திருப்பில்தான் இருந்திருக் கின்றன.

உண்மை என்பது உங்களது கற்பனைக் குமிழியிலிருந்து முழுவதுமாக வேறுபட்டது. அவை உடைந்து விடும். தோல்வி சலிப்பைத் தரும். அதே போலத்தான் வெற்றியும். வெற்றியும் சலிப்பையே தரும். வெற்றிகரமான மனிதர் களைக் கேட்டுப் பாருங்கள். வறுமை என்பதும் சலிப்பைத் தரும். அதே போலத்தான் செல்வமும். பணக்காரர்களைக் கேட்டுப் பாருங்கள். நல்லவை, கெட்டவை எல்லாமே சலிப்பையே தரும். காரணம் மனம் என்பதே குமிழியைப் போன்றதுதான். ஆனாலும் நாம் குமிழியின் பின்னால் துரத்துகிறோம். துரத்துவது மட்டுமல்ல. நாம் அவற்றைப் பெரியதாக, பெரியதாக, இன்னும் பெரியதாக ஆக்க நினைக்கிறோம். எல்லாம் பெரியதாக இருக்க வேண்டும்

என்ற பைத்தியக்கார வியாதி இங்குள்ளது. எல்லா அனுபவங்களுக்கும் பெரியதாக இருக்க வேண்டும் என்று நினைக்கிறோம்.

இதைப் பற்றி ஒரு கதை உள்ளது. பல நாடுகளைச் சேர்ந்த மாணவர்களிடையே ஒரு போட்டி வைக்கப்பட்டு அதில் எல்லோரும் யானையைப் பற்றித் தனித்தனியாகக் கட்டுரை எழுத வேண்டும் என்று சொல்லப்பட்டது. ஜெர்மன் மாணவன் ஒருவன் யானையை எப்படியெல்லாம் போர்முனையில் பயன்படுத்தலாம் என்று எழுதினான். ஆங்கிலேயே மாணவன் ஒருவன் யானையின் ராஜவம்சத்துக் குணங்களைப் பற்றி எழுதினான். பிரெஞ்சு மாணவன் ஒருவன் யானையின் காதல் லீலைகளைப் பற்றி எழுதினான். இந்திய மாணவன் ஒருவன் யானையின் தத்துவார்த்தக் குணங்களைப் பற்றி எழுதினான். அமெரிக்க மாணவன் ஒருவனோ தனது தலைப்பாக, இன்னும் பெரிய யானைகளை எப்படிச் செய்வது என்று எழுத ஆரம்பித்தானாம்.

மனம் என்பது தொடர்ந்து யோசித்துக் கொண்டேயிருக்கிறது. மனம் என்பது அமெரிக்கனைப் போன்றது. எப்படி இன்னும் பெரியதாகச் செய்யலாம் என்றே யோசிக்கிறது. இன்னும் பெரியதாக, பெரிய வீடு, பெரிய கார் எல்லாமே பெரியவை. இயல்பாகவே பெரிய குமிழாக ஆகும்போது அது பெரியதாக வெடிக்கிறது. சில குமிழ்கள் சற்றே அதிக நேரம் நீரின் மேற்பரப்பில் மிதக்கும். பெரிய குமிழ்கள் அது போன்றுகூட மிதக்கா. அதனாலேயே அமெரிக்கர்கள் சோர்வடைகின்றனர். யாருமே அமெரிக்கர்களைப் போன்று சோர்வடைவது கிடையாது.

அமெரிக்க மனம் பெரிய, மிகப் பெரிய குமிழ்களைச் செய்வதில் வெற்றியடைந்துள்ளது. அவை இப்போது எல்லா இடங்களிலிருந்தும் வெடித்துக் கொண்டிருக்

கின்றன. இப்போது அவற்றைக் காப்பாற்ற எந்தச் சாத்தியமும் இல்லாது போய்விட்டது. அது வெடித்துக் கொண்டிருக்கிறது. யாருடைய தவறுமே இல்லை. ஏனெனில் யாருமே யோசிப்பதில்லை. “அது நம்முடைய ஆழமான ஆசை. நாம் அதில் வெற்றியும் அடைந்திருக் கிறோம்.” வெற்றியைப் போலத் தோல்வியை அளிப்பது எதுவுமே இல்லை (nothing fails like success).

ஏழாவதாக: புத்தர் மனத்தை ஒரு கனவைப் போலக் காணச் சொல்கிறார். அது கற்பனையானது. ஒருவருடைய சொந்த உருவகம். நீங்கள்தான் அதற்கு இயக்குநர். நீங்களே நடிகர். நீங்களேதான் பார்வையாளர். உங்கள் மனத்தில் தோன்றும் எல்லாமே உங்களது சொந்தக் கற்பனைதான். அதில் உலகம் செய்வதற்கு ஏதுமில்லை. அதனைப் பூர்த்தி செய்யும் கடமை வாழ்க்கைக்கு இல்லை.

ஒரு மருத்துவர் நடு வயதைக் கடந்த தனது நோயாளி யைப் பரிசோதனை செய்து பார்த்துவிட்டு, “என்னால் உங்களிடம் எந்தக் குறையும் காண முடியவில்லை. ஆனாலும், நீங்கள் நேசிக்கும் உங்களது பாதி வயதைக் கொடுத்து விடுங்கள்” என்று சொன்னார்.

அந்த நோயாளி அவரைச் சற்று நேரம் உற்றுப் பார்த்து விட்டு, “எந்தப் பாதி. எண்ணத்திலேயே மூழ்கியிருக்கும் வாழ்க்கைப் பகுதியையா அல்லது பேசிக் கொண்டிருக்கும் வாழ்க்கைப் பகுதியையா?” என்று கேட்டார்.

மனம் என்பதே போதுமானதாக இல்லாதது. யோசித்துக்கொண்டிருப்பது, பேசிக்கொண்டிருப்பது. அதற்கு உண்மையைப் பற்றி ஒன்றுமே தெரியாது. நிறைய மனம் இருப்பின் சிறிதளவு மட்டுமே உண்மை இருக்கும். சிறிதளவு மனமிருக்கும் போது அதிக அளவில் உண்மை நிறைந்திருக்கும். மனமே இல்லாத நிலைக்குத்தான் உண்மை என்றால் என்னவென்று தெரியும். நீங்கள்

தத்தகதாவாக ஆகிவிடுங்கள். 'அப்படியே' என்பதைத் தெரிந்துகொண்டவராக இருங்கள்.

அல்லது மனத்தை ஒரு மின்னல் கீற்றைப் போலக் காணுங்கள் என்கிறார். அதனுடன் பிணைந்துவிடாதீர்கள். ஏனெனில், எந்தக் கணத்தில் பிணைந்துவிடுகிறீர்களோ அப்போதே உங்களுக்கு நீங்களே துன்பத்தை உண்டாக்கிக் கொண்டீர்கள். மின்னல் என்பது ஒரு கணத்துக்குத்தான் தெரியும். அது உடனே போய்விடும். எல்லாமே வரும் போகும். எதுவுமே நிரந்தரமானவை அல்ல. நாம் எதனுடனாவது பிணைந்து கொள்கிறோம். அப்படிப் பிணைந்து கொள்வதின் மூலம் நாம் துன்பத்தை உண்டாக்குகிறோம்.

உங்களது மனத்தைக் கவனித்துப் பாருங்கள். அது எதனுடனாவது பிணைந்து கொள்வதற்கு எவ்வளவு தயாராக இருக்கிறது என்று. மனம் எதிர்காலத்தை எண்ணி எவ்வளவு பயப்படுகிறது? மாற்றத்தைக் கண்டு எவ்வளவு பயப்படுகிறது? அது எல்லாமே நிரந்தரமாக இருக்க வேண்டும் என்று எண்ணுகிறது. நீங்கள் சந்தோஷமாக இருக்கிறீர்கள். அந்தச் சந்தோஷம் நிலைத்திருக்க வேண்டும் என்று எண்ணுகிறீர்கள். நீங்கள் அதனுடன் பிணைந்து விடுகிறீர்கள். நீங்கள் எப்போது ஒட்டிக்கொண்டீர்களோ அப்போதே அதை நசுக்கிவிட்டீர்கள். அது இனிமேலும் அங்கில்லாமல் போய்விடுகிறது.

நீங்கள் ஒரு பெண்ணை, அல்லது ஆணைச் சந்திக்கிறீர் கள். காதலிக்கத் துவங்குகிறீர்கள். உடனே பிணைந்து கொண்டு அந்தக் காதல் எப்போதும் அதே போல இருக்க வேண்டும் என நினைக்கிறீர்கள். அந்தக் கணத்திலேயே – நீங்கள் அந்தக் காதல் அப்படியே இருக்க வேண்டும் என்று எண்ணினீர்களே – அந்தக் கணத்திலேயே அந்தக் காதல்

மறைந்து போனது. அது இனிமேலும் அங்கில்லை. மனத்தின் அனுபவங்கள் எல்லாமே மின்னல் கீற்றைப் போலத்தான் உள்ளன. அவை வரும், போகும்.

புத்தர் உங்களை வெறுமனே பார்த்துக்கொண்டிருக்கச் சொல்கிறார். பிணைந்துகொள்வதற்கு நேரமில்லை. வெறுமனே கவனித்துக் கொண்டிருங்கள். குறித்துக் கொள்ளுங்கள்: 'தலைவலி, தலைவலி,' 'காதல், காதல்,' 'அழகு,' இவற்றையெல்லாம் வெறுமனே குறித்துக் கொள்ளுங்கள். அது போதும். அது ஒரு சிறிய கணமே. அதில் அதற்கும்மேல் ஒன்றும் செய்ய முடியாது. குறித்துக் கொண்டு ஜாக்கிரதையாக இருங்கள்.

ஜாக்கிரதையாக இருப்பதே உங்களுக்கு எப்போதும் பயனளிக்கும். வேறு எதுவுமில்லை.

கடைசியாக, ஒன்பதாவது: மனத்தை மேகத்தைப் போல காணுங்கள். வடிவங்கள் மாறிக்கொண்டேயிருக்கும் மேகங்கள். நிற்காமல் ஓடக்கூடியவை. நீங்கள் மேகத்தைக் கவனியுங்கள். சில நேரங்களில் மேகங்கள் யானையைப் போல இருக்கும். உடனடியாக அவை ஒட்டகம் போல, குதிரையைப் போல இப்படிப் பல வடிவங்களாக மாறும். அவை மாறிக்கொண்டேயிருக்கும். நிலையாக இருப்பதே யில்லை. பல வடிவங்கள் தோன்றுகின்றன. மறைகின்றன. ஆனாலும் நீங்கள் கவலைப்படுவதில்லை. அவை யானையைப் போன்றிருந்தால் என்ன, ஒட்டகத்தைப் போல இருந்தால் என்ன? அதைப் பற்றி ஒன்றுமில்லை. அவை வெறும் மேகங்கள்தாமே.

அதேபோலவே உங்களது மனமும் பிரக்ஞையின் மீது மேகத்தைப் போலவே சூழ்ந்துகொண்டிருக்கின்றது. உங்கள் பிரக்ஞை என்பது வானத்தைப் போன்றது. மனம் மேகத்தைப் போல. சில நேரங்களில் அது கோப மேகம்.

சில நேரங்களில் அது காதல் மேகம். சில நேரங்களில் அது பொறாமை மேகம். இவை எல்லாமே ஒரே சக்தியின் பல்வேறு வடிவங்கள். எதையும் தேர்ந்தெடுக்காதீர்கள். இணைய நினைக்காதீர்கள். நீங்கள் யானையைப் போன்ற மேகத்துடன் இணைந்துவிட்டால் பின்னர்த் துன்பமாகி விடும். அடுத்த தடவை யானை போய்விடும். நீங்கள் வருத்தப்பட்டு அழத் தொடங்கிவிடுவீர்கள். ஆனால் அதற்கு யார் காரணம்? அந்த மேகம் காரணமா? அந்த மேகம் தன்னுடைய இயற்கையைப் பின்பற்றுகிறது. நீங்கள் நினைவில் வையுங்கள். ஒரு மேகம் என்பதே மாறுவதற் காகத்தான். அதே போலத்தான் மனம் என்பதும்.

உங்களது உள் ஆகாயத்தைக் கவனியுங்கள். அங்கு மேகங்கள் மிதக்கட்டும். நீங்கள் வெறுமனே கவனிப்பவர் ஆகிவிடுங்கள். மேகங்கள் வரும், போகும். நீங்கள் அவற்றிடமிருந்து வேறுபட்டிருங்கள்.

புத்தர் வேறுபடுவதற்கு மதிப்பளித்திருக்கிறார். அவர் அதை 'உபேக்ஷா' என்கிறார். நீங்கள் வேறுபட்டிருங்கள். 'அதனால் ஒன்றும் தவறில்லை.'

இரண்டு வானவெளி வீரர்கள். ஓர் ஆண், ஒரு பெண். மார்ஸ் கிரகத்திற்கு விஜயம் செய்தார்கள். அங்கிருந்த மார்ஸைச் சேர்ந்தவர்கள் விருந்தோம்பலில் மிகவும் சிறந்திருந்தார்கள். இவர்களை அங்குச் சுற்றிக் காண்பிக்க ஆவலாயிருந்தார்கள். சில நாள்களுக்குப் பிறகு அந்த மக்களிடம் ஒரு முக்கியத்துவம் வாய்ந்த கேள்வியைக் கேட்க நினைத்தார்கள். அந்தக் கேள்வி, "இங்கு இனப் பெருக்கம் எப்படிச் செய்யப்படுகிறது?" என்பதுதான்.

மார்ஸ் தலைவர் அவர்களை அங்கிருக்கும் ரசாயனத் பரிசோதனைக் கூடத்துக்கு அழைத்துச் சென்றார். அங்கு எப்படி இது நடைபெறுகிறது என்று காண்பித்தார். முதலில்

அவர் ஏதோ ஒரு வெள்ளைத் திரவத்தை அளந்து ஒரு குப்பியில் ஊற்றினார். அதன் மேல் ஒரு பழுப்பு நிறத் தூளை எடுத்துக் கவனமாகத் தூவினார். அதனை நன்றாகக் கலந்து ஒரு ஓரத்தில் வைத்தார். ஒன்பது மாதங்களில் இந்தக் கலவை ஒரு புதிய மார்ஸ் ஆளாக வளர்ந்து வருவான் என்று தலைவர் விளக்கினார்.

இப்போது மார்ஸ் தலைவனது முறை. இங்குப் பூமியில் இனவிருத்தி எப்படி நடைபெறுகிறது என்று அவன் கேட்டான். வானவெளி வீரர்கள் முதலில் தர்ம சங்கட நிலைக்கு ஆளானார்கள். கொஞ்சம் தைரியத்தை வரவழைத்துக் கொண்டு இருவரும் விளக்குவதற்குத் தயாராகி, காதல் புரிய ஆரம்பித்தனர். இதன் நடுவில் மார்ஸ் தலைவர் உரக்கச் சிரிக்க ஆரம்பித்தான். அந்தச் சிரிப்பு இவர்களது செயலுக்கு இடையூறாக இருக்கவே, “இதில் வேடிக்கை அப்படி என்ன இருக்கிறது?” என்று இவர்கள் கேட்டார்கள்.

பதிலுக்கு மார்ஸ் தலைவன், “நாங்கள் இப்படித்தான் நெஸ்கபே கலப்போம்” என்று பதில் சொன்னான்.

எல்லாமே வடிவங்கள்தாம். இந்த வடிவங்களைப் பற்றி யாரும் கவலைப்படத் தேவையில்லை. வெறுமனே கவனியுங்கள். மனத்தைப் பற்றி யோசியுங்கள்.

*நட்சத்திரங்களைப் போல, பார்வையில் ஏற்படும் தவற்றைப் போல, விளக்கைப் போல, வேடிக்கை விளை யாட்டைப் போல, பனித்துளிகளைப் போல, குமிழியைப் போல, ஒரு கனவைப் போல, ஒரு மின்னல் கீற்றைப் போல, ஒரு மேகத்தைப் போல, அப்படியே ஒருவரது பார்வையும் கட்டுப்படுத்தப்பட வேண்டும்.*

கட்டுப்படுத்தப்படுவது மறைந்து போய் நீங்கள் கட்டுப்படுத்தத் தேவையற்ற நிலைக்கு வந்துவிடுவீர்கள்.

அந்தக் கட்டுப்படுத்தாத (unconditioned) நிலைதான் 'அப்படியே', உண்மை, யதார்த்தம், யதாபுதம் இவை எல்லாமே.

இப்போது சூத்திரம்:

*புத்தர் கேட்டார்: "'என்னால் தர்மம் நிகழ்த்திக் காட்டப்பட்டது' என்று ததாகதருக்குத் தோன்றும் என்று நினைக்கிறாயா, சுபூதி? ததாகதன் தர்மத்தை நிரூபித்துக் காட்டிவிட்டான்' என்று அவர் சொல்வாரானால், அவர் சொல்வது தவறாகும். இல்லாத ஒன்றைப் பற்றிக்கொண்டு, என்னைத் தவறாகப் பிரதிநிதித்துவப்படுத்தியதாக ஆகி விடும் சுபூதி.*

*'ஏன் அப்படி?... ஏனென்றால், அங்கே மிகக் குறைந்த அளவு தர்மத்தைக் கூடக் காண முடியாது; அணுகவும் முடியாது. அதனால்தான், அது, 'மிக உயர்வான, மிகச் சரியான, மிக முழுமையான ஞானம்' என்று சொல்லப் படுகிறது.*

*'சுபூதி, மேலும்- தன்னை அடையாளம் கண்டுகொள்ளுதலே அந்தத் தர்மம். இதில் கருத்து வேறுபாட்டிற்கே இடமில்லை. அதனால்தான், அது, 'மிக உயர்வான, மிகச் சரியான, மிக முழுமையான ஞானம்' என்று குறிப்பிடப்படுகிறது.*

*'சுயம் என்பது இல்லாமல் தன்னை அடையாளம் கண்டு கொள்ளுதல், அதாவது, தனது இருப்பு, தான் ஓர் உயிர், ஒரு மனிதன் என்ற உணர்வில்லாமல் சுய அடையாளம் கண்டு கொள்ளுதல்தான், மிக உயர்வான, மிகச் சரியான, மிக முழுமையான ஞானம். இதுவே எல்லாத் தர்மங்களின் ஒட்டுமொத்த முழுமைக்கும் சமமாகும். ஒட்டுமொத்தத் தர்மமே இதுதான்.*

*'சுபூதி, 'என்னால், இருத்தல் விடுதலை அடைந்து விட்டது' என்பது, ததாகதருக்குத் தோன்றும் என்று நினைக்கிறாயா?*

***உன்னால் அதை உன் விதத்தில் பார்க்க முடியாது, சுபூதி! ஏன் அப்படி?***

'அது தத்தகதாவுக்கு நேராது. ஏனெனில் இனிமேலும் அவருள் வேறு ஒரு மனிதர் இல்லை. ஆளுமை (personality) என்பதே மனத்தின் வடிவம்தான். இந்த 'நான்' என்னும் எண்ணமே ஒரு வகையான மேகம்தான். தத்தகதாவுக்கு மேகங்கள் மறைந்துவிட்டன. அவருக்குத் துல்லியமான, தூய்மையான ஆகாயம் மட்டுமே இருக்கிறது. அங்கு 'நான்' என்ற எண்ணமே வராது.

'அதனால் தத்தகதா 'நான் தர்மத்தை உபதேசித்து விட்டேன்' என்று சொல்ல முடியாது. முதலாவதாக அவரே இப்போது இல்லை. இரண்டாவதாக அவர் மறைந்துவிட்டபடியால் அவருக்கு இப்போது யாரும் இருக்கிறார்களா என்றும் தெரியாது."

உதாரணத்துக்கு, இன்று இரவு எல்லோரும் தூங்கிக் கொண்டிருக்கும்போது நீங்கள் கனவு காணத் துவங்குகிறீர்கள். யாரோ ஒருவர் ஏதோ சொல்லுகிறார். யாரோ உரத்தக் குரலில் கத்துகிறார். ஒரு மனிதன் விழித்திருக்கிறான். அவன் என்ன நினைப்பான்? அவன் உங்களைப் பார்த்துச் சிரிக்க ஆரம்பிப்பான். ஏனெனில் அவனுக்குக் கனவுகள் வெறும் கனவுகள் மட்டுமே என்பது தெரியும். அவை உண்மையல்ல என்றும் தெரியும்.

ஒருவன் கத்துகிறான். ஒருவன் அழுகிறான். ஒருவன் பரவசமாகிறான். ஒருவன் சிரிக்கிறான். அங்கு எல்லாமே பொய்யானவை என்று தெரியும். அங்குச் சிரிப்பதற்குக் காரணமே இல்லை. அழுவதற்கும் காரணமே இல்லை. எல்லாமே பொய். மக்கள் ஆழ்ந்த உறக்கத்திலிருக்கிறார்கள். அழும் மனிதனிடம் சென்று 'அழாதே' என்று தேற்றுவ

தில்லை. அவன் சந்தோஷப்படுவதுமில்லை. அவனுக்கு எல்லோரும் கனவுதான் காண்கிறார்கள் என்று தெரியும்.

அதுதான் தத்தகதாவின் நிலையும். புத்தரின் நிலையும் அதுதான். ஒருவன் உள் ஆகாயத்தினைப் பற்றித் தெரிந்து கொண்டானென்றால், எல்லோருமே அந்த ஆகாயம்தான் என்று தெரியும். எல்லோருமே மேகங்கள் சூழ்ந்து இருக்கின்றனர். அந்த மேகங்கள் பொய்யானவை. கற்பனையானவை. அவை இல்லவே இல்லை. யாருக்குத் தத்தகதா தர்மத்தை உபதேசிக்க முடியும்? அங்கு யாருமே இல்லை. அங்குத் தூய்மையான ஆகாயம் மட்டுமே உள்ளது. நீங்கள் மறையும் அந்தக் கணத்திலேயே எல்லாமே மறைந்து போகின்றன. அதன் பிறகு தனித்தனியானவை என்பனவே இல்லாது போய்விடுகின்றன. எல்லாமே ஒன்றுதான் என்றாகி விடுகின்றன. அப்போது ஒருவர் குரு என்றும் இன்னொருவர் சீடன் என்றும் இல்லாது போய் விடுகின்றனர்.

அதனால்தான் அன்றொரு நாள் நான் இவை எல்லாமே விளையாட்டுத்தான் என்று உங்களுக்குச் சொன் னேன். இது ஒரு நாடகம் என்றும் நாமெல்லோரும் நடிக்கி றோம் என்றும் சொன்னேன். பல தடவை நடிக்கிறோம். புத்தருடனும் அவரது சீடர்களுடனும் நடிக்கிறோம். கிறிஸ்துவுடனும் அவரது சீடர்களுடனும் நடிக்கிறோம். கிருஷ்ணருடனும் அவரது சீடர்களுடனும் நடிக்கிறோம். அதே நாடகம் மறுபடியும் அரங்கேற்றமாகிறது. உங்களது பக்கத்திலிருந்து அது உண்மையாக இருக்கும். ஆனால் எனது பக்கத்திலிருந்து அது ஒரு நாடகமே. உங்களது பக்கத்திலிருந்து மனப்பூர்வமான விஷயம். ஆனால் எனது பக்கத்திலிருந்து அது மனப்பூர்வமாக ஈடுபட வேண்டிய விஷயமல்ல. அதுவெறும் மேகம்தான். எனது மொத்த முயற்சியுமே உங்களுக்கு உதவுவதில்தான் இருக்கிறது. அது வெறும் மேகமே என்று நிரூபிப்பதில் இருக்கிறது.

நீங்கள் விழிக்கப் போகும் நாளன்று இதைப் பார்த்துச் சிரிப்பீர்கள். ஏனெனில் வெற்றி பெற வேண்டியது என்று ஒன்றுமேயில்லை. இழக்க வேண்டியதும் ஒன்றுமில்லை. எல்லாமே ஆரம்பத்திலிருந்து எப்படி இருக்கின்றனவோ அப்படியே இருக்கின்றன. கடைசி வரையில் அது போலவேதான் இருக்கப் போகின்றன. நீங்கள் வானம் மாறுகின்றது என்று நினைக்கிறீர்களா? மழைக் காலத்தில் மாறுகின்றதா? வெயிற்காலத்தில் மேகங்கள் மறைந்து போய் மாறுதலாகத் தோற்றமளிக்கிறதா? வானத்தில் ஏதாவது மாற்றமிருக்கிறதா? அதே போலத்தான் இருக்கிறது. மேகங்கள் வருகின்றன, போகின்றன.

அதே போலத்தான் சன்சாராவும் (sansara), அதே போலத்தான் உலகமும், மனமும் அதே போலத்தான்.

*புத்தர் கேட்டார்: "'என்னால் தர்மம் நிகழ்த்திக் காட்டப் பட்டது' என்று ததாகருக்குத் தோன்றும் என்று நினைக்கிறாயா, சுபூதி? ததாகதன் தர்மத்தை நிரூபித்துக் காட்டிவிட்டான்' என்று அவர் சொல்வாரானால், அவர் சொல்வது தவறாகும். இல்லாத ஒன்றைப் பற்றிக்கொண்டு, என்னைத் தவறாகப் பிரதிநித்துவப் படுத்தியதாக ஆகிவிடும் சுபூதி.*

'நான் என்பதும் இல்லை. நீ என்பதும் இல்லை. குரு என்பவரும் இல்லை. சீடன் என்பவரும் இல்லை. உபதேசிப்பதற்கும் எதுவுமில்லை. எல்லாமே அப்படி அப்படியே இருக்கிறது. கற்றுக் கொடுப்பதற்கும் எதுவு மில்லை. கற்றுக் கொள்வதற்கும் எதுவுமில்லை.

*'ஏன் அப்படி?... ஏனென்றால், அங்கே மிகக் குறைந்த அளவு தர்மத்தைக் கூடக் காண முடியாது; அணுகவும் முடியாது. அதனால்தான், அது, 'மிக உயர்வான, மிகச் சரியான, மிக முழுமையான ஞானம்' என்று சொல்லப் படுகிறது."*

புத்தர் சொல்கிறார்: "அதனால்தான் நாம் அதை முழுமையான ஞானம் என்று சொல்கிறோம்." உலகில் மற்ற மதங்களில் விவரிக்கப்படும் ஞானம் என்பதெல்லாம் முழுமையானது என்று சொல்ல முடியாது. உதாரணத்துக்கு, கிறிஸ்துவ மதத்தில் மூன்று சக்திகளின், அதாவது கடவுள், மகன், புனித ஆவி- என்ற மூன்று சக்திகளின் சங்கமம் விவரிக்கப்படுகிறது. அதன் அர்த்தம் என்னவெனில் கடைசியிலும்கூட மூன்று வேறுபாடுகள் பிரிவுகள் இருக்கும் என்று சொல்லப்படுகிறது. இங்குக் கடைசியிலும்கூட மேகங்கள் மீதமிருக்கும். சில வடிவங்கள் மீதமிருக்கும்படியாக வைக்கப்பட்டிருக்கின்றன. சில சடங்குகள் மீதமிருப்பதாக வைக்கப்பட்டிருக்கின்றன. உலகம் இன்னமும்கூடச் சிறிதளவேனும் தொடர்கிறது. மனம் என்பது முற்றிலுமாக விடுபடவில்லை.

இந்து மதக் கொள்கை சிறிது பரவாயில்லை. இரண்டு மட்டும் மீதமிருக்கிறது. கடவுள் மற்றும் ஆன்மா. மூன்றை விட இரண்டு பரவாயில்லை. ஆனாலும் இரண்டு மீத மிருக்கிறது. மனிதன் இரட்டை நிலை. மனம்தான் எல்லாவற்றையும் இரண்டாகப் பார்க்கிறது. மனம்தான் விளக்கம் அளிக்கிறது. ஆகவே, இதையும் முழுமையான ஞானமடைதல் என்பதாகக் கூற முடியாது.

சமணத் தத்துவத்தில் ஒன்று மட்டுமே மீதமிருப்பதாகச் சொல்லப்படுகிறது. ஆன்மா. இது எவ்வளவோ பரவாயில்லை. கிறிஸ்துவ, இந்து மதங்களைவிடப் பரவாயில்லை. ஆனால், புத்தர் இதுவும் முழுமையான ஞானமடைதல் இல்லை என்கிறார். ஏனெனில் ஒன்றை மட்டும் எண்ணும் போதுகூட இரண்டு நினைவுக்கு வரும். மூன்றும், நான்கும், ஐந்தும் எண்ணத்தில் வரும் என்கிறார். 'ஒன்று' என்று சொல்லும்போது ஒரு தொடர்ச்சியே வருவதற்குப் போதுமானது. ஒன்றை மட்டும் விளக்குவது

என்றாலும்கூட இரண்டையும் விளக்கித்தான் ஆக வேண்டும்.

நீங்கள் 'ஒன்று' எனும்போது எதை விளக்க இப்படிச் சொல்கிறீர்கள்? நீங்கள் இரண்டல்ல என்றுதான் சொல்ல வேண்டும். ஆகவே ஒன்றை விளக்குவதற்காகவாவது இரண்டு வேண்டும். அந்த மற்றொன்று எங்கோ மறைந்து கொண்டிருக்கும். ஆனால் அது முழுவதுமாக மறைந்து கொள்ளவில்லை. நான் இருப்பேனானால் நீங்களும் இருக்கிறீர்கள். அது முழுவதுமாக மறைய முடியாது. இந்த 'நான்' என்பதற்கு 'நீ' என்பது வேண்டும். அது தான் வாழ்வதற்காகவே உங்களைத் தேவை என்கிறது. 'நான்' என்பதே 'நீ' என்பதுடன் ஜோடியாகத்தான் இருக்கிறது. அவை ஒன்றானவை. நான் - நீ இரண்டுமே ஒன்றே என்பதுதான் நிஜம்.

அதனால்தான் புத்தர் சொன்னார்: "'நான்' என்பதும் மறைந்துவிட வேண்டும். அதன்பின் மூன்று சக்திகளும் போய்விடும். முடிவான அனுபவம் என்னவெனில் மூன்றும் இல்லை. இரண்டும் இல்லை. ஒன்றும் இல்லை. அது ஒரு தூய்மையான ஆகாயம். எதுவுமற்றது. ஒன்றும் இல்லாதது. அது ஒரு பூஜ்யம். சூன்யதா."

அதனாலேயே புத்தர் சொல்கிறார்:

*"சுபூதி, மேலும்- தன்னை அடையாளம் கண்டுகொள்ளுதலே அந்தத் தர்மம். இதில் கருத்து வேறுபாட்டிற்கே இடமில்லை. அதனால்தான், அது, 'மிக உயர்வான, மிகச் சரியான, மிக முழுமையான ஞானம்' என்று குறிப்பிடப்படுகிறது.*

*"சுயம் என்பது இல்லாமல் தன்னை அடையாளம் கண்டு கொள்ளுதல், அதாவது, தனது இருப்பு, தான் ஓர் உயிர், ஒரு மனிதன் என்ற உணர்வில்லாமல் சுய அடையாளம் கண்டு கொள்ளுதல்தான், மிக உயர்வான, மிகச் சரியான, மிக*

*முழுமையான ஞானம். இதுவே எல்லாத் தர்மங்களின் ஒட்டுமொத்த முழுமைக்கும் சமமாகும். ஒட்டுமொத்தத் தர்மமே இதுதான்.*

"எல்லா வடிவங்களுமே மறைந்துவிட்டன. அதனாலேயே வானம் தன்னைப் போலவே காட்சியளிக்கிறது. இனிமேலும் எந்தவொரு வடிவமும் உண்டாகவுமில்லை. மறையவுமில்லை. எந்த ஒரு மாற்றமுமில்லை. அசைவே இல்லை. எல்லாக் கனவுகளும் மறைந்து விட்டன. பொழுது புலர்ந்து காலையாகி விட்டது. எல்லோரும் எழுந்து விட்டனர். சூரியன் உதித்துவிட்டான். இப்போது பிரக்ஞை இருக்கிறது. ஆனால் இப்போது "நான் பிரக்ஞையோடு இருக்கிறேன்" என்று சொல்வதல்ல. இப்போது கற்பிக்கப் படுகிறது. ஆனால் யாரும் நானே ஆசிரியர் என்று சொல்வதில்லை. ஒரு வழியிருக்கிறது. ஆனாலும் அதை வழி என்று சொல்ல முடியாதபடி இருக்கிறது. முறைகள் இருக்கின்றன. ஆனாலும் அவற்றை முறைகள் என்று சொல்ல முடியாது. குரு என்றும் சீடன் என்றும் இருக்கிறார்கள். ஆனாலும் சீடரின் பக்கமிருந்துதான் இவை இருக்கின்றன. ஆனால் குருவின் பக்கமிருந்து பார்த்தால் எல்லாமே மறைந்து விட்டன.

*'சுபூதி, 'என்னால், இருத்தல் விடுதலை அடைந்து விட்டது' என்பது, ததாகதருக்குத் தோன்றும் என்று நினைக்கிறாயா? உன்னால் அதை உன் விதத்தில் பார்க்க முடியாது, சுபூதி! ஏன் அப்படி?*

*'விடுதலை செய்து விடுவதற்குத் ததாகதரிடம் யாருமே இல்லை...*

'தத்தகதாவுக்கு அந்த எண்ணம் எப்படித் தோன்றியிருக்க முடியும். "நான் பல உயிர்களை விடுதலை செய்திருக்கிறேன்" என்று எப்படித் தோன்றியிருக்க முடியும்? முதலாவதாக யாருமே விடுதலையாக இல்லாமலில்லை. ஆகவே நீங்கள், "புத்தர் ஒரு ரட்சிப்பவரா?" என்று

கேட்டால் புத்தர் பதிலுக்கு "இல்லை நான் ஒரு ரட்சிப்பவ னில்லை. ஏனெனில் யாருமே காப்பாற்றப்பட வேண்டிய அவசியத்தோடு இல்லை. யாரும் காப்பாற்றப்படவும் வேண்டாம்" என்றுதான் பதில் சொல்வார். விடுதலை யுடன் இருப்பது என்பது எல்லோருடைய இயல்பு. விடுதலை என்பது ஏற்கெனவே இருக்கும் ஒன்று. அதைக் கொண்டு வர வேண்டாம். ஒருவர் ஏற்கெனவே இருப்பதைப் பற்றிப் பிரக்ஞையுடன் இருக்க வேண்டும். ஆகவே புத்தர் சொல்கிறார்:

*"விடுதலை செய்து விடுவதற்குத் ததாகதரிடம் யாருமே இல்லை..."*

அன்று புத்தர், மேலும், பின்வரும் கருத்துக்களைக் கூறினார்:

*"என்னை ஒரு வடிவத்தில் பார்க்கிறவன் என் குரலைப் பின்பற்றிச் செல்கிறவன் தவறான முயற்சி மேற்கொள்கிறவன் ஆவான். அப்படிப்பட்டவர்களால் என்னைக் காண முடியாது."*

நீங்கள் புத்தரை வடிவமாக, உடலாகக் கண்டீர் களென்றால் நீங்கள் எதையோ இழந்துவிட்டீர்கள் என்று அர்த்தம். நீங்கள் அவரது குரலை, வார்த்தையை மட்டுமே கேட்டு அவரது மௌனத்தைக் கேட்காமலிருந்தால், நீங்கள் இழந்துவிட்டீர்கள் என்றே அர்த்தம். நீங்கள் அவரது முகத்தை மாத்திரம் பார்த்தீர்களென்றால், அவரது உள் ஆகாயத்தைக் காணவில்லையெனில், மறுபடியும் நீங்கள் இழந்துவிட்டதாகவே அர்த்தம்.

புத்தர் ஆழ்ந்த மௌனத்தில் மட்டுமே பேசுவார். புத்தர் இந்த வடிவத்தில் இருப்பதே வடிவமற்றதை வெளிப் படுத்துவதற்காகத்தான். இந்தப் பத்தியை நினைவில் நிறுத்துங்கள். நானும் அதை உங்களுக்குச் சொல்கிறேன்.

அன்று புத்தர், மேலும், கீழ்க்காணும் கருத்துக்களைக் கூறினார்:

*"என்னை ஒரு வடிவத்தில் பார்க்கிறவன், என் குரலைப் பின்பற்றிச் செல்கிறவன், தவறான முயற்சி மேற்கொள்கிறவன் ஆவான். அப்படிப்பட்டவர்களால் என்னைக் காண முடியாது.*

*'தர்மத்தின் மூலமாகவே புத்தனைக் காண முடியும். தர்மத்தின் உடல்கள் அவர்களுக்கு வழிகாட்டும். இருப்பினும் தர்மத்தின் உண்மை இயல்பை உணர முடியாது. அதை ஒரு பொருளாக எவராலும் உணர முடியாது..."*

இந்த வார்த்தைகளில் சொல்லப்பட்ட விஷயம் சொல்ல முடியாததாகும். அவச்யா-சொல்ல முடியாதது. புத்தர் சொல்கிறார். புத்தருக்கு உதவி எங்கிருந்து வந்தது? அதனை அவர் தம்மிடமிருந்தே பெற்றார் என்று சொல்ல முடியாது. பரம்பொருளிலிருந்துதான் (eternity) வந்தது. வானத்திருந்து வந்தது. முடிவில்லாத ஒன்று அவர் வழியாக வருகின்றது. அவர் பயன்படுத்தும் வார்த்தைகளில், அதிகமாகக் கவனம் செலுத்த வேண்டாம். அவரது மௌனத்தைக் கவனியுங்கள். அவர் வாழும் உடலுக்கு அதிக முக்கியத்துவம் அளிக்க வேண்டாம். அவர் வாழும் வீட்டிற்கு அதிக முக்கியத்துவம் அளிக்க வேண்டாம். அவரது உட்பிரகாசத்தை நோக்குங்கள். ஆழமாகப் பாருங்கள்.

புத்தரை ஆழமாகப் பார்ப்பது எப்படி? அவரை ஆழமாகப் பார்ப்பதற்கு ஒரே வழி கண்களைத் திறந்து வைத்துக்கொள்ளாமல் கண்களை மூடிக்கொண்டு பார்ப்பதுதான். உங்களுக்குள் ஆழ்ந்து பார்ப்பதுதான் புத்தரை ஆழ்ந்து பார்ப்பது என்பதும். நீங்கள் உங்களது உள் ஆகாயத்தை நன்கு புரிந்துகொண்டீர்களேயானால் புத்தரையும் புரிந்துகொண்டதாக அர்த்தம். எல்லாப் புத்தர்களையும், எல்லா வயதில் உள்ள புத்தர்களையும்,

கடந்த காலத்திய, நிகழ்காலத்திய, எதிர்காலத்திய எல்லாப் புத்தர்களையும் புரிந்துகொண்டதாக அர்த்தம். உங்களுக்குள் ஆழ்ந்து செல்லுங்கள்.

*'ததாகதர் போகிறார், வருகிறார், நிற்கிறார், அமர்கிறார், படுத்துக் கொள்கிறார்' என்று சொல்கிறவன் யாராயிருந்தாலும், அவன், என் போதனையைப் புரிந்து கொள்ளவில்லை என்று அர்த்தம்.*

*ஏன் அப்படி?*

*'ததாகதர்' என்றால் எங்கும் செல்லாதவன், எங்கிருந்தும் வராதவன் என்று பொருள். அதனால்தான் அவன் ததாகதன் என்றும், அருகதன் என்றும், பூரண ஞானி என்றும் குறிப்பிடப்படுகிறான்.*

மேகங்கள் வரும்போது ஆகாயம் வேறெங்காவது போய்விட்டதாகக் கருதுகிறீர்களா? மேகம் கலைந்து விட்டபோது வானம் திரும்ப வந்துவிட்டதா? வானம் அங்கேயேதான் இருக்கிறது. உங்களது உள்ளார்ந்த இயல்பும் அப்படியே இருக்கிறது.

நீங்கள் ஒரு காலத்தில் பாறையாக இருந்தீர்கள். ஒரு மேகம்தான் அந்தப் பாறையின் வடிவத்தில் இருந்தது. நீங்கள் அப்போது கனிம உலகத்தில் இருந்தீர்கள். அதன் பின் ஒரு மரமானீர்கள். உங்களது வடிவத்தை மாற்றிக் கொண்டீர்கள். நீங்கள் பின்னர் ரோஜாச் செடியாக, பைன் மரமாக, லெபெனானில் ஒரு தாவரமாக இருந்தீர்கள். ஆனாலும் உங்களது உள் இயல்பு அப்படியேதான் இருந்திருக்கிறது. இப்போது மேகத்தின் வடிவம் மாறி விட்டது. நீங்கள் காய்கறி ராஜ்யத்தில் இருந்தீர்கள். பின்னர் மிருக உலகில் இருந்தீர்கள். ஒரு வேளை சிங்கமாக அல்லது ஒரு புலியாக, ஒரு முதலையாக, ஒரு மானாக, ஒரு நாயாக இப்படி ஏதாவதாக இருந்திருப்பீர்கள். வடிவங்கள்தாம்

மாறி வந்திருக்கின்றனவே தவிர உங்களது உள்ளார்ந்த இயல்பு மாறவேயில்லை. அதன்பின்னர் ஓர் ஆணாக, பெண்ணாக மறுபடியும் வடிவம் மாறுகின்றது. நீங்கள் சொர்க்கத்தில் ஒரு தேவதையாக மாறலாம். வடிவம்தான் மாறும்.

நீங்கள் ஒன்றிலிருந்து மற்றொன்றுக்கு நகர்ந்து கொண்டேயிருக்கலாம். நீங்கள் ஒரு வடிவத்தில் இறந்து பின்னர் இன்னொரு வடிவத்தில் பிறக்கலாம். இதை சன்சாரா என்றழைக்கிறார்கள். ஒரு வடிவத்தில் அகப்பட்டுப் பின்னர் மற்றொரு வடிவத்தில் அகப்பட்டுக் கொள்ளுதல். ஒரு வடிவத்திலிருந்து மற்றொரு வடிவத்திற்கு நகருதல். ஒரு சிறையிலிருந்து மற்றொரு சிறைக்குச் செல்லுதல்.

புத்தபிராயம் என்றால் என்ன? உள் ஆகாயத்தை உள் பிரக்ஞையோடு கண்டு கொண்டு அதாவது கல்லாக, மிருகமாக, மரமாக, ஆணாக, பெண்ணாக இப்படி இருந்ததையெல்லாம் கண்டு புரிந்துகொள்வது. ஒருமுறை நீங்கள் உங்களது உள் ஆகாயத்தைப் புரிந்துகொண்டால் நீங்கள் எல்லா வடிவங்களிலிருந்தும் விடுவிக்கப்படுவீர்கள். அதுவே விடுதலை என்பது. நீங்கள் விடுவிக்கப்படுவது அல்ல. ஏனெனில் அந்த விடுதலையில் நீங்கள் இல்லாது போய்விடுவீர்கள். உங்களால் இருக்க முடியாது.

'நீங்கள் விடுவிக்கப்படுகிறீர்கள்' என்று சொல்லும்போது நீங்கள் உங்களிலிருந்தே விடுதலை ஆகிறீர்கள் என்பதுதான் பொருள். தான் என்பதற்குப் பல வடிவங்கள் உண்டு. பாறை என்பதற்கு ஒரு சுயம் என்பதுண்டு. ஓர் ஆன்மா உண்டு. மரத்திற்கென்று ஓர் இயல்பு உண்டு. மிருகத்துக்கு ஓர் இயல்பு உண்டு. ஆனால் புத்தருக்கென்று ஓர் இயல்பே இல்லை. தான் என்பதே இல்லை. அவர் முழுமையாக விடுதலை பெற்றவராகிறார்.

நிச்சயமாக அவர் செல்கிறார், வருகிறார். இந்த வைர சூத்திரம் அதில் தொடங்கியதுதான். அதில் உள்ள அழகைப் பாருங்கள். வைர சூத்திரம் அதில்தான் தொடங்குகிறது. புத்தர் பிச்சை எடுக்கச் செல்கிறார். அவர் திரும்ப வருகிறார். தமது பிச்சைப் பாத்திரத்தைக் கீழே வைக்கிறார். தமது கால்களைக் கழுவிக்கொள்கிறார். அமர்ந்து தமக்கு முன்னே பார்க்கிறார். சுபூதி கேட்கிறார். சூத்திரம் ஒரு வடிவத்தில் துவங்கி வடிவமே இல்லாது முடிவு பெறுகிறது.

அதுதான் ஆரம்பம். உங்களால் எனது மௌனத்தை முதலில் புரிந்துகொள்ள இயலாது. முதலில் எனது வார்த்தைகளைப் புரிந்துகொள்ள வேண்டும். உங்களால் எனது உள் ஆகாயத்தை முதலில் புரிந்துகொள்ள முடியாது. என்னைச் சுற்றியுள்ள மேகத்தைப் பார்க்க வேண்டும். அதன் பிறகே மெல்ல மெல்ல எனது உள்ளே நிகழும் விஷயங்களைப் புரிந்துகொள்ளத் துவங்குகிறீர்கள். முதலில் வெளியில் உள்ளவற்றிற்கு வாருங்கள். முதலில் வீட்டைப் பாருங்கள். அதன் பின்னர் அதில் வசிப்பவர்களைப் பாருங்கள்.

அது இயல்பானதுதான். அதில் வேறெதுவுமில்லை. ஆனால் வீட்டுடன் இணைந்துகொள்ளாதீர்கள். வீட்டை விட்டு நகர்ந்துவிடுங்கள். வீட்டிலிருந்து வீட்டில் வசிப்பவரிடம் நகர்ந்துவிடுங்கள். அதுவே இந்தச் சூத்திரத்தின் அழகாகும். அது புத்தரின் உடலிலிருந்து ஆரம்பிக்கிறது. எப்படி நடக்கிறார்? எப்படி அமர்கிறார்? எப்படி அவர் பார்க்கிறார்? அவர் என்ன செய்கிறார்? இப்போது அது ஒரு வித்தியாசமான வாக்கியத்தோடு முடிகின்றது.

'ததாகதர் போகிறார், வருகிறார், நிற்கிறார், அமர்கிறார், படுத்துக் கொள்கிறார்' என்று சொல்கிறவன் யாராயிருந்

தாலும், அவன், என் போதனையைப் புரிந்து கொள்ள வில்லை என்று அர்த்தம்.

ஏன் அப்படி?

'ததாகதா' என்றால் எங்கும் செல்லாதவன், எங்கிருந்தும் வராதவன் என்று பொருள். அதனால்தான் அவன் ததாகதன் என்றும், அருகதன் என்றும், பூரண ஞானி என்றும் குறிப்பிடப்படுகிறான்.

முழுமையான ஞானம் பெற்றவர் யார்? எவர் ஒருவர் நகராத வானத்தைப் புரிந்துகொண்டவரோ, காலங்களை யெல்லாம் கடந்து நிற்கும் முடிவற்றதை எவர் ஒருவர் புரிந்துகொண்டவரோ, எவர் ஒருவர் உண்மையைப் புரிந்து கொண்டவரோ அவரே ஞானம் பெற்றவராகிறார்.

உண்மை என்பது எப்போதுமே அதே போலத்தான் இருக்கிறது. கனவுகள்தாம் மாறும். உண்மை அதே போலத் தான் இருக்கிறது. புத்தரின் வார்த்தைகளை அறிமுகப் படுத்திக்கொள்ளுங்கள். ஆனால் அங்கேயே நின்றுவிடாதீர் கள். அது ஓர் அறிமுகம்தான். அங்கிருந்து நகர்ந்துவிடுங்கள்.

நான் என்ன சொன்னேன். கவனியுங்கள். ஆனால், அதிலேயே மூழ்கிவிடாதீர்கள். நகர்ந்துவிடுங்கள். எனது மௌனத்தில் பங்கு பெறுங்கள். உடனுக்குடன் என்னை யும் மறந்துவிடுங்கள். மேகத்தை மறந்துவிட்டு வானத்துக்குள் செல்லுங்கள். அதன்பிறகு உண்மையிலேயே நீங்கள் அதனைப் புரிந்துகொண்டுவிட்டீர்கள் என்று அர்த்தம். உண்மையை நோக்கி நகர ஆரம்பித்துவிட்டீர்கள் என்று பொருள்.

வார்த்தைகள் உண்மையைப் பற்றியவைதாம். ஆனால் அவையே உண்மைகளல்ல. 'கடவுள்' என்பது வார்த்தை. அதுவே கடவுளல்ல. காதல் என்பது வார்த்தை. அதுவே

காதலாகிவிடாது. வார்த்தைகளைப் பயன்படுத்துங்கள். பின் அவற்றை வீசி எறிந்து விடுங்கள். அவை பாத்திரங்கள்தாம். உள்ளிருப்பவை வேறு.

உங்களது குருவுடன் இருக்கும்போது அவருடைய உடலுக்கு அதிக முக்கியத்துவம் அளிக்க வேண்டாம். பற்றுதலே தடையாகிவிடும். குருவிடம் அன்பு செலுத்துங்கள். ஆழமாகச் செல்லுங்கள். மெல்ல, மெல்ல, படிப்படியாக, அவரது உள்ளிருக்கும் மையப் பகுதிக்குச் செல்லுங்கள். நீங்கள் ஆச்சரியப்படுவீர்கள். ஏனெனில், அவரது உட்புறமும் அதே போலத்தானிருக்கும். அந்த உட்புறத்தில் குருவும் சீடனும் சந்தித்துக் கொள்வார்கள். அந்த உட்புறத்தில் எந்தவிதப் பேதமுமில்லை.

கபீர் ஓர் அழகான வார்த்தை சொன்னார்: "அந்தக் கணம் வந்துவிட்டது. குரு சீடனின் கால்களைத் தொடும் அந்தக் கணம் வந்துவிட்டது." அதன்பிறகு ஒரு பேதமுமில்லை. யார் குருவென்றும் யார் சீடரென்றும் வித்தியாசமேயில்லை.

ரின்சாய் அவரது குருவுடன் இருந்தபோது - அவரது குரு மிகக் கடினமானவர். அவர் ஜென் குருமார்களைப் போன்றவர். ரின்சாய் பல தடவை அடி வாங்கியிருக்கிறார். தூக்கி எறியப்பட்டுள்ளார். அவரது குரு அவர் மீது ஏறி அவரை அடித்திருக்கிறார். ஒரு முறை ரின்சாய் பயணம் மேற்கொண்டு போய்க் கொண்டிருக்கிறார். குரு அவரைக் கூப்பிட்டு அவரை அடிக்கத் தொடங்கினார். ரின்சாய், "நான் ஒரு வார்த்தையும் பேசவில்லையே. நான் எந்தத் தவறும் செய்யவில்லையே" என்றார்.

குரு சொன்னார்: "எனக்குத் தெரியும். நீ இப்போது புனிதப் பயணம் செல்கிறாய். இந்தப் பயணத்தின் முடிவில் நிச்சயம் ஞானம் பெற்றுவிடுவாய். அதன்பிறகு உன்னை

அடிக்க எனக்கு வாய்ப்பே வராது. அதனால்தான் இப்போது அடிக்கிறேன்" என்றாராம்.

ரின்சாய் திரும்பி வந்தார். எதிர்பார்த்தது நிகழ்ந்தது. ஆமாம். அவர் ஞானம் அடைந்திருந்தார். இப்போது குரு அவரிடம் தலை வணங்கி, "இப்போது உனது முறை. நீ என்னை அடிக்கலாம். நீ வீடு திரும்பியாயிற்று. நீ ஞானம் பெற்றுவிட்டாய். நான் உன்னை அடிப்பதை மகிழ்ச்சியாக அனுபவித்தேன். நீ இப்போது அனுபவி" என்றாராம். ரின்சாய் திருப்பி அடிக்கவில்லை என்பது வேறு விஷயம்.

ஆழமான உட்புறத்தில் பேதங்கள் ஏதுமில்லை.

புத்தர் வார்த்தைகளில் அதிகக் கவனம் செலுத்த வேண்டாம் என்கிறார். அவற்றைப் படிகளைப் போலப் பயன்படுத்துங்கள். புத்தரது அசைவுகளின் மீது அதிக முக்கியத்துவம் அளிக்க வேண்டாம். அவரது உடல் அசைவுகளில் கவனம் செலுத்த வேண்டாம். மக்கள் இருக்கிறார்கள். அதே போலத் திருப்பிச் செய்யும் மக்கள், புத்தரைப் போலவே நடப்பார்கள். புத்தரைப் போல அதே வார்த்தைகளைச் சொல்லுவார்கள். புத்தரைப் போல அதே செய்கைகளைச் செய்யும் மக்கள். புத்தர் அவையெல்லாம் உண்மையானவை அல்ல என்கிறார். உண்மை என்பது இவற்றையெல்லாம் கடந்து, வடிவங்களுக்கப்பால் இருக்கிறது என்கிறார். அதை காப்பியடிக்க முடியாது.

குருவைப் போல செய்ய முயல வேண்டாம். அப்போதுதான் ஒருநாள் குருவைப் போல உங்களால் ஆக முடியும். அன்பு செய்யுங்கள், கேளுங்கள். ஆனால் நீங்கள் இன்னும் தூரம் போக வேண்டுமென்பதை நினைவில் கொள்ளுங்கள். நீங்கள் மேகங்களைக் கடக்க வேண்டும்.

இன்றைக்கு இது போதும்.